

கபிலன் பதிப்பகம்

# சொற்பொழிவாளர் பாரதியார்

சேதுபதி

318



# சொற்பொழிவாளர் பாரதியார்

---

சேதுபதி

கபிலன் பதிப்பகம்
12, 7ஆவது குறுக்குத்தெரு
பாரதிநகர்
புதுச்சேரி–8

சொற்பொழிவாளர் பாரதியார்
(ஆய்வுநூல்)
சேதுபதி

(Chorpozhivaalar Bharathiar)
Sethupathi©

முதற்பதிப்பு - டிசம்பர் 2007
விலை:- ரூ. 100/-
பக்கங்கள் - 256

வெளியீடு
கபிலன் பதிப்பகம்,
12, 7ஆவது குறுக்குத் தெரு,
பாரதிநகர்,
புதுச்சேரி - 605 008.
e.mail: kapilapub@yahoo.co.in

வடிவமைப்பு
சொ. அருணன்
9442379558

அச்சிட்டோர்
சூர்யா பிரிண்டர்ஸ் சொலூசன்ஸ்
சிவகாசி.

09. 12. 2007 அன்று ஆரோவில்லில், பாரதி - 125 நிறைவு விழாவை முன்வைத்து நிகழ்ந்த *'தமிழின் ஒருலகக் கருத்துணர்வு'* எனும் தலைப்பிலான பன்னாட்டுக் கருத்தரங்கில் ஞானபீடம் ஜெயகாந்தன் அவர்களால் வெளியிடப் பெற்றது.

## பதிப்புரை

மகாகவி பாரதியார் தோன்றி 125 ஆண்டுகள் நிறைவெய்துகின்ற இந்த வேளையில், அவர்தம் சொற்பொழிவுத் திறம் குறித்தும், அதன்வழி அவர் ஆற்றிய தொண்டுகள் குறித்தும் விளக்கும் வண்ணம் இந்நூல் உருப்பெறுகின்றது.

தொட்ட இடந்தோறும் தமது தனித்துவம் துலங்கக் காட்சிதரும் பாரதியார் இந்நூலாசிரியருக்குச் சொற்பொழிவாளராகக் காட்சி தருகின்றார். மகாகவியாய், சிறுகதையாளராய், கட்டுரையாளராய், இதழாளராய், இன்னும் பல பரிமாணங்கள் உடையவராய்ப் பாரதியாரைத் தரிசித்தவர்களுக்கு, இந்நூல் பாரதியாரை ஒரு சிறந்த சொற்பொழிவாளராய் அழகுறக் காட்டும்.

ஒலிபெருக்கி(mic), மற்றும் பேரொளி நல்கும் கருவிகளோ மிகுதியும் வராத அக்காலங்களில், வங்கக்கடல் அலையோடு, போட்டி யிட்டுப் பாரதியார் பேசியதும் பாடியதும், மக்கள் திரளாய் இருந்து கேட்டதும், மறக்கக்கூடியதன்று; மறுக்கக்கூடியதுமன்று.

பரந்த அரசியல் பார்வையும், சிறந்த இலக்கியப்புலமையும், தேர்ந்த சீர்திருத்த நோக்கும் இழையோட, பழுத்த ஞானிக்குரிய நோக்கோடு ஆன்மிகத் தமிழை அமுதமாகப் பொழிந்த பாரதியார் நல்ல அமைப்பாளராகவும் (Organizer) திகழும் பெற்றியை நன்கு விளக்குகின்றது, இந்நூல்.

'தொடரும்' இலக்கிய இதழின் ஆசிரியர் குழுவில் ஒருவரும், பாரதியன்பருமாகிய இந்நூலாசிரியர் முனைவர் சொ.சேதுபதி, புதுவை, பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரியின் தமிழ் விரிவுரையாளர். பாரதியாரின் வாழ்வியல் குறித்து 'என்றும் இருப்பேன்' என்ற கவிதை நாடகத்தோடு, பாரதியாரின் விநாயகர் வழிபாடு, மாணவர்களுக்குப் பாரதியார் கவிதைகள் முதலான பாரதி நூல்களைத் தந்திருப்பவர். 20க்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள இவர், தமிழக அரசின் குறள்பீடப் பாராட்டுப் பரிசு, பாரதஸ்டேட் வங்கியின் புதுக்கவிதைக் கான முதற் பரிசு, இசைஞானி இளையராஜா இலக்கிய விருது உள்ளிட்ட பல சிறப்புக்களைப் பெற்றவர்.

இந்நூல் உருவாக்கத்திற்குப் பெரிதும் துணைபுரிந்த கவிஞர் இரா.மீனாட்சி, புதுவை பாரதியன்பர்கள் அறக்கட்டளைச் செயலர் முனைவர் சிவ.மாதவன், புதுமை மகாகவி பாரதியார் அருங்காட்சியக் காப்பாளர் முனைவர் செல்வி நாக.செங்கமலத்தாயார், சிறப்பாக அச்சிட்டுதவிய சிவகாசி சூர்யா பிரிண்டர்ஸ் உரிமையாளர் சொ.முருகேசன் ஆகிய அனைவர்க்கும், ஏற்றுப் படிக்கும் வாசக உள்ளங்களுக்கும் எங்கள் நன்றி, எப்போதும்.

# மரணத்தை வென்ற மகாகவியின் பொழிவுகள்

பாரதி - யார்?

மகாகவி பாரதியார் தோன்றி 125 ஆண்டுகள் நிறைந்த பிறகும் அவர்குறித்து இன்னும் ஒரு தெளிவற்ற புரிதல் தமிழ் ஆய்வுச்சூழலில் இருக்கிறது. அதனால் பாரதியாரைப் பாரதி - யார் என்று பார்க்க வேண்டியதிருக்கிறது.



"ஒரு சகாப்தத்தின் கர்ப்பத்திலிருந்து தோன்றினான் பாரதி. மற்றொரு சகாப்தத்தின் ஆற்றலைத் தன் கருவில் கொண்டு! அதன் மாற்ற நிலைகளை, அதன் வளர்ச்சி மேன்மைகளைப் பாடிப்போற்றி அவற்றிற்காகப் போராட முரசு கொட்டியதே பாரதியின் பணி. இன்னொரு சகாப்தம் - ஒரு புதிய சகாப்தம் உயிர்த்தெழ அவன் நேரடியாக உதவினான்"[1] என்று பாரதியார் பற்றி மதிப்பிடும் மார்ச்சிய ஆய்வாளர் ஆர்.கே.கண்ணன் அதற்கான பின்புலத்தையும் தெளிவுறப் புலப்படுத்துகிறார்.

"பாரதியைப் பற்றித் தீர்ப்புச்சொல்ல வரும்போது மதிப்பீடு செய்ய வரும்போது அவன் என்ன கருத்தமைப்புக்களை எந்த அர்த்தத்தில் சொன்னான் என்று 'பாஷ்யங்கள்' எழுதிப் பயனில்லை. அவன் நடை முறையில் தொடர்ந்து என்னென்ன செய்து வந்தான் என்றும் பார்க்க வேண்டும். பாரதியின் தத்துவத்திலிருந்து பாரதியின் நடைமுறையைப் பிரிக்க முடியாது. ஒவ்வொரு தத்துவதரிசிக்கும் (Philosopher) வைக்கப்படும் தேர்வு இது.

சொல்லும் செயலும் பொருத்தி யிருக்கிறதா? என்கிற தேர்வு. மேடையிலே அழகாகவோ, வக்கணையாகவோ பலவற்றைப் பேசலாம். ஆனால், தன்னுடைய தனி வாழ்க்கையிலும், பொதுவாழ்க்கையிலும், நடைமுறையில் எப்படி நடக்கிறார்கள் என்று ஒரு கண்டிப்புள்ள தேர்வு ஒரு கட்டத்தில் எழத்தான் செய்யும். எல்லோருக்கும் இது உண்டுதான். ஆனால், தத்துவதரிசனம் சொல்ல வருகிறவனுக்கு, வழிகாட்ட வருகிறவனுக்கு, இது குறிப்பாக உண்டு"[2] என்கிறார்.

அதன் அடிபபடையில் பார்த்தால் பாரதியார், சொல்லுக்கும் செயலுக்கும் எந்தவொரு பேதமுமின்றி இயங்கி வந்ததை அவர்தம் வாழ்வு மற்றும் வாக்குவழி அறியலாம்.

புதுவை வாழ்வின்போது, "நமக்குத் தொழில் கவிதை - நாட்டிற்குழைத்தல் - இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்ற மூன்று கட்டளைகளைப் புதுவை மணக்குள விநாயகர் சாட்சியாய்த் தன் சிந்தைக்கு விதித்தவர் பாரதியார். அவரது இயக்கத்தின் மையம் நாட்டிற்கு உழைத்தல். மனம், மொழி, மெய்களின் வழியே நாடுய்யத் தன் இயக்கத்தை இமைப்பொழுதும் சோர்வின்றி நடத்திய பாரதியார், தம் பணிகளின் வாயிலாக, மகாகவிஞராய், சிறுகதையாளராய், கட்டுரையாளராய், மொழி பெயர்ப்பாளராய், இதழாளராய்ப் பல்வேறு பரிணாமம் கொண்டு திகழ்ந்ததோடு அவர் சிறந்த சொற்பொழி வாளராகவும் திகழ்ந்திருக்கின்றார் என்பதனை அவர்தம் பதிவுகள் மற்றும் அவரைப்பற்றிய நண்பர்களின் பதிவுகள்மூலம் அறிய முடிகின்றது.

அரசியல், ஆன்மிகம், இலக்கியம், சீர்திருத்தம் என்ற பொருண்மைகளில் ஒரு வசதிக்காக வைத்து இவர்தம் சொற்பொழிவுகள் இந்நூலுள் சுட்டப் பெற்றிருக்கின்றன. எனினும், இவையாவும் பாரதியார் நோக்கில் ஒருமை உணர்த்துவனவாகவே அமைகின்றன.

பாரதியாரின் பரிமாணங்கள்

மந்திரம்போன்ற சொற்களைக் கொண்டு யார்க்கும் அஞ்சாது உண்மையை எடுத்துரைப்பதையே நோக்கமாகக் கொண்ட பாரதியார் இச்சொற்பொழிவுகள் வழியே, ஓர் அரசியல்வாதியாக, ஆன்மிக வாதியாக, இலக்கியவாதியாக, சீர்திருத்தவாதியாகத் தோற்றம் கொள்கின்றார். எனினும் அவர் மனிதம் பேணும் புனிதர் என்கிற நிலையிலேயே பொலிவு பெறுகிறார்.

பொதுவாய், மனிதன் என்பவன் பேசத்தெரிந்த சமூக விலங்கு. பேச்சுத் தான் அவனை நாகரிகப்படுத்திற்று. இன்று நாகரிகமடைந்த மனிதர்களின் பேச்சும் செயலும், பேசத்தெரியாத மிருகங்களைவிடக் கொடியனவாக இருக்கின்றன. வயிற்றுப்பசி வந்தால் மட்டுமே வேட்டையாடக் கூடியன விலங்குகள், மிருகங்கள். ஆனால், வயிற்றுப் பசிக்கும் உணவில்லாமல் தவிக்கும் மனிதர்களைப் போர் என்னும் பெயரில் வேட்டையாடும் கொடிய உயிரினம் மனிதஇனம்தான்.

அதற்குக் காரணம் அன்பின்மை. அன்பில்லாத உயிரினம் உலகில் உண்டென்றால் அது மனித இனம்தான். எந்தப் பறவையும், இன்னொரு பறவையை அடிமையாக்கிக் கொள்வதில்லை. எந்த விலங்கும் இன்னொரு விலங்கை அடிமையாக்கிக் கொள்வதில்லை. அது அது அதனதன் போக்கில் சுதந்திரமாக வாழ்கின்ற உலகில் அனைத்தும் இருந்தும் அடிமைகளாக - அதுவும் சொந்த மண்ணில் - வணிகம் செய்ய வந்த மனிதர்களால் - அடிமைகளாக ஆக்கப்பட்ட கொடுமையை எதிர்த்த வரலாறு இந்திய வரலாறு. அதன் தமிழ் உரு பாரதியார்.

இதற்கு மாற்று இன்னொரு போர் என்பதாக இல்லாமல், போராட்டம் என்பதாக வடிவமைத்து வில்லைவிடவும் வலிமை வாய்ந்த சொல்லைக் கொண்டு பாட்டுக் கட்டியவர் பாரதியார். மானுடன்தன்னைக்கட்டிய அனைத்துத் தளைகளையும் கட்டறுக்க வேண்டிப் பாடியவர். மேடைகளில் முழங்கியவர்.

பொதுவாய், அரசியல் விழிப்புணர்வு வேண்டிப் பேசப்பெறும் செய்திகளும், பாடப்படும் பாடல்களும், எழுதப்படும் இலக்கியங்களும் அந்தந்தத் தேவைகள் நிறைவேறியபின்னர் காலாவதி யாகிவிடும். அப்படித் தான் பாரதியாரது தேசியப் பாடல்களும், அரசியல் சிந்தனைகளும் ஆகிவிடும் என்று தமிழ் இலக்கியச் சூழலில் ஒரு காலத்தில் ஆருடம் கணிக்கப்பட்டது. ஆனால், அதனைக் கடந்து, அவர்களையும் கடந்து இன்னும் அந்தப்படைப்புகள் வாழ்ந்து கொண்டிருக்கின்றன; வழிகாட்டிக் கொண்டிருக்கின்றன. காரணம், அவரது விடுதலைச் சிந்தனைகள் அரசியல் விடுதலைச் சிந்தனைகளாக மட்டும் இருந்ததில்லை. அவை ஆன்ம விடுதலையையும் வேண்டி நிற்கின்றன. ஆன்ம விடுதலை யென்பது வாழ்வு வழிப்பட்டது என்பதால் அது உயர்ந்த திருத்தங்களை அவாவி நிற்பது. இவற்றை யெல்லாம் ஒருசேரச் செய்யும் இயக்கமாக இலக்கியம் இருப்பதால் பாரதியார் மரணமின்றி நிலைக்கின்றார்.

பொதுவாக, பாரதியார் படைப்புகள் தமிழில் தோன்றியன என்றாலும், அவை தமிழக எல்லைக்குள் அடங்குவன அல்ல.

இந்தியாவை முன்னிறுத்திப் பேசுவன என்பதால் அவை இந்த நாட்டு எல்லைக்குள் மட்டுமே செல்லத்தக்கன அல்ல. உலக வரைபடத்தில் உள்ள நாடுகளில் எங்கெல்லாம் மனிதர்கள் இன்னலுறுகின்றார்களோ அங்கெல்லாம் தன் கைகள் நீட்டி அரவணைத்துக் கொள்ளும் இயல்புடையன. இன்னும் எல்லையற்று விரியும் பிரபஞ்சம் அளவிற்குப் பெரிதாய் விரிவன.

இத்தனை பெரிய தன்மைகளை இவரது படைப்புகள் இயல்பாகக் கொண்டிருப்பதற்கு அடிப்படைக்காரணம் அன்பு. எல்லையற்ற அன்பு. பிரதிபலன் எதிர்பாராத அன்பு. எல்லாவுயிர்கட்கும் அன்பு உரியது. அன்பின் வழியது உயிர்நிலை என்பது வள்ளுவர் வாக்கு. மனிதர்களின் அன்பு அதைவிடப்பெரிது. அது கருணையாகப் பிறக்க வேண்டும். அதன் தமிழ்ப் பெயர் அருள். அதற்குத் தேவை அன்பொடு புணர்ச்சி. அருள் என்னும் குழவி மனித ஆண்மையும், அன்பெனும் பெண்மையும் இணைந்து தொழிற் படுதலால் இனிது பிறப்பது. அதனை வளர்க்கும் செவிலியாகச் செல்வம் இருக்கவேண்டும் என்பது வள்ளுவர் கட்டளை. அப்படி இருக்கப் பிறக்கும் குழந்தையான அருளால் உலகு இன்பம் எய்தும்; அது துன்பமற்ற இன்பம். அதற்குத் தெய்வம் துணை. அதனை வழிபடல் என்பது அதன் நெறியில் தொடர்ந்து இயங்கல். அவ்வாறான நிலையில், வீட்டைக் கட்டுதல்; அதன் மூலம் நாட்டைக் கட்டுதல்; அதன் வழி உலகைக் கட்டுதல்; பிரபஞ்சம் கட்டுதல்.

இங்கே கட்டுதல் என்பதற்குக் கட்டற்ற நிலையில் வைத்துக் காத்தல் என்று பொருள். மானுட ஆன்மாவை, உயிரை, எல்லாத் தளைகளிலும் இருந்து விடுவிப்பதுதான் விடுதலையின்நோக்கம். அதற்கு இந்தியாதான் முன்னோடி. உலகைப் பொதுமை செய்ய உதவுதல் இதன் நோக்கம். இதற்கு முன்னர் இதனைச் செயல்படுத்தியது சோவியத் யூனியன். இன்று அது இல்லை. இனி நிறைவேற்றப்போவது இந்தியாதான். ஆயுதம் எந்தாமல், அழிவைச் செய்யாமல், போர் இல்லாமல், எண்ணவலிமையால், ஆன்ம பலத்தால் இது கட்டமைக்கப்போகும் உலகம் புதுமை உலகம். பொதுமை உலகம். அதுதான் உலகிற்குப் புதுமை. அதற்கான வழியினை இந்தியா வழங்கும். வழங்க வேண்டும். எல்லோரும் அமரநிலை எய்தும் நன் முறையினை - வன்முறையினை அல்ல - வன்முறையால் அல்ல - நன்முறையால், நன்முறையினை, இந்தியா உலகிற்கு அளிக்கும்.

அப்போது,

'எல்லாரும் ஓர்விலை, எல்லாரும ஓர்நிறை
எல்லாரும் இந்நாட்டு மன்னர். ஆம்

எல்லாரும் இந்நாட்டு மன்னர். ஆம்ஆம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர்[3]

என்னும் பாடலடிகளை, இந்தியர் பாடினாலும், ஆப்பிரிக்கர் பாடினாலும், ஆங்கிலேயர் பாடினாலும், இன்னும் யார்யாரெல்லாம் பாடுகின்றார்களோ அவர்கள் எல்லோரும் இந்நாட்டு மன்னர்.

அப்படியானால், இங்குயாரும் அடிமையில்லை; இனி யாரும் யாரையும் அடிமை கொள்ளமாட்டார்கள் என்னும் ஆன்ம உயர்வுக்கு, அனைவரையும் உயர்த்துகின்ற அரசியல், ஆன்மிக, சீர்திருத்தக் கருத்துகளை உள்ளடக்கிய இலக்கியங்களாகப் பாரதியாரது சொற்பொழிவுகள் அமைகின்றன.

பிரிவினைக்கு எதிராக வங்கத்தை வாழ்த்திப் பாடுவதற்காக மேடையேறிய பாரதியாரின் முதற்பொழிவு, 'கருணை'. அவர் தம் இறுதிப் பொழிவின் சாரமாய்ப் பிறந்த பாடல் 'பாரத சமுதாயம் வாழ்கவே'. அத்தோடு, பாரதியார் நிறைவுக்காலத்தில் அழுத்தமாக முழங்கிய செய்தி 'மனிதனுக்கு மரணமில்லை'. உடம்புக்கூட்டுக்குள் ஒடுங்கிய உயிரை, ஆன்மாவை, வீட்டளவில், ஊரளவில், நாட்டளவில், உலகளவில், பிரபஞ்ச அளவில் மேலே மேலே விரித்து உயரும்போது உலகம் பொதுவாகிறது; ஒருபிஞ்சாய், மலராய் உள்ளங் கையில் வந்தமர்கின்றது.

'தான்', பிரபஞ்சத்துகளாய், அதன் அணுவாய்க் கரைந்தும், கரந்தும் நிலை கொள்கிறபோது மரணம் பொய்யாகிறது; மனிதன் அமரனாகிறான். வானகம் இங்கு தென்படுகின்றது. இறவாநிலை இங்கேயே சாத்தியமாகின்றது. காரணம், பிறப்பு, இறப்புச் சங்கிலிகளில் இருந்து இந்த உயிர் விடுதலை எய்திவிடுகின்றது. என்ற குறியீட்டுப்பொருளில் விடுதலையை விரித்துப் பேசும் பாரதியாரின் சொற்பொழிவுகள் செவிநிறைகின்றன.

இன்றைக்கு அந்த அரங்குகள் இல்லை. அவர்முழங்கிய அறைகள் மாறி யிருக்கின்றன. ஊர்களும், ஊர்வலம்போன தெருக்களும், அலையோடு போட்டியிட்டு முழங்கிய கரையின் மணல்களும் மாறியிருக்கின்றன. ஆனால் மகாகவி பாரதியார் நிற்கிறார்; மாற்றங்களூடே நிலைக்கிறார்; பொழிகிறார்.

அதனைப் பரந்த பெருங்கடல் திரும்பத்திரும்ப அலைகளைக் கொண்டு ஒலிபரப்பி வருகின்றன. காற்று, திசையெலாம் கடை விரித்துப் போகின்றது. நிலவும், கதிரும், விண்மீன்களும் சாட்சிகளாய்த் துலங்க, இரவும் பகலும் தவணைமுறையில் திரும்பத் திரும்ப ஒளிபரப்பிக்கொண்டே இருக்கின்றன. கண்கள் செவியாகக்

கேட்கத் தொடங்கினால், காலாதீத எல்லைகடந்து கம்பீரமாகப் பாரதியார் முன்னிற்பதை எப்போதும் காணலாம். காணக் காணக் கடைசியில் அவர் காணாமல்போகும்போது, காணத் தொடங்கியவர் பாரதியாய் மாறுவதைக் காணத்தலைப்படுவர்.

<u>சான்றெண்விளக்கம்</u>

1. ஆர்.கே.கண்ணன், புதுநெறி காட்டிய பாரதி, ப.20.

2. மேலது, ப.40.

3. பாரதியார் கவிதைகள்,பாரதசமுதாயம்,பா.எண்-4, ப.147.



## சொற்பொழிவாளர் பாரதியார்

கூரிய ஆயுதங்களைவிடவும், நேரிய ஒரு சொல் மானுட வாழ்வை மேம்படுத்திவிடும் என்பதை உலகவரலாற்றில் நெடிது காணலாம். பேச்சு மனிதர்களுக்குக்கிடைத்த மகத்தான கொடை. கற்காவிடினும் கேள்வி ஞானத்தால் உலகில் ஒவ்வொருவரும் உயர்ந்துவிட முடியும் என்பதால்தான் 'கற்றிலனாயினும் கேட்க' என்றார் திருவள்ளுவர். எனவே, கற்பவர்களுக்கு எழுதுவதைவிடக் கல்லார்க்குச் சொல்வது இன்னும் நலம் பயக்கும் என்று பாரதியார் தெளிந்துகொண்டார். அது கற்றவர்களையும் சென்று சேரும் ஆற்றல் உள்ளவை என்பதைக் கண்டுணர்ந்தார். அதனால் தமது பெருநோக்கிற்குச் சொற்பொழி -வையும் ஒரு கருவியாக ஏற்றுக் கொண்டார்.

பாரதியார், புதுவைவாழ்வில்,

'நமக்குத் தொழில் கவிதை
நாட்டிற் குழைத்தல்
இமைப் பொழுதும் சோராதிருத்தல்'[1]

என்ற மூன்று கட்டளைகளைப் புதுவை மணக்குள விநாயகர் சாட்சியாய்த் தன் சிந்தைக்கு விதித்தவர். அவரது இயக்கத்தின் மையம் நாட்டிற்கு உழைத்தல். மனம், மொழி, மெய்களின் வழியே நாடுய்யத் தன் இயக்கத்தை இமைப்பொழுதும் சோர்வின்றி நடத்திய பாரதியார், தம் பணிகளின் வாயிலாக, மகாகவிஞராய், சிறுகதையாளராய், கட்டுரையாளராய், மொழிபெயர்ப்பாளராய், இதழாளராய்ப் பல்வேறு பரிணாமம் கொண்டு திகழ்கின்றார். அத்தோடு மட்டுமன்றி, அவர் ஒரு சிறந்த சொற்பொழிவாளராகவும் திகழ்ந்திருக்கின்றார் என்பதனை அவர்தம் பதிவுகள் மற்றும் அவரைப்பற்றிய நண்பர்களின் பதிவுகள் மூலம் அறிய முடிகின்றது.

நிலைபேறுடைய கலை - இலக்கியம்

"பிகாஸோவின் ஓவியங்களைவிடவும், பீதோவனின் இசைக் கோலங்களை விடவும், ஹ்யூகோவின் ஒரு வாக்கியம், கதேயின் ஒரு கடைச்சொல் உலக மக்களையெல்லாம் ஆட்டிப் படைத்துவிடும். இலக்கியம் கேளாரும் வேட்ப காலகாலத்துக்கும் நிலைக்கும்"[2] என்பது ஜெயகாந்தனின் வாக்கு. அவர்சுட்டிய வண்ணம் 'கேளாரும் வேட்ப மொழிந்த' பெற்றிக்குரியவர் பாரதியார்.

"வேதத்தில் வாக்கை ஒரு தெய்வமாகச் சொல்லி இருக்கிறது... வாக்கென்பது, மூலத்திலே படைத்தல் என்று பொருள்படும். ஸரஸ்வதி இந்திரனுடைய மறைவுயிர் என்று சொல்வதுண்டு. ஸ்ருஷ்டியே வாக்கு; ஸ்ருஷ்டியே சத்தியானபடியால், புராணக்காரர் ஸரஸ்வதியைப் பிரம்மாவின் சக்தியென்றார். பைபிள் புத்தகத்திலே "ஆரம்பத்தில் வாக்கு இருந்தது. அந்த வாக்கு ஈசனோடிருந்தது. அந்த வாக்கே ஈசன்" என்று சொல்லப்படுகிறது"[3] என்று வேதரிஷிகளின் கவிதை நூலில் பாரதியார் எழுதுகின்றார்.

தேவ வாக்கு

இங்கு வாக்கு என்பது சொல்லைக் குறிக்கின்றது.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"[4]

என்பது தமிழின் சொல்லிலக்கணம். அதன் 'பொருள்' என்பது அகராதி வரிசையில் தேடும் சொற்பொருள் என்றுகொள்வது மேலோட்டமான புரிதல். 'ஆழ்ந்திருக்கும் கவியுளம்' என்று பாரதியார் சொல்லும் மரபில் அதனுள் ஆழ்ந்திருக்கும் உட்பொருளை உணர்ந்து கொள்கிறபோதுதான் சொல்லின் பொருள் நன்கு புலப்படும்.

இத்தகு சொல்லாராய்ச்சியிலும் பாரதியார் ஈடுபட்டிருக்கின்றார். பொருத்தம் கருதி இருசொற்களை இங்குக்காணலாம்.

"உச்சரி - சொல். 'உச்சரி' என்பதை 'உத்-சரி' என்று பிரித்தால் மேலே (உயர்ந்த படியில் நட) என்று பொருள்படுகிறது. சொல்லும் போது மேல்நிலையில் நின்று சொல்க. என்றும், 'கை' என்பதற்குத் தெலுங்கில் 'செய்' என்று பெயர். க<ச மாறுதல் இயல்பு. 'கை' என்ற சொல்லுக்கே 'செய்' என்று பொருள். தொழில் செய்யாமல் இருக்கும் கையை நெருப்பிலே வை. கரியாவது கிடைக்கும் என்றர்த்தம்"[5] என்றும் எழுதுகின்றார். ஆக, சொல்லின் பொருளுக்குள் உள்ளுறையும் பொருள் உணர்ந்து சொல்கிறபோது, அச்சொல், பொருள் கடந்த அனுபவநிலையில் கேட்பவனை உய்வித்துவிடுகின்றது.

"சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர்"[6] என்கிறது மணிவாசகம்.

"சொல்லைச் சாதாரணமாக நினைத்துவிடலாகாது. உண்மைச் சொல் க்ஷேம மந்திரமாகும். பொய்ச்சொல் அழிந்துவிடும்... உண்மைச் சொல்லே சரஸ்வதி வசம் நமது வேள்வியை ஒப்புக் கொடுப்பதற்கு முக்கிய வழி. இதனுடன், நிந்தை, பழி, சாபம், அசுசி - இவற்றினால் வாக்கை மாசு படுத்தாதிருக்கவேண்டும். அமங்கள வார்த்தைகளும், அவச்சொற்களும், பய வசனங்களும் தீமை தரும். பரிபூர்ணமான தீரமும், வலிமையும், உண்மையும், திருத்தமும், தெளிவும் பொருந்திய வாக்கே தேவ வாக்கென்று சொல்லப்படும். மனித ஜாதிக்கு தேவ வாக்குப் பிறந்திடுக!"[7] என்கின்றார் பாரதியார்.

அத்தகு பொருண்மை நிறைந்த சொற்கள் வந்துவந்து தம்மை எடுத்துக் கொள்ள வேண்டிப் பாரதியாரின் இலக்கிய முற்றத்தில் இரவு பகல் பாராது தவமியற்றிக் கிடந்திருக்கின்றன.

அவற்றிலிருந்து, உரியவற்றைத் தெரிவுசெய்வதற்குப் பாரதியார் பலநாட்கள் மௌனவிரதம் இருந்த வரலாற்றை, யதுகிரி அம்மாள், 'பாரதி நினைவு'களில் பதிவு செய்கிறார்.[8] பலநாட்கள் பாரதியாரின் சிந்தனைக் கருவில் இருந்து வளர்ந்து முதிர்ந்து முத்தாய், முழுமைதரு மந்திரமாய் உதித்தன அவர்தம் அனைத்துச் சொற்களும்.

மந்திரச்சொல்

"சொல் ஒன்று வேண்டும்.தேவசக்திகளை நம்முள்ளே நிலைபெறச் செய்யும் சொல் வேண்டும்" என்ற அடைப்புக்குறிக்குள்ளான விளக்கத்தோடு "சொல்" என்ற தலைப்பில் பாரதியார் ஒரு கவிதை எழுதுகிறார்.

"தேவர் வருகவென்று சொல்வதோ? ஒரு
செம்மைத் தமிழ்மொழியை நாட்டினால்
ஆவல் அறிந்து வருவீர்கொலோ? - உம்மை
அன்றி ஒருபுகலும் இல்லையே

ஓம் என்றுஉரைத்துவிடில் போதுமோ? - அதில்
உண்மைப் பொருள் அறியலாகுமோ?
தீமை அனைத்தும் இறந்து ஏகுமோ?- என்றன்
சித்தம் தெளிவுநிலை கூடுமோ?

உண்மை ஒளிர்க என்று பாடவோ?-அதில்
உங்கள் அருள் பொருந்தக் கூடுமோ?

வண்மை உடைய ஒரு சொல்லினால் - எங்கள்
வாழ்வு பெறவிரும்பி நிற்கிறோம்!"[9]

இப்பாடல் குறித்துப் பாரதியன்பர் வ.ரா. குறிப்பிடுகின்றார்- "பாரதியார் வெறும் கவிமட்டுமல்லர். தத்துவ தரிசனத்தில் அவருக்கு அளவிலா ஆவல். சொல் வேண்டும் என்று பாரதியார் பாடியிருக்கும் பாட்டு, அவருடைய தத்துவ தரிசனத்தின் ஆவலைக் காண்பிக்கிறது. இயற்கையின் மர்மத்தை விண்டு காண்பிக்கும் சொல் வேண்டும். அதன் மூலமாய்த் தமிழர்களும் ஏனையோரும் எல்லையற்ற சக்தியைப் பெற வேண்டும் என்பது பாரதியாரின் வாழ்க்கை ஆவல்".[10]

அத்தகு வண்மையுடைய ஒரு சொல் அனைத்தும் தரவல்லது. மந்திரம் போன்றது. அதற்கான மந்திரத்தைப் பாரதியாருக்கு உபதேசித்தவர்கள் தேவர்கள். வானத்து இந்திரனும், அக்கினி, வாயு முதலான தேவர்களும் வந்து உபதேசித்த பாங்கினை அவர்தம் 'விடுதலை நாடக'த்தில் இனிது காணலாம். அத்தேவர்களைப் பாரதியார் சுட்டும் முறை தனித் தன்மையானது. புராணப் பொய்க் கலப்பில்லாத மெய்ம்மை சார்ந்த அறிவியல் பாங்குடையது.

அதற்கு, 'அவனருளாலே அவன்தாள் வணங்கல்போல'ப் பாரதியாரைக் கொண்டே பாரதியாரைப் புரிந்துகொள்வது சிறப்பான வழியாகும்.

இதனை இன்னும் பின்வருமாறு தெளிவுபடுத்திக்கொள்ளலாம். பொதுவாக, 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும்' இயல்பு சிறிதும் அற்றவர் பாரதியார். அவர், தனது 'உள்ளத்தில் தோன்றும் உண்மை ஒளியை வாக்கினில்' வைத்தவர். தனக்குத் தெரிந்த உண்மையையே, அது, தெளிவாகத் தெரிந்ததனாலேயே, 'ஊருக்கு நல்லது' என்று முரசு கொட்டிச் சொன்னவர். அது பாட்டாக, கவிதையாக, கதையாக, கட்டுரையாக, சொல்லாக, சொல் கடந்த மௌனமாக அவர் வாழ்வு முழுவதும் முகிழ்த்தெழுந்து மானுடர்க்கு ஆக்கமளித்து வந்திருக்கின்றது.

காலவரிசை கொண்டு பாரதியார் படைப்புகளை நோக்கும்போது அதற்கான வழிகளைப் பாரதியார் எப்படியெல்லாம் கடந்து நம்மையும் உடன் அழைத்துக்கொண்டு உய்தியை நோக்கி உயர்த்திச் செல்கிறார் என்பதை உணர முடிகிறது. பெரும்பாலும் அவர்வழியில் தொடர்ந்து செல்லமுடியாதவர்கள் வழியிலேயே தங்கிவிடுவது தவறன்று. தேங்கி விடுவதுகூடப் பிழையன்று. அந்தத் தேக்கத்தில் நின்றுகொண்டு இவர் தான் பாரதியார் என்று சுட்டுவது தான் பேதைமை. அவ்வாறான ஆய்வுகளின் பெருக்கம் உண்மையில் பாரதியாரைக் காட்டுவதில்லை.

மாறாக, பாரதியாரைக் காட்டுபவர்களைத்தான் காட்டிநிற்கின்றன. எனவே, பாரதியார் மரபில் அவர்களைக் குறைகூறாமல், அவர்கட்கும் நன்மையையே எண்ணிப் பாரதியாரைப் பின்தொடர்ந்தால் அந்த மந்திரத்தையும், அதனைப் பயன்படுத்தும் முறையையும் நாம் கற்றுக் கொள்ளலாம்.

பொதுவாகத் தமிழர்களுக்கு மந்திரம் குறித்த குழப்பநிலை இருப்பதையும் புரிந்துகொண்ட பாரதியார், அது ஏதோ ஒலி முறையில்தான் இருக்கிறது என்பதுபோன்ற போலித்தனத்தை மறுதலித்து அதன் பொருள் உணர்ந்து தியானித்தலே தேவை என்கிறார். அவர் சொல்லுகிறார் - "மனத்தைக் கட்டி ஆளுவதற்கு மந்திரத்தை உச்சரிப்பதே வழி. மந்திரத்தின் ஒலியை தியானம் செய்வதில் பயன் கிடைக்குமென்று தோன்றவில்லை. அதன் பொருளைத் தியானிக்க வேண்டும்"[11]

பாரதியார் நோக்கில் தியாணம்

பாரதியார் குறிப்பிடும் தியானமாவது யாது? அதன் செயல்முறை யாது? என்பன போன்ற கேள்விகள் இங்கு எழுகின்றன. அதற்கு அவரே தமது கட்டுரையொன்றில் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார்.

"ஒருவன் மனத்தினால் நிமிஷத்துக்கு நிமிஷம் தோன்றி மறையும் தோற்றங்களெல்லாம் தியானமாகமாட்டா. புதர்க்கூட்டத்திலே தீப் பிடித்தாற்போல மனதிலுள்ள மற்றக் கவலைகளையும் எண்ணங் களையும் எரிக்கும் ஒரே ஜோதியாக விளங்கும் பெரிய விருப்பத்தைத் தியானம் என்று கூறுகிறோம். உள்ளத்தில் இவ்வித அக்னி ஒன்று வைத்துக் கொண்டிருப்போமானால், உலகத்துக் காரியாதிகளெல்லாம் நமது உள்ள நிலைக்கு இணங்கியவாறே மாறுபடுகின்றன."[12]

அத்தகு அக்கினியை உள்ளத்தில் நிலைநிறுத்த என்ன செய்வது? அதற்கான வழி என்ன? நாடுவிட்டுக் காடேகிக் கடுந்தவம் புரிவதா? எரி ஓம்பி வேள்வி புரிவதா? என்றால் இல்லை என்பதே பாரதியார் சொல்லாமல் சொல்லும் பதில். இல்லை என்று அமங்கலமாகச் சொல்லக் கூடாது என்பதுதான் பாரதியாரின் பழக்கமாயிற்றே! எனவே, அதற்கு மாற்றாக அவ்வேள்வி முறையை, 'காட்டிற்குச் செல்லாமல், நாட்டில், வீட்டில் இருந்துகொண்டே செய்யலாம்' என்கின்றார். அதற்காக, 'அதனை விடு, இதனைத் துற' என்றெல்லாம் உபதேசம் புரியவில்லை பாரதியார். "உலகத்திலுள்ள மெய்யான இன்பங்களையெல்லாம் நுகர்ந்து, தமக்கும் பிறர்க்கும் நிலைத்த பயன்கள் விளைவதற்குரிய நற்காரியங்கள் செய்து, உள்ளத்திலுள்ள குழப்பங்களும் துன்பங்களும் நீங்கி, சந்தோஷமும் புகழும் பெற

வேண்டுமென்ற இச்சை உடையவர்கள், தமது இச்சையை நிறைவேற்றிக்கொள்வது அசாத்தியமன்று. அது இவ்வுலகத்திலேயே இந்த ஜன்மத்திலேயே சாத்தியமாகும். அஃது எப்படி யென்றால், தமது உள்ளத்திலேயே தீரத்தன்மை, அமைதி, பலம், தேஜஸ், சக்தி அருள், பக்தி சிரத்தை இந்த எண்ணங்களையே நிரம்பவேண்டும்"[13] என்று சொல்கின்றார்.

இத்தகு தியானம் யாருக்கு உரியது என்றொரு கேள்வி எழுமுன்பே, பாரதியாரின் பதில் பின்வருமாறு வெளிப்படுகின்றது.

"தெய்வ பக்தி உள்ளவர்களாயினும், நாஸ்திகர்களாயினும், எந்த மார்க்கத்தவர்களாக இருந்தாலும் ஒரு மார்க்கத்தையும் சேராதவர்களாக இருந்தாலும், அவர்களுக்குத் தியானம் அவசியம். பாரததேசத்தில் ஒவ்வொருவனுக்கும் தற்காலத்தில் நல்ல தியானம், உணவைக் காட்டிலும் இன்றியமையாதது" என்று சொல்லிவிட்டுத் தியானத்திற்குரிய வழியைப் பின்வருமாறு உபதேசிக்கிறார் பாரதியார். "சோற்றைவிட்டாலும் விடு. ஒரு தனியிடத்தே போயிருந்து, பலம் தரக்கூடிய சிந்தனைகள், துணிவும் உறுதியும் தரக்கூடிய சிந்தனைகள், பலம் தரக்கூடிய சிந்தனைகள் - இவற்றால் அறிவை நிரப்பிக் கொண்டு தியானம் செய்வதை ஒருநாளும் தவறவிடாதே. தெய்வ பக்தி யுடையவர்கள் இஷ்ட தெய்வத்தை அறிவில் நிறுத்தி, அதனிடம் மிகுந்த தாகத்துடனும் உண்மையுடனும் மேற்கூறியவாறு பெருமைகள் உண்டாகு மாறு பிரார்த்தனை செய்ய வேண்டும்... நாஸ்திகர்கள் கூட, இஷ்ட தெய்வம் இல்லாவிட்டாலும் வெறுமே தியானம் செய்வது நன்று. உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் என்பது குறள்"[14] என்று சொல்லுகின்றார்.

இங்கு பிரார்த்தனை என்னும்போது, அது இன்றைக்குக் கோயில்களில், பிரார்த்தனைச் சடங்குகளில் நடக்கும் போலித் தனங்களாகிவிடக் கூடாது என்ற எச்சரிக்கையையும் பின்வருமாறு தருகின்றார்.

"வாயினால் பழங்கதை ஒன்றை முணுமுணுப்பது அதிகப் பயன் தர மாட்டாது. உன்னுடைய உள்ளுயிரிலிருந்து அந்தப் பிரார்த்தனை வெளியேற வேண்டும். நீயாக உனது சொந்தக்கருத்துடன் சொந்த வசனங்களில் உயிர் கலந்து தியானம் செய்வதே பயன்படும்"[15]என்று தெளிவுறுத்துகின்றார்.

இதற்கு மனம் பக்குவப்பட வேண்டும். அதற்கு மனதில் உறுதி வேண்டும். அவ்வுறுதி, நல்ல நினைவுகளால் தோன்றும். 'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்கவேண்டாம்' என்கிற நிலைதான்.

'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அறம்'. அது, அனைத்திலும் சிறந்த அறம். அத்தகு அகந்தூய்மை வாய்மையால் காணப்படும். 'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமை இலாத சொலல்' என்பது குறள் தரும் தெளிவு.

அந்தச் சொல்லே மந்திரம். சபித்தால் துயர். பழித்தால் கெடுதி. வாழ்த்தினால் புண்ணியம். செபித்தால் மந்திரம். சொல் கடந்த மௌனமோ, ஆற்றல்களின் சேகரிப்பு மையம். மௌனம் என்பது பேசாதிருத்தல் அன்று. வாய் மூடினால் மனம் திறக்கும். மனம் பேசும். அதனையும் அமைதிப்படுத்தும் போது அதனைக்கடந்த உள்ளம் பேசும். அதனையும் கடந்து, கடந்து, கடந்து போக, 'புகப் புக இன்பம்'. இன்பத்தின், நிறைவின் வடிவான, இறையின் தன்மை உணர மௌனம் இன்றியமையாத் தேவை. அத்தகு பொருள்நிறைந்த மௌனத்தின் உரு, விநாயகர். அதனால்தான், புதுவை, மணக்குள விநாயகரிடத்தில்,

"நினைக்கும்பொழுது நின்மவுன
நிலை வந்திட நீ செயல்வேண்டும்!" [16]

என்று விண்ணப்பம் வைக்கிறார் பாரதியார். எதற்கு? பேசாதிருப்பதற்கு அன்று. பேசாப்பொருளைப் பேசுதற்காக. அதுவும் இறைவனிடத்தில் இதுவரையில் யாரும் கேட்காத வரத்தை - எந்த மொழியிலும், எந்த நாட்டினரும் கேட்காத வரத்தைக் கேட்பதற்காக. அந்த வரம் யாது?

பாரதியார் பாடுகிறார், அகவல் மரபில்.

"மண்மீ துள்ள மக்கள் பறவைகள்
விலங்குகள் பூச்சிகள் புற்பூண்டு மரங்கள்
யாவும் என்வினையால் இடும்பை தீர்ந்தே
இன்பம்உற்று அன்புடன் இணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும் தேவ, தேவா!
ஞான ஆகாசத்து நடுவே நின்று நான்
'பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக; துன்பமும் மிடிமையும் நோவும்
சாவும் நீங்கிச் சார்ந்த பல்லுயிர்எலாம்
இன்புற்று வாழ்க' என்பேன்! இதனை
திருச்செவி கொண்டு திருவுளம் இரங்கி
'அங்ஙனே ஆகுக' என்பாய் ஐயனே!
இந்நாள் இப்பொழுது எனக்கு இவ் வரத்தினை
அருள்வாய் ஆதிமூலமே!"[17]

இந்த வரத்தின் இன்றியமையாமையும், அதனை இன்றே இப்பொழுதே பெற்றாக வேண்டிய துடிப்பும் உயிர்ப்போடு துலங்குவதை மேற்சுட்டிய வரிகளில் இனிது காணமுடியும். சொல்லுக்கும் செயலுக்கும் இடைவெளியற்று சொல்லே செயலாய் மலர்விக்கும் அவசரம். அதற்குத் தெய்வம் துணை. தெய்வம் துணை தான் செய்யும். அது தொழில் செய்யாது. தொழிற்பட வேண்டியது உயிர்க்கடமை. மானுடர்க்கு முதற்கடமை. தொழிலே தவம். 'செய்க தவம் செய்க தவம்' என்று அவசரப்படுத்துகிறார் பாரதியார். உடல் தவம், உழைப்பு. நெஞ்சின் தவம் எண்ணம்; தியானம். அவ்வாறு,

- "நெஞ்சே தவம் செய்தால்
எய்த விரும்பியதை எய்தலாம்!"[18] என்கிறார் பாரதியார்.

அப்படி என்ன தவம்? கடுந்தவமா? பெருந்தவமா? என்றால் அஃதன்று. எளிது. எளிதினும் எளிது.

'இந்த உலகத்தில் வாழும் மரங்களும், நறுமலர்ப் பூஞ்செடிக் கூட்டமும், கொடிகளும், மூலிகைகளும், புல் பூண்டு யாவையும் எந்தத்தொழில் செய்து வாழ்கின்றனவோ, அந்தத் தொழிலைச் செய்தால் போதும். அந்தத் தொழிலே தவம். மானுடரே, ஊன் உடலை வருத்தவேண்டாம்.

"உங்களுக்குத் தொழில் இங்கே
அன்பு செய்தல் கண்டீர்!"[19] என்கின்றார் பாரதியார்.

"அன்பிற்சிறந்த தவம் இல்லை அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு"[20]

என்று சத்தியம் உரைக்கின்றார். இப்படித் தொட்ட இடந்தோறும் நீக்கமற மந்திரம்போல் நிறைந்த வாக்கினை வழங்குகின்ற குருவாகப் பாரதியார் திகழ்கின்றார்.

## அமரவாழ்வுக்கு உபாயம்

'மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம்!' என்ற பாரதியார்,

"மண்ணுலகின் மீதினிலே எக்காலும்
அமரரைப்போல் மடிவில்லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலாம் அதற்குரிய
உபாயம் இங்கு செப்பக்கேளீர்!"[21]

என்றும் பாடுகின்றார். அவ் உபாயமாக, அவர் அமரர் வழிபெற்றுத் தந்த மந்திரமானது பின்வருமாறு அமைகின்றது.

"மந்திரம் கூறுவோம் உண்மையே தெய்வம்
கவலையற்றிருத்தலே வீடு களியே
அமிழ்தம். பயன்வரு செய்கையே அறமாம்.
அச்சமே நரகம். அதனைச் சுட்டு
நல்லதை நம்பி நல்லதே செய்க!"[22]

என்று,தமது 'விடுதலை' நாடகத்தில், வசுபதியாகி, பாரதியார் கேட்டு மொழிந்த மந்திரம் இது.

இவ்வாறு, தியானிப்போரின் மௌனத்தில் எழுந்த எண்ணம், சொல்லாகி, அச்சொல் பொருள் தந்து, அப்பொருள் உண்மையுணர்த்தி நிற்கும்போது, கேட்போருக்கு, அம்மௌனத்தை வசப்படுத்துகின்றது. அது, பொருள் பொதிந்தது.

அத்தகு இடத்தைச் சுட்டிக் காட்டுகிற, எட்டித்தொடுகிற, பேச்சுக்கள் உலக மொழிகளில் நிறையவே கிடைக்கின்றன. அதனைக் கைக்கருகில் தந்து, உடனுறைபொருளாக மட்டுமன்றி, உரிமைப் பொருளாகவும் ஆக்கிவிடுகிற பெற்றி தமிழுக்கு உண்டு. அதனால்தான்,

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே அதைத்
தொழுது படித்திடடி பாப்பா!"[23]
என்கிறார் பாரதியார்.

அத்தகு உயர்சொல்லைத் தகுதியுடையோன் உபதேசிக்கும்போது அது மந்திரமாகின்றது. ஈங்கு,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"[24]

என்ற தொல்காப்பிய நூற்பாவையும், அதற்கு,"நிறைந்த மொழியை உடைய மாந்தர் தமது ஆணையால் சொல்லப்பட்ட மறைந்த சொல் மந்திரமாவது என்றவாறு அது வல்லார் வாய்க்கேட்டுணர்க"[25] என்ற இளம்பூரணார் உரையையும் நினைத்தல் பொருத்தமுடையது.

அத்தகு வல்லார்கள் நிறைந்த கூட்டம், திருக்கூட்டம். அதனை 'மரணமிலாப்பெருவாழ்வு' கண்ட வள்ளலார் வாக்கின்வழி சொல்வதாயின், 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம்'. தெரு வழி நடந்தாலும் அது, தெருக்கூட்டம் அன்று.

அந்தக் கூட்டம், மானுடக் கூட்டம் மட்டுமன்று; அது, காக்கையையும் குருவியையும் தமது சொந்தச்சாதியாகக் கொண்டது; நீள் கடலையும் மலையையும் உள்ளடக்கியது; ஆழ்கடலாகிய நெய்தலும், வான்தொடும் மலையாகிய குறிஞ்சியும் இங்குச்

சுட்டப்பெறுகின்றபோதே, அதனிடை முல்லைக்காடும், மருத வயலும், திரிந்த பாலையும் அடங்கிவிடுகின்றன. அதனையும் கடந்து நோக்கி நோக்கிக் களியாட்டம் போடுகிற திருக்கூட்டம் அது.

"தோன்றி அழிவது வாழ்க்கை - இதில்
துன்பத்தோடு இன்பம் வெறுமை என்றுஓதும்
மூன்றில் எதுவருமேனும் - களி
மூழ்கி நடத்தல் பரசிவ முக்தி"[26]

எனும் தெளிவு பெற்ற திருக்கூட்டம். அத்தகு கூட்டத்தை உருவாக்குவது தான் பாரதியாரின் பொழிவு. அக்கூட்டம் பாரதியார் காலத்தில் தெருவிலும் கூடியது. அரங்கிலும் திரண்டது. கடற்கரையில், பாரதியார் மற்றும் அவர் நண்பர்கள் வீட்டுத் திண்ணையில், மகளிர்களைக் கொண்டு அவர் நடத்திய வழிபாட்டில் என எல்லா இடங்களிலும் கூடியது. பாட்டும், உரையும், பாவனையும், ஆவேசமும் கொண்டு அவர் அத்தகு இடங்களில் ஆடியது சக்திக்கூத்து என்றே சொல்லலாம். பெரும்பாலும் பொதுமேடையில் பாரதியார் பாடியதே அதிகம் என்றாலும் அவற்றுக் கிடையில் பேசியும் இருக்கின்றார். பேச்சு முற்றிப் பாட்டாய்ப் பாரதியாரிடமிருந்து பீறிட்டுக் கிளம்புவதைப் பிரமித்துப் போய்ப் பார்த்தவர்கள் அவர்தம் பேச்சுக்கலையின் பெருமிதத்தை மறந்துபோய் விட்டார்கள் என்றே தோன்றுகின்றது.

கதாகாலட்சேபம், இசைச்சொற்பொழிவு போன்ற பெயர்களில் பிரசங்கங்கள், சொற்பொழிவுகள் நிகழ்த்துபவர்களுக்கு மத்தியில் பாரதியாரின் பொழிவுகள் இவ்வாறான எந்தப் பெயரடை களுக்குள்ளும் அடங்காது தனித்து நிற்பதை அடையாளம் காண முடியும். இந்த வகையில் பாரதியார் பொழிவுகளை நோக்கும்போது அவர்தம் ஆளுமை, சொல்லாற்றல், தெய்விகத் தன்மை இனிது புலப்படுவதை நன்கு உணர முடியும்.

பணம் சேர்க்கின்ற, புகழ் பெறுகின்ற ஒரு வாயிலாகப் பேச்சைப் பயன்படுத்திய பிரசங்கிகளுக்கு மத்தியில், நெளிந்தும், குழைந்தும், வளைந்தும், வணங்கியும் சொற்களை மொன்னைப்படுத்தி, தன்னைப் பேணிய சொற்சாகசக்காரர்களுக்கு மத்தியில்,

"நேர்படப்பேசு"[27]

"வெடிப்புறப் பேசு"[28]

"சொல்வது தெளிந்து சொல்"[29]

என்றெல்லாம் தமது புதியஆத்திசூடியில் புகன்றதுபோலவே செயல்முறையிலும் தன்னைத் தகவமைத்துக் கொண்டவர் பாரதியார்.

இது பிற்காலத்தில் வந்து சேர்ந்த பெருமையன்று. பிறவியிலேயே வாய்த்த இயல்பு. அதற்கான அறிகுறிகள் அவரது பள்ளிப் பருவத்திலேயே முளை விட்டிருந்ததையும் காணமுடிகின்றது.

## விளையும் பயிர்

பாரதியாரின் இளம்பருவத்தோழரான நாவலர் சோமசுந்தர பாரதியார், பாரதியாருடனான பள்ளிப் பருவநிகழ்வைப் பின்வருமாறு நினைவு கூர்கின்றார்.

"ஒருநாள் கலாசாலையில் இவர்பால் அஸூயை கொண்ட தமிழ்ப் பண்டிதர் வகுப்பில், 'காலரி'யில் உயர்ந்த இடத்தில் உட்கார்ந்திருந்த நமது பாரதியார் தம் கேள்விக்கு விடை சொல்லாததற்காக, "மேகம்போல் கவிகள் பொழிவதாக, ஊரிலே புகழப்படுகிறீர், நேரான இடத்திலும் இருக்கின்றீர், காளமேகம்போல் பொழியாமல் சும்மா இருப்பதேன்?" என்று கேலி பண்ணினார். உடனே, நமது கவி உட்கார்ந்தபடியே, "பண்டிதரவர்களுக்கு மேகத்தின் ஸாமான்ய குணம்கூடத் தெரியாமல் இருக்கிறதே? காளமேகம் தனக்குத் தோன்றியபொழுது மழை பொழிவதன்றிப் பண்டிதர் உத்திரவுக்குப் பயந்து பெய்வதில்லையே. இஃதறியாமல் தன்னைப் பேசும்படி கட்டாயப்படுத்தும் பண்டிதரிடத்தில் பரிவு காட்டுவதெப்படி?" என்று விடை கூறினார். அதுகேட்ட வகுப்பு மாணாக்கர் அனைவரும் கைகொட்டி நகைக்கப் பண்டிதர் வெட்க மடைந்தார். இப்படியே பல சமயங்களிலும் தன்னொ டெதிர்த்த புலவர்களை இவர் அதி சமர்த்தாய் அடக்கிய சந்தர்ப்பங்க ளெல்லாம் இவருடைய ஆச்சரிய புத்தியையும், தமிழ்த் திறத்தையும் நன்கு விளக்கக்கூடியவை"[30]

இவ்வாறு, வகுப்பறையில் மட்டுமன்றி வாழ்வின் அனைத்து நிலைகளிலும், தமது அறிவுச்சுடர் ஒளிவிடப் பேசும் வல்லமை படைத்தவராக விளங்கியிருக்கின்றார் பாரதியார். அதன் பெற்றியை அருகிருந்து தரிசித்த வ.ரா. தம் காலத்தில் கண்ட வரலாற்றுப் பெரியவர்களின் வாக்குவன்மைகளோடு ஒப்பிட்டுப் பாரதியாரின் தனித்தன்மையைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

## பாரதியாரின் தனித்தன்மை

"அந்தக் காலத்தில் இந்தியாவில் இருந்த தலைவர்களிடம் ஏகதேசம் எனக்குப் பழக்கம் உண்டு. சத்தியாக்கிரக இயக்கத்துக்குப்பின் தோன்றிய தலைவர்களிடமும் சிறிது அறிமுகமுண்டு. காந்திஜீயையும் தெரியும். ஆனால், சம்பாஷணையின் மாண்பிலும் இனிப்பிலும் அரவிந்தருக்கும்

பாரதியாருக்கும் இணையாக யாரையுமே சொல்லமுடியாது என்பதே என் கருத்து. ஒருவேளை, காந்திஜியையும், கபர்தேயையும் விலக்காகச் சொல்லலாமோ என்னவோ?

திலகரின் சம்பாஷணையில் பொருளும் சக்தியும் இருக்கும்; ஆனால், வழவழப்பும் இனிப்பும் ஹாஸ்யமும் இரா. தோழரான கபர்தேயின் பேச்சில் வியக்கத்தக்க நகைச்சுவையும் சிங்காரமும் செழித்து இருக்கும். சுரேந்திரநாதரின் பேச்சே பிரசங்கம். விபின சந்திரபாலரின் பேச்சில் கசப்பும், சுளிப்பும் கலந்து நிற்கும்; ஆனால், சக்தியும் நவீனமும் கூட இருக்கும். கோகலேயின் பேச்சு தங்கக் கம்பி இழை சன்னப் பேச்சு. பிரோஸ்தா மேத்தாவின் பேச்சு தடியடி முழக்கம். லஜபதிராய், அமெரிக்கையுடன், முன்னெச்சரிக்கை நிறைந்த பேச்சுப் பேசுவார். ஜி.சுப்பிரமணிய அய்யர் விஸ்தாரமாகப் பேசுவார். சேலம் விஜயராகவாச்சாரியார் சட்ட மேற்கோள், சரித்திர மேற்கோள் இல்லாமல் பேசமாட்டார்.

பாரதியார் - அரவிந்தர் சம்பாஷணையில் நவரசங்களும் ததும்பும். ஒழுகும். கவிதை, சரித்திரம், தத்துவம், அனுபவம், கற்பனை, ஹாஸ்யம், உண்மையை வெளிப்படுத்தும் ஆவல், அபரிமிதமான இலக்கியச் சுவை, எல்லை இல்லாத உடல் பூரிப்பு - எல்லாம் சம்பாஷணையினிடையே இடைவிடாது நர்த்தனம் செய்யும்.

ஈசுவரன் தர்மராஜா கோயில் வீதியில், புரொபஸர் சுப்பிரமணிய அய்யர் வீட்டுத் திண்ணையிலும், அதை ஒட்டியிருக்கும் தாழ்வாரத்திலும் பாரதியார் இரவு வெகுநேரம் வரையில் நண்பர்களோடு அளவளாவிக் கொண்டிருப்பார்... சபை கூடி விட்டால், சபாநாயகரும், பிரசங்கியாரும் பாரதியார்தான். புரொபஸர் சுப்பிரமணிய அய்யர் மட்டும் இடை யிடையே ஏதேனும் சொல்லுவார். பொருத்தமான ஒன்றைச் சொல்லி, மேன்மேலும் பேசப் பாரதியாரைத் தூண்டுவார். மற்றவர்கள் யாவரும் பாரதியார் பொழிவதைக் கேட்டு அனுபவித்துக் கொண்டிருப்பார்கள்...அரவிந்தர் புதுச்சேரிக்கு வந்த புதிதில், அவர் வீட்டிலே சுதேசிகள் கூடிப் பேசுவார்கள். இந்தச் சம்பாஷணைகள் தெவிட்டாத அமுதமாகும்"[31] என்கின்றார் வ.ரா.

பாரதியாரின் மௌனம்

இத்தகு பேச்சைப்போலவே பாரதியாரின் மௌனமும் தனித்தன்மை வாய்ந்தது. அதற்கான பின்புலத்தையும் பாரதியாரின் புதுச்சேரி வாழ்வை முன்வைத்துப் பின்வருமாறு விளக்குகின்றார், வ.ரா.

"அற்ப மனிதர்களுடன் பேச்சுச்சல்லாபம் வைத்துக் கொள்வதைக் காட்டிலும் மௌனவிரதம் மேலானது என்று ஓர் அறிஞர் கூறியிருப்பது உண்மை. வார்த்தைகளுக்கும் கருத்து களுக்கும் லட்சியத்துக்கும் கௌரவம் கெட்டுப்போகும். சுகம் என்றால் பிறரை வஞ்சித்துத் தனக்கு மட்டும் தேடிக்கொள்ளும் சுகம் என்று அற்பன் எண்ணுகிறான். உலக சுகம் என்றால் அது ஏமாற்று வேலை, ஏமாற்றுக் கருத்து என்ற எண்ணுகிறான் மூடன். கவிதை என்றால் கூத்துப்பாட்டு என்ற ஆபாச எண்ணம் அவன் மனத்தில் தோன்றுகிறது. சுதந்திரம் என்றால் உயிரை இழப்பதற்கு ஏற்பட்ட தற்கொலைச் சந்தர்ப்பம் என்று அவன் மயங்குகிறான். இந்தக் கேவலமான நிலையில் மனிதர்கள் இருப்பார்களாகில், மேதாவிகள் என்ன செய்வது? இந்த நிலையில் மூன்று காரியங்கள் செய்யலாம். ஒன்று, மௌனமாய் இருக்கலாம். அறிவிலிகளின் அவதூறைப் பொருட்படுத்தாமல், பிடிவாதமாகத் தங்கள் கருத்தை உலகத்துக்குத் தெரிவிக்கலாம். களைத்துச் சோர்ந்து போகுங் காலத்தில், இயற்கைத் தாயினிடம் சரண் புகலாம். இந்த மூன்று காரியங்களையும் பாரதியார் செய்தார்".[32]

பாரதியாரின் சொற்பொழிவுக் கலை

உபந்நியாசம், பிரசங்கம் கதாகாலாட்சேபம் என்றெல்லாம் அக்காலத்தில் சுட்டப்பெற்ற மேடைப்பொழிவு நிகழ்ச்சிகள் பாரதியார் வரவால் மெய்யாகவே சொற்பொழிவாயிற்று. பாரதியார் மற்றும் பாரதியன்பர்களின் பதிவுகளில் பிரசங்கம், ப்ரஸங்கம் என்றெல்லாம் இப்பெயர் சுட்டப்பெற்றாலும், வ.ரா. சொற்பொழிவென்றே சுட்டுகின்றார். பாரதியாரும் அக்கால நடைமுறைப் பேச்சுப் பாங்கிலேயே இச்சொல்லாடல்களைக் கையாண்டிருக்கின்றார்.

தமிழின் வசனநடை பற்றிப் பாரதியார் குறிப்பிடும்போது, "கூடியவரை பேசுவதுபோலவே எழுதுவது தான் உத்தமமென்பது என்னுடைய கட்சி, எந்த விஷயம் எழுதினாலும் சரி, ஒரு கதை அல்லது தரு தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம் எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியே அமைந்துவிட்டால் நல்லது"[33] என்கிறார்.

ஆக, எழுத்துக்கு முந்தியதாகச் சொல்லை(பேச்சை)க் கவனத்தில் கொள்வது பாரதியாருக்குப் பழக்கமான ஒன்று. பல எழுத்தாக்கங்களில் இத்தகு சொற்பொழிவுநடை கலந்த சொல்லாடல்களைப் பார்க்கலாம். சான்றுகளாக, "தமிழா, தெய்வத்தை நம்பு, பயப்படாதே. உனக்கு நல்ல காலம்

வருகின்றது"[34] எனும் கட்டுரைத் தொடரையும், "பார்ப்பானை ஐயனென்ற காலமும் போச்சே -வெள்ளைப் பரங்கியரைத் துரையென்ற காலமும் போச்சே"[35] எனும் கவிதைத் தொடரையும், "ஐயோ, என்ன உலகமடா, இந்த மண்ணுலகம், ஒழியாத ஏமாற்று, ஒழியாத வஞ்சனை, ஒழியாத கவலை"[36] என்னும் கதைத் தொடரையும் இங்கே கருத்திற்கொள்ளலாம்.

எழுத்தும் பேச்சும்

பாரதியார் எழுதிப்பழகுமுன் சொல்லிப்பழகுதல் இன்றியமையாதது என்ற கொள்கையை உடையவர். அதனை ஒரு வழியாக மற்றவர்களுக்கும் பின்வருமாறு விளக்குகின்றார். "பழக்கமில்லாத ஒரே விஷயத்தைக் குறித்து, அதாவது ஜனங்களுக்குச் சற்றேனும் பழக்கமில்லாமல் தனக்கும் அதிக பழக்கமில்லாத ஒரு விஷயத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தால் வாக்கியம் தத்தளிக்கத்தான் செய்யும். சந்தேகமில்லை. ஆனாலும் ஒரு வழியாக முடிக்கும்போது, வாய்க்கு வழங்குகிறதா? என்று வாசித்துப் பார்த்துக் கொள்ளுதல் நல்லது. அல்லது ஒரு நண்பனிடம் படித்து காட்டும் வழக்கம் வைத்துக் கொள்ளவேண்டும். சொல்லவந்த விஷயத்தை மனதிலே சரியாகக் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு கோணல், திருகல் ஒன்றுமில்லாமல் நடை நேராகச் செல்லவேண்டும்"[37] என்பது பாரதியார் காட்டும் பாதை.

இதனைத் தமது அனுபவவெளிப்பாடாய்ப் பாரதியார் கண்டிருக்கின்றார் என்பது பாரதியன்பர் வ.ரா.வின் பதிவுவழி விளக்கமாகின்றது. "பாரதியார் எதை எழுதினாலும், அதை நெருங்கிய நண்பர்களுக்குப் படித்துக் காண்பிக்காமல் இருப்பதில்லை... நாம் எழுதும் தமிழ் பெரும்பான்மையத் தமிழர்களுக்குப் புரிய வேண்டும் என்பது பாரதியாரின் திடமான கொள்கையாகும். எனவே, தாம் எழுதினதைப் பிறர் எளிதிலே புரிந்து கொண்டு ரசிக்கிறார்களா என்பதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் படித்துக் காண்பிப்பார். படித்துக்கொண்டு போகும் பொழுதே, கேட்பவர்களின் முகத்தைக் கவனித்துப்பார்த்துக்கொண்டே போவார். எந்தச் சமயத்திலாவது, அவர்களுடைய கண்கள் ஒளியிழந்து, முகம் அசடு தட்டிப்போகுமாகில், உடனே, படிப்பதை நிறுத்திக் கொள்வார். அவர்களுக்கு விளங்காத வார்த்தையை உடனே எடுத்துவிட்டு, வேறு வார்த்தையை உபயோகப்படுத்துவார். கடினமான கருத்தாக இருந்தால் அதைத் தெளிவுபடுத்தக்கூடிய பாஷையையும் கைக்கொள்வார்"[38]

அருள்வாக்கு

இதனடிப்படையில், 'சரஸ்வதியும் இலக்கியமும்' என்ற தலைப்பில் பாரதியார் உரைப்பதையும் கவனத்தில் கொள்ளலாம்.

"உலக நடையிலே, உண்மை முதலிய குணங்கள் ஸரஸ்வதி தேவியின் கருணைக்கு நம்மைப் பாத்திரமாக்கி நம்மிடத்திலே தேவ வாக்கைத் தோற்றுவித்து, நமது வேள்வியைக் காக்கும் என்பது கண்டோம். இலக்கியக்காரருக்கோவென்றால், இத்தெய்வமே குலதெய்வம். அவர் இதனைச் சுடர் செய்யும் உண்மையுடனே போற்ற வேண்டும். எதுகை மோனைகளுக்காகச் சொல்லவந்த பொருளை மாற்றிச் சொல்லும் பண்டிதன் ஸரஸ்வதி கடாக்ஷத்தை இழந்துவிடுவான். யமகம் திரிபு முதலிய கட்டுக்களை விரும்பிச் சொல்லுக்குத் தக்கபடி பொருளைத் திரித்துக் கொண்டுபோகும் கயிறுபின்னிப் புலவன் வாணியின் திருமேனியை நோகும்படிசெய்கிறான். அவசியமில்லாத அடைமொழிகள் கோப்போன், அந்த தெய்வத்தின்மீது புழுதியைச் சொரிகின்றான். உலகத்தாருக்குப் பொள் விளங்காதபடி இலக்கியஞ் செய்வோன் அந்த சக்தியைக் கரித்துணியாலே மூடுகின்றான். 'வெள்ளைக் கலையுடுத்துவதில்லை'. மனமறிந்த உண்மைக்கு மாறு சொல்லும் சாத்திரக்காரனும் பாட்டுக்காரனும் ஸரஸ்வதிக்கு நிகரில்லாத பாதகம் செய்கின்றனர். இலக்கியத்துக்குத் தெளிவும் உண்மையுமே உயிரெனலாம். இவ்வுயிருடைய வாக்கே அருள்வாக்கென்று சொல்லப்படும்."[39]

பேச்சு என்பது பொழுதுபோக்குச் சாதனம் என்பதாகப் பாரதியார் கருதவில்லை. திண்ணைப்பேச்சு, வேடிக்கைப் பேச்சு, பழங்கதை, வாய்ச் சொல் என்றெல்லாம் அத்தகு பேச்சுக்களைப் புறந்தள்ளும் வேகத்தை அவர்தம் கவிதைகளில் காணலாம். அத்தகையோரை 'வாய்ச்சொல் வீரர்' என்றே பட்டம் கொடுத்து அவர் சுட்டியிருக்கின்றார்.

பலவீனமான சொற்கள், புலம்பல்கள், மற்றோரைக் குறை கூறல் ஆகியவை பெரும்பாலுமின்றி நம்பிக்கை ஊட்டுகின்ற மந்திரம் போன்ற சொற்களைக் கொண்டு மக்களின் வீரத்தையும் அவர்கள் உள்ளுறங்கிக் கிடக்கும் ஆன்மாவையும் தட்டி எழுப்பிய சொல் அவரது. அதற்கு உயிரோட்டமளிப்பதாக அவர்தம் பாடல்கள் அரங்குகளின் மௌனம் கிழித்தன. அருளாடி போன்ற நிலையில் சந்தம் கொண்டு மக்கள் பாரதியாரின் உரையையும் பாடல்களையும் செவிமடுத்திருந்தனர் என்பது பாரதியன்பர்களின் அனுபவப்பதிவு.

சொற்பொழிவாளராகிறார் பாரதியார்

பொதுவாக, பாரதியாரின் சொற்பொழிவின் தன்மையானது அவர்தம் வாழ்க்கைப் போக்கைப்போலவே அமைந்திருந்தது எனலாம்.

சிறிய வயதில் எட்டயபுர அரண்மனைப் புலவர்களுடனான தொடர்பு, தாய்வழிப் பாட்டனாருடன் வாதிட்டுப் பழகிய தன்மை, எதற்கும் அஞ்சாமல் நினைத்ததை நினைத்த வண்ணம் எடுத்துரைக்கும் பாங்கு அனைத்தும் பாரதியாரின் வாக்கு வன்மைக்கு வழிசமைத்தது.

நெல்லையில் கல்விபெறப்போன காலத்தில் ஆங்கிலக் கல்வியை விடவும் தமிழ்க்கல்வியில் குறிப்பாகக் கவிதையில் நாட்டம் கொண்டவராகப் பாரதியார் காணப்பட்டார். அரண்மனைப் புலவர்களோடு உரையாடிப்பழகிய வேகத்திலேயே ஆசிரியரிடத்தும், மூத்தமாணவர்களிடத்தும் பேசியிருக்கின்றார். எனினும் வரம்பு மீறுகின்ற தன்மை பாரதியாரிடத்தில் இல்லை.

தந்தை மறைவுமுதலான துன்பங்கள் தொடர்ந்த வேளையில் காசி சார்ந்த பாரதியாரின் வாழ்க்கை அவர்தம் சிந்தனைகளை மெருகேற்றி யிருக்கின்றது. அங்கே ஒரு கலைமகள் விழாவை ஏற்பாடு செய்து அதில் பெண்கல்வி குறித்த சிந்தனைகளை முன்வைத்திருக்கின்றார் பாரதியார்.

"காசிநகர்ப்புலவர் பேசும் உரைதான்
காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்"[40]

என்ற பாடலைத் துணைக்கொண்டு பார்த்தால் அங்கேயும் பாரதியாருக்குப் புலவர் கூட்டத்தாரொடு தொடர்பு கிட்டியிருக்க வேண்டும். மாமா சாம்பசிவனாரின் நண்பரான ஈஸ்வரலாலுடன் நடத்திய உரையாடல் போன்று பாரதியாரின் காசிவாழ்வில் என்னென்ன நடந்தனவோ? அவற்றைத் தேடித்தொகுத்தால் பாரதியாரின் வாழ்வும் வாக்கும் இன்னும் துலக்கமுறும்.

பின்னர் எட்டயபுர மன்னரின் அழைப்பை ஏற்றுச் சொந்த ஊர் திரும்பிய பாரதியார் அரண்மனை எல்லைகளுக்குள் தம்மை அடக்கிக் கொள்ள விரும்பவில்லை. தம்மைக் கவர்ந்த ஷெல்லி, கீட்ஸ் முதலான ஆங்கிலக் கவிதைகளை ஆழப்படித்ததோடு, தமக்கு, 'ஷெல்லிதாசன்' என்று பெயரும் சூட்டிக்கொண்டார். 'ஷெல்லிகில்டு' என்ற இலக்கிய அமைப்பையும் தோற்றுவித்தார்.[41] அதன்மூலமாகப் பாரதியார் அவ்வூர் இலக்கிய நேயர்களை முன்வைத்துச் செய்தபணிகள், ஆற்றிய இலக்கிய உரைகள் ஆகியன அவரின் சொற்பொழிவாற்றும் பாங்கிற்குத் தளம் அமைத்துக்கொடுத்திருக்கலாம்.

பின்னர் மதுரைப்பள்ளியின் தமிழாசிரியப்பணி, பண்டிதத்தமிழ் கற்கவும், கற்றுக்கொடுக்கவும் பாரதியாருக்கு உதவியிருக்கும். இதன் தாக்கத்தை, சென்னை பிரசிடெென்சி கல்லூரித் தமிழ்ச்சங்கச் சொற்பொழிவு களில் ஓரளவு காணமுடியும்.

பத்திரிகை உலகம் விரித்த தளத்தில் தொடர்ந்த பாரதியாரின் பயணம், தேசிய அளவில் பரிணமித்ததற்குச் சென்னைச் சூழல் முக்கியக் காரணம். கல்லூரித்தோழர்களின் வாயிலாகக் கல்லூரியில் நடைபெறும் சொற்பொழிவுகளைச் செவிமடுக்கவும், சொற்பொழிவாற்றவும் பாரதியாருக்கு வாய்த்திருக்கின்றது. அந்த வகையில் சுதேசமித்திரன் பத்திரிகை ஆசிரியர் ஜீ.சுப்பிரமணிய ஐயர் பாரதியாரின் சொற்பொழிவுத் துறைக்கு ஒரு முன்னோடியாகின்றார். பின்னர் நிகழ்ந்த அவர்தம் பொழிவுகள் சூழல்கள் குறித்து விரிவுறப் பேசுவன இந்நூலின் பக்கங்கள்.

பாரதியாரின் முன்னோடிகள்

பேச்சுக்கலை பாரதியாருக்குக் கவிதைக்கலை போல இயற்கையாகவே வாய்த்தது. காலப்போக்கில், அதனைத் திறம்பட மெருகேற்றிக் கொண்டார்.

இந்திய அரசியல், ஆன்மிகம்,சீர்திருத்தம் ஆகிய துறைகளில் பாரதியாரின் முன்னோடிகளாக, ஸ்ரீராமகிருஷ்ணர், அவர்தம் சீடர் சுவாமி விவேகானந்தர், அவர்தம் சீடர் குருநிவேதிதா தேவி உள்ளிட்ட அருளாளர்கள் விளங்கியது போலவே, அவரின் பேச்சுக்கலைக்கும் அவ்அருளாளர்கள் சிறந்த முன்னோடிகளாகின்றனர்.

"ஒரு மனிதனுக்கேனும் ஒரு ஜாதிக்கேனும் ஈசுவரன் ஞானத்தைக் கொடுத்திருப்பது இவர்களின் சொந்த அகங்காரத்தின் பொருட்டாக இல்லை. இவர்களுடைய ஞானத்தை மற்ற ஜனங்களுக்குப் பரப்பும் பொருட்டாகவேயாகும். செல்வத்தைப் பெற்றிருப்பவன் அதைப் புதைத்து வைக்காமல் மற்ற ஜனங்களுக்கும் உதவி செய்யக்கடமைப்பட்டிருப்பது போலவே, ஞானமுடையவனும் அதை எல்லோருக்கும் தாராளமாக வழங்கக் கடமைப் பட்டிருக்கிறான்.... சென்ற சில வருஷங்களாக இந்தியாவிலே ஓர் புதிய எழுச்சி தோன்றியதற்கு முன்னடையாளமாக ஸ்வாமி விவேகானந்தரும், அவருடைய கூட்டத்தாரும் தோன்றி உலகமுழுதிற்கும் ஹிந்து மத உண்மைகளைப் பட்டினத்தார் தமது பணத்தைச் சூறைகொடுத்ததுபோல வாரியிறைக்கத் தொடங்கினார்கள். லௌகிக இன்பங்களிலும் நாஸ்திகக் கோட்பாடுகளிலும் மூழ்கிக்கிடந்த

அமெரிகாவிலே போய்த் தமது ஸர்வத் தியாகக்கோட்பாடுகளையும் எல்லா வஸ்துக்களின் ஏகத்துவத்தையும் விவேகாநந்த ஸ்வாமி ராஜமேகம்போல் நின்று வருஷிக்கத் தொடங்கினார். அவருக்கப்பாலும் ஸ்வாமி அபேதாநந்தர், திரிகுணாதீதர் முதலானவர்கள் அவரது பெருந்தொழிலை முறையே நடத்தி வருகிறார்கள்"[42] என்று அக்குரு பரம்பரையைச் சுட்டுகிறார் பாரதியார். இவர்கள் அனைவரும் பாரதியாரின் நெஞ்சம் நிறைந்த குருமார்கள். அவர்களுள் பாரதியாரின் ஆவேச முழக்கத்திற்கும், வேதாந்த நாட்டத்திற்கும் அடித்தளமிட்டவர் சுவாமி விவேகானந்தர்.

"விவேகானந்தரின் சொற்பொழிவுகளை, கட்டுரைகளை, கடிதங்களை, ஆன்மிகச் சமயக் கருத்துக்களை எல்லாம் ஆழமாகக் கற்றுணர்ந்தவர் பாரதியார். இதற்கான அகச் சான்றுகள் நிறைந்துள்ளன. நல்வழி காட்டிய விவேகானந்தரை, சொல் மலர்களால் வழிபட்டவர் பாரதியார்... "ராஜரிஷி, சற்குரு, ஸ்ரீமத் ஸ்வாமி, அவதார புருஷர், ஞானி, மஹான், பரமன், ஞான ரூபேந்திரன், ஹிந்துதேசிகன், தெய்வத்தன்மை வாய்ந்தவர், பெருஞ்சோதி" என்பன அவற்றுள் சிலவாம்"[43] என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார்.

சிகாகோ நகரில் உரையாற்றித் தாயகம் திரும்பிய விவேகானந்தரைச் சிறப்பித்துக் கொண்டாடிய பெருமை சென்னைக்கு உண்டு. அக்காலத்தில் சென்னை நகரில் அவர் ஆற்றிய பொழிவுகள் அதிகம். அதன் தாக்கத்தை நன்கு உள்வாங்கிக் கொண்ட பாரதியார், அவர் மரபில் இயங்கிய தேசத் தலைவர்களுடனும் நல்லுறவு பேணினார். தேசபக்தி முதலான, 'உணர்ச்சிகளெல்லாம் திரண்டு ஸத்குரு விவேகானந்த ஸ்வாமிகளிடமிருந்து பிறந்து, அவையனைத்து ஒருமித்து, நவீன இயக்கமெனத்திரண்டு பிரம்ஹ சமாஜத்து ஸ்ரீவிபின சந்திரபாலர், ஆரிய சமாஜத்து ஸ்ரீலால் லஜபதிராய், வைதீகர் திலகர் ஸ்ரீபாலகங்காதர திலக், சிவனடியார் ஸ்ரீ வி.ஓசிதம்பரம் பிள்ளை ஆகிய இன்னும் அநேக மகான்கள் மடியிலே வளர்ந்து இந்தியனாகப் பிறந்துள்ள ஒவ்வொருவனுடனும் தற்காலத்தில் விளையாடி வராநிற்கும்" என்று போற்றுகின்றார்.[45]

இந்த வரிசையில் சக்திதாசனாக பாரதியாரும் வந்துநிற்கின்றார். இவர்கள் அனைவரும் பாரதியாரின் மேடைத்தமிழுக்குத் தூண்டு கோலாகவும், துணையாகவும் திகழ்ந்திருக்கின்றனர் எனலாம்.

எந்த இடமானாலும், எந்த ஊரானாலும், "அன்பர்களின் அழைப்பை எற்றுப் பொதுக்கூட்டங்களில் கலந்துகொண்டு சொற்பொழிவு ஆற்றுவதைப் பாரதி தம் கடமையாகவே கருதினார். ஆகவே, உள்ளூர்-வெளியூர். பிரமுகரகள் தம்மைப் பேசும்படி

அழைத்தால், தவறாமல், கூட்டங்களில் கலந்துகொண்டு அரசியல் முதல் ஆன்மிகம் வரையிலான விஷயங்களைப்பேசி,மக்களின் மனம் வெளுக்க வழி செய்தார், பாரதி.[16]

அதற்கெனப் பாரதியார் சில வரைமுறைகளைத் தமக்கெனத் தனியே வகுத்துக் கொண்டார். சில பயிற்சிகளை மேற்கொண்டார். அவை, இங்குக் கருதத்தக்கவை.

பாரதியாரின் பேச்சுப் பயிற்சி

"பாரதியாருக்கு மற்றவர் மனம் வருந்தும்படியும், மற்றவரைக் குத்தலாகவும் கிண்டலாகவும் பேசியும், கேலியும், நையாண்டியும் பரிகாசமும் செய்து துன்புறுத்து வோரைக் கண்டால் பிடிக்காது. இரட்டுற மொழிதல் - அதாவது, இரண்டு பொருள் தொனிக்கப் பேசல் - அவருக்குப் பிடிக்கவே பிடிக்காது. தன்னிடத்திலுள்ள குறைகளை மனிதன் உடனுக்குடன் திருத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காக - பேசும் போதும் பாடும்போதும் வலித்துக் கொண்டும் திருகிக்கொண்டும், கோணிக் கொண்டும் இருப்பதைப் போக்க வேண்டும் என்பதற்காக - கண்ணாடிக்கு முன் நின்றுகொண்டே தான் பேசும்பொழுது முகபாவம் எப்படியிருக்கிறது என்றுகூடக் கவனிப்பார்"[47] என்று பாரதியாரின் புதல்வி தங்கம்மாள் பாரதி குறிப்பிடுகின்றார்.

பாரதியார் செவிமடுத்த சொற்பொழிவுகள்

ஒரு நல்ல சொற்பொழிவாளர் நல்ல கேட்பாளராகவும் இருக்கவேண்டும். எந்த நிலையிலும் செவிவாயாக, நெஞ்சுகளனாகக் கொள்வோர், தன்னுள் நிறைவர். கேட்டதையெல்லாம் அப்படியே உள்விழுங்கிக்கொள்ளுதல் பிழை. மென்று, தின்று, அரைத்துக்கூழாக்கி உண்ணப்பெறும் உணவு, பின்னர் செரித்துக் குருதியில் கலந்து உணர்வாக மாறுவதுபோல், கேட்டல் நிகழ வேண்டும். கேள்வியால் தோற்கப்படாத செவி, பயனற்றது. 'கற்றில னாயினும் கேட்க' என்பது தமிழ்வேதம்.

அந்த வகையில் பாரதியார் நிறையக் கேட்டிருக்கின்றார். கண்டும் கேட்டும் மகிழ்ந்திருக்கின்றார்; விமர்சித்திருக்கின்றார்; பாராட்டி யிருக்கின்றார்; பகடி செய்திருக்கின்றார்; பத்திரிகைகளில் பதிவும் செய்திருக்கின்றார்.

தேசியத்தலைவர்களான, லாலாலஜபதிராய், தாதாபாய் நௌரோஜி, திலகர், விபினசந்திரபாலர், அரவிந்தர், போன்றோர்களின் சொற்பொழிவுகளைத் தமிழாக்கித் தந்திருக்கின்றார். ஜகதீசசந்திரவஸு என்ற அறிவியலாளரின் பொழிவையும், தாகூர் முழங்கிய

பொழிவுகளையும், தமிழாக்கித்தந்த பாரதியார், தமிழறிஞர் உ.வே.சா. மொழிகளையும் இதழ்களில் நிறைக்கின்றார். மேலும், வெவ்வேறு இடங்களில் நடைபெற்ற கூட்டங்களின் செய்திகளை, பொழிவுகளைத் தமது நோக்கத்திற்கேற்ப விமர்சனத்தோடு பதிவு செய்திருக்கின்றார்.

இவைதவிர, பாரதியன்பர்கள் பதிவுகளில் கிடைக்கும் பாரதியார் பார்வையாளராகப் பங்கேற்றுக் கேட்ட சொற்பொழிவுகள் சிலவற்றை இங்குக் காணலாம். இவை பாரதியார் காலத்துச் சொற்பொழிவுகளின் போக்குகளைப் பிரதிபலிப்பதாக அமைவதோடு, இவைபற்றிப் பாரதியாரின் கருத்துக்களையும் வெளிப்படுத்துவனவாக விளங்கும்.

### பாரதியார் காலத்துப் பொழிவுகளின் போக்கு

அக்காலத்தில் நிகழ்ந்த சொற்பொழிவுகள் பெரும்பாலும் தமிழுக்கும், தமிழர்கட்கும் வளஞ்சேர்ப்பனவாக இல்லை. அக்காலத்துச் சொற்பொழிவாளர்கள்,

"காலாக்ஷேபிகள், கதையும் பாட்டும்
தமிழாயிருந்தால் சாயாதென்றே
இந்துஸ்தானி, வடமொழி, தெலுங்கில்
பாடி ஆடிப் பழிசுமந்தனர்"[48]

என்கின்றார் பாரதிதாசன்.

### இரண்டு பொழிவுகள்

பாரதியாரின் புதுவைவாசத்தின்போது, பாரதியாரும், தானும் பார்வையாளர்களாகப் பங்கேற்ற இரு சொற்பொழிவுகள் பற்றிப் பாரதி தாசன் ஒரு நிகழ்வை நினைவுகூர்கிறார்.

"புதுச்சேரி சமரச சன்மார்க்க சங்கக் கட்டடத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது - தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்களும் வேறு சிலரும் சொற்பொழிவு செய்ய வந்திருந்தனர். இப்பொழிவுகளைக் கேட்பதற்குப் பாரதியாரும் சென்றார். சிலப்பதிகாரம் பற்றித் திரு.வி.க. நிகழ்த்திய சொற்பொழிவு சிறப்பாயிருந்ததைக் கேட்டு பாரதியார் மெத்த மகிழ்ந்தார். தமிழின் இனிமையை நானிலம் அறியும் வகையில் திரு.வி.க. பேச்சு இருந்ததாகப் பாரதியார் உணர்ந்து, 'இது அல்லவா, பேச்சு!' என்று கொண்டாடினார்.[49] இந்நிகழ்ச்சியைத் திரு.வி.க. மணிமடல் பாடலிலும் பாரதிதாசன் நினைவு கூர்ந்துள்ளார்:

புதுவையிலே கலியாண சுந்தரனார்
    ஆற்றிய சொற் பொழிவில் தூய

மதுவையள்ளி மலர்தேக்கி வண்டுகட்கு
விருந்தாக்கி மயக்குதல்போல்
பொதுவினர்க்குச் சிலப்பதிகாரச் சுவையை
நடையழகைப் புகலும் போதில்
இதுவையா பேச்சென்பேன் பாரதியார்
கைகொட்டி எழுவார் வீழ்வார்!

எவர் பேச்சுக்கும் எப்படிப்பட்ட பேச்சுக்கும் கைதட்டும் பொதுவழக்கம் பாரதிக்கு இல்லை. பாராட்டத்தக்கனவற்றிற்கே அவரின் கைகள் ஒலிக்கும். இந்நிகழ்ச்சியில் அடுத்துப் பேசியவரின் பேச்சு முன்னைக்கு நேர்மாறாக இருந்தது. இவர் குரங்குபோல் ஆடி ஆடித்தாவித்தாவி மேடையில் குதித்தார். தாயுமானவரின் பாடலை அழுகுரலில் பாடினார். பாரதியார் எரிச்சலடைந்தார். 'யாரடா இவன்?' என்று பேச்சாளரைக் குறித்துப் பேச்சினிடையே எழுந்து சத்தமிட்டார். எவரும் எதிர்பாராதவகையில் இடத்தை விட்டு அகன்று வெளியேறினார். கூடியிருந்தவரில் பலரும் பாரதியைப் பின்பற்றிக் கூட்டத்தைப் புறக்கணித்துவிட்டுப் புறப்பட்டனர்.[50] இதனையே இரு பிரசங்கங்கள் என்னும் தலைப்பில் பாரதி தாசன் தமது தனிக்கவிதையொன்றில் பின்வருமாறு பதிவுசெய்யக் காணலாம்.

"சமரச சன்மார்க்க சங்கக்கட்டிடத்தில்
தகுதிரு வீ.கல்யாணசுந்தரனார்தாம்
அமைவுடைய இளங்கோவின் கவிநயத்தை
அமுதம்போல் எடுத்துரைத்தார் பிரசங்கத்தில்!
தலைமீறிப் பொங்கியெழும் சந்தோஷத்தால்
தடதடவெனக் கரகோஷம் செய்தார் ஐயர்.
நமது தமிழ் இனிமைதனைக் கண்டுகொள்க
நானிலமே என்றன தம் விழியும் மார்பும்!
அடுத்தபடி வேறொருவர் பிரசங்கித்தார்
அவர் கோணிக் குரங்குபோல் ஆடி ஆடி
எடுத்தெடுத்துப் பாடினார் தாயுமானார்
எழிற்பாட்டை அழுகுரலில்!அவர், சனத்தைப்
படுத்தாத பாடில்லை! கோபத்தாலே
பாரதியார் யாரடா இவன் என்றார். நான்
தடுத்துவிட்டேன்! எழுந்திரென்றார். ததாஸ்து சொன்னேன்.
சபைத்தலைவர், பிரசங்கி சபையில் மீந்தார்!"[51]

"கோவிந்தா கோவிந்தா"

தகுதியான பொழிவுகளை மனமகிழ்ந்து பாராட்டும் பாரதியார், தரமற்ற பொழிவுகளைக் கேட்டுச் சீறிச்சினந்திருக்கின்றார் என்பதை

இந்நிகழ்வு புலப்படுத்துகின்றது.இச்சினமானது சில இடங்களில் நகைச்சுவைச் செயல்பாடாக அமைந்துவிடுகின்றது. அவ்வாறான நிகழ்வு ஒன்றை வ.ரா. பதிவுசெய்கின்றார்.

"புதுச்சேரி, ஈசுவரன் தருமராஜா கோயில் தெருக்கோடியில் (கடற்கரைப் பக்கத்தில்) ஒரு சத்திரம் இருக்கிறது. ஒரு சமயம் அங்கே கதாகாலட்சேபம் நடைபெற்றது. கதை செய்யும் பாகவதர் நிரம்ப மோசம்; தமது தொழிலில் திறமை போதாதவர். எனவே, கூடியிருந்தவர்களால் கதையை இரசிக்க முடியவில்லை. அங்கே பாரதியாரும் நானும் இருந்தோம். கூட்டத்தில் எல்லோரும் சத்தம் போட்டுப் பேசத் தொடங்கிவிட்டார்கள். சப்தத்தை அடக்குவதற்குப் பாகவதருக்கு ஒரே வழிதான் தெரியும் போலிருக்கிறது. அடிக்கொருதரம் அவர் 'கோபிகா ஜீவன ஸ்மரணே' என்று சொல்வதும், இதைக் கேட்டதும் கூடியிருந்தவர்கள் (வழக்கமாகச் சொல்வதுபோல) 'கோவிந்தா கோவிந்தா' என்பதும் ஓயாத சம்பவமாகிவிட்டது. பாகவதருக்குக் கதை மேலே ஓடவில்லை. பாரதியாருக்கு அங்கே இருக்கப் பிடிக்கவில்லை; வெளியே வந்துவிட்டார். வந்து சும்மா இருக்கவில்லை. பொன்னுமுருகேசம் பிள்ளைக்குக் கோவிந்தன் என்று ஒரு வேலைக்காரன் உண்டு. அவனைக் கூப்பிட்டு, "கோவிந்தா, இன்னொரு தரம் ஜனங்கள் கோவிந்தா, கோவிந்தா என்று கோஷம் செய்து முடிந்ததும், நீ சபைக்குள்ளே போய், ஏன் எல்லோருமாகச் சேர்ந்து என்னைக் கூப்பிடுகிறீர்கள் என்று கேள்" என்று தயார் பண்ணி விட்டுவிட்டார். கோவிந்தன் இந்தத் தமாஷாவில் பூரணமாகக் கலந்துகொண்டான்; பாரதியார் சொன்னது மாதிரியே செய்தான். சபையில் இருந்தவர்கள் அத்தனை பேரும் (பாகவதரும் அவரது பக்கவாத்தியக்காரர்களும் நீங்கலாக) கொல்லென்று சிரித்தார்கள். பாகவதர் சீக்கிரமாகக் காலட்சேபத்தை முடித்துவிட்டார். சன்மானமும் அதற்குத் தகுந்தாற்போலத்தான் என்று சொல்ல வேண்டுமா?"[52] என்று தமக்கேயுரிய நகைச்சுவை பாணியில் சொல்கிறார் வ.ரா.

பாரதியார் பங்கேற்ற சபை

இவ்வாறு,பொதுவாய் நிகழ்ந்த சபைகளில் பாரதியார் பங்கேற்றுச் செய்த பகடிகள் ஒருபுறமிருக்கத் தம் நண்பர்களோடு இருந்து பாரதியார் நடத்திய சபைகள் பலவாகும். அவற்றுள் சில பாரதியார்தம் எழுத்துக்களிலேயே பதிவாகி உள்ளன. தனித்த நிலையில் தராசு எனும் தலைப்பின்கீழ் உள்ள கட்டுரைகள் தவிர, பெ.தூரன் தேடித்தந்துள்ள படைப்புகளில் பின்வரும் தலைப்புகள் பாரதியாரின் தலைமையிலான சபைகளின் நிகழ்வுகள் பாரதியாரின் இருப்பைப் பதிவுசெய்கின்றன.

காளிதாஸராகவும், கவிராயரராகவும், இருக்கும் அவர் அச்சபைகளில் அக்கிராசனராகவும், பார்வையாளராகவும் இருந்திருக்கின்றார். வேடிக்கையாகத் தொடங்கும் அச்சபை பின்னர் நாட்டு நடப்புகளையும், உலகநடப்புகளையும் அலசி ஆராய்வதாக இருக்கும்.

அவற்றுள் பின்வரும் சில சபைச்செய்திகள் குறிக்கத்தக்கன.

1.உல்லாசஸபை:- காளிதாஸனான பாரதியார் தலைமையில் ஜிந்தாமியான் ஸேட், வெங்கட்டராவ், குண்டுராயர், குமாரசாமி வாத்தியார், எலிக்குஞ்சுசெட்டியார், மணவாளன் செட்டியார் ஆகியோர் கொண்ட சபை கூடுகின்றது. கேலியும், கிண்டலுமாகக் கூடும் அச் சபை, பெல்ஜிய நாட்டுக் கவிஞர் எமீல்வெர் ஹேரன் (Emile Verhaeren) என்பாரது கவிதைகள்பற்றிப் பேசுவதாக அமைகின்றது.[53] *(29.03.1916)*

2. காளிதாஸனான பாரதியாருக்கும், ஸந்தோஷராயருக்கும் (இவர் பாரதியாரின் கற்பனைப்பாத்திரமாக இருக்கலாம்) இடையில் நடந்த உரையாடல், 'பொழுதுபோக்கு' எனும் தலைப்பின்கீழ், தரப்பெற்றுள்ளது. உள்ளூர்ச் செய்தியான, பிள்ளைப்பட்டியில் தம்மனைவியை மிதித்துக் கொன்ற ஒருவனைப் பற்றியும், உலகில், ருஷ்யாவில் நடந்துவரும் புரட்சிபற்றிய செய்திகளைப்பற்றியும், உரையாடுவதாகத் தொடங்கி அப்பிரச்னைகள் பற்றிய சில முத்திரை முடிவுகளையும் வைக்கிறார் பாரதியார். தூமகேது என்னும் வால்நட்சத்திரம் பூமியை ஒட்டி வருவதால் பூமி தூளாகிவிடும் என்ற அறிவியல் மூடநம்பிக்கைகளைச் சாடியவாறு முடிவுறும் அவ்வுரையாடல்,28.03.1916ல் பிரசுரிக்கப்பெற்றது.[54]

3. மேற்சுட்டிய இரு நிகழ்வுகளையும்போலவே, இந்நிகழ்வும் புதுச்சேரியில் நிகழ்ந்தது. புதுவையின் சிறப்பு அடையாளங்களுள் ஒன்றான, கடற்பாலத்தில், சேஷய்யங்கார், பாரதியார், செம்படவன், கிழச்சாம்பன் ஆகிய பாத்திரங்கள் இடம்பெறுகின்றனர். வாய் திறவாதிருக்க விரும்பும் பாரதியாரை விடாது, சேஷய்யங்கார் வற்புறுத்தி நிகழ்த்தும் சபை. அவர் சொல்கிறார்: "நாம் உபந்யாஸ கர்த்தா, நீர் (பாரதியார்) அக்ராஸனாதிபதி, அந்தச் செம்படவன்தான் சபை". இவ்வாறு தொடங்கும் இச்சபையில் சேஷய்யங்கார், வருணாசிரமத்தைப்பற்றிப் பேசுகின்றார். இடையில் கிழச் சாம்பன் வந்து சில கருத்துக்களை முன்வைக்கின்றான். சாதிப் பிரிவினைகள், வருணக்கோட்பாடுகள், சமயப்போக்குகள், பற்றிய விவாதங்களைமுன் வைத்து வாத, எதிர்வாதக் கருத்துக்கள் முன்வைக்கப்படுகின்றன. 'இக்கட்டுரையின் இரண்டாம்பாகம், 17.4.1917ல் வெளியானது' என்னும் குறிப்புடன், 'கடற்பாலத்தில் வருணாசிரம சபை' எனும் தலைப்பிலான இக்கட்டுரையைத் தருகின்றார் பெ.தூரன்.[55]

அவ்வகையில் காக்காய்பார்லிமெண்டையும் பாரதியார் விடவில்லை. கவிதையிலும்கூடச் சகுந்தலாப்பாப்பாவுடன் சேர்ந்து பறவைகளின் உரையாடலைப் பாடலாகப் பதிவு செய்கின்றார் பாரதியார்.

துரோகியின் பேச்சு

இவை இலக்கியம், சமயம் மற்றும் சமூகம் சார்ந்த நிகழ்வுகள். இங்குச் சுட்டப்பெறுவது, பாரதியாரின் நிறைவுக்காலச் சென்னை வாழ்வில் நடந்தது.

தாய்நாட்டை இகழ்வோரைத் தாமதம் இன்றி, எந்தவொரு தயவும் காட்டாமல் சாடிக் கண்டனம் தெரிவிக்கும் பாங்குடையவராகப் பாரதியார் திகழ்ந்திருக்கின்றார் என்பதைச் சகுந்தலாபாரதி பதிவு செய்கின்றார். அப்பதிவு பின்வருமாறு:

"ஸர் சங்கரன் நாயர் தமது கட்சிக்கூட்டமொன்றிற்கு என் தந்தையை அழைத்துப் போயிருந்தாராம். அதில், பலர் பலவாறு பேசுவதையும் என் தந்தை பொறுமையாகவே கேட்டுக் கொண்டு வந்தாராம். ஆனால் ஒருவர் தம் தாய்நாட்டை இகழ்ந்து பேசுவதை மட்டும் அவரால் பொறுக்க முடிவில்லையாம். எழுந்துநின்று, ஆங்கிலத்தில் துரோகி (Traitor) என்று கத்தினாராம். பின் அங்கிருந்தவர்கள் என் தந்தைக்கு சமாதானம் கூறியழைத்து வந்தார்களாம்"[36]

விடுதலை வரலாற்றில் பாரதியாரின் பாதை

எந்த உணர்ச்சியுமற்று மந்தநிலையில் கிடந்த இந்தியர்களைத் தமது சொந்த மொழியோடு ஆங்கிலமும் பேசித் தட்டியெழுப்பியவர் விவேகானந்தர். அந்த ஒளியில் சற்றே விழித்துக் கொண்ட மக்களின் தேசிய உணர்வை மழுங்கவிடாமல் காப்பாற்றிக் கொண்டுவந்த திலகர் தலைமையிலான தீவிர இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்டவர் பாரதியார். வலிமையுடைய இளையபாரதம் எழுச்சிகொண்டு வரலாற்றில், சத்திரபதி சிவாஜி தன் சைநியத்தைக்கொண்டு பகைவென்று வெற்றிவாகை சூடியது போல், தம்காலத்தில், வலிமையுடைய இளையபாரதம் எழுச்சி கொண்டெழுந்தால் அந்நியரைத் துரத்தித் தன்னாட்டை மீட்டுவிடலாம் என்று தீவிரமாக நம்பி இயங்கினார், அவர். அரவிந்தர், வ.உ.சி., சுப்பிரமணியசிவா உள்ளிட்ட தீரர்களின் நோக்கும் போக்கும் அவ்வாறே செயல்பட்டன. ஆனால், ஆங்கில அரசு வெறித் தனத்தோடு. இவர்களை வேவுபார்த்தும், வேட்டைகளாடியும், வெஞ்சிறைகளில் அடைத்தும் கொடுமைப்படுத்தி இவர்களின்

நோக்கம் கொஞ்சமும் நிறைவேறாமல் பார்த்துக்கொண்டது. இந்தச்சூழலில் இந்தியவிடுதலைப் போராட்டத்தைக் காந்தியடிகள் கரங்களில் ஒப்படைத்தது காலம். நாட்டுவிடுதலையில் நாட்டம் கொண்ட பாரதியார் அதனை ஏற்றுக் காந்தியடிகளை மகாத்மா என்று விளித்து வாழ்த்திப்பாடினார். அகிம்சையை ஆயுதமாக ஏந்திக் காந்தியடிகள் போராட முனைந்தார். அதற்கு அவர் கைக் கொண்ட கருவி, பிரச்சாரம்.

வில்முதலான கொலைக்கருவிகளைவிடவும் சொல்வடிவான கலைக்கருவிகள் மிகுந்த பயன் தரும் என்று அனுபவத்தால் உணர்ந்தவர் பாரதியார்; ஒட்டுமொத்தமான இந்தியர்கள் அனைவரது உள்ளங்களிலும் சுயராஜ்யம் பற்றிய எண்ணம் எழுந்தால்தான் இந்திய விடுதலை சாத்தியம் என்று உணர்ந்த அவர் அதற்கு மக்களைத் தயார் செய்யும் வகையில் தீவிரமாகச் சொற்பொழிவுகளில் இறங்கி விடுகின்றார்.

'பிரச்சாரத்தொழில் ஒன்றுதான் கதி'

இந்தநிலையில், **1921**ஆம் ஆண்டு, ஆகஸ்ட் மாதவாக்கில், இந்திய விடுதலைக்கு மக்களிடம் நிதிவேண்டிக் காந்தியடிகளும் அவரது சீடர்களும் தீவிரமாக இயங்கினர், ஒருகோடி ரூபாய் அவர்களது இலக்காக இருந்தது. அதனைப் பெற்றால்தான் சுயராஜ்யம் வரும் என்று பிரச்சாரம் செய்யப்பட்டதோடு, அதற்காகத் தத்தமது பங்களிப்பைச் செய்யாதவர்கள் இந்திய விடுதலையில் விருப்பமில்லாத தேசத்துரோகிகளாகச் சுட்டப்பட்டனர். இதுகுறித்து, காளிதாசன் என்னும் புனைபெயரில் பாரதியார் எழுதுகின்றார்:

"ஒரு கோடி ரூபாய் கிடைத்தால்தான் ஸ்வராஜ்யம் வரும்" என்று சொல்லப்பட்ட வார்த்தைக்கு ஒரு பொருள் தான் உண்டு. அதாவது, அந்தப் பணம் ப்ரசாரத் தொழிலிலே செலவிடப்பட வேண்டும். நாமோ பலாத்காரமுறையை அனுஸரிக்கவில்லை. எனவே, அந்தக் கோடி ரூபாயை ஸைந்யச் செலவுக்கு உபயோகப் படுத்துவதென்ற ஆலோசனைக்கு இடமில்லை. எனவே, ப்ராசாரத்தொழில் ஒன்றுதான் கதி. மேற்படி தொகையில் ஒரு பகுதிக்கு ராட்டினங்கள் வாங்கி ஜனங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று கருதினால் அங்ஙனம் தாராளமாகச் செய்யலாம். வேறு எத்தனை வகைகளில் செலவு செய்ய விரும்பினாலும் செய்யலாம். ஆனால் அத்தனைக்கும் ஆதாரமான மூலவழி ப்ரசாரந்தான் என்பதை மறந்துவிடக் கூடாது.

ஏற்கெனவே, ப்ரசாரத்தில் இத்தொகையை எங்ஙனம் செலவு செய்யலாமென்பதைக் குறித்துச் சில வழிகள் இப்பத்திரிகையிலே

குறிப்பிட்டிருக்கிறேன். ஜில்லாவுக்கு 4 பேருக்குக் குறையாமல் மஹா நிபுணரான ஸ்வதேசீய ப்ரசாரகர் ஏற்பட வேண்டும்.

ஆனால், ப்ரசாரத் தொழில் இதுவரை தொடக்கமுறாமல் இருப்பதன் காரணம் யாதெனத் துலங்கவில்லை.

இந்த விஷயத்தைக் குறித்துச் சென்னை மாகாணத்தில் வசூல் தொழிலை முக்கியஸ்தராக இருந்து நடத்திய என் நண்பர் சேலம் ஸ்ரீராஜகோபாலாச் சார்யாரும் பிறரும் ஸ்ரீமான் மஹாத்மாகாந்திக் கெழுதி வேண்டிய செய்வார்களென்று நம்புகிறேன்.

மற்றபடியுள்ள காங்க்ரஸ் ஸங்கங்களின் அங்கத்தினராலும் அனுதாபிகளாலும் மிகவும் சிரமப்பட்டு வசூல் செய்யப்பட்ட மேற்படி தொகை வீணாய்விடாதபடி கவனிக்க வேண்டும். உலக சரித்திரத்தில் இந்த சந்தர்ப்பம் மிக முக்யமானது. இதில் உலக முழுமையிலும் பல அற்புதமான மாறுதல்கள் தோன்றிவருவது மாத்திரமேயன்றி, உலகத்திலுள்ள தேசங்களுக்கெல்லாம் விடுதலை பொதுவாகி விடுமென்றும் புலப்படுகிறது. இத்தருணத்தில் விரைவிலே இந்தியா எங்ஙனமேனும் தன் ஸ்வதந்த்ரத்தை உறுதி செய்து கொள்ளுதல் அதன் கடமையாம். இதுவே நமது தேசத்தில் பொது ஜனங்களின் மனதில் எப்போதும் விடாமற் பற்றியிருக்கும் பேராவலாகிவிட்டது. அது பற்றியே, மஹாத்மா கேட்டபோது, ஜனங்கள் சிறிதேனும் லோபத்தன்மையின்றித் தங்கள் அளவிறந்த வறுமையையும் பாராட்டாமல், பணத்தை யதேஷ்டமாகவும் விரைவாகவும் கொடுத்துத் தங்கள் மீது பழிச் சொல்லுக்குச் சிறிதேனும் இடமின்றிச் செய்து கொண்டார்கள். ஒப்பந்தத்தில் ஒரு பாதி நிறைவேறிப் போய்விட்டது. அதாவது, ஜனங்கள் பக்கத்திலே விதிக்கப்பட்ட கடமை நிறைவேறிவிட்டது. இனித் தலைவர்கள் தங்கள் கடமையை நிறைவேற்ற வேண்டியதைத் தவிர வேறொன்றும் இல்லை.

நாம் இங்ஙனம் எழுதிக்கொண்டு வருகையிலே, ஸ்ரீமான் ராஜகோபாலாச்சார்யர் ஒரு கணக்கு ப்ரசுரம் செய்திருக்கிறார். அதில் சென்னை மாகாணத்து வசூல் எவ்வள வென்பதையும், அதில் செலவினங்கள் எவையென்பனதயும் விவரித்துக் கணக்குகள் தெரிவிக்கிறார். அதில் மிகவும் சொற்பமான தொகையொன்று சுமார் (50,000 ரூபா யென்று நினைக்கிறேன்) ப்ரசாரச் செலவுக்காகப் போடப்பட்டிருக்கிறது. இந்த ரூபாய் போதாதென்பது என்னுடைய அபிப்ராயம். ப்ரசார விஷயத்தில் இந்தியா முழுதையும் ஒன்றாகப் பாராட்டவேண்டும். இந்தியா முழுமைக்கும் ஒரே திட்டம், ஒரே முறைமை, ஒரே ப்ரசார ஸங்கம் தலைமையாக இருந்து இந்த

ஸ்வராஜ்ய ப்ரசாரத்தை நடத்தி வராவிட்டால் நமக்கு எண்ணிறந்த ஸங்கடங்கள் விளையும்"[57]

சரியாக, தமது மறைவுக்கு ஒருமாதத்துக்கு முன்னால், 11 ஆகஸ்டு 1921(துன்மதி ஆடி 27)அன்று 'ஒரு கோடி ரூபாய்' என்ற தலைப்பில் காளிதாஸன் என்னும் புனைபெயரில் பாரதியார் எழுதிய இக்கட்டுரை, பிரச்சாரம் (சொற்பொழிவு) குறித்த அவரது மதிப்பீட்டை நன்கு உணர்த்துகின்றது.

திலகருக்குப் பின் ஆயுதந்தாங்கிப் போர்புரியும் இராணுவமுறை யில்லாமல், மக்கள் மத்தியில் விடுதலை குறித்த எண்ணங்களைப் பரப்பும் சொற்பொழிவாகிய பிரச்சாரத்தொழில் ஒன்றே கதி என்ற நிலைக்குப் பாரதியார் வந்து விடுகின்றார். அதனால்தான், "நாமோ பலாத்காரமுறையை அனுசரிக்கவில்லை. எனவே, அந்தக்கோடி ரூபாயை ஸைந்யச் செலவுக்கு (இராணுவச் செலவுக்கு) உபயோகப் படுத்துவதென்ற ஆலோசனைக்கு இடமில்லை. எனவே, ப்ராசாரத் தொழில் ஒன்றுதான் கதி" என்று குறிப்பிடுகின்றார்.

அதற்குக் கட்சி கட்டிக்கொண்டு காங்கிரஸ் இயக்கத்தார் செயல் பட்டதைவிடவும், பாரதியார் தனிநபராக இருந்து செயல்பட்டவிதம் நன்கு கவனிக்கப் பெறவேண்டியிருக்கின்றது. தான் ஏற்பாடு செய்திருக்கும் கூட்டத்திற்குத் 'தலைமை தாங்கவர முடியுமா?' என்று கேட்ட பாரதியாரை 'யார் இவர்?' என்று கேட்ட காந்தியடிகளுக்குச் சரியாக அடையாளம் காட்டக்கூட அவர்கள் முன்வரவில்லை என்பதையும், பாரதியார் அரங்கில் இருக்கும்போதே 'இன்றோடு கூட்டம் முடிந்துவிட்டது. பாரதியார் நாளை பாடுவார்' என்று அறிவித்துவிட்ட தலைவர்களை மறுதலித்துப் 'பாரதியார் பாடட்டும்' என்று கேட்ட 'மக்களின் பாடகர் பாரதியார்' என்பதையும் வரலாறு பதிவு செய்திருக்கின்றது.

பாட்டும் பேச்சுமாக மக்களிடை உலாவந்த பாரதியாரை நாம் இன்னும் விரிவான முறையில் தரிசிக்க வேண்டும் என்கின்ற நோக்கில் இந்நூலின் பக்கங்கள் விரிகின்றன.

அரசியல், ஆன்மிகம், இலக்கியம், சீர்திருத்தம் என்கின்ற வரிசையில் பாரதியாரின் சொற்பொழிவுகள் இந்நூலுள் வகைப் படுத்தப்பெறுகின்றன. கூடிய மட்டிலும் அவ்வுரைகள் நிகழ்த்தப் பெற்ற பின்புலங்கள் விளக்கமாகவே, சொல்லப் பெற்றிருக்கின்றன.

இன்றைக்கு இருக்கும் எந்த நவீனவசதிகள் மிகுதியும் இல்லாத காலத்தில் அலைகடலை மீறி, மக்கள் கடலை நோக்கிப் பாரதியார் முழங்கிய பொழிவுகள் இந் நூலுள் எழுத்துக்களாகி இருக்கின்றன.

வரலாற்றை மனக்கொண்டு, அவற்றை உள்வாங்கிக் கொண்டால் பாரதிச்சித்திரம் ஒரு சொற்பொழிவாளர் எனும் நிலையில் பதிவாவது உறுதி. இனி,கண்ணே செவியாகக் கேட்கலாம்.

***சான்றெண் விளக்கம்***

1. பாரதியார் கவிதைகள், விநாயகர் நான்மணி மாலை, பா.எண் - 25. ப.340.
2. ஜெயகாந்தன், ஓர்இலக்கியவாதியின் கலையுலக அனுபவங்கள்,ப.V.
3. பாரதியார்,வேதரிஷிகளின் கவிதை, பக்.33-34.
4. தொல்காப்பியம், சொல்லதிகாரம், நூ.1434 .
5. பெ.தூரன், பாரதி தமிழ், ப.277.
6. திருவாசகம், சிவபுராணம், பா.-93-94.
7. பாரதியார்,வேதரிஷிகளின் கவிதை, பக்.33-34.
8. (யதுகிரி அம்மாள், பாரதி நினைவுகள், ப.81.
9. பாரதியார் கவிதைகள், சொல் - 1-3, ப.550
10. வ.ரா, மகாகவி பாரதியார், பக்.57.
11. பாரதியார், வேதரிஷிகளின் கவிதை, முடிவுரை. ப.660.
12. பாரதியார் கட்டுரைகள், பக்.12-13.
13. மேலது, பக்.12-13.
14. மேலது, பக்.12-13.
15. பாரதியார் கட்டுரைகள், பக்.12-13.
16 பாரதியார் கவிதைகள், விநாயகர் நான்மணி மாலை, பா.எண் - 25. ப.340.
17. மேலது,பா.எண்- 32,பக்.342-343.
18. மேலது-37, ப.345.
19. பாரதியார் கவிதைகள்,அன்புசெய்தல், பா-2, ப.474.
20.பாரதியார் கவிதைகள், விநாயகர் நான்மணி மாலை, பா.எண் - 37,ப.345.
21. பாரதியார் கவிதைகள், ஹிந்து மதாபிமான.,பா.எண்-1,ப.570.
22. பாரதியார் கவிதைகள், விடுதலை, ப.585.
23. மேலது,பாப்பாப்பாட்டு, பா.எண் -.12, ப.574.
24. தொல்.செய்யு. 171.
24. மேலது, ப. 171.
26. பாரதியார் கவிதைகள், உயிர்பெற்ற தமிழர் பாட்டு, பா.எண் -23, ப.172.
27. மேலது, புதிய ஆத்திசூடி.பா-எண்.107. ப. 492.
28. மேலது.
29. மேலது. பா.எண்.-34. ப.489.
30. நாவலர்பாரதியார். பாரதி சரித்திரம். ப. 17.
31. வ.ரா. மகாகவி பாரதியார். பக்.152-153.
32. மேலது. பக். 82-83.

33. பாரதியார் கட்டுரைகள், ப.195.
34. மேலது, ப.154.
35. பாரதியார் கவிதைகள், சுதந்திரப்பள்ளு, பா.எண்- 1, ப.143.
36. பாரதியார்கதைகள், ப.
37. பாரதியார் கட்டுரைகள், ப.196-197.
38. வ.ரா, மகாகவி பாரதியார்,ப.130-131.
39. பாரதியார், வேதரிஷிகளின் கதை,பக். 34-35.
40. பாரதியார் கவிதைகள், பாரததேசம்,பா.எண்- 7,ப.145.
41. சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, ப.
42. சீனி.விசுவநாதன், காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதியார் படைப்புகள், தொ-1, பக்.764-765.
44. பெ.சு.மணி, பாரதியார் பார்வையில் இராமகிருஷ்ண இயக்கம், ப.259.
45. மேலது, ப.87.
46. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக். 510-511.
47. தங்கம்மாள் பாரதி, பாரதியும் கவிதையும், பக்.89-90.
48. மன்னர்மன்னன், பாட்டுப்பறவைகள்,ப.320.
49, பாரதிதாசன், மகாகவி பாரதியார், ப.17.
50. டாக்டர் ச.சு.இளங்கோ, பாரதிதாசன் பார்வையில் பாரதி, பக். 94-95.
51. மன்னர்மன்னன்,பாட்டுப்பறவைகள், ப.243.
52. வ.ரா, மகாகவி பாரதியார், பக்.143-144.
53.பெ.தூரன், பாரதிதமிழ், பக்.158-163.
54. மேலது, பக். 233-236.
55. மேலது, பக். 237-245.
56. சகுந்தலா பாரதி, என் தந்தை, ப.80.
57. பெ.தூரன், பாரதி தமிழ், பக்.472 - 474.



## பாரதியாரின் அரசியல் சொற்பொழிவுகள்

பாரதியாரும் அரசியலும்

"இருபதாம் நூற்றாண்டின் முதல் இருபது ஆண்டுகளுக்குள் பாரதியின் அரசியல் வாழ்க்கை தொடங்கி, நிறைவுறுகின்றது. 39 ஆண்டுகளே வாழ்ந்த பாரதி பொது வாழ்வில் ஈடுபட்ட காலம் 16 ஆண்டுகள் (1905 - 1921) ஆகும். இதனுள்ளும் இயக்க அமைப்பாளராகவும் (Organiser), எழுத்தாளராகவும் பணியாற்றிய காலம் மூன்றாண்டுகள் (1905-1908) ஆகும். இதன்பின் 1908-1910 காலத்தில் இயக்க எழுத்தாளராக இருந்துள்ளார். 1911-1921 காலத்தில் இயக்கத்துக்கு அப்பாற்பட்டு இருந்து தன் படைப்புகளை வெளியிட்டுள்ளார்"[1] என்று கோ.கேசவன் பாரதியாரின் வாழ்வைப் பகுத்து விளக்குகின்றார்.

இத்தகு காலச்சூழல்களில் அவர் குறிப்பிட்ட வண்ணம், அமைப்பாளராக, எழுத்தாளராக, இதழாளராகத் திகழ்ந்த பாரதியார் தகுதி மிக்க சொற்பொழிவாளராகவும் திகழ்ந்திருக்கின்றார் என்பது அறியக் கிடைக்கின்றது.

பொதுவாக, அரசியல் என்பது, பாரதியார் வாழ்வில் ஒரு பிரிவு என்பதை விடவும் பாரதியாரின் வாழ்வில் பிரிக்கவொண்ணாத வண்ணம் தொடக்கமுதல் நிறைவு வரையிலும் ஊடுருவிக் கலந்திருந்தது என்பதைப் பாரதியாரின் படைப்புகளை மீள நோக்கினால் புரிய வரும். அத்தோடு பாரதியாரின் வாழ்வியலோடு தொடர்புடையவர்களின் கருத்துக்களைக் கொண்டும் நன்கு உணர்ந்துகொள்ளமுடியும். காட்டாக, "நமது நாட்டிலே பொதுவாகத் தேசபக்தி உணர்ச்சி தோன்றியது வங்காளம் பிரிவினையால் தான். அக்காலத்தில் விபின சந்திர பாலரின் எழுத்தும், பிரபஞ்சமும் நம்மவர்களைப் பெரிதும் கலக்கி வந்தன. இது 1905ஆம் வருஷத்துக்குப்

பின்னர், ஆனால் பாரதியோ 1904ஆம் வருஷத்திலேயே எனக்கு அரசியலில் தீவிர ஊக்கமும் உற்சாகமும் வரும்படி செய்தான். பாரதியின் தேசபக்தி, கடன் வாங்கிய சரக்கல்ல. அது அவனுடைய சொந்தச்சொத்து. தமிழ் நாடுதான் பாரதி. அப்படித்தான் எனக்குச் சொல்லத்தெரியும்"[2] என்று பாரதியாரின் உற்ற நண்பர் எஸ்.துரைசாமி அய்யர் குறிப்பிடுவதைக் கொள்ளலாம்.

தன்னைப்போலவே தேசத்துமக்களும், சொல்லொணாத்துயரில் சிக்கித் தவித்துக்கொண்டிருப்பது, ஆங்கில ஏகாதிபத்தியத்தின் கொடுங்கோன்மை ஆட்சியால்தான் என்று தெளிந்தவர், பாரதியார். அதனை, அறியாமல் துயருறும் இந்திய மக்களுக்கு, குறிப்பாகத் தமிழக மக்களுக்கு தாம் உணர்ந்துகொண்ட அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டி அவர் இதழ்களில் எழுதியதோடு அரங்குகளிலும் ஏறி முழங்கியிருக்கின்றார். அத்தகு முழக்கங்கள், அவை முழங்கப் பெற்ற பின்புலம் ஆகியவற்றை விரிவாக இத்தலைப்பின் கீழ் காணலாம்.

பாரதியாரின் முதல் - அரசியல் மேடை அரங்கேற்றம்

மதுரை சேதுபதி பள்ளியின் தமிழாசிரியப்பணியை விடுத்து, சுதேச மித்திரன் இதழியல் பணியை ஏற்றுச் சென்னை வந்தார். அக்காலக் கட்டத்தில், நாடு முழுக்க, வங்கப்பிரிவினையால் கொந்தளித்துப் போயிருந்தது. அத்தகு அரசியல் சூழலில், வங்கத்தை வாழ்த்தி, 'வங்கமே வாழிய' என்று பாரதியார் பாடிய பாடல் பொதுமேடையில் அரங்கேறியதோடு, சுதேசமித்திரனில் அச்சும் ஏறியது.

'இப்பாடல், 'நேற்று மாலை நடந்த கடற்கரைப் பெருங் கூட்டத்தில் மிஸ்டர் சி.சுப்பிரமணிய பாரதியார் சொல்லியவை' என்ற முன்னுரையுடன், 15 செப்டம்பர் 1905 மற்றும் விசுவாவசு ஆவணி 31 என்ற தேதிகளுடன் பாடலானது தரப்பெற்றுள்ளது. இதன் நிறைவில் இது சுதேசிய மாணவர் கடற்கரைக் கூட்டத்தில் பாடியது என்ற குறிப்பும் இடம்பெறுகின்றது. "நான் ஆராய்ந்த அளவில் வங்கமே வாழிய என்ற இப்பாடல் சுதேசமித்திரனில் வெளியான முதற்பாடலாகக் காண்கிறது. இப்பாடல் வெளிவந்தபோது பாரதியாருக்கு வயது இருபத்து மூன்று"[3] என்று எழுதுகிறார், பெ.தூரன்.

அவர் தொடர்ந்து, "அக்காலத்திலே வங்காளத்தில் பொங்கி எழுந்த தேசிய உணர்ச்சி எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்திருக்கிறது. மாணவர்களுடைய உள்ளத்தையுஃம் அது கவர்ந்ததில் வியப்பில்லை. தேசிய உணர்ச்சி மிக்க மாணவர் கூட்டத்தில் வங்காளத்தை வாழ்த்திப் பாரதியார் இப்பாடலைப் பாடியிருக்கிறார். சுதந்திரப்போரில்

முன்னணியில் நின்று பாரதநாட்டின் விடுதலைக்கு அடிகோலுவ தோடு இந்நாடு மறுபடியும் பழம்பெருமை அடையக் கொண்டு செல்லும் தோணியைப் போல வங்காளம் திகழ்கின்றதென அவர் பாராட்டிப் பாடுகின்றார். வங்காளப் பிரிவினை சம்பந்தமான சட்டம் **1905** செப்டம்பர் **29**ல் ஏற்பட்டது. **1905** அக்டோபர் **16**ல் பிரிவினை செய்யப்பட்டது. ஆதலால் செப்டம்பர் **15**க்கு முன்பே அது பற்றிய பேச்சும் எதிர்ப்புக் கிளர்ச்சியும் தோன்றியிருக்க வேண்டும்"[4] என்று அப்பாடல் குறித்து விளக்கமும் அளிக்கின்றார்.

பாரதியாரின் இலக்கியச் சேனை

இருபத்து மூன்று வயது இளைஞரான பாரதியார் ஓர் அரசியல் இயக்கமாக இருந்து அக்காலத்துக் கல்லூரி மாணவர்களைத் தம்பால் ஈர்த்து ஓர் இளைஞர் அமைப்பைக் கட்டமைக்க முயன்றதும் இங்குக் கருதத்தக்கது. இது குறித்து, அவர்தம் நண்பர், பண்டிட் எஸ். நாராயண அய்யர் பின்வருமாறு பதிவு செய்கின்றார். "பாரதியார் போகுமிடமெல்லாம் என்னையும் அழைத்துச்செல்வார். கலாசாலைக் கூட்டத்தில் பாரதியார் அடிக்கடி பிரசங்கம் செய்வார். தேசியகீதம் பாடுவதிலும், அதன்மூலம் உணர்ச்சி மிக்க கருத்துக்களை வெளியிடுவதிலும் அவர் நிகரற்று விளங்கினார்... பாரதியார் சென்னையில் பல நண்பர்களைப் பெற்றார்... காலைவேளைகளில் காலேஜ் மாணவர்களின் கூட்டம் அவர்வீட்டில் நிறைந்திருக்கும். மாலை வேளைகளிலும் அப்படியே. அநேகமாகப் பிரதி தினமும் மாலை வேளையில் கடற்கரைக்குப்போவது வழக்கம்... பாரதி கடற்கரை மணலில் உட்கார்ந்ததும் அவரைச் சுற்றி மாணவர்கள் கூட்டமாக உட்கார்ந்து விடுவார்கள். சில மாணவர்கள் பாரதியாரைத் தேசிய கீதங்கள் பாடும்படி வேண்டிக்கொள்வார்கள். அவரே பாடும் போது அவரது பாட்டுக்கள் மிகவும் உருக்கமாக இருக்கும். கடற்கரை யிலிருந்து இரவு ஏழரை மணிக்குத்தான் திரும்புவோம்... பாரதியாரின் அரசியல் நோக்கங்கள் நாளுக்குநாள் தீவிரமடைந்து வந்தன. பொதுவாக, பச்சையப்பன் கல்லூரி, பிரஸிடென்ஸி காலேஜ், கிறிஸ்தவக்கல்லூரி ஆகியவைகளின் மாணவர்களிடையே பாரதியாரின் செல்வாக்கு வளர்ந்து வந்தது"[5]

இத்தகு பின்னணியில்தான் அவர் சென்னை பிரசிடென்ஸி (மாநிலக்) கல்லூரித் தமிழ்ச்சங்கத்தில் உரையாற்றி இருக்கின்றார். அவற்றுள் முதல் சொற்பொழிவானது, ஆன்மிகச்சொற்பொழிவு என்னும் உள்தலைப்பின் வரிசையிலும், பட்டினத்துப் பிள்ளைச் சரித்திரம் இலக்கியச்சொற்பொழிவு என்னும் உள்தலைப்பு வரிசையிலும் இந்நூலுள் விளக்கப்பெறுகின்றன.

மேலும், இத்தகு கல்லூரிகளில் பயிலும் மாணவர்கள் வகுப்பறை நிகழ்வுகளைப் பாரதியாரிடத்துப் பகிர்ந்து கொண்டு பல விளக்கங்களும் பெற்றிருக்கின்றனர். இதற்கான பதிவுகளைப் பாரதியாரின் படைப்புகளில் பெரிதும் காணலாம். சான்றுக்கு, 'தமிழ் பாஷையில் உள்ள குறைகள் 'என்னும் தலைப்பில், (பி.ஏ.பரீட்சை தேறிய ஒரு வாலிபனுடைய எண்ணங்கள்) என்னும் உள் தலைப்பின் கீழ், அவ்வாலிபனும், புலவனும் உரையாடுவதாக அமையும் கட்டுரையைக் கொள்ளலாம்.[6] இத்தொடரில் இடம்பெறும் வாலிபன் ஒரு கல்லூரி மாணவன் என்பதும், புலவன் பாரதியார் என்பதும் சொல்லாமல் விளங்கும்.

இதுபோன்ற சூழலில்தான், உ.வே.சா. அவர்களின் பாராட்டு விழாவில் பாரதியார் மூன்று பாக்கள் பாடவும், இன்ன பிறவோரின் உரைகளைக் கேட்கவும் நேர்ந்திருக்கின்றது.

மேலும், 1907 மே மாதத்தில் விபின சந்திரபாலர் சென்னை வரும் சமயத்துக்குள்ளாக, மாணவர்கள் மத்தியில் தீவிரத் தேசியவாத இயக்கத்துக்கு நல்ல ஆதரவும் கிட்டியிருந்தது என்பதும் நாராயணய் யங்காரின் கட்டுரையிலிருந்து தெரிய வருகிறது. இவ்வாறு, "கல்லூரி மாணவர்களிடையே பாரதியாருக்குச் செல்வாக்கு மிகுந்திருந்ததால், அவர்களிடமிருந்து சிறுதொகை வசூலித்துப் பாலரின் வரவேற்புக்கு ஏற்பாடுகள் செய்தார்" என்றும், பாலரை, ஸ்டேஷனில் வரவேற்று ஊர்வலமாக அழைத்து வந்த போது, "பல இடங்களில் ஸ்ரீபாலருக்கு மாணவர்கள் உபசாரப்பத்திரங்கள் வாசித்தளித்தார்கள்"[7] என்றும் அவர் எழுதுகிறார். அதேபோல் விபின் சந்திரபாலர் சென்னைக்கு வருகை தந்த வேளையில் கல்லூரியில் தேர்வுகள் முடிந்து அவரவர்கள் தத்தம் ஊர்களுக்கும், வீடுகளுக்கும் திரும்பிச் செல்லவேண்டிய நிலையிருந்த போதிலும் இந்நிகழ்ச்சி முடிகிற வரை தங்கும் இடங்களிலேயே இருந்து நிகழ்ச்சிகளைச் சிறப்பித்திருக்கின்றனர் என்பதையும் அறிய முடிகின்றது.

இதற்கெனப் பாரதியார் சில அரசியல் இயக்கங்களைத் தொடங்கவும் செய்தார். அவற்றை இங்கு விரிவுறக் காண்பது பொருத்தமாகும்.

### பாரதியார் தோற்றுவித்த அமைப்புகள்

தேச விடுதலைக்கெனப் பணிகள் பல புரிய பாரதியார் தோற்று வித்த அமைப்புகள் 1. பால பாரத சங்கம், 2. சென்னை ஜன சங்கம் ஆகியனவாகும். இவற்றின் பின்புலத்தோடு, திருவல்லிக்கேணி விளையாட்டுக் கழகம், பாரதபந்தர் என்னும் சுதேசிப் பண்டக சாலை போன்றன தோன்றியிருக்கின்றன. இனி இவ்வமைப்புகள்வழி பாரதியார் ஆற்றிய அரசியல் பொழிவுகள் பற்றிக் காணலாம்.

பாலபாரத சங்கம் - தொடக்கமும் செயற்பாடுகளும்

பாரதமாதாவுக்குத் தொண்டுபுரிவதற்கென்றே, சென்னையில் பாரதியாரும், அவரது நெருங்கிய நண்பர்களும் சேர்ந்து 1906 நவம்பரில், பால பாரத சங்கம் என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தினர். இச்சங்கத்தினர் அனைவரும் திலகரின் தலைமைக்குக் கட்டுப் பட்டவர்கள். புதிய கட்சியின் தீவிரவாத அரசியலை ஆதரித்தவர்கள்.. இச்சங்கத்தில் பாரதியார் பெரும் பொறுப்பு வகித்தார். இதன் வளர்ச்சி கருதி, பால பாரத் என்னும் ஆங்கில இதழும் தொடங்கப்பெற்றது. கல்கத்தா காங்கிரஸ் மகாசபைக்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கும் பொருட்டாக, 17.12.1906 அன்று இந்தியா பத்திரிகை அலுவலகத்தில், இச்சங்கக் கூட்டம் நடைபெற்றது. அதில் பாரதியார் உட்பட நால்வர் சென்னைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இச்செய்தி, 22.12.1906 இந்தியா இதழில் இடம் பெற்றது.[8]

'இதில் பாரதியுடன் சக்கரைச் செட்டியார், சுரேந்திரநாத் ஆர்யா, ஹரிஹர சர்வோத்தமராவ், மண்டயம் சீனிவாசன் ஆகியோர் இருந்தனர். இச்சங்கமானது, 1.அந்நியப்பொருள்புறக்கணிப்பு, 2. சுதேசியம் ஆகியவற்றை மக்களிடத்தில் பரப்புதலை நோக்கமாகக் கொண்டது' என்று குறிப்பிடுகின்றார் கோ.கேசவன்.[9]

'இந்தச் சங்கத்தைப் பற்றி நமக்குக் கிட்டியுள்ள முதல் குறிப்பிலிருந்து இது சென்னையில் தீவிரத்தேசியவாதிகளின் அரசியல் ஸ்தாபனமாகவே இருந்திருக்கிறது என்பதும், அதனால்தான் இது காங்கிரஸ் மகாசபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துள்ளது என்பதும் தெளிவாகிறது. மேலும், தமிழகத்தில் தீவிரத் தேசிய வாதிகளின் இயக்கம் இளைஞர்களின் இயக்கமாகவே இருந்தது என்னும் கருத்தாக்கத்திற்கு, 'பால இந்தியா' அல்லது 'பால பாரத்' என்ற இந்தச் சங்கத்தின் பெயர் இன்னும் வலுச் சேர்க்கிறது'[10] என்று ரகுநாதன் கருதுகின்றார்.

இச்சங்கத்தின் தொடர்ச்சியேபோல், வேறு பல இடங்களிலும் இப்பெயரைத் தாங்கிப் புதிய அமைப்புகள் தொடங்கப் பெற்றிருக்கின்றன. ராஜமகேந்திரபுரத்தில் இளைஞர்களைக்கொண்டு தொடங்கப்பெற்ற இயக்கம் வெளிப்படையாகவே அரசியல் போராட்டத்தில் இறங்கியிருக்கின்றது. இத்தகு சங்கங்கள் அரசியல் நடவடிக்கையோடு, உடற் பயிற்சியையும் தமது நடவடிக்கை களில் ஒன்றாகக் கொண்டிருந்தன. இதன் வழி தற்காப்புப்பயிற்சி பெற்ற இவ்விளைஞர்கள், தடிகளைத் துணைக்கொண்டு வங்கப் பிரிவினையை அடுத்த பிரச்சினைகளின்போது தத்தமது பெண் மக்களையும் தங்களையும் தற்காத்துக்கொண்ட செய்திகளையும் பாரதியார் தமது

பத்திரிகைத் தமிழில் பதிவு செய்கின்றார். (இந்தியா, 25.5.1907) அதன் அடிப்படையில் இச்சங்கத்திலும் அத்தகு உடற் பயிற்சிகளை, இளைஞர்களுக்கு வழங்கவேண்டும் என்று விரும்பினார் பாரதியார்.

இந்த நோக்கில், பாரதியார் 'இளைஞர்களைத் தீவிரவாத அரசியலுக்கு வென்றெடுக்கும் பணியையும் செய்துள்ளார். மாலை வேளைகளில் கல்லூரி மாணவர்களையும் இளைஞர்களையும் அழைத்துக் கடற்கரைக்குச் சென்று அவர்களுடன் அரசியல் விஷயங்களைப் பேசினார். குறிப்பாக, பச்சையப்பன் கல்லூரி, கிறித்துவக் கல்லூரி, மாநிலக் கல்லூரி ஆகியவற்றின் மாணவர்கள் பாரதியின் அரசியல் வார்ப்புகளாக உருவெடுத்தனர். இதற்கென ஒரு தந்திரம் கையாளப்பட்டது. 'திருவல்லிக் கேணி விளையாட்டுக்கழகம்' என ஒன்று வைக்கப்பட்டு, இருட்டுகிற நேரம் வரை இளைஞர்கள் கடற்கரையில் விளையாடுவார்கள். அதன்பின் பாரதியிடம் அரசியல் கல்வி பெறுவார்களாம். போலீஸ் கண்ணில் மண்ணைத் தூவ இது ஒரு தந்திரம். புதுக்கட்சியின் கொள்கை களால் கவரப்பெற்ற இளைஞர்கள், பொதுமக்கள் கூடும் இடங்களில், 'வந்தே மாதரம்' என முழங்கினர். அதைக் கேட்டுப் போலீஸ்துறை பெரும் எரிச்ச லடைந்தது. மாணவர்கள் அன்னியப் பொருள்களைப் புறக்கணித்த தோடு மட்டுமன்றிச் சென்னைப் பல்கலைக்கழக செனட் அறையில் வைக்கப்பட்ட அன்னியப்பொருள்கள் கண்காட்சியில் புகுந்து கலவரம் செய்தனர். சில மாணவர்களைப் போலீஸ் கைது செய்தது. ஆனால் கைதான மாணவர்களை மீட்கும் முயற்சியில் ஏனைய மாணவர்கள் போலீஸ் நிலையத்தைத் தாக்கினர் எனத்தெரிகிறது"[11] என்று கோ.கேசவன் குறிப்பிடுகின்றார்.

இதற்கிடையில், ஆங்கில அரசு, பஞ்சாபில், பஞ்சாபி எனும் புதிய கட்சி சார்பான பத்திரிகை அரசுத் துரோகச் செய்திகள் வெளியிட்டது என்று அதன் பத்திரிகை ஆசிரியர் அட்வளே, மற்றும் உரிமையாளர் லாலா ஜஸ்வந்த் ராய் ஆகியோர்மீது, வழக்குத் தொடர்ந்து தண்டனை விதித்தது.

இதனை எதிர்த்து, 23.2.1907இல் சென்னை பால பாரத சங்கத்தார் கண்டனம் தெரிவித்துக் கூட்டம் நடத்தியதோடு, அப்பத்திரிகை யாளர்கட்கு உதவ நிதி சேகரித்து அனுப்பவும் முயன்றனர். இது தொடர்பாக, விளக்கங்களையும் கண்டனங்களையும், பாரதியார், இந்தியா இதழ்களில் எழுதியதோடு, சென்னையில் கண்டனப் பொதுக்கூட்டங்களையும் நடத்தினார்.

27.02.1907 அன்று புதன்கிழமை மாலை சென்னை பிரசிடென்சி (மாநிலக்) கல்லூரிக்கு எதிரே உள்ள கடற்கரையில், சுதேசமித்திரன்

ஜி.சுப்பிரமணிய ஐயர் தலைமையில் மிகப்பெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதில், பாரதியாரும், வி.சக்கரைச் செட்டியாரும் கலந்துகொண்டு பேசினர். "பாரதி இக்கூட்டத்திலே தமிழில் பேசினார். சக்கரைச் செட்டியாரும், பாரதியும் - "பஞ்சாப் பத்திரிகைக்காரர் தண்டனை பெற்றதால், அவர்கள் பாரத நாட்டின் நல்லடியார்களென்பது மிகச் சிறப்புடன் விளக்கம்பெற்றது. அவர்களை நாமெல்லாரும் பெருமைப் படுத்தக் கடமை பூண்டிருக்கிறோம். அவர்கள் தண்டனை பெற்றதுபற்றி யாரும் வருத்த மடைய வேண்டாம். ஹிமாச்சலத்தின் சிகரத்திற்கு ஏறிச் செல்ல விரும்புவோன் மலையடியிலே முள்ளும் கல்லும் குத்துவதைப் பற்றி முணுமுணுக்கத் தொடங்கினால் என்ன நடக்கும்? இந்தியர்களாகிய நமக்கு ஸ்வராஜ்ய பதவி எளிதிலே கிடைத்துவிடாது. எவ்வளவோ சிரமத்தின்பேரில் கிடைக்கும். இடையில் எவ்வளவோ ஆபத்துக்கள் வரக் கூடும். அவற்றையெல்லாம் நாம் கவனியாமல், நமது நோக்கம் கை கூடும்வரை முயற்சி புரிந்துகொண்டேபோக வேண்டும். பஞ்சாபி பத்திராதிபர் போலவே, இந்நாட்டு 30கோடி ஜனங்களும் தத்தம்மால் இயன்றபடி சுதேசத்தின் பொருட்டுக் கஷ்டமடைய வேண்டும்" (இந்தியா, 02.03.1907) என்ற கருத்துக்களைத் தழுவிப் பேசினர்" என்று சீனி.விசுவநாதன் குறிப்பிடுகின்றார்.[12] பின்னர், பாரதியாரின் வந்தே மாதரப்பாடல் பண்ணோடு பாடப்பெற்றது.

மேலும், இச்சங்கத்தின்சார்பில், 'அறைக்கூட்டங்களும், பொதுக் கூட்டங்களும் நடந்தன. அறைக்கூட்டங்கள், ஊழியர்கள் வென்றெடுப்பு (Cadre procurement) நோக்கத்தைக் கொண்டிருந்தன. பொதுக்கூட்டங்கள் மக்களுக்கான பிரச்சாரத்தை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருந்தன. இச்சங்கத்தின் சார்பில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப்பட்டதாரி சி.இராமலிங்கம் ரெட்டி 'சுதேசியம்' {(பாரதியார் நடையில் 'ஜாதிய ஞானம்' (Nationalism)} என்ற தலைப்பில், 13.3.1907ல் ஓர் அறைக் கூட்டத்தில் பேசினார்.

'17.03.1907 ஞாயிற்றுக்கிழமை மாலை 5மணி அளவில் திருவல்லிக்கேணி லேடீஸ் பார்க் (Ladies Park) என்ற மாதர் உத்தியானத்துக்கு எதிரே கடற்கரையில் மாபெரும் கூட்டம் ஒன்று கூடியது. சுதேசியத்தின் அருமைபெருமைகளை விளக்கவே அக் கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் கலந்துகொண்ட சுமார் 5000 பேரில் பெரும்பான்மையினர் மாணவர்களே' என்றும் இந்தியா இதழிலேயே செய்திக் குறிப்பாகக் காண்கிறோம்.

இக்கூட்டத்திற்கு திரு.ஜி.சுப்பிரமணிய ஐயர் தலைமை தாங்கினார். வ.உ.சிதம்பரம்பிள்ளையும் கூட்டத்தில் கலந்துகொண்டு

சொற்பொழிவாற்றினார். இக்கூட்டம் குறித்து, இந்தியா தரும் செய்தி பின்வருமாறு.

'ஸ்ரீசுப்பிரமண்ய அய்யர் பேசி முடித்தவுடனே, மாணாக்கர்களுக்கு ஏற்பட்ட ஆவேசம் அளவு கடந்ததாகும். கல்கத்தாவிலிருந்து வந்த பிறகு, நாம் சென்ற ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்தைப்போல் அத்தனை ஆவேசமான கூட்டம் பார்த்ததே கிடையாது. இது மட்டுமா? சபை கலைந்தபிறகு நடந்த வந்தேமாதரப் படை வரவு சம்பந்தமாகச் சுதேசமித்திரன் பத்திரிகை பின்வருமாறு எழுதுகின்றது.

'முத்தியாலுப்பேட்டையிலிருந்து, (திருவல்லிக்கேணி மீட்டிங்கிற்கு) வந்திருந்த வாலிபர்களெல்லாரும் கூட்டமாகச் சேர்ந்து, ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி வந்தேமாதர கீர்த்தனத்தை முழுவதும் பல்லவி அனுபல்லவி, சரணங்களாக சுத்தோச் சாடனத்துடன் வாக்கியம் வாக்கியமாய் உச்ச ஸ்வரத்தில் ஓத, மற்ற மாணவ ரெல்லாம் அவரைப் பின்பற்றி, அப்பாடலைப் பாடிக் கோஷித்துக் கொண்டும், இடையிடையே மேற்படி பாரதியார் புதிதாய்க் கட்டியிருக்கும் 'ஜய ஜய பாரத் வந்தேமாதர'மென்ற வீர ரஸஞ் செறிந்த தமிழ்க் கீர்த்தனத்தையும் கம்பீரமான குரலுடன் மயிர்க்கூச்செறியுமாறு வழி நெடுகப் பாடிக்கொண்டும் சென்ற காட்சி பரம ரமணீயமாயிருந்தது'. (இந்தியா, *23.3.1907*)

இவ்வாறு, சுதேசிய மாணவர்களிடையே நல்ல செல்வாக்குப் பெற்ற பாரதி, நாட்டின் சரித்திரத்தில் பொறிக்கத்தக்க பல பொதுக் கூட்டங்களில் கலந்துகொண்டு பலருடைய கவனத்தைக் கவர்ந்தார். ஆவேசமாகப்பேசி மக்களைக் கவர்ந்த அதே போதில், போலீசாரின் கண்காணிப்புக்கும் பாரதி ஆளாகியிருக்கிறார். தேசிய மேடைகளில் பாரதியின் சொற்பொழிவுகள் உக்கிரகமாக அமைந்தன; அதனால் பொதுமக்கள் பாரதியின் ஆக்ரோஷமான பேச்சுக்களைக் கைதட்டல் மூலமாக வரவேற்றனர்.'[13]

விபினசந்திரபாலரின் சென்னை வருகை

திலகர் தலைமையிலான இத்தீவிரவாதக்குழு நாடு முழுவதும் பிரச்சாரத்திற்கென எடுத்துக்கொண்ட முயற்சி குறித்து, "1907ம் ஆண்டில் திலகர்பெருமான் தலைமையில் அமிதவாதப் பிரசாரம் நாடு முழுவதும் நடைபெற்றது. பிரசாரத்துக்கென்று தென்னாட்டிலும் ஒரு கூட்டம் திரண்டது. அக்கூட்டத்தவருள் குறிக்கத்தக்கவர், வி.ஓ.சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார், ஸ்ரீநிவாசாச்சாரியார், சுரேந்திரநாத் ஆர்யா, சக்கரைச்செட்டியார், எஸ்.துரைசாமி ஐயர், ஹரி சர்வோத்ம ராவ் முதலியோர்"[14] "என்று திரு.வி.க. குறிப்பிடுகின்றார்.

திலகர் தலைமையிலான அரசியல் கருத்துக்களை மக்களிடம் பரப்புவதை நோக்கமாகக் கொண்ட "பாரதியார் எழுத்துடன் நின்று விடவில்லை; திருவல்லிக் கேணிக் கடற்கரையில் சொற்பொழிவுகள் பல நடத்தினார். தேசீய கீதங்கள் பலவும் பாடினார். பாரதியார் புகழ் நாடெங்கும் பரவியது.[15] பாரதியார் தமிழ்நாட்டினருக்கு மேலும் சூடு ஏற்ற விபின சந்திரபாலரைச் சென்னைக்கு அழைத்துவந்து உணர்ச்சியைக் கிளறும் சொற்பொழிவுகளை ஆற்றச் செய்தார். விபின சந்திரபாலர் (1858-1932) வங்காள மறுமலர்ச்சி இயக்கத்திற்கு ஆற்றிய அபாரமான தொண்டு மறக்கற்பாலதன்று. தம் கொள்கைகளை என்ன நேரிடினும் விட்டுக் கொடுக்காமல் பல கஷ்ட நஷ்டங்களை அடைந்த தீர புருஷர் அவர். சிறந்த சொற்பொழிவாளராகிய அவர் உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுந்த ஆவேசத்துடன், ஆற்றலுடன் பேசினார்... திருவல்லிக்கேணிக் கடற்கரையில் அலைகளின் கோஷங்களை வென்று பல்லாயிரமக்கள்முன் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளை நேரில் கேட்ட இந்நூலாசிரியர் (ப.கோதண்டராமன்) தம் அனுபவத்தை இன்றும் மறக்கவில்லை. ஆங்கிலத்தில் அமைந்திருந்த பாலரின் சொல்மாரியைப் பாரதியார் மொழிபெயர்த்து இந்தியா பத்திரிகையில் வெளியிட்டு வந்தார். விபின சந்திரபாலர் தமிழ்நாட்டினின்று சென்றபின், சென்னைக் கடற்கரைக்கூட்டங்கள் அதிகமாயின. ஜி.சுப்பிரமணிய அய்யர், சுரேந்திரநாத் ஆரியா முதலானவர்கள் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொண்டனர்"[16] என்று ப.கோதண்டராமன் குறிப்பிடுகின்றார்.

இவர் சுட்டியவண்ணம், பால பாரத சங்கத்தின் சார்பில் விஜய வாடாவிற்குச் சென்று விபின் சந்திரபாலரைச் சந்தித்துச் சென்னைக்கு அழைத்து வந்திருக்கின்றார், பாரதியார். 1907ஏப்ரல் 30ஆம் தேதி அன்று 'பிற்பகல் 2 மணிக்கு பேஸின் பிரிட்ஜ் ஸ்டேஷனில் வந்திறங்கிய அவருக்குச் சிறப்பு வரவேற்பளிக்கப்பெற்றது. அங்கிருந்து அவர் இரு குதிரைகள் பூட்டிய கோச்சு வண்டியில் ஊர்வலமாக அழைத்து வரப்பெற்றார். தம்புச் செட்டித் தெருக்கோடியில் வந்தபோது ஊர்வலக்கூட்டம் பெருகிவிட்டது. பல இடங்களில் ஸ்ரீபாலருக்கு மாணவர்கள் உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தனர்'[17]

தனியார் ஒருவர் இல்லத்தில் தங்கி இருந்தபோது, அவரால் கூட்டப்பட்ட கூட்டத்தில் சென்னை நகரப்பிரமுகர்கள் பலரும் பாலரைச் சந்தித்தனர். பாலர் சென்னைத் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் மே 2 முதல் 9ஆம் தேதிவரை சொற்பொழிவாற்றத் திட்டமிடப்பட்டது. ஆனால் மே 9 ஆம் தேதி லஜ்பத்ராய் கைது செய்யப்பட்டதால், திட்டமிட்டபடி சொற்பொழிவுகள் நடை

பெறவில்லை.[18] எனினும், மீதி நாட்களில் அவர் ஆற்றிய உரைகள், தமிழகத்தில் ஒரு பேரெழுச்சியை உண்டாக்கியிருக்கின்றன.

பாலரின் உரைச்சிறப்பு

மறைமலையடிகள், திரு.வி.க. உள்ளிட்ட பலரது பார்வையிலும், பதிவிலும் பாலர்தம் உரைகள் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றன.

"பாலரின் கூட்டங்கள் கடற்கரையில் திரண்டன; துதைந்தன; மிடைந்தன. அரிய சொற்பொழிவுகள் பாலரால் நிகழ்த்தப்பட்டன. நீர்க்கடல் ஒரு பக்கம்; ஜனக்கடல் இன்னொரு பக்கம். நடுவண் சிறு தீவென விளங்கியது மேடை. அதிலே பாலர் பொழிந்தார் அமிழ்தம்; சொல்லமிழ்தம்; வீரச்சுவை அமிழ்தம். அதைக் கடல் பருகியது; காற்று அருந்தியது; உடுக்கள் உண்டன; திங்கள் நுகர்ந்தது. மனிதக்கடலில் அமைதி. புலன்களெல்லாம் செவியைச் சேர்ந்தன. ஏழு மேகங்கள் ஒன்றுபட்டு முடுகி எழுந்து பாலராகி அமுதமழை பொழிந்தன என்றே கூறல் வேண்டும். அந்நாளில் நாவன்மையில் சுரேந்திரநாதருக்கு அடுத்தபடியில் நின்றவர் பாலரே. அக்காலத்தில் ஒலிபெருக்கி இல்லை. பாலருக்கு ஒலிபெருக்கி எற்றுக்கு? அப்பொழுது ஒலிபெருக்கி பாலரைக் கண்டிருப்பின், அஃது ஒலி சுருக்கியாய் ஒடுங்கும். பாலர் சொற்பொழிவு எனக்கு விற்பொழிவாகவுந் தோன்றியது. காண்டீபன் விற்பொழிவைச் சொற்பொழிவாக நிகழ்த்தப் பாலனாக வந்தான் என்று கூறினால் என் உள்ளம் நிறைவடையும். பாலர் பேச்சை நேரில் கேட்ட காது இவ்வாறு உரைக்க உந்துகிறது. மெஸோரி- மெஸஸ்பி எத்தகைக் காட்சியளிக்கும்? பேரொலி!பெருவெள்ளம்! பாலர் சொற்பெருக்குகள் கடலாயின; ஆவியாயின; மேகமாயின; மழையாயின. வறண்ட தென்னாடு பசுமையுற்றது"[19] என்கின்றார் திரு.வி.க. பாலரின் பொழிவு, பாரதியாரின் அரசியல் ஆவேசமிக்க இயக்கத்திற்குப் பெரிதும் துணைநின்றது என்பதோடு, தென்னிந்தியாவில் குறிப்பாக, தமிழகத்தில் (அப்போதைய சென்னை மாகாணத்தில்) மிகுந்த அரசியல் விழிப்புணர்வையும் போராட்ட வேகத்தையும் மக்களுக்கு ஏற்படுத்துவதாக அமைந்தது. மிதவாதக் கட்சியினரை வென்று, புரட்சிகரமான இளைஞர் படையைக் கட்டமைக்கப் பாரதியாருக்குப் பெரிதும் உதவியது எனலாம்.

"அவர் வரவு சென்னை சரித்திரத்திலேயே ஒரு பெரும் செய்தியாகும். இவர் தீவிரக்கட்சியினர் கொள்கைகளை வெகு தெளிவாக எடுத்துக்கூற சென்னைக் கடற்கரையில் பல பிரசங்கங்கள் செய்தார். ஸ்வராஜ்யம் நமது உரிமை, நமது கடமை, ஸர்க்காரின்

அகந்தை முதலியவற்றைப் பற்றி அவர் செய்த சொற்பொழிவுகள் இன்றைக்கும் மறக்கற்பாலது. ஜி.சுப்பிரமணியய்யர் பலநாள் இவைகளில், அக்ராசனம் வகித்திருக்கிறார். ஆழ்ந்த பக்தியுள்ள மிதவாதக் கட்சியினர் பலர் பெருங்கடலின் காம்பீர்யத்தோடு பேசும் பாலர் சொற்பொழிவுகளை ஒளிந்து மறைந்து நின்று கேட்டுச் செல்வர்... பிபின சந்திரபாலர் வந்த நாள்முதல் மறுபடி திரும்பியநாள் வரை பாரதியாருக்கு ஒரு சிறிது கூட ஓய்வு கிடையாது. இந்தியா பத்திரிகைக்கு எழுதுவதைவிடாமல் பாலர் பேசுவதற்கு முன் பின்னும் பாரதியார் பேசத் தவறமாட்டார். தமது தேசியகிதங்கள் பத்திரிகையில் வெளிவந்த பிறகு அவைகளை இம்மேடைமீது பாடுவார். அவற்றைத் தாமே இயற்றியவராகையால் அவைகளைப் பாடும்போது தமது முழு உணர்ச்சியும் வெளிவரும். அவைகளைக் கேட்க ஜனங் கொண்ட அவா கொஞ்சநஞ்சமன்று. பாரதியார் மேடை ஏறினார் என்றால் கூட்டத்தில் சிறிது சத்தம்கூட இராது. அழுகிற குழந்தைகள் கூட வாய் மூடிக் கொள்ளும். அவர் தம் தொண்டை கம்மியிருக்கிற தென்று எவ்வளவு கூறினாலும் அவர் பாட்டுக்களில் ஒரு சிலவாவது அவர் பாடிக் கேட்காமல் அவரைப் போகவிட மாட்டார்கள். பிபின சந்திர பாலர் உபன்னியாசங்களாலும், பாரதியார் பாட்டுகளாலும் சுரக்க ஆரம்பித்த மகாஜனங்களின் பேருற்சாகம் சென்னையோடு நிற்க வில்லை. ஊற்றுப்பெருக்குப் போல் பெருவெள்ளமாய் நாடெங்கும் கரை புரண்டோடிற்று"[20] என்று மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார் குறிப்பிடுகின்றார்.

பாரதியாரின் ஓய்வறியா உற்சாக உழைப்பு

அக்காலத்தில், சென்னையில் "பாலர் ஆற்றிய உரைகள் சரித்திரப் பிரசித்தி பெற்றவை. சென்னை மாகாணத்தைத் தட்டி எழுப்பிய பிரசங்கங்களைத் தமிழ்ப்படுத்தி, இந்தியா பத்திரிகை அலுவலகமே 'ஸ்ரீவிபினசந்திரபாலர் சென்னையில் செய்த உபன்னியாஸங்கள்' என்ற தலைப்பில் வெளியிடு செய்தது. அது சமயம் நூலின் முன் பக்கத்தில் 1908இல் சென்னை இந்தியா ஆபீஸில் மொழிபெயர்க்கப்பட்டது என்ற குறிப்பும் இடம்பெற்றுள்ளது கருதத்தக்கது" என்ற குறிப்போடு பாரதியாரின் மொழிபெயர்ப்பிலான அச்சொற்பொழிவுகள் முழுவதையும் சிறப்புறத் தேடித் தமது காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதியார் படைப்புகள் தொகுதி-3இல் சீனி.விசுவநாதன் அழகுற வெளியிட்டிருக்கின்றார். பாலரின் உரையின் மையக்கருத்து, அவர்தம் பொழிவுத்திறம் ஆகியவை குறித்த முன்னுரையோடுதொடங்கித் தொடர்ந்து அவர்தம் உரைகளைக் தருவதில் பாரதியார் தமது தனித்தன்மை துலங்கச் செயலாற்றியிருக்கின்றார்.

“நமது நோக்கம்: ஸ்வராஜ்யம் வேலை முகாந்திரம்

ஸ்வராஜ்ய போகமில்லாத ஜனங்கள் உரமில்லாத வயலைப்போல நாளுக்கு நாள் க்ஷீணமடைந்து நோய், தரித்திரம், பலஹீனம், அதர்மம் முதலியவற்றுக்கிடமாகி, நாசமடைந்து விடுவார்கள். நாம் அவ்வாறு நாசமடைய லாகாதென்று நிச்சயம் கொண்டிருக்கிறோம்.

நமது முறைகள்: சுதேசீயம், அந்நியவஸ்து பஹிஷ்காரம், ஸர்க்கார் உத்தியோகங்களை விலக்குதல், சுதேசீயக் கல்விச் சாலைகள் ஏற்படுத்துதல், பஞ்சாயத்துக்கள் மூலமாக நியாயந் தீர்த்துக்கொள்ளுதல், சுதேசீய நகர சுத்தி ஏற்பாடு -முதலிய ஸமாதானமான சாந்த முறைகள்.

துணைக்கருவிகள்: சரீர பலப்பயிற்சி, மனோபலப்பயிற்சி, ஐக்கிய உணர்ச்சி முதலியன.

மேற்கூறப்பட்டவைதாம் பாபுவிபினசந்திரபாலர் செய்யும் உபந்நியாசங்களின் முக்கியக்கருத்தாகும்.

ஆனால், இவரது வாக்குத்திறமையும், விவகாரநுட்பமும், தேசபக்திப் பெருமையும் அளவிட்டுக்கூறமுடியாதன.

பதினாயிரக்கணக்கான ஜனங்கள் திருவல்லிக்கேணிச் சமுத்திரக் கரை மண்ணிலே சென்ற சில தினங்களாக இவரது அற்புத உபந்நியாசங்களைக் கேட்டுப் பரவசமடைந்து போய்விட்டார்கள். இவர்மீது விரோதத்துடன் சென்றவர்கள் கூட இவரது உபந்நியாசங்களைக் கேட்டவுடன் இவருக்கு அடிமைகளாய் விட்டார்கள்.... சென்னையில் எங்குபார்த்தாலும் விபினசந்திர பாபுவைப்பற்றியே பேசுகிறார்கள். எங்கே கேட்டாலும் அவருடைய புகழ்ச்சிதான். தெருக்களிலே வந்தே மாதரம் வெகு சாமானியமான வசனமாகிவிட்டது” என்று இந்தியா (11.05.1907, பக்.3-4) இதழில் குறிப்பிடுகின்றார் பாரதியார்.

இந்த அறிமுகத்தை அடுத்துப் பாலர்தம் உரையைத் தரும் பாரதியார், அவ்வுரை குறித்த முன்னுரைச் செய்தியும் தருகின்றார். இரண்டாவது பிரசங்கம் பற்றிய முன்னுரையில், “ஜனங்கள் ஆவேசங் கொண்டு ஆர்ப்பரித்து உபசரித்த் ஸ்ரீபாலர் இரண்டு மணிநேரம் சபையை நோக்கிப் பின்வருமாறு பேசினார்” என்று குறிப்பிடுகின்றார்.

பாரதியார் தமிழில் பாலரின் பொழிவுகள்

உரையிடையே அடைப்புக்குறிக்குள், தமிழ்ச்சொல்லுக்கு இணையான தமிழ் ஒலிபெயர்ப்பிலான ஆங்கிலப் பெயர் - சான்றாக, இந்திய ஜனமகா சபை (இண்டியன் நாஷனல் காங்கிரெஸ்) எனக்

குறிப்பிடுவதையும், அரங்கில் - பார்வையாளர்களிடையே நிகழ்ந்தவற்றையும் அடைப்புக் குறிக்குள் - சான்றாக, (வந்தேமாதர ஆரவாரங்கள்) என்று தருவதையும் பாரதியார் புதுமையாகச் செய்திருக்கின்றார். மேலும், பேச்சுவழக்கிற் கிடையே பேச்சாளர் யாரைப் பார்த்து எவ்வாறு அழைத்தார் என்பதையும் உரையிடைக் குறிப்பாகப் பாரதியார் தந்திருக்கும்பாங்கு அப்பேச்சை நேருறக் கேளாதாரும் கற்பனையாகக் கண்டுகொள்ளும் வண்ணம் விளங்குகின்றது.

பாலர் பேசும்போது, "ஐயா, (ஸ்ரீ ஜி.சுப்பிரமணிய அய்யரை நோக்கிச் சொல்லுகிறார்) தாமே முந்திய சபையிலே அக்கிராசனம் வகித்திருத்தீர்கள், நான் தங்களிடம் கேட்கிறேன். ஐயா, (சபாநாயகரை நோக்கி) தாமே இந்த சபைக்கு முக்கியஸ்தராயிருக்கிறீர்கள் தாமும் சொல்லுங்கள். மஹா ஜனங்களே, நீங்களெல்லாருமே உங்களிஷ்டப்படி சொல்லுங்கள், நான் உங்களிடம் தப்பர்த்தமாகவா சொன்னேன்? (இல்லை இல்லை) லார்ட் மிண்டோவின் வசனங்கள், நான் கூறியுதற்கு மாறுபாடான பொருளா? லார்ட் மிண்டோவின் விஷயத்திலேகூட, நான் அவரது வார்த்தைகளின் பொருளே போதுமான மட்டும் விகாரமுடையதாக இருக்கிறதே? அதை நான் விகாரப்படுத்த வேண்டுமா? (அப்போது ஜனங்கள் ஹிந்து பத்திரிகையை பஹிஷ்காரம் செய்ய வேண்டும், பஹிஷ்காரம் செய்ய வேண்டும் என்று கூச்சலிட்டார்கள்) கூடாது, கூடாது; எல்லாவற்றையும் பஹிஷ்காரம் தொடங்கி விடாதேயுங்கள்."[21]

மேலும், தேவையான இடங்களில் பொருத்தமான உள்தலைப்பு மற்றும் பொதுத் தலைப்பும் இட்டுப் பாரதியார் வழங்கியிருக்கும் பாங்கு வாசிக்கும் அனுபவத்திற்குப் பெரிதும் துணைசெய்வதாக இருக்கின்றது.

இவ்விழாவின்போதுதான், பாரதியார், வங்க மொழிப்பாடலான, வந்தே மாதரப் பாடலைத் தமிழக மக்கள் அனைவரும் பொருள் உணர்ந்து பாட வேண்டும் என்பதற்காகத் தமிழ்ப்படுத்திப் பாடியிருக்கின்றார். வங்க மாகாணத்தை மட்டுமே குறித்த அப்பாடலை இந்திய நாடு முழுமைக்குமான பாடலாக மாற்றியமைத்துப் பாடிய சிறப்புக்குரியவன வாகவும், இம்மேடைகள் விளங்கின.

திட்டமிட்ட வண்ணம் இச்சொற்பொழிவுகள் முழுமையுறா விட்டாலும், நடந்தவரையில் மிகச்சிறப்பாகவே பாரதியாரால் பதிவு செய்யப்பெற்றதை நினைந்து மகிழ்கிறபோதே, இவ்வரங்குகளில் பாரதியாரின் முழக்கத்தைப் பதிவுசெய்யத்தவறிய சூழல் உறுத்தத்தான் செய்கின்றது.

இந்தச் சூழலில் இன்னொரு செய்தியையும் குறிப்பிடவேண்டும். 9.5. 1907 அன்று லஜபதிராய் கைதுசெய்யப்பட்ட காலக்கட்டத்தில், சென்னையில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் பாரதியார் உரையாற்றியதைக் கண்ட அனுபவத்தை, வி.சக்கரைச் செட்டியார் நினைவுகூர்கின்றார்.

"அந்நாட்களில் அவர் கடற்கரையில் ஜனக்கூட்டத்தின்முன் நின்று பாடிய அநேக சந்தர்ப்பங்கள் என் நினைவிற்கு வருகின்றன. எனக்குச் சரியான தேதி ஞாபகத்திற்கு வரவில்லை. கடற்கரையில் பல்லாயிரம் ஜனங்கள் சேர்ந்த பொதுக்கூட்டமொன்று நடந்தது. ஸ்ரீயுத ஜீ. சுப்பிரமணிய ஐயர் தலைமை வகித்தார். மிஸ்டர் நெவின்சன் என்ற ஆங்கிலப்பத்திரிகைக்காரரும் வந்திருந்தார். ஸ்ரீயுத பாரதியாரும் அச்சமயம் பாடினார். அவ்வாங்கிலேயன் 'இந்தியாவின் நூதன உணர்ச்சி' என்ற தன் நூலில் பின்வருமாறு பாரதியாரை வருணிக்கின்றான்.

"அந்த சென்னையில் தமிழ்க்கவி லசபதிராய் தேச பிரஷ்டஞ் செய்யப்பட்டபோது தாம் எழுதிய புலம்பலைப் பாடினார். அது தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டவர்களுக் கெல்லாம் பொதுவான புலம்ப லென்னலாம். வீட்டைப்பற்றிய இன்ப நினைவுகள், சிறு வயதில் விளையாடிய நாட்டினிடம் ஆழ்ந்த பற்று, அன்னியர்க ளிடையும் விளங்காத பாஷைகளிடையும் வாழ்க்கையின் ஏகாந்த தன்மை இவையெல்லாம் வெகு சாந்தமுடனும், எளிதாகவும் சொல்லப்பட்டிருந்தன. பின்னர் திடீரென்று மாறி அக்கவி ஏளனஞ் செய்யப்புகுந்து சுயராஜ்யம் (அல்லது ஹோம் ரூலைப்) பற்றி மிஸ்டர் மர்லிக்கும் இந்தியாவுக்குமிடையே ஓர் சம்பாஷணையை விவரிக்கத் தொடங்கினார்"[22] என்று வி.சக்கரைச் செட்டியார் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு தமிழகத்தில் எழுச்சி நிகழ்ந்ததுபோலவே, இந்தியா எங்கும் எழுந்த அரசியல் விழிப்புணர்வைக் காணப்பொறாத ஆங்கில அரசு பல்வேறு சிக்கல்களை உண்டாக்கியது. நாடெங்கிலும் குழப்பங்கள். வரம்புமீறிய கட்டுப்பாடுகள். வங்கப் பத்திரிகைகளின் மீது நடவடிக்கைகள். அந்த சமயத்தில், 1907 மார்ச் மாத வாக்கில் பாலர் ஆற்றிய சொற்பொழிவுகளுக்காகக் கைதுசெய்யப்பட்டார்.

இதனைக் கண்டித்து, பாரதியார் உள்ளிட்ட அன்பர்களால் தொடங்கப் பெற்ற சுதேசிய இயக்கமான, சுதேச வஸ்து பிரசாரணி சங்கச் சார்பில், ஓர் ஊர்வலம் 1907 செப்டம்பர் 17ஆம் தேதியினின்று நடைபெற்றது. ஊர்வலம் ஜார்ஜ் டவுனிலிருந்து புறப்பட்டு, கடற்கரையை அடைந்தது. அங்கே ஒரு பொதுக்கூட்டமும் நடைபெற்றது. ஊர்வலத்திலும், பொதுக் கூட்டத்திலும் பாரதி பங்கு

கொண்டு பேசினார். மற்றும், **1907** செப்டம்பர் **28** ஆம் தேதியன்று பாலரைப் பாராட்டுவதற்காக ஓர் ஊர்வலம் நடைபெற்றது. இந்த ஊர்வலத்திற்குப் பாரதியே தலைமை தாங்கினார்.[23]

மேலும், '**12.9.1907**இல் பாரதியார் உள்ளிட்ட நண்பர்களால் தொடங்கப்பெற்ற, பால பாரத சங்கத்தினர் கண்டன ஊர்வலம் நடத்தினர். அவ் ஊர்வலத்தில், கைவினைஞர்களும், சிறுகடைக் காரர்களும் பெருமளவில் பங்கேற்றனர். மேலும் இச்சங்கத்தின் சார்பில், **14.9.1907** அன்று சுதேசி ஊர்வலம் நடத்தப் பெற்றிருக்கின்றது. மூர் மார்க்கெட்டிலிருந்து கடற்கரை வரை நடத்தப் பெற்ற இவ் ஊர்வலத்தில் **1500** பேர்கள் பங்கேற்றனர். இந்த ஊர்வலங்களின் முடிவில் நடத்தப்பெற்ற கூட்டங்களில் பாரதியார் உரையாற்றி யிருக்கின்றார்'.[24]

சூரத் மாநாட்டுப் பணிகள்

இதனையடுத்து, இச்சங்கத்தின் சார்பில் சூரத் காங்கிரஸ் மாநாட்டிற்குச் செல்வதற்கானப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுப்புக் கூட்டம், **6.10.1907**இல் சென்னை கடற்கரையில் நடத்தப்பெற்றது. **50** பிரதிநிதிகள் தெரிவு செய்யப் பெற்றனர். இக்கூட்டத்தின் முடிவுகளைச் சூரத் மாநாட்டில் விளக்குதற்காகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஐவருள் பாரதியாரும் ஒருவர். இக்குழுவில் சுதேசமித்திரன் ஆசிரியர் ஜி.சுப்பிரமணிய ஐயரையும் சேர்க்கக் கோரிய தீர்மானத்தை எதிர்த்து, 'ஜி.எஸ்.ஐயர், குடியேற்ற ஆதிக்கத்துக்கு உட்பட்ட தன்னரசுத்திட்டத்தைக் கொண்டிருப்பவர், அவர் பெயர் தேசிய வாதிகளின் பட்டியலிலிருந்தே நீக்கப்பட வேண்டும்' என்றும் பாரதியார் குறிப்பிட்டிருக்கின்றார். பின்னர் சூரத் மாநாட்டில் பங்கேற்போருக்கான பயணச்செலவை மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியாரும், வ.உ.சிதம்பரம் பிள்ளையும் ஏற்கப் பயணம் உறுதி செய்யப்பெற்றது.

அதனைத் தொடர்ந்து நடந்த பணிகள் குறித்து, மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார் பின்வருமாறு எழுதுகின்றார்.

"சூரத் காங்கிரஸ் மாநாடு தீர்மானிக்கப்பட்டவுடன் அதற்கு மக்கள் சக்தியைத் திரட்டுவதில் பாரதியார் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். வ,உ,சி,யும், இனி ஸூரத்து காங்கிரஸ் காரணமாக பொது ஜனங்களைத் திரட்டி ஜன வலிமையை மேலோங்கச் செய்வதெனத் தீர்மானித்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தார். இதற்கிடையே பாரதியாரின் பிரசாரம் சென்னை நகரிலும் தமிழ் நாட்டனைத்திலும் பெரியோர் சுதந்திர தாகத்தைக் கிளப்பிவிட்டது, இந்தியா பத்திரிகையில் அவர்

மிதவாதிகளுக்குக் கொடுத்த சாட்டையடிகளும், கடற்கரையிலும், இன்னும் பல பொதுவிடங்களிலும் அவர் விடாதுசெய்துவந்த சொற்பொழிவுகளும் பொது ஜனங்களின் கண்ணைத் திறக்க ஆரம்பித்தன. பொதுக்கூட்டங்களில் அவர் தமிழில் பேசியதோடு தம் நண்பர் ஸூரேந்திரநாத் ஆர்யாவைக் கொண்டு தெலுங்கர் களையும் எழுப்பத் தொடங்கினார், தமிழில் மிதவாதக் கட்சியினரைத் தாக்கி வந்த சுதேசமித்திரன் பத்திரிகை தீவிரக் கட்சியில் சேர்ந்தது. ஜீ,சுப்ரமணிய அய்யர் தீவிரக் கட்சியினரின் பொதுக் கூட்டங்களில் தலைமை வகிக்கலானார். தெலுங்குநாட்டில் ஆங்கிலத்தில் ஸ்ரீபட்டாபி ஸீத்தாராமய்யா வெளியிட்டு வந்த கார்லீலியன் என்னும் ஸாஹித்திய பத்திரிகை கூடத் தீவிரக்கட்சியினர் பத்திரிகையாய் விட்டது. வட வேங்கடத்திற்கும் அப்பாலுள்ள தெலுங்கு நாட்டிலிருந்து தென்குமரி நாடுள்படவிருந்த எல்லாநாடுகளும் ஒரே சுதந்திரதாகம் கொண்டெழுந்தது. இப்பேரியக்கத்தைச் சொற்சித்திரப் படுத்தி நமக்குக் கொடுத்தவர் பாரதியார் தான் அவர் மூலமாக இந்நாடு என்று தணியும் சுதந்திரதாகம் என்று கேட்கத் தொடங்கிவிட்டது. இந்தக்கேள்வியோடு அது நிற்கவில்லை. தன் முயற்சியாலேயே அந்தத் தாகத்தைத் தணிக்க வேண்டும் எனவும் கண்டு கொண்டது".[25]

இத்தகு முயற்சிகளின் பயனாக, திலகருக்கு ஆதரவான புதுக்கட்சியார், 30 பேர் கொண்ட குழு, 21.12.1907 சனிக்கிழமை மாலை சூரத்தை நோக்கிப் பயணத்தைத் தொடங்கியது. அதன்பின்னர் இதுதொடர்பான செய்திகளை விரிவுற அறிந்துகொள்ள, பாரதியாரின் 'எங்கள் காங்கிரஸ் யாத்திரை' என்ற நூல் துணை செய்யும். அதனிடை இந்நூலின் பொருண்மை கருதி, பாரதியார் அம்மாநாட்டில் ஆற்றிய உரை மட்டும் இங்குத் தரப் பெறுகின்றது.

சூரத் மாநாட்டில் பாரதியாரின் உரை

சூரத்மாநாட்டின்போது, 26ஆம் தேதி மாலையில் நகர மத்தியிலே புதுக் கட்சியாரின் சபையொன்று கூடிற்று. அப்போது உடல்நலக் குறைவின் காரணமாக அங்குச் செல்ல இயலாத பார்தியார் பின்னர் இரவு 8 மணிக்குச் சென்னைப் பிரதிநிதிகளின் கூட்டத்தில் பங்கேற்றார். ஸ்ரீ ஜி.சுப்பிரமணிய ஐயர் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் பாரதியாரும் பேசியிருக்கிறார். அவ்வுரை பின்வருமாறு:

"இன்று மாலை நடந்த- புதுக்கட்சியார் சங்கத்திலே ஸ்ரீதிலகரும் மற்ற தலைவர்களும் சொல்லிய விஷயங்களை என் மித்திரர் ஒருவர் வந்து என்னிடம் இப்போது தெரிவித்தார். அதை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். இன்று பகலில் நடந்த அசம்பாவிதமான காரியத்துக்கு யார் ஜவாப்தாரியாக இருந்த போதிலும், நாளைமுதல்

காங்கிரஸ் முடியும் வரை இம்மாதிரியான சம்பவம் நிகழ்வதற்குப் புதிய கட்சியைச் சேர்ந்த எந்தப் பிரதிநிதியும் இடம் கொடுக்கலாகா தென்று, எங்கள் கட்சியாருக்குத் திலகர் சொல்லியிருக்கிறார். ஐக்கியமே பலம். நிதானக் கட்சியாரும்,நமது கட்சியாரும் சேர்ந்து பாடுபட்டால்தான் நமது தேசநன்மைக்கு விரைவாக ஹேதுவேற்படும். நமது கட்சியாரைக் காங்கிரஸிலிருந்து பிரித்து விடுவதற்கு அவர்கள் பலவிதமாக முயற்சி புரிந்து வருகிறார்கள். நாமும் ஏமாந்துபோய் ஓர் வியாஜமேற்படுத்திக் கொடுத்து விடலாகாது. இன்று நடந்த குழப்பத்திற்கு நமது கட்சியார் முகாந்திரமில்லையென்பதை நான் நன்றாக அறிவேன்.

ஆனால், அவர்கள் நமது கட்சியாரைத்தான் குற்றஞ் சொல்வார்க ளென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் நாளைக்கு சுரேந்திரநாத ராகட்டும் அல்லது வேறெந்த நிதானஸ்தராகட்டும், நம்மைப்பற்றி என்ன சொல்லிய போதிலும் நீங்களெல்லாம் வாய் திறவாமல் மவுனமாகக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டும். அவர்களுடைய பிரசங்கத்துக்கு எவ்விதமான தடையும் செய்யக் கூடாது என்று திலகர் வற்புறுத்தி யிருக்கிறார். ஆதலால் இனியேனும் நம்மிரு கட்சியாருள் ஒற்றுமையாக நயத்தில் காரியம் நடக்க வேண்டுமென்பதே திலகரும் அவரைப் பின்பற்றுவோர்களும் கொண்டிருக்கும் நோக்கமென்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்று பிரார்த்தனை செய்கிறேன்.

காங்கிரஸ் சமயத்தில் நம்மவர்கள் இரைந்து மூச்சுக்கூட விடுவதில்லை யென்று மவுனவிரதம் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இது உங்களுக்குத் திருப்தி விளைவிக்குமென்று நம்புகிறேன்”[26] என்று பேசினார்.

### சென்னை ஜன சங்கத் தோற்றச்சூழல்

கூச்சலும், குழப்பமுமாக நிகழ்வுற்ற சூரத் காங்கிரஸ் மாநாட்டிற்குச் சென்று திரும்பி வந்த கையோடு, திலகர் தலைமையில் தீவிரவாதப் பிரிவின் சென்னை மாகாணச் செயலரான வ.உ.சி.யின் முன் முயற்சியால் பாரதியாரின் தூண்டுகோலால் தொடங்கப் பெற்றது, சென்னை ஜன சங்கம். அச்சங்கத் தோற்றுவாய்க்கு மூலவர்களுள் ஒருவரான வ.உ.சி. அதன் தோற்றச் சூழல் குறித்துப் பின்வருமாறு விளக்குகின்றார்.

“ஒருநாள் மாலையில் நாங்கள் (பாரதியார், மண்டயம் ஸ்ரீநிவாசாச் சாரியார், வ.உ.சி ஆகிய) மூவரும், கடற்கரையில் வங்காளத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த காலையில், அங்குக் காளிதேவிக்கு வெள்ளாடு பலி கொடுப்பதைப் பற்றிப் பாலர் பேசிய பேச்சிற்கு என்

மாமனார் (பாரதியார்) ஓர் வியாக்கியானம் செய்தார். அவ் வியாக்கியானத்தைக் கேட்டதும் நான் கொழுத்த தேசாபிமானியாகி விட்டேன். அதுமுதல் அவர் என்வீட்டிற்கு வரவும், என்னோடு உண்ணவும், உறங்கவும், நான் அவர்வீட்டிற்குப் போகவும், அவரோடு உண்ணவும் உறங்கவும் ஆயிருந்தோம்... தேச ஆட்சியைச் சீக்கிரம் கைக் கொள்ளுதற்குச் செய்யவேண்டிய முயற்சிகளைப் பற்றிப் பேசினோம். பிரசங்கம் செய்தோம். தேசாபிமானத்தின் ஊற்றென விளங்கும் திருவல்லிக்கேணிக் கோயிற்பக்கத்திலுள்ள மண்டையன் கூட்டத்தாராகிய திருமலாச்சாரியார், ஸ்ரீனிவாசாச்சாரியார் முதலியவர்களோடு அடிக்கடி பேசலானோம்; ஆலோசிக்கலானோம்; அவ்வாலோசனையின் பயனாகத் திருவல்லிக் கேணியில் 'சென்னை ஜன சங்கம்' என்று ஒரு தேசாபிமானச் சங்கத்தை ஸ்தாபித்தோம்."[27] இப்பதிவில் வ.உ.சி. பாரதியார் அளித்த வியாக்கியானத்தைப் பதிவு செய்யாமல் போனது ஓர் இழப்பேயாகும். அது, காளிதேவி - பாரததேவி, வெள்ளாடு - வெள்ளையர் என்பதான குறியீட்டுப் பொருளாகவும் கொண்டு பாரதியார் விளக்கமளித்திருக்கலாம் என்று கருத இடமுண்டு. ஆங்கிலேயரை எதிர்த்து இந்தியர்கள் போராட வேண்டிய நிலையில் களம் காண இரகசிய ஆயுதப் புரட்சிக்குப் பாரதியார் ஒத்த அன்பர்களோடு இணைந்து முயற்சிகள் மேற் கொண்டார் என்று ரகுநாதன் போன்றோர் சுட்டும் வரலாற்று நோக்கிற்கு, இக்குறிப்பு வலுச்சேர்க்கும். இது மேலும் ஆய்வுக்குரியது.

இது ஒருபுறமிருக்க, இச்சங்கம் குறித்து பாரதியாரின் துணைவியார் செல்லம்மா பாரதி, "சென்னையில் மகாஜனசபையில் அக்காலத்தில் மிதவாதப் பெரியோர்கள் அதிகம் இருந்தமையால், தீவிரவாதிகளுக் கென சென்னை ஜனசங்கம் என்று ஒன்று ஆரம்பித்தார். பிற்காலத்தில் அதையே, 'செ-சங்கம் என்று பெயர் கொடுத்துக் காரியங்கள் நடத்தினோம். ஒரு காரியமும் நடக்கவில்லை' என்று துக்கத்தினால், ஏற்பட்ட ஹாஸ்யச் சுவையோடு பாரதியார் ஞானரதத்தில் எழுதினார்" என்று குறிப்பிடுகின்றார்[28]

இவர் குறிப்பிட்ட வண்ணம், பாரதியார், ஞானரதத்தில் எழுதுவதாவது. "திருவல்லிக்கேணியிலே செ-ஸங்கம் என்பதாக ஒரு தேசபக்தர் ஸபை உண்டு. அதில் தேசபக்தர்கள்தான் கிடையாது. நானும் சிற்சில ஐயங்கார்களுமே சேர்ந்து நற்காரியங்கள் - ஒரு காரியமும் நடக்கவில்லை - நடத்தினோம். நாங்கள் தேசபக்தர்கள் இல்லையென்று அந்தச் சபை ஒன்றுமில்லாமற்போனதிலிருந்தே நன்கு விளங்கும்"[29]

தான் கருதிய வேகத்திற்கு ஈடுகொடுத்து இயங்கமுடியாமல் இச்சங்கம் ஒடுக்கப்பட்ட துயரமிகுதியால் பாரதியார், வெறுப்புக்

கலந்த நையாண்டியோடு மேற்சுட்டியவாறு எழுதினாலும் அச்சங்கம் சில தீவிரப்பணிகளைச் செய்திருப்பது வரலாற்றுண்மை. அது குறித்து இன்னும் இக்கட்டுரைப் போக்கினிடையே தெளிவுறக் காணலாம்.

சென்னை ஜன சங்கத்தின் தொடக்கமும் செயற்பாடுகளும்

சென்னை ஜனசங்கம்,11.1.1908அன்று சென்னை திருவல்லிக்கேணி, கங்கைகொண்டான் மண்டபத்தில் தொடங்கப்பெற்றது. இச்சங்கக் கூட்டத்திற்கு, தஞ்சைக் கல்லூரி வடமொழி அறிஞர் வரதராஜசர்மா தலைமையேற்றார்.

1. சுதேசியம், அன்னியப்பொருள் மறுப்புக் குறித்துப் பிரச்சாரம் செய்தல்
2. உடற்பயிற்சிக் கழகங்கள் நடத்துதல்.
3. நூலகம் நடத்துதல்.
4. வீட்டுக்கு வீடு சென்று பிரச்சாரம் செய்து,சுதேசிய நிதி திரட்டுதல்.
5. சுதேசியப் பிரச்சாரத்துக்கு இளைஞர்களைத் தயார் செய்தல்

என்பனவற்றை இச்சங்கத்தின் நோக்கங்களாக அமைந்திருந்தனர். இச்சங்கப் பொறுப்பாளர் எழுவருள் பாரதியாரும் ஒருவர்.

'இச்சங்கம், (திருவல்லிக்கேணி தௌளசிங்கப் பெருமாள் கோவில் தெரு 87ஆம் எண் என்ற இடத்தில் உள்ள) தனது கட்டிடத்தில் வாரம் தவறாமல் குறிப்பாக, சனிக்கிழமைதோறும் ஒரு கூட்டம் நடத்தவும் திட்டமிட்டு நடத்தியும் வந்தது. அக்கூட்டம் 'சனி உபந்நியாசம்' என்றே அந்நாளில் பேசப்பட்டது. வாராவாரம் தொடர்ந்து சொற்பொழிவுகள் நடைபெற்றன. சிறப்பாக, வாராந்தரக் கூட்டங்களில் 'சுவாமி விவேகாநந்தாவும் தேசாபிமானமும்', 'இந்து தேச சரித்திரத்தின் ஒரு வித நோக்கம்' ஆகியன போன்ற தலைப்புகளில் பேசப்பட்டதாகத் தெரிகின்றது'.[30]

இச்சங்கம் தொடங்கப்பெற்றதனால், "சென்னை நகரில் பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும் அதிகமாயின. மூர்ச்சந்தையில் திடீர்க் கூட்டங்களும் ஊர்வலங்களும் நடந்தன. இவற்றில் கலந்துகொண்டு ஆர்யாவும் பாரதியும் பேசினர். பாரதி கவிதைகள் பாடினார். இந்தக் கூட்டங்களில் லஜபதிராய், திலகர், அரவிந்தர், வ.உ.சி. ஆகியோரது படங்கள் விற்கப்பட்டன. பாரதியின் கவிதைகளும், பேச்சுக்களும் உடனுக்குடன் மொழிபெயர்க்கப்பட்டது. சென்னை மாகாணத் தலைமைச் செயலருக்கு அனுப்பப்பட்டன"[31]

இச்சங்கம் தொடங்கப்பெற்றதை ஒட்டி, இதன் சார்பில் பாரத பந்தர் என்னும் சுதேசப்பண்டசாலை தொடங்கப்பெற்றிருக்கின்றது.

அங்கே அந்நியப் பொருள்களைப் புறக்கணிக்கவும், உள்நாட்டுப் பொருள்களை வாங்கவும் தூண்டி, பாரதியார், வ.உ.சி. ஆகியோர் பிரச்சாரம் செய்திருக்கின்றனர். அதனால், உள்நாட்டுப் பொருள்கள் விற்பனை செய்யப்பெற்றிருக்கின்றன என்பன போன்ற செய்திகளையும், அக்காலத்துக் காவல்துறையின் கட்டுப்பாட்டை மீறி பாரதியார், சுயராஜ்ஜிய தினவிழாவைச் சிறப்பாக நடத்தினார் என்ற செய்திகளையும் ப.கோதண்டராமன் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"சென்னையில் பாரதியார் சென்னை மகாஜனசங்கத்தை நடத்தி வந்தார். பாரத பந்தர் என்ற பெயருள்ள பண்டசாலையொன்று திறக்கப்பட்டது. சுதேச சாமான்களையே வாங்கவேண்டுமென்றும் அன்னிய ஆடைகளை விலக்க வண்டு மென்றும் பாரதியாரும் சிதம்பரம்பிள்ளையும் பிரச்சாரம் செய்தனர். சுயராஜ்ஜிய தினம் என்று இந்தியநாடு முழுவதும் ஒரு தினத்தில் கொண்டாடவேண்டுமெனத் தீர்மானித்திருந்தனர். சென்னையில் பாரதியார் மேளதாள வாத்தியங்களுடன் பெரிய ஊர்வலமும் கூட்டமும் நடத்த வாரம்பித்தார். அரசாங்கத்தார் உத்தரவின்றிக் கூட்டம் கூடக் கூடா தாகையால் பலர் கூட்டத்தில் கலந்துகொள்ளத் தயங்கினர். ஆனால் பாரதியார் விடவில்லை. ஊர்வலத்தையும் கூட்டத்தையும் வெற்றிகரமாகவே நடத்தினார்.[32]

தொடங்கிய மூன்றுவாரத்திற்குள்ளேயே சென்னை ஜன சங்கம், வரலாற்றுச் சிறப்புமிக்க கூட்டத்தைக் கூட்டியிருக்கின்றது. 2.2.1908 அன்று வங்கத்தில் பாரிசால் மாஜிஸ்திரேட்டால் தண்டிக்கப் பெற்றவர்களுக்கு அனுதாபமும், திரான்ஸ்வால் இந்தியர்களுக்காகப் பாடுபட்டுச் சிறைசென்று மீண்ட காந்தியையும், பிறரையும் வாழ்த்தித் தீர்மானங்களை நிறைவேற்றியது.

ஆக, நல்லனவற்றைப் பாராட்டியும். அல்லனவற்றை எதிர்த்தும் மக்களின் சக்தியை ஒன்றுதிரட்டும் பணியில் இச்சங்கம் தீவிரமாக இயங்கப் பாரதியார் பெரிதும் முயன்றிருக்கின்றார். 'சென்னையில் பல்வேறு கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து பேசுவதும், முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றி வைப்பதுமாகப் பாரதியார் ஓய்வு ஒழிவின்றிப் பாடுபட்டு வந்ததோடு, "வெளியூர்களிலும் சில கூட்டங்களில் கலந்துகொண்டதாகத் தெரிகிறது. வ.உ.சிதம்பரத்தின் அழைப்பின்பேரில் 2.2.1908 அன்று தூத்துக்குடியில் 2000 பேர்கள் கலந்துகொண்ட ஒரு கூட்டத்தில் சுதேசியம் குறித்துப் பேசினார். காஞ்சிபுரத்தில் ஒரு கூட்டத்தில் பேசியதாகக் குறிப்புண்டு"[33]என்று கோ.கேசவன் குறிப்பிடும் செய்திகளுள் முதலாவதாகக் குறிக்கப்பெறும் நிகழ்வு பற்றிய சில பதிவுகளைக் காணலாம்.

## பாரதியாரின் தூத்துக்குடிப் பயணம்

'வ.உ.சி. அவர்களின் அழைப்பின்பேரில் 1908 பிப்ரவரி 6ஆம் தேதி அன்று தூத்துக்குடி புறப்பட்டுச் சென்றார். தூத்துக்குடியில் அதுசமயம் தினந்தோறும் மாலை நேரங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெற்று வந்தன. அக்கூட்டங்களில் வ.உ.சி, சிவா ஆகிய பெருமக்கள் அனல் தெறிக்கும்படியாகச் சுதேசி இயக்கப் பிரச்சாரத்தை முடுக்கிவிட்டுக் கொண்டிருந்தனர். 8.2.1908 அன்று நடைபெற்ற கூட்டத்திற்குப் பாரதி தலைமை தாங்கினார். அக்கூட்டத்தில் வ.உ.சி., சிவா, சோமசுந்தரபாரதி ஆகியோர் பேசினர். இந்தக்கூட்டத்திலும் பாரிசால் லியாகத் ஹூசேன், அப்துல் காதர் ஆகியோர் குடும்பங்களுக்கு அனுதாபம் தெரிவித்துத் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. பாரதியார் வந்த வேகத்திலேயே சென்னை திரும்பிவிடுகின்றார்.

'இக்கூட்டத்திற்குப் பாரதியார் அழைக்கப்பட்டார் என்பது மேலுக்குச் சொல்லும் காரணம். ஆனால் அப்படி அழைக்கப் பட்டதற்கு உட்பொருள் உண்டு' என்று நீலகண்ட பிரம்மச்சாரி, ஆங்கிலக் காவல்உயர்அதிகாரி டாம்போவிடம் தெரிவித்தார்' என்று சீனி.விசுவநாதன் குறிப்பிடுகின்றார். (சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.299-300) அதற்குக் காரணம் ஆயுதந்தாங்கிய புரட்சியில் அக்குழு ஈடுபட்டிருந்தது என்றும், அதற்குச் சென்னைக் குழுவினர், குறிப்பாக, பாரதியார் உடன்பாடான கருத்துடையவராக இல்லை. காந்தியடிகளுக்கு முன்பாகவே சாத்விக முறையில் போராடுவதையே பாரதியார் விரும்பினார் என்பதும் அவ்ஆய்வாளரின் கருத்து. இக் காலக்கட்டத்தில் காஞ்சிபுரத்தில் ஒரு கூட்டத்தில் பேசியதாகக் குறிப்புண்டு"[34] என்று கோ.கேசவன் குறிப்பிடும் செய்தி தேடலுக்கு உரியது.

## பாலர் விடுதலை விழாவும் விளைவுகளும்

இதற்கிடையில் பாலர் விடுதலை ஆனதை ஒட்டிச் சென்னையில் மிகப் பெரிய அளவில் ஊர்வலம், பொதுக்கூட்டம் ஆகியன நடத்தப் பெற்றன. அதுபற்றிய நினைவுகளைப் பாரதியாரின் நண்பர் பண்டிட் எஸ். நாராயண அய்யங்கார் பின்வருமாறு பதிவுசெய்கின்றார். "விபினசந்திரபாலருக்கு ராஜ துவேஷக் குற்றத்திற்காக ஆறுமாதச் சிறைவாசம் கிட்டியது. சிறைவாசம் முடிவடைந்து அவர் விடுதலையானதைப் பாராட்ட பாரதியார் சென்னையில் ஏற்பாடு செய்தார். சென்னைப் போலீஸ் கமிஷனர் அந்தக் கொண்டாட்டத்தைத் தடுக்க நினைத்து, "நகரில் நான்கு பேர்களுக்கு மேல் சேர்ந்து தெருவில் செல்லக்கூடாது" என்று தடை உத்தரவு

பிறப்பித்தார். அந்தத் தடை உத்தரவை மீறுவதென்றும், கடற்கரையில் பொதுக்கூட்டம் நடத்தியே தீருவதென்றும் பாரதியார் தீர்மானித்தார். ஆனால் தம் கருத்தை அவர் பகிரங்கப்படுத்தாமல் ரகசியமாகத் திட்டமிட்டு நண்பர்களிடம் மட்டும் வெளியிட்டார். சகலமும் ரகசியமாகவே நடைபெற்றன. திட்டமிடப்பட்ட அன்று மாலை திருவல்லிக்கேணிக் கடற்கரைக்கு ஒரு பர்லாங்கு தூரத்தில் பாரதியாரின் நண்பர்கள் எல்லோரும் ஒன்று கூடினார்கள். அக்கூட்டத்தில் நானும் கலந்துகொண்டேன். திட்டம் நிறைவேறுவது பற்றி ஒரு பக்கம் மகிழ்ச்சி. போலீஸ் நடவடிக்கை பற்றிய பயம் ஒரு பக்கம். நாங்கள் கூடிய ஐந்து நிமிடத்தில் ஒரு பாண்டு வாத்தியக் கோஷ்டியும் எங்களுடன் கலந்துகொண்டது. எங்கும் அமைதி நிலவியது. பீதிக்கும் கலவரத்துக்கும் குறைவில்லை. திடீரென்று பாண்டு வாத்தியம் முழங்க ஆரம்பித்தது. கூட்டம் கடற்கரை நோக்கி நகர்ந்தது. பாரதியாரின் முகத்தில் மட்டும் சற்றும் கலவரம் இல்லை. குறிப்பிட்ட தூரம் வரை சென்றவுடன் பாரதியார் என்னிடம் நெருங்கிவந்து ஒரு மனிதனைச் சுட்டிக் காட்டி, “இவரை உனக்குத் தெரியுமா?” என்று கேட்டார். அந்தக் கனவான் சுமார் இருபத்தைந்து வயதினராகத் தோன்றினார். சாதாரண ஆடையுடுத்தி ஒரு சட்டையும் அணிந்திருந்தார். வசீகரமான தோற்றம். ‘அவரை எனக்குத் தெரியா’தென்றேன். பாரதியார் சிரித்துக்கொண்டே, “இவர் ஒரு வங்காளி வாலிபர். அவர் கையில் இரண்டு வெடிகுண்டு இப்பொழுது தயாராக வைத்திருக்கிறார். என்னைப் போலீசாரோ அல்லது மற்ற அதிகாரிகளோ கைதுசெய்தாலும், அல்லது கெட்ட நோக்கத்தோடு நெருங்கினாலும் அவர்கள் இந்த வெடிகுண்டுக்கு இரை. வெடிவீசுவதில் இவர் சமர்த்தர். வேண்டுமென்றே கல்கத்தாவில் இருந்து இவரை வரவழைத்திருக்கிறேன். வெடி தயாரிப்பதிலும் இவர் சமர்த்தர்” என்றுகூறினார். இதைக்கேட்ட எனக்கு உடல் நடுக்கம் கண்டது. ஒரு பக்கம் போலீஸ், ஒரு பக்கம் வெடிகுண்டு. இரண்டு வகையிலும் ஆபத்தாயிருந்ததே என்று அஞ்சினேன். மெதுவாக, ஜனக் கூட்டத்தின் நடுவே இருந்து விலகிச் சற்று ஓரமாகவே போனேன். கடற்கரையை அடைந்ததும் பாண்டு வாத்தியக் கோஷ்டியினர் போய்விட்டனர். கூட்டத்தின் நடுவில் நின்று பாரதியார் பேசத் தொடங்கினார். வார்த்தைகள் காரசாரமாக உதிர்ந்தன. “நம் தலைவர்களை நாம் கொண்டாட யத்தனம் செய்தால் போலீஸ் கமிஷனர் தடையுத்தரவு போடுகிறார். இந்தக் கம்மண்டாட்டி தடை உத்தரவு போடுவதற்கு யார்? இப்படிப்பட்ட உத்தரவுகளுக்கு நாம் ஒரு பொழுதும் பணிய மாட்டோம். இந்த அநீதியான கார்யங்கள் ராஜாங்கத்துக்கு அழிவு காலம் சமீபித்து விட்டது என்பதைக் காட்டுகின்றன” என்று நான்கு நிமிஷங்கள் பேசிக் கூட்டத்தைக்

கலைத்தார். ஜனத்திரளில் வீராவேசம் மிகுந்திருந்தது. போலீஸார் தலையிடவில்லை. தவிர, போலீஸாரே அப்பிரதேசத்தில் காணப்படவில்லை. அசம்பாவிதம் ஒன்றுமின்றி ஜனங்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.[35]

ஊர்வலத்தில் வெடிகுண்டு - உண்மை என்ன?

இக்கருத்துக் குறித்துத் தீவிரமாக ஆய்ந்து 'பாரதி காலமும் கருத்தும்' என்ற தமது நூலில் பின்வருமாறு விளக்கம் தருகின்றார், ரகுநாதன்.

"திருவல்லிக்கேணி கடற்கரைக்குச் சென்ற ஊர்வலத்தில், வெடிகுண்டு களோடு தன்னுடன் ஒரு வங்க இளைஞர்கூட வருகிறார் என்று பாரதி கூறியதாக நாராயண அய்யங்கார் கூறியிருப்பது சற்றும் நம்பக்கூடியதாக இல்லை. அதுவும் அவரது கற்பனையில் செழுமை பெற்ற வருணனையாகத் தான் உள்ளது எனலாம். அவ்வாறு ஒருவர் வெடிகுண்டோடு ஊர்வலத்தில் வந்துகொண்டிருந்தாலும்கூட, அந்த ரகசியத்தைப் பாரதி அந்த ரகசியத்தோடு சம்பந்தப்படாத ஒரு நபரிடம்,அதுவும் ஊர்வலம் நடுவீதி வழியே சென்று கொண்டிருக்கும் போதே கூறியிருப்பான் என்று எதிர் பார்க்கவே முடியாது. பாரதி சம்பந்தப்பட்டிருந்த ரகசிய இயக்கத்தையும் வெடிகுண்டு விவகாரத்தையும் பற்றித் தமக்கு அதிகமாகத் தெரியும் எனக் காட்டிக்கொள்ள வேட்கை கொள்ளும் அதே தன்முனைப்பான போக்கிலிருந்தே நாராயண அய்யங்காரின் இந்தக் கற்பனையான தகவல் பிறந்துள்ளது என்பதில் சந்தேகமில்லை. இதனால் வெடிகுண்டு விவகாரமே சென்னைக்கும் பாரதிக்கும் சம்பந்தமில்லாத விஷயம் என்று முற்றிலும் ஒதுக்கிவிடமுடியாது. 1907ன் முற்பகுதியில் விபின சந்திரபாலர் சென்னைக்கு வந்தபோதே வெடிகுண்டுகள் செய்ய வேண்டிய அவசியம் பற்றி ஒருவர் பேசினார் என்ற விவரத்தை முன்பே கூறியுள்ளோம். எனவே, சென்னையில் தோன்றிய ரகசியச் சங்கமும் வெடி குண்டுகளைத் தயாரிக்க வேண்டிய அவசியம் பற்றிச் சிந்தித்திருக்கலாம். பாரதிக்கும் இதில் சம்பந்தம் இருந்திருக்கலாம். நெருங்கிய நண்பரான நாராயண அய்யங்காரும், ரகசியச் சங்கத்தின் நடவடிக்கையையும் அது வெடிகுண்டைப் பெறுவதற்கு வேட்கை கொண்டிருப்பதையும் பாரதி வாயிலாக என்றேனும் கேள்விப்பட்டும் இருக்கலாம். இதனை வைத்துக் கொண்டு, அவர் பின்னால் வங்கத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் முதலியவற்றைத் தமது கருத்தில் கொண்டு, இந்த வெடிகுண்டு விவகாரத்தைப் பற்றிக் கற்பனையாக அளந்து கொட்டியிருக்கிறார் என்றே நாம் முடிவு கட்ட வேண்டியிருக்கிறது"[36] என்ற முடிவுக்கு வருகின்றார்.

மேலும், வெடிகுண்டுகளைச் செய்யக் கற்றுக்கொள்வதற்காக ஐரோப்பியாவுக்குச் சென்ற புரட்சிவாதிகள், 1907 இறுதியிலும், 1908 மார்ச்சிலும்தான் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தனர், அதன்பின்பே மாணிக் டோலாத் தோட்டத்தில் வெடிகுண்டுகள் தயாரிக்கப் பட்டன. இதன்பின் முதல் வெடிகுண்டு ஏப்ரல் 30ல்தான் வெடித்தது. எனவே, அய்யங்கார் குறிப்பிட்டபடி சென்னையில் நிகழ வாய்ப்பில்லை என்பதை உறுதிபட உரைக்கின்றார் ரகுநாதன்.

அதேசமயம், 'சென்னையிலும் ஆயுதந்தாங்கிய நடவடிக்கை களுக்குத் தயாராக முனைந்த ரகசியச் சங்கம் ஒன்று இருந்தது என்றும், அதில் பாரதியாருக்கும் சம்பந்தம் இருந்தது என்றும் நாராயண அய்யங்கார் கூறும் செய்தியை அந்த அளவுக்கு நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், இவ்வாறு நிகழ்ந்திருப்பது சாத்தியம் என்பதையே பாரதியின் எழுத்துக்களும் நமக்குச் சூசகமாக உணர்த்துகின்றன'[37] எனத் தெளிவுபடுத்துகின்றார் ரகுநாதன்.

ஆக, நாராயண அய்யங்கார் சுட்டிய பொதுக்கூட்டம் போலீஸ் தடையை மீறிப் பாரதியாரால் நடத்தப்பெற்றது உண்மைதான்.

பாரதியாரின் சொற்பொழிவு-

விபின் சந்திர பாலர் விடுதலையடைந்ததையொட்டிய பொதுக் கூட்டம் 09.03.1908இல் சென்னை, திருவல்லிக்கேணி தெற்குக் கடற்கரையில் நடை பெற்றது. இந்தப் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்ட பாரதியார் தம்முடைய சொற்பொழிவைத் தமிழில் ஆற்றினார். தம்முடைய பேச்சுக்கு முன் அவர், 'என்று தணியுமிந்த சுதந்திர தாகம்' என்ற பாடலைப் பாடிக் காட்டினார்.

பாரதி ஆற்றிய தமிழ் உரையின் மூலம் நமக்குக் கிடைக்கவில்லை என்றாலும், அவர் ஆற்றிய தமிழ்ப்பேச்சின் சுருக்கம் போலீசாரால் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்திருப்பது கிடைத்துள்ளது. (காண்க. பின்னிணைப்பு-1)

'ஒன்றுகூடிச் செயல்படுவோம்'

மேற்சுட்டிய உரையினை, 'ஒன்று கூடிச் செயல்படுவோம்' என்ற தலைப்பில், சீனி.விசுவநாதன், பின்வருமாறு தமிழ்ப்படுத்தித் தருகின்றார்.

"கனவான்களே, அன்றாடம் மக்கள் சிறைக்கு அனுப்பப்படுவதும் விடுதலை செய்யப்படுவதும் காணவும் கேட்கவும் செய்கிறீர்கள். ஆனால் நீங்கள் அவற்றைப்பற்றி அலட்டிக்கொள்வதில்லை. பின் ஏன் இங்கு நீங்கள் கூடியிருக்கிறீர்கள்?

ஒரு மகாராஜாவையோ, பெருத்த விருது பெற்றவரையோ, பாராட்டும் பொருட்டு இங்கு நீங்கள் வரவில்லை. பிபின் சந்திரபாலர் விடுதலை பெற்றதைக்கொண்டாடவே வந்திருக்கிறீர்கள்.

பாலரின் குணாதிசயங்களால் ஈர்க்கப்பெற்று, நாம் இங்கு வரவில்லை. சுயராஜ்யத்தில், தாய்நாட்டுப்பற்றில் நம்பிக்கை வைத்திருப்பதால் இங்கே வந்திருக்கிறோம்.

நம் தேசநலனுக்காக நாம் பாடுபட்டு வருகின்றோம். பாலரும் அந்த நோக்கமுடையவர். அந்த நோக்கத்தின்பொருட்டு விளைந்த துன்பங்களை யெல்லாம் அனுபவித்திருக்கிறார். நாமும் நம் சக்திக்கு இயைந்தவாறு சுய ராஜ்யக்கொள்கைக்காகவும், தேசப் பற்றுக்காகவும் துன்பங்களை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

அந்நியர்கள் இயற்றிய சட்டங்களுக்குக் கீழ்ப்படிய நாம் சம்மதிக்கிறோம். ஆனால் எல்லாக் காலங்களிலும் அன்று.

நமக்கு உள்ள இயற்கை உரிமைகளுக்கு விரோதமாக வெளி நாட்டார் சட்டம் இயற்றும்போது, நாம் அவற்றுக்குக் கீழ்ப்படிய மாட்டோம். அந்தக் கணமே அவற்றை நாம் எதிர்ப்போம். இந்த அறிவிப்புப் பிரகாரம் போலீஸ் கமிஷனர் பாட்டுப் பாடுவதற்குத் தடை விதித்திருந்த போதிலும், அவ்வுத்தரவு நம்முடைய கொள்கைகளுக்கு விரோதம் என்பதால், நாம் அந்த உத்திரவை உதாசீனம் செய்து விட்டு ஊர்வலத்தில் பாடல்களை இசைத்தோம்.

ஆகவே, அனைவரும் ஒன்றுகூடிச் சுதேசிய- சுயராஜ்யக் கொள்கை களுக்கு ஆதரவாகச் செயல்படவும், போராடவும் முன் வர வேண்டும்"[38]

இவ்வாறு முழங்கிய பாரதியார் மீண்டும் 'என்றுதணியுமிந்த சுதந்திர தாகம்' என்ற பாடலை ஆவேசமாகப் பாடிமுடித்தபின் மக்கள் கிளர்ச்சி யுற்றுக் கரவொலி எழுப்பி ஆரவாரித்தனர்.

தூத்துக்குடியில்...

மேலும், இதுபோல், தமிழகத்தின் பல பகுதிகளிலும் பாலர் விடுதலைக் கொண்டாட்டக் கூட்டங்கள் அந்தந்தச் சூழலுக்கு ஏற்றவாறு நடத்தப் பெற்றன.

தூத்துக்குடியில் இவ்விழா பல இடங்களில் மிகச்சிறப்பாக நடத்தப் பெற்றது. மக்கள் திரண்டெழுந்தனர். அம்மாவட்டத்தின் ஆட்சித்தலைவர் வ.உ.சி. சிவா ஆகியோர் மீது ராஜநிந்தனைக் குற்றம் சுமத்தி ஜாமீன் தொகை செலுத்தப் பணித்தார். இவர்கள் மறுத்தனர். கூட்டம் நடத்தத் தடை உத்தரவு போடப்பட்டது. அதனை மீறித் தொடர்ந்து இவர்கள் கூட்டம் நடத்தினர். அதனால் கைது

செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப் பட்டனர். அதன் எதிரொலியாகத் தூத்துக்குடி மில் தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். பொதுமக்கள் அனுதாபம் காட்டினர். வணிக நிறுவனங்கள் மூடப்பட்டன. போக்குவரத்துத் தடைப்பட்டது. தடை உத்தரவை மீறி மக்கள் கூட்டங்கூட்டமாக நகரில் வலம் வந்தனர். தடியடி, துப்பாக்கிச் சூடு ஆகியன நிகழ்ந்தேறின.

இவற்றைக் கண்டு கலங்கிய போலீஸ் கமிஷனர், 16.3.1908 அன்று பின்வருமாறு தலைமைச் செயலருக்குக் கடிதம் எழுதினார். "திருநெல்வேலியிலும், தூத்துக்குடியிலும் அண்மையில் நடந்த நிகழ்ச்சிகள் யாவுமே நகரத்தில் விவாதிக்கப்படுகின்றன. குறிப்பிட்ட வகுப்பினர்களிடையே அமைதியின்மை நிலவுகின்றது. அநேகமாக ஒவ்வொரு நாளும் மூர் மார்க்கெட் அருகே நடைபெறும் சொற்பொழிவுகளால் இவ்வமைதி யின்மை மேலும் தீவிரப் படுத்தப்படுகின்றது என்பது என்னுடைய நம்பிக்கை. ஒன்பதாம் தேதி மாலை கடற்கரையில் செய்யப்பட்ட சொற்பொழிவுகள் சட்டத்தை வெளிப்படையாக எதிர்த்தன. இதுவே, சட்டத்தை மதிக்காத மனோபாவத்தைக் காட்டும் அறிகுறியாகும். அன்றைய தினம் பிற்பகல் திருவல்லிக்கேணியிலுள்ள கடைக்காரர்களில் பலர் தங்கள் கடைகளை விபின சந்திரபாலர் சிறையிலிருந்து விடுதலை யடைந்ததையொட்டி அடைத்தனர். இதை நான் எழுதுவதற்குக் காரணம், இதற்கு ஏதாவது, செய்தாக வேண்டும் என்பதால் தான். அதைச் செய்ய வேண்டிய சரியான தருணம் இதுவே ஆகும்". (அரசாணை எண். 1729, (நீதித்துறை), நாள்- 16.3.1908)

இக்கடிதத்தைக் கண்ணுற்ற அப்போதைய தற்காலிகத் தலைமைச் செயலர், 18.3.1908 அன்று எழுதிய கடிதத்தில், "சுப்பிரமணிய பாரதியையும், எதிராஜ் சுரேந்திர நாத் ஆரியாவையும் ஒருசேரக் கைது செய்யவேண்டிய நடவடிக்கைகளை நீங்கள் எடுத்தாக வேண்டும். அப்போது தான் அமைதியை நிலைநிறுத்த முடியும். சட்டத்தை மீறும்படி கூட்டத்தைத் தூண்டினர் என்பதற்குப் போதுமான சான்று இருக்கும் பட்சத்தில் அவர்களைக் கைது செய்யலாம்" என்று தெரிவித்திருந்தார்.

உடனடியாக அதற்கான தருணம் வாய்க்காவிடினும் அதனை எதிர் நோக்கி ஆங்கிலக் காவல்துறை தவமிருந்தது.

### தூத்துக்குடித்தோழர்கள் வழக்கிற்காக நிதிதிரட்டல் கூட்டம்

ஆனால், இதுகுறித்தெல்லாம் கவலைப்படாமல், பாரதியார், நெல்லை மக்களுக்கு ஏற்பட்ட தொல்லையைப்போக்க நிவாரணம் திரட்டல், வ.உ.சி., சிவா உள்ளிட்ட தோழர்களின் வழக்குச்

செலவிற்காக நிதி திரட்டுதல் ஆகிய முயற்சிகளில் ஈடுபட்டார். அதற்கான பொதுக்கூட்டம், 29.3.1908 அன்று மாலை தெற்குக் கடற்கரையில் லேடி வென்லாக் பூங்கா எதிரில், சென்னை ஜனசங்கத்தின் சார்பில் நடத்தப்பெற்றது. மாணவர்களும், பொதுமக்களும் பெரிதும் கலந்து கொண்ட இக்கூட்டத்தில் பாரதியார் ஆற்றிய உரை ஆங்கிலத்தில் காவல் துறையினரின் இரகசியக் குறிப்புரை வாயிலாகத் தற்போது கிடைக்கின்றது. (காண்க:- பின்னிணைப்பு -2)

சீனி. விசுவநாதனின் மொழியாக்கம் கீழே தரப்பெறுகின்றது.

"சிதம்பரம்பிள்ளையும், அவரைப் பின்பற்றுகிறவர்களும் நாட்டிற்காகத் திருநெல்வேலியில் உழைத்துக்கொண்டிருக்கிறார்கள். பின் அங்கே எப்படிக் கலவரம் நிகழ்ந்தது? அது முழுக்க முழுக்க அரசின் வணிக வழியிலான குறுக்கீட்டினால்தான் ஏற்பட்டது. ஏனெனில், அரசாங்கம் வியாபார ரீதியாகத் தலையிட்டதால்தான். அரசினர் பாதி ஆட்சியாளர்களாகவும், பாதி வியாபாரிகளாகவும் இருக்கிறார்கள். அப்படி இல்லை. அவர்கள் முக்கால் பங்கு வியாபாரிகள், கால் பங்கு ஆட்சியாளர்கள் என்று நினைக்கும் படிதான் இருக்கிறது. (சிரிப்பு) திருநெல்வேலியில் நடந்த அந்தக் கலவரம் கடவுளின் செயலாகும். அது நாட்டிற்கு இறுதியாக நன்மை பயக்கவே நடந்தது. அந்தக் கலவரங்களில் நான்கு பேர்கள் கொல்லப்பட்டனர். மாண்டவர்களின் மனைவி மார்களுக்கும், அவர்களின் வயோதிக பெற்றோர்கள் இருப்பின், அவர்களுக்கும் உதவி செய்ய வேண்டியது நம்முடைய கடமையாகும். ஏற்படுத்தப்பட இருக்கும் நிவாரண நிதிக்குத் தாராளமாக நீங்கள் நிதி கொடுத்து உதவ வேண்டும்"

இம்மாதிரியான பேச்சுகள் சட்ட வரம்பை மீறுகின்றனவாக அமைந்துள்ளன என்று போலீஸ் துறை கருதியது. இதன் தொடர்பாகப் பாரதிபேரில் நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய அவசியத்தை அரசுக்கும் தெரியப்படுத்தியது.[39]

தடைபல கடந்து...

தூத்துக்குடிக்கு நேர்ந்தநிலை, சென்னைக்கு வந்துவிடக்கூடாது என்பதில் முனைப்பாக நின்ற பாரதியார், நெல்லை சென்று வ.உ.சி முதலானோரைச் சந்தித்துத் திரும்பியவுடன் நண்பர்களோடு கலந்துபேசி ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடும் செய்தார். தொடர்ந்து போலீஸாரின் கண்காணிப்பில் இருந்த பாரதியாருக்கு, துண்டுப் பிரசுரங்கள் தயாரித்து வெளியிட்டு மக்களை ஒருங்குதிரட்ட நேரமின்றிப் போயிற்று. எனினும் திருவல்லிக்கேணி சீமாட்டி

பூங்காவிற்கு எதிரில் உள்ள தெற்குக் கடற்கரையில் கூட்டம் நடைபெறும் என்று நண்பர்கள் உதவியுடன் அறிவித்துக் கூட்டம் நடத்தினார் பாரதியார்.

கணிசமான கூட்டம் சூழ்ந்த நிலையில், 'திருவல்லிக்கேணிக் கடற்கரையில் தேசிய பிரசங்கங்கள் எவையும் செய்யக்கூடாது' என்று சென்னை நகரப் போலீஸ் கமிஷனர் தடையுத்தரவு பிறப்பித்தார். உடனே, பாரதியார் 'பொதுமக்களை அமைதியாகக் கலைந்து செல்லும்படியும், திட்டமிட்டபடி இக்கூட்டம், ஜனசங்கக் கட்டிடத்தில் நடைபெறும்' என்றும் தெரிவித்தார்.

அவ்வாறே மக்கள் குழுமிய ஜன சங்கக்கட்டிடத்தில், பாரதியார் ஆற்றிய உரை, ஆங்கிலேய இரகசியப் போலீசாரின் ஆங்கிலக் குறிப்பாகப் பதிவு பெற்றுள்ளது.

*10.05.1908,* இல் நடைபெற்ற சென்னை ஜனசங்கக்கூட்டத்தில் பாரதி ஆங்கிலத்திலேயே சொற்பொழிவாற்றினார். அந்தப் பேச்சின் சுருக்கம் பின்னிணப்பில் இடம்பெற்றுள்ளது. *(காண்க-பின்னிணைப்பு-3)*

'நம்முடைய நோக்கம்'

'நம்முடைய நோக்கம்' என்ற தலைப்பில் சீனி.விசுவாதன் செய்த இவ்வுரையின் தமிழாக்கம் பின்வருமாறு.

"சென்னை ஜன சங்கத்தின் நடவடிக்கைகள் யாவும் வெளிப்படையாக நடத்தப்படுகின்றன. அப்படியிருக்க, தன்னை நாகரிகமுடைய அரசு என்று சொல்லிக் கொள்ளும் இந்தப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார், கீழ்த்தரமான, துரோகம் நிறைந்த வேவு பார்க்கும் காரியத்தில் ஈடுபட்டுள்ளனர். அரசின் அப்பட்டமான ஈனத்தனமான, உளவு பார்க்கும் செயலைக்கண்டு நான் மிகவும் வருந்துகிறேன். போலீஸ் போக்கிரி களின் ஒரு கூட்டத்தார் வண்டிக்காரர்களாகவும், ஜட்கா ஓட்டிகளாகவும் வேடம் புனைந்துகொண்டு நேர்மையான மனிதர்களையெல்லாம் உளவறிய முற்படுகிறார்கள். நல்லோர்கள் செல்லும் இடமெல்லாம், நிழல்போல் பின்தொடர்ந்து சென்று வேவு பார்க்கிற இந்த அரசாங்கம் காட்டுமிராண்டி அரசாங்கம் தானே. நம்முடைய நோக்கம், தற்போதைய பிரிட்டிஷ் சர்க்காரை அடியோடுநீக்குவதே யாகும். ஆனால், ராஜத் துரோகமான குற்றமுள்ள தண்டனைச் சட்டங்களின் பிரிவுகளுக்குள்ளும், அகப்பட்டுக் கொள்ளாமல் அதாவது போலீஸ் சட்டங்களின் எந்த விதிகளுக்கும் எதிரானவை என்று கருதும்படியாக இல்லாமல், கலவரத்தை உண்டு பண்ணுவனவாக அமையாமல் நாம் எடுக்கும் செயல் நடவடிக்கைகள் இருக்கும். வேவுகாரத் துறையைச் சார்ந்த போலீஸ் கூட்டம் தவறான

குறிப்புகளைத் தயார் செய்கிறது. இங்குக் கூடியிருக்கும் பத்திரிகையாளர்களையும், வேவு பார்ப்போர்களையும் பேச்சுக்களை முழுமையாகப் பதிவு செய்யக் கேட்டுக் கொள்கிறேன். அப்படியே அவை பதிப்பிக்கப்படவும் வேண்டும். சிதம்பரம் பிள்ளையை நான் சந்தித்தபொழுது, அவர் உங்களுக்கு இப்படிக் கூறுமாறு என்னைப் பணித்தார். சென்னை ஜன சங்கத்தைத் தோற்றுவித்தோருள் முக்கியமானவரில் அவரும் ஒருவர். தாம் விடுதலை பெற்றாலும் சரி, அல்லது சிறையில் கிடந்தாலும் சரி ஜன சங்கத்தின் நோக்கங்கள் நிறை வேற்றப்பட வேண்டும்".[40]

'சுதேச உபந்நியாசி' - பாரதியார் (Swadesi Preacher)

இத்தகு சூழலில்தான் பாரதியாரது சொற்பொழிவுகள் வரலாற்று முக்கியத்துவம் உடையனவாகத் திகழ்வதை நம்மால் உணர முடிகின்றது. படிக்கத்தெரிந்த தமிழர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் படிப்பறிவு பெற வாய்ப்பில்லாத தமிழர்கள் எண்ணிக்கை அதிகமாக இருந்த காலம் அது. அக்காலத்தில், படித்தவர்களையும், படிக்க வாய்ப்பில்லாதவர்களையும் இந்திய விடுதலைவேள்வியில் ஒருங்கிணைத்து இயங்குவிக்கப் பாரதியார் கைக்கொண்ட பேராயுதம் அவர்தம் பேச்சுத்தான் என்பதை மற்றவர்களைக் காட்டிலும் ஆங்கில அரசின் காவல்துறை நன்றாக உணர்ந்துகொண்டது. இதனைப் பின்வரும் கூற்று மேலும் உறுதி செய்கின்றது.

"பாரதியின் மேடைப்பேச்சுக்கள் அரசு அதிகாரிகளைக் கலக்கமடையச் செய்தன. குறிப்பாக, போலீஸ் வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டன என்றே சொல்லலாம். பாரதியை வெளியே இருக்கவிடுவது அதாவது, பேச விடுவது ஆபத்து என்று போலீஸ் கமிஷனரும் கருதி, பாரதி பேரில் சட்டப் பிரிவுகள் 124A, 153A பிரகாரம் - பழைய குப்பையைக் கிளறுவது என்பார்களே அதுமாதிரியில், - 1908 மார்ச் 9 மற்றும் மே 10 ஆகிய தேதிகளில் அவர் பேசிய பேச்சுக்களுக்காக வழக்குத் தொடர விரும்பி, அதற்கான நடவடிக்கைகளைத் தீவிர கதியில் மேற் கொண்டார். பொதுவாக, அதுவேளை பாரதியைப் பலரும் தேசிய கவிஞர் என்றும், பத்திரிகையாளர் என்றும் சொல்லிப்பெருமைப்படுத்திக் கொண்டிருக்க, போலீஸ் தரப்பு அவரைச் சுதேசி உபந்நியாசி (Swadesi Preacher) என்றே குறிப்பித்துப் பெருமைப்படுத்தியது. போலீஸ் கமிஷனர் G.F.வில்கீஸன் என்பவர் அட்வொகேட் ஜெனரலிடம் தொடர்பு கொண்டார். பாரதியின் குறிப்பிட்ட சொற்பொழிவுகளைப் பற்றி அவருடைய கருத்துருவைக் கேட்டுப் பெற்றார். அட்வொகேட் ஜெனரலும் 'பாரதியின் சொற்பொழிவுகள். இந்திய தண்டனைச் சட்டப்படி குற்றமுடையன' என்றே அறிவுறுத்தினார். இதன் அடிப்படையில், 1908

ஜூன் 24ஆம் தேதியன்று சென்னை அரசாங்கத் தலைமைச்செயலருக்கு, பாரதியால் நிகழ்த்தப்பட்ட இரு சொற்பொழிவுகளுடன், அட்வொகேட் ஜெனரலிடம் பெற்ற கருத்துருவையும் இணைத்து அனுப்பி, பாரதி பேரில் குற்றப்பத்திரிகை தயாரிக்க அரசாங்க உத்தரவைப் பெற அனுமதி கோரினார், போலீஸ் கமிஷனர்.

என்னதான் வேண்டுமென்றே போலீசாரின் உத்தரவு மீறப் பட்டிருந்தாலும், சில இயற்கையான ஆனால், கடுமையான சொற்கள் கொண்ட போலீஸ் வேவுகாரர்கள் பற்றிய செய்திகள் அடங்கிய கூற்றுரைகளும் பாரதி பேரில் வழக்குத் தொடர அனுமதி அளிப்பதற்குப் போதுமான ஆதாரங்களாக இல்லை என்று அரசின் உயர்மட்ட அதிகாரிகள் கருதினர்"[41] என்று அக்காலச் சூழலை அழகுறப் படம்பிடித்துக் காட்டிய சீனி.விசுவநாதன், அது தொடர்பான, போலீஸ் கமிஷனர் எழுதிய கடித விவரத்தையும் தேடித்தந்திருக்கின்றார். (காண்க.பின்னிணைப்பு- 4) அதன் தமிழாக்கம் பின்வருமாறு:

இவ்வாறு, போலீஸ் கமிஷனர் தெரிவித்த கருத்தின் அடிப்படையில் பாரதியார்மீது அரசு நடவடிக்கை எடுக்க விரும்ப வில்லை. காரணம், போலீசார் உரியகாலத்தில், முன்னெச்சரிக்கை யுடன் நடவடிக்கை முயற்சியை மேற்கொள்ளாததால், பாரதியார் மீது நடவடிக்கை எடுப்பதை அரசு விலக்கிக்கொண்டது. அது குறித்த அரசு ஆணையின் வாசகம் 'H.E. in council is of the opinion that it is unnecessary to take action against Subramania Barati for the speeches delivered by him on 9th.March and the 10th May 1908.' (ஆணை எண்:923 தேதி: 04.07.1908) என்பதாக அமைகின்றது.

மேலும், உரிய பொழுதில் இவ்வழக்குத் தொடங்கப்படாமல் காலந் தாழ்த்தியமையால் ஏற்றுக்கொள்ள இயலாது என்பதோடு. இவ்வளவு தூரம் காலந்தாழ்த்திய கமிஷனரிடம் விளக்கம் கோரி, அப்போதைய அரசுச் செயலர் 'மெமோ' அனுப்பினார்.அவர்தம் 29ஆம் தேதியிட்ட கடிதச்செய்தி பின்வருமாறு அமைகின்றது.

"இவ்வளவு மோசமான கால தாமதம் நிகழாமல் இருந்திருக்கு மானால், வழக்குத் தொடர நான் ஒத்துக்கொள்வேன். இப்போது வழக்குத் தொடர்வது என்பது நாம் கலவரப்பட்டிருப்பதையோ, வேண்டுமென்றே கொடுமைப்படுத்துவதையோ போன்று இருக்கும். நீண்ட கால தாமதத்திற்கான சரியான விளக்கத்தை நான் கோருகிறேன். வழக்குத் தொடர்வதற்கான காலம் கடந்துவிட்டது"[42]

ஆக, காலதாமதத்தால் சொற்பொழிவாளர் பாரதியைக் கைது செய்யமுடியாமல் தோற்ற ஆங்கிலக் காவல்துறை, காத்திருந்து

பத்திரிகையாளர் பாரதியைக் கைதுசெய்ய முயன்றது. அதற்கான சூழலை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தது.

பாரதியார் நடத்த விரும்பிய மாநாடு

இந்தக்காலக் கட்டத்தில்தான், இச்சங்கத்தின் சார்பில், பாரதியார் சென்னையில் ஒரு தேசிய மாகாண மாநாடு நடத்தவும் திட்டமிருக்கின்றார். இதுகுறித்துத் திலகருக்கு அவர் எழுதிய கடிதம் ஒன்றில், "கல்கத்தா காங்கிரஸ் வகுத்த முறைப்படி சென்னையில் ஒரு தேசிய மாகாண மாநாடு நடத்த நாங்கள் முடிவு செய்துள்ளோம். அடுத்த காங்கிரஸ் மகாசபைக் கூட்ட விஷயம் என்ன ஆயிற்று? எங்கள் செயலாளர் ஸ்ரீசிதம்பரம்பிள்ளை இப்போது எங்கிருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்த விஷயம் சம்பந்தமாக எங்கள் சங்கத்துடன் கடிதத் தொடர்புகொள்ளும்படி ஸ்ரீகேல்கரிடம் கூறுங்கள்" என்று குறிப்பிடுகின்றார்.[43] மாநாட்டுத்தகவல் பெறுவதோடு, வ.உ.சி. வழக்குத் தொடர்பாக மேலும் சில தகவல்களைப் பரிமாறிக்கொள்ளவும் விரும்பியே, பாரதியார் தம்மிடம் கடிதத்தொடர்பு கொள்ளும்படி எழுதியிருக்கக்கூடும். அதனைத் தொடர்ந்து பாரதியாருக்கு வேறு ஏதும் கடிதம் வந்திருந்ததா? என்பது தேடலுக்குரியது.

திலகர் கைதான சூழலில்...

இக்கடிதம் எழுதி ஒருமாதம் ஆவதற்குள்ளேயே, 24.6.1908 அன்று பம்பாய் நகரில் தமது 'கேஸரி' இதழில் ராஜநிந்தனை செய்து எழுதியதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்டார், திலகர்.

இச்செய்தி அறிந்த பாரதியார், 25.6.1908 இரவு 9 மணியளவில் சென்னை ஜனசங்கத்தின் சார்பில் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவில் வீதிகளில் ஒர் ஊர்வலத்தை நடத்தினார். இதில் ஆர்யா, முத்தையா தாஸ், மற்றும் ஜனசங்க உறுப்பினர்கள் அனைவரும் பங்கேற்றனர். 'வந்தே மாதர' முழக்கத்துடன், பார்த்த சாரதி கோயில்முன் தொடங்கிய ஊர்வலம், 'பால கங்காதர திலகர் கைது ஆனதை முன்னிட்டு, அவருக்கு மரியாதை செலுத்தும்பொருட்டாக, பஜனைக் கூட்டத்திற்கும் ஏற்பாடு செய்யப் பெற்றிருக்கின்றது' என்பதான அறிவிப்புடன் கோயிலின் முக்கிய வீதிகளில் வலம் வந்து இரவு 10 மணியளவில் கோயில்முன் திரும்பியது. அப்போது அக்கோயில் மண்டபத்தருகே நூற்றுக்கணக்கானோர் குழுமியிருக்க, பொதுக்கூட்டமும் நடைபெற்றது. அதில், ஆர்யாவும், முத்தையா தாஸும் பேசினர். இவ்வாறு பாரதியார் ஏற்பாடு செய்த இக்கூட்டம் நள்ளிரவு 11.45 மணிக்கு நிறைவுற்றது.

அத்தோடு நிற்காமல், இதுதொடர்பான,பொதுக்கூட்டத்தை, சென்னை ஜன சங்கத்தின் சார்பில் 5.7.1908 அன்று அச்சங்கக் கட்டிடத்தில் பாரதியார் கூட்டியிருக்கின்றார். 300க்கு மேற்பட்டோர் குழுமிய அக்கூட்டத்தில், வெங்கட்ரமணராவ், ஆர்யா, பாரதியார் உள்ளிட்டோர் பேசினர். அக்கூட்டத்தில், பாரதியார் பேச எழுந்ததும், கூட்டத்தினர் 'வந்தே மாதர' முழக்கமிட்டனர். பின்னர் பாரதியாரின் உரை அவருக்கே உரிய பாணியில் அமைந்திருந்தது. அவ்வுரை கிடைக்கப்பெறா விடினும் அவ்வுரையின் செய்தியைப் பின்வருமாறு தருகின்றார், சீனி.விசுவநாதன்.

"பாரதி பேசும்போது, 'மிகத்தெளிவாக, கூட்டத்தின் நோக்கமே திலகர் கைது செய்யப்பட்டதைக் கண்டிக்கவோ, வேறு எவருக்கும் எதிராகக் கெட்ட எண்ணத்தைக் கற்பிக்கவோ, இல்லை; ஆழ்ந்த மனவருத்தத்தைத் தெரிவிக்கவே' என்பதை எடுத்துரைத்தார். 'திலகர் கைது செய்யப் பட்டதால், நாட்டுமக்கள் தம் தாய்நாட்டிற்கு ஆற்ற வேண்டிய கடமையைச் செய்வதில் மனம் தளரவேண்டிய அவசியமில்லை' என்றும் அறிவுறுத்திப் பேசினார். 'திலகர் போன்ற தலைவர்களை அரசு கைது செய்வது தவறு' என்று வருத்தப்பட்டார். இதே கூட்டத்தில் வெளிநாட்டுப் பொருள்கள் பகிஷ்கரிப்புப் பற்றியும், நம்முடைய நாட்டுப் புராதனக் கைத் தொழில்கள் புத்துயிர் பெற வேண்டுவதன் அவசியம் பற்றியும், நாம் மேற் கொண்டிருக்கிற இலட்சியப் பயணத்தின்போது வழியில் குறுக்கிடும் தடைகளைக் கண்டு மனம் சோர்ந்து விடலாகாது என்பதை வற்புறுத்தியும் பாரதிதம் பேச்சினிடையே எடுத்துரைத்தார். கூட்டத்தின் இறுதியில் பாரதி மீண்டும் மேடை ஏறினார். அதுபோது, அவர் ஓர் அறிவிப்பைச் செய்தார். 'ஜன சங்கம் இயங்கிவந்த கட்டிடத்தின் சொந்தக்காரரர் தம் சொந்த உபயோகத்திற்கு இடம் தேவை என்றும், உடனடியாக இடத்தைக் காலி செய்து கொடுக்கவேண்டும்' என்றும் வந்த கடித விவரத்தைச் சொல்லி விட்டு, சங்கத்திற்கென்று சொந்தமாக மனை ஒன்று வாங்கவும், எவருடைய தொந்தரவும் இல்லாமல், தங்கள் கூட்டங்களை நடத்திக்கொள்ளக் கட்டிடம் கட்டிக்கொள்ளவும் தாராள நிதி உதவி செய்யும்படி கூட்டத்தினரைப் பாரதி கேட்டுக் கொண்டார். கூட்டத்திற்கு வருகை புரிந்திருந்த சிலர் ஸ்தலத்திலேயே தங்களிடமிருந்த சிறு தொகைகளை அளித்தனர். வேறுசிலர் தங்களான உதவிகளைச் செய்வதாக வாக்களித்தனர்".[44]

இதன்வாயிலாக, சென்னை ஜனசங்கத்திற்கென்று சொந்தக் கட்டிடம் இல்லை என்பதையும், வாடகைக்கு விட்டிருந்த அவ்வீட்டின் உரிமை யாளர் ஆங்கில அதிகாரிகளின் கெடுபிடிக்குள்ளாக்கப்பட்டிருக்கின்றார் என்பதையும் அறிய முடிகின்றது.

இவ்வாறெல்லாம் தொல்லை கொடுத்துக்கொண்டிருந்த ஆங்கிலேயக் காவல்துறை, 'இந்தியா இதழில் கலவரத்தைத் தூண்டும் படியான கட்டுரைகள் வந்தன' என்று காரணம் காட்டிப் பாரதியாரைக் கைது செய்யும் முயற்சியில் முனைந்தது.

பாரதியாரின் புதுச்சேரிப் பயணப் பின்புலம்

இவ்வாறாக, சென்னை நகரம் பரபரப்பாகிக்கொண்டிருந்த வேளையில் தூத்துக்குடியில் வ.உ.சி. மற்றும் சிவாவுக்குக் கொடுந் தண்டனை விதிக்கப் பட்டுச் சிறையிலடைக்கப்பட்ட செய்தி பாரதியாரை வந்தடைந்தது. உடனே, அவ்வீரர்களுக்குப் பெருமிதத்துடன் வணக்கம் செலுத்தும் படியான ஒரு கூட்டத்தைச் சென்னை ஜன சங்கத்தின் சார்பில் நடத்தினார். இந்தியா இதழில் கடுமையாக எழுதினார். இந்நிலையில், பாரதியாருடன் இணைந்து பொதுக்கூட்டங்கள் நடத்தத் துணைபுரிந்த கிருஷ்ணசாமி சர்மா, ஹரிசர்வோத்தமராவ், நாராயணராவ் போன்றோர் மீது வழக்குத் தொடர்ந்த ஆங்கிலஅரசு அவர்களையும் கைது செய்தது. தொடர்ந்து, பாரதியாருடன் இணைந்து மேடைகளில் முழங்கிய ஆர்யாவும், அவர் தம் சொற்பொழிவிற்காக, 9.7.1908 அன்று கைது செய்யப்பட்டார். இனி எந்த நிலையிலும் பாரதியார் கைதுசெய்யப்படுகின்ற நிலை. அடுத்து நடந்தது பற்றி வ.உ.சி. பின் வருமாறு பதிவு செய்கின்றார்.

"சென்னையில் சுரேந்திரநாத் ஆர்யா மீது ராஜத்துவேஷ வழக்குத் தொடரப்பட்டது. மாமா(பாரதியார்) பேரிலும், ஸ்ரீநிவாசாச்சாரியார் பேரிலும், சர்க்கார் ராஜத் துவேஷவழக்குத் தொடரப் போவதாகவும், அவர்கள் ஜெயில் செல்ல விரும்பவில்லை யானால், புதுச்சேரிக்குச் சென்று விடும்படியாகவும் பாரதியாரின் தேசிய கீதங்களில் மயங்கிக் கிடந்த கவர்மெண்டு எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் ஒருவர் பாரதியாரிடம் தகவல் தெரிவித்துவிட்டார். சில காரணங்களால் அவர் பெயரை நான் இங்குச் சொல்ல விரும்பவில்லை. சிறையுள் கிடந்து தேச சேவை செய்யாதிருப்பதினும் வேறு தேசம் சென்று தேச சேவை செய்து கொண்டிருப்பதே மேல் என நாங்கள் அவர்களுக்குத் தகவல் சொல்லி அனுப்பினோம். முதலில், மாமா இதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. பின்னர் மாமா புதுச்சேரி செல்லவேண்டிய நிர்ப்பந்தம் எற்பட்டதினால் சென்று விட்டார் போலும்".[45] இத்தகு சூழலில் தான், நண்பர்களின் கட்டாயத்திற்கு இணங்கிப் பாரதியார் புதுவைக்குப் பயணமாகின்றார்.

ஞானரதத்தில் சென்னை ஜன சங்கம்

இனிமேல் தம்மால், தாம்தோற்றுவித்த சங்கத்தால் பெரிதாக ஏதும் செய்ய முடியாது, புதுவையில் வந்து தஞ்சம் அடைந்த வேதனையில்,

சென்னை ஜனசங்க உறுப்பினர்கள் கூட்ட நிகழ்வுகளை, கசப்பான. நினைவுகளை, 'ஞானரத'த்தில் கிண்டல்தொனியில் பாரதியார் பதிவு செய்கின்றார்.

"எங்களிலே ஒவ்வொருவனும், பேசுவதைக்கேட்டால், கை கால் நடுங்கும்படியாக இருக்கும்... ஒருவன் 'வானத்தை வில்லாக வளைக்கலாம்' என்பான். மற்றொருவன் 'மணலைக் கயிறாகத் திரிக்கலாம்' என்பான். ஒருவன் 'நாம் இந்த ரேட்டில், இந்த விதமாகவே வேலை செய்துகொண்டு வந்தால், ஆங்கிலேயரின் வர்த்தகப் பெருமை ஆறு மாதத்தில் காற்றாய்ப் போய்விடும்' என்பான். மற்றொருவன், 'சியாம்ஜி கிருஷ்ண வர்மா ஸ்வராஜ்யம் கிடைக்கப் பத்துவருஷமாகுமென்று கணக்குப் போட்டிருக்கிறார். ஆறு வருஷத்தில் கிடைத்துவிடுமென்று எனக்குத் தோன்றுகிறது' என்பான். தவளையுருவம் கொண்ட மூன்றாமவன், 'ஆறு மாதமென்று சொல்லடா' என்று திருத்திக் கொடுப்பான்..."[16] என்றெல்லாம் இச்சங்கத்தில் உறுப்பினரா யிருந்தோர் முழங்கிய வாய்ச் சொல்லின் வீரத்தை நகைச்சுவையோடு நயம்படப் பதிவுசெய்கிறார் பாரதியார். எனினும் அக்காலத்து இளைஞர்களின் தேசியக் கனவு இவ்வாறெல்லாம் இருந்திருக்கின்றன என்பதையும் உணர்ந்து கொள்ள முடிகின்றது. இந்த வெறுப்பில் தான், நடிப்புச் சுதேசிகளையும் பாரதியார் பாடியிருக்கக்கூடும்.

பாரதியார் பாதை - சில விவாதங்கள்

பொதுவாய், இந்திய விடுதலைப்போராட்டத்தில், பாரதியார் சாத்விக முறையில் இயங்கினார் என்று சீனி.விசுவநாதன் போன்றோர் கருத்தளித்தாலும், ரகுநாதன் போன்றோரின் கருத்துக்கள் இதனின்றும் வேறுபடுகின்றன. 'பாரதியார் தோற்றுவித்த பால பாரத சங்கம், சென்னை ஜன சங்கம் ஆகிய இரு அமைப்புகளும் விடுதலை வேள்வியில் களப் பணியாற்றும் வெளிவட்ட அமைப்புகள். அதேசமயம் இந்த வெளி வட்டத்தின் ரகசிய நடவடிக்கைகளாக உள்வட்டம் ஒன்று பாரதியார் போன்ற தீரர்களால் செயற்படுத்தப் பட்டிருக்க வேண்டும்' என்ற ரகுநாதனின் ஊகம், பாரதியாரின் இந்திய விடுதலைப்போராட்டத்தின் பாதையை, வ.உ.சி குழுவினரின் ஆயுதந்தாங்கிய போர்முறைக்கு ஆதரவாகவே அமைந்திருந்தது என்பதனை அடியொற்றி நிற்கிறது.

"ரகசியச் சங்கங்களில் மாணவர்களும் இளைஞர்களுமே சேர்க்கப்பட்டு வந்தனர். என்ற உண்மையையும், சென்னை கல்லூரி மாணவர்கள் மத்தியில் தீவிரத் தேசியவாத இயக்கத்துக்கும் பாரதிக்கும் இருந்த செல்வாக்கையும், இந்தியா பத்திரிகை அலுவலகம் சோதனை

யிடப்பட்ட சுவட்டிலேயே, சென்னையிலுள்ள மாணவர்கள் விடுதிகளும் சோதனையிடப்பட்டன. அப்போது சென்னை பப்ளிக் ஒர்க்ஸ் இஞ்சினீயரிங் ஒர்க் ஷாப்பில் பயின்று வந்த மாணவர்க ளிடமிருந்து ரஷ்யர்களது ரகசிய ஸ்தாபனம் பற்றி விவரிக்கும் பிரசுரத்தின் பிரதிகள் கைப்பற்றப்பட்டன என்ற தகவல்களையும் கருத்தில்கொண்டு பார்க்கும்போது, பாரதி பங்கெடுத்துவந்த சங்கங்கள் இரண்டும் சென்னையில் ரகசியச் சங்கத்தைத் தோற்றுவிக்கும் முயற்சிகளின் துணைக்கருவிகளாக, அதற்கான வெளிவட்டங்களாகப் பயன்பட்டு வந்திருக்கலாம் என்றே நாம் ஊகிக்கலாம்"[47] என்று தம் கருத்திற்கான ஆதாரங்களைத் தேடித்தருகின்றார் ரகுநாதன். இக்கருத்திற்கு வலுச் சேர்ப்பதாகப் பின்வரும் பண்டிட் எஸ்.நாராயண அய்யங்காரின் பதிவு அமைகின்றது.

பாரதியார் நடத்திய இரகசியக் கூட்டங்கள்

"திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குப் போகும் ரஸ்தாவின் இடது புறம் சற்றுத் தூரத்தில் காம்பவுண்டு இல்லாத ஒரு பழைய பங்களா இருந்தது. ரஸ்தாவில் போவோர் சற்று உற்றுப் பார்த்தால்தான் பங்களா தெரியும். வெகுநாளாக யாரும் குடியிராமல் பாழடைந்திருந்த அந்த வீட்டில் உபயோகமற்ற சில சாமான்கள் மட்டும் ஒரு பக்கம் அடைக்கப்பட்டிருந்தன. அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்து ஒரு ரகசியச்சங்கம் கூட்டினார். அச் சங்கத்துக்குப் பெயர் கிடையாது. எந்தவிதமான விளம்பரமுமில்லை. சங்க அங்கத்தினரே முன் பின் ஒருவரையொருவர் அறியார். ஒருவர் விலாசம் மற்றவர்க்குத் தெரியாது. குறித்த நேத்தில் கூட்டம் கூடும். ஒரு சிறிய நோட்டுப் புத்தகத்தில் அங்கத்தினர் பெயர் மட்டும் குறித்திருக்கும். கூட்டங்களில் தீர்மானம் செய்யப்பட்டு அறிவிக்கப்படும். அவை எழுதப் படமாட்டா. இவ்விதம் ஒவ்வொரு ரகசியக்கூட்டங்களில் பாரதியார் மனம் விட்டுப் பேசுவார். "ஐம்பதினாயிரம் பேர்களுக்கு வெடிகுண்டு தயாரிப்பதையும், வெடிவீசுவதையும் பழக்கிவிட்டால், இந்தியாவிலுள்ள வெள்ளையர் அனைவரையும் ஒழித்துவிடலாம்" என்பது அந்த ரகசியக் கூட்டத்தின் திட்டம். 'இத்திட்டத்தை நிறைவேற்றப் பொது ஜனங்களிடையே உணர்ச்சிவேகத்தைத் தூண்ட வேண்டும்' என்று பாரதியார் முனைந்தார். வெடிகுண்டு தயாரிப்பு நடவடிக்கைகளை மேற் கொள்ளச் சகல அதிகாரமும் பாரதியாருக்குக் கொடுப்பது என்று சங்கத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டது. இச்சங்கக் கூட்டம் ஒன்றில் அக்காலத்தில் பிரசித்திபெற்ற சுப்பிரமணிய சிவா என்பவர் பேசினார். "சர்க்காரின் அடக்குமுறைக்கு நான் பயப்பட வில்லை. சிறைவாசத்துக்குத் தயங்கவில்லை. நான் ஏற்கெனவே சாமியாராக இருந்து தலை மொட்டையாக இருப்பதால் சர்க்காருக்கு

அந்தச் செலவுகூட லாபம் தான். தூக்குமேடையில் தொங்க நான் தயார். ஒவ்வொரு தேசியவாதியும் இவ்விதமே இருக்கவேண்டும்" என்று அவர் வீராவேசமாய்ப் பேசினார்"[48] என்று குறிப்பிடுகின்றார். இச்சங்கமும், சென்னை ஜன சங்கமும் ஒன்றுதானா? இங்குச் சுட்டப்பெறும் பழைய பங்களா, ஜனசங்க வாடகைக் கட்டிடமா? என்பன ஆய்வுக்குரியன.

இது ஒருபுறமிருக்க, பாரதியார் படைப்புகளைத் தேடித் தொகுத்து வருபவரும், பாரதி ஆய்வாளருமான ரா.அ.பத்மநாபன், 'பாரதியாருக்குப் பலாத்கார வழிகளிலே ஆரம்பமுதலே நம்பிக்கை யில்லை' என்று குறிப்பிடுகின்றார். 'மகாத்மா காந்தி பாரதத்தின் அரசியலில் அஹிம்சையைப் புகுத்துவதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பே பரிபூரண அஹிம்சை விரதம் பூண்டவர் பாரதி' என்று வலியுறுத்துகின்றார். இதனைப் பாரதியார் படைப்புகளைக் கொண்டு மறுக்கிறார் ரகுநாதன். அவரை, ஆய்வாளர் கோ.கேசவன், தமது 'சோசலிசக்கருத்துகளும்,பாரதியாரும்' என்ற நூலில், 'பலாத்காரப் போராட்டத்திலும் ஆயுதந்தாங்கிய புரட்சி நடவடிக்கை களிலும் ஈடுபாடும் நம்பிக்கையும் பாரதிக்கு இருந்தன என மதிப்பிடு கின்றார், ரகுநாதன். ஆனால், பாரதியின் இயக்கமும் எழுத்தும் அவ்வாறு அமையவில்லை' என்று மறுக்கின்றார். இங்கு அவர்தம் இன்னொரு விளக்கத்தையும் கவனத்தில் கொள்வது நல்லது. "பாரதி சட்ட வடிவிலான போராட்டப்பற்றாளராகவே பிரதானமாக இருந்துள்ளார். எனவே, அவர் இரண்டு விளைவுகளையும் கணக்கிலெடுக்க இயல வில்லை. மக்கள் எதிர் வன்முறையின் அழிவுத்தன்மையை மட்டுமே கண்டார். அதே நேரத்தில், அவரிடம் ஏகாதிபத்திய எதிர்ப்புணர்வு, ஏகாதிபத்திய அரசின் வன்முறை யையும் ஏற்கத் தடையாக இருந்தது. எனவே, இரண்டு தரப்பு வன்முறை களையும் பாரதி ஏற்கவில்லை. அது மட்டுமன்றி இரண்டு வகைப்பட்ட வன்முறைகளையும் சமப்படுத்திக் காணும் போக்கும் பாரதியிடம் இருந்தது. இத்தகு நிலைபாடு கொண்ட பாரதி, மக்கள் எதிர்வன்முறையில் நம்பிக்கையும் ஈடுபாடும் கொள்ளாதது வியப்பன்று. இது அவரது பிற்காலத்திய அரசியலில் மிகவும் பருண்மையாக விளங்கியது"[49]

இவற்றுக்கிடையே உண்மையைக் காண மீண்டும் ரகுநாதனைப் பார்க்கின்றபோது, பின்வரும் உண்மை புலப்படுகின்றது.

"பாரதி என்றென்றும் எவ்வாறு அகிம்சாவாதியாக இருக்க வில்லையோ, அதே போல் அவன் என்றென்றும் ஆயுதந்தாங்கிய போராட்டத்தையும் பலாத்கார நடவடிக்கையையும், பயங்கரவாதச் செயல்களையும் ஆதரித்தவனாகவும் இருந்து விடவில்லை. அவன்

தன் அரசியல் வாழ்க்கையில் ஒரு கட்டத்தில் அவற்றில் நம்பிக்கை இழக்கவும் செய்தான்" என்றெல்லாம் விளக்கிவிட்டு, அவர்தம்நூலின் இறுதியில், "இந்த நூலில் பாரதியின் அரசியல் பரிணாமத்தில் **1905** முதல் **1911** வரையிலான கால கட்டத்தில் தென்பட்ட ஓர் அம்சம் மட்டுமே ஆராயப்பட்டுள்ளது. **1911** முதல் அவன் அமரனான ஆண்டான **1921**வரை. அதாவது அவன் எழுதி விட்டுச் சென்ற இறுதிப்பாடல் எனக்கூறப்படும், பாரதசமுதாயம் என்ற பாட்டில்.. அவன் பொதுவுடைமைப் புரட்சிக்கோஷம் எழுப்பிப்பாடிச் சென்றதுவரை, அவனது சிந்தையில் ஏற்பட்டு வந்த மாற்றம், வளர்ச்சி பற்றி ஆராயவேண்டியதும் அவசியம். அதற்கு ஒரு தனி நூலே தேவை"[31] என்று முடிக்கின்றார்.

ஆக, ரகுநாதனின் கருத்தோட்டத்தில் இன்னும் தேடவும் பேசவும் நிறைய இடமிருக்கின்றது. இன்று சோவியத் யூனியன் இல்லை. காந்தியச் சிந்தனைகள் மீள் பரிசீலனைக்கு ஆளாகியிருக்கின்றது. மார்க்சியம் குறித்தும், இந்து, இந்திய சிந்தனை குறித்தும் பலவிதப் போக்குகள் நிலவி வருகின்றன. இவற்றுக்கிடையில் தற்கால அளவு கோல்களை எடுத்துக் கொண்டு தம் மனம்போன போக்கில் பாரதியாரைக் குறுக்கும் நெடுக்கு மாகக் கலைத்துப்போட்டுக் கண்டு காட்டுவன, மெய்ம்மை சார்ந்தனவாக இருப்பது அரிது. 'அவனருளாலே அவன்தாள் வணங்கல்' போல், பாரதியாரின் படைப்புகளைக்கொண்டு அக்காலச்சூழலை முன்னிறுத்தி, அவர் கடந்த பாதைகள், காட்டிய பாதைகளைப் பற்றி ஆராய்ந்து காய்தல் உவத்தல் இன்றிக் கண்டு தெளிவது கடமை.

அந்த வகையில் பாரதியார் பாதையை அணுகும்போது, அவர்தம் படைப்புக்களோடு சொற்பொழிவுகளையும் கருத்தில் கொள்வது சாலப் பொருத்தம். காரணம், பாரதியார் படைப்பிலக்கியத்தில் ஈடுபடாத காலத்திலும் பேசியிருக்கின்றார். அரங்கில், அறையில், தனிப்பட்ட நிலையில் என்று பலவிதங்களில் பலகோணங்களில் பேசி யிருக்கின்றார். இறுதிவரையிலும் தனிஉரையாகக் கூடப் பேசி யிருக்கின்றார் என்பதால் இவர்தம் பொழிவுகளைக் கவனத்தில் கொள்வது நன்று.

ஏனெனில், பாரதியார் வாழ்வியலுக்கும் அறிவியலுக்கும் பொருந்தாத எத்தகு வரம்புகளையும் கட்டிக்கொண்டு தம்மை அடையாளங்காட்டவில்லை. சொல்லுக்கும் செயலுக்கும், எண்ணத்திற்கும் இடையே எந்தவொரு பேதமுமின்றி, சத்திய நெறியில் இயங்கி வந்திருக்கின்றார் என்பதையே இவர்தம் உரைகளும் மெய்ப்பிக்கின்றன.

தமிழக அரசியலில் அவரது வருகைக்குமுன்னால் தனித்தனியே கிடந்த புரட்சிகரச் சிந்தனைகளை, ஒருமித்த அரசியல் உணர்வாக்கினார். சாதி, சமய, இன, மொழி முதலியனவற்றால் பேதப்பட்டிருந்த போக்கை மாற்றி,ஒருங்கிணைந்த இந்தியா என்னும் தேசியப் பெருநோக்கை, உருவாக்கினார். தம்மால் முடிந்தவரை, விடுதலை வேட்கையாகவும், அரசியல் விழிப்புணர்வாகவும் அனைத்துத் தரப்பினரிடத்தும் எடுத்துச் செல்ல, அவர் எழுதுகோலும், எழுத்தும் பயன்பட்டதைவிட, அவர்தம் நாவன்மை மிகுதியும் பயன் நல்கி இருக்கின்றது என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

ஆழமற்ற பார்வையோடு பாரதியாரில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் வாசித்து விட்டு. 'பார்த்தீர்களா பாரதியாரின் போக்கை?' என்று கேட்பவர்களுக்கு, புதுவைக்குப் புகலிடம் தேடிப் போனதைப் பற்றிக் குறையாகப் பேசுவோர்க்கு, பாரதியாரை முன்னிறுத்தியே பதில் கொடுக்கலாம்.

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் உறுப்பினரும், தொழிற்கட்சித் தலைவருமான ராம்ஸே மக்டானல்டு என்பவருக்கு, 1914பிப்ரவரியில் பாரதியார் புதுவையிலிருந்து ஒரு நீண்ட ஆங்கிலக் கடிதத்தை, ஹிந்துபத்திரிகைக்கு எழுதினார். இந்தியாவில் போலீஸ் ஆட்சி என்ற தலைப்பில் வெளிவந்த முதல் ஒரு பகுதியே அவர்தம் பாதையை, அவர்தம் பணிகளைத் தெளிவுறக் காட்டும். அவ்வுரை பின்வருமாறு.

"1906 ஆகஸ்ட் முதலாக நான் சென்னையில் இந்தியா என்ற தமிழ்வாரப் பத்திரிகையின் விசேஷ விஷயதான உதவியாளராக வேலை பார்த்து வந்தேன். இது ஆகஸ்ட் 1908 வரை நீடித்தது. அந்த ஆண்டு சென்னை அரசு அந்தப் பத்திரிகைமீது ராஜத்துரோகக் குற்றத்துக்காக நடவடிக்கை தொடுத்தது.பத்திரிகையை நடத்தியவன் நானல்ல. ஆனால், பொறுப்பான வேறு ஒரு நபரை அவர்கள் சிறைச் சாலைக்கு அனுப்பினார்கள்.

என்னுடைய பொதுமேடைப்பேச்சுக்களிலும் சரி, பத்திரிகை எழுத்துக்களிலும் சரி, அச்சுப் பிரசுர வெளியீடுகளிலும் சரி, நான் இந்திய விடுதலைக்காகச் சட்ட பூர்வமாகப் பாடுபடும் ஒரு கட்சியின் முற்போக்கு அணியின் கருத்துக்களையே பிரதிபலித்தேன்.

இந்தியா பத்திரிகைமீது நடவடிக்கை துவக்கப்பட்ட சில தினங்களில் நான் சென்னையை விட்டு வெளியேறினேன். ஏனெனில், என்னை எப்படி யாவது உள்ளே தள்ளவேண்டுமென்று நினைத்த பல உயர் அதிகாரிகளுக்கு என்மீது எவ்வித தவறான சாட்சியமும் கிடைக்காமல் போகவே, அவர்கள் பெருத்த ஏமாற்றமடைந்து, போலீஸார் மூலம் என் மீது பொய்ச்சாட்சி தயாரிக்க

முற்பட்டிருப்பதை நான் அறிந்ததே காரணமாகும். அந்த ஆண்டில் இந்தியாவில் அமைதியான தேசிய இயக்கம் எவ்வாறு கருணை யின்றித் திட்டமிட்டு ஒடுக்கப்பட்டது என்பது நடுநிலையாளரும் விஷயங்களை நன்கு அலசி ஆராய்பவருமான உங்களைப் போன்றவர்கள் நன்கு அறிந்ததே. அரசாங்கத்தின் இந்தப் போக்கினால், அரசாங்கமோ, தேசியவாதிகளோ, யாருமே விரும்பாத பயங்கர பலாத்கார இயக்கத்துக்கே வழி ஏற்பட்டது.

என் பொதுநலத் தொண்டு இவ்வாறு தடைப்பட்டுப் போனதனாலும், - தாற்காலிக மாகவே என்று நம்புகிறேன் - குருட்டுத்தனமான அதிகார வர்க்கத்துக்கும் போலீஸ் புளுகுகளுக்கும் பலியாவதென்ற பெருமையை நான் விரும்பாததாலும், நான் புதுச்சேரி சென்று பிரெஞ்சு ஆட்சியில் அடைக்கலம் புகுந்தேன்.

புதுச்சேரிக்கு வந்ததும், நான் சுயேச்சையான பத்திரிகை எழுத்தாளனாக வாழலானேன். எந்த ஒரு பத்திரிகையிலும் பதவி வகிக்காமல்,. என் பெயரில் எழுதும் விஷயங்களுக்குப் பணம் பெற்று வாழலானேன். நான் என் பெயரில் எழுதி வெளியிட்டுள்ள எந்த ஒரு விஷயத்திலாவது சட்ட விரோதமான எவ்விஷயமாவது இருக்கிற தென்று நடுநிலையான எந்த ஒரு மன்றத்திலாவது நிரூபிக்க முடியுமா என்று நான் சவால் விடுகின்றேன்".[51]

'சிவாஜியான பாரதியார்'

இவ்வாறு திறந்த மனதோடு பாரதியார் விடுத்த சவால் பொய்ம்மை யானதன்று. தொடக்கக்காலத்தில் திலகர் தலைமையில் தீவிரவாத இயக்கத்தில் பாரதியார் இயங்கிய காலத்தில் வீர வழிபாட்டை முன்வைத்து எழுதியபோதும், பேசியபோதும் அவர் ஆயுதந்தாங்கிய புரட்சியை ஆதரித்தே நின்றிருக்க வேண்டும். சத்திரபதி சிவாஜி தன் சைந்நியத்திற்குக் கூறியதாகப் பாரதியார் பாடிய நெடுங்கவிதை, மெய்யாகவே பாரதியார் சிவாஜியாக மாறி, ஆயுதந்தாங்கிய இந்தியப் படைவீரர்களை மனக்கண்முன் நிறுத்தி உரைத்த வஞ்சினம் என்றே கொள்ளலாம்.

"ஜய ஜய பவானி! ஜயஜயபாரதம்!
ஜய ஜய மாதா! ஜயஜய துர்க்கா!"

என்று கதைப்படி தொடங்கிய பாரதியார் அடுத்த அடியிலேயே,

"வந்தே மாதரம்! வந்தே மாதரம்!"

என்று முழங்கத் தொட ங்குகின்றார்.

அவர்முன்னே இந்தியவிடுதலைவீரர்கள் ஆயுதந் தாங்கி அணி

வகுத்து நிற்கின்றார். பாரதியார், சிவாஜி மன்னராகி, முழங்கத் தொடங்குகின்றார்!

"சேனைத் தலைவர்காள்! சிறந்த மந்திரிகாள்!
யானைத் தலைவர்காள்! அருந்திறல் வீரர்காள்!
அதிரத மன்னர்காள்! துரகத் ததிபர்காள்!
எதிரிகள் துணுக்குற இடித்திடு பதாதிகாள்!
வேலெறி படைகாள்! சூலெறி மறவர்காள்!
காலனுருக்கொளும் கணைதுரந்திடுவீர்.
மற்றுமா யிரவிதம் பற்றலர் தம்மைச்
செற்றிடுந்திறனுடைத் தீரரத்தினங்காள்,
யாவிரும் வாழிய,யாவிரும் வாழிய!"[52]
என்றுவாழ்த்தி,
"செற்றினி மிலேச்சரைத் தீர்த்திட வம்மின்!
ஈட்டியாற் சிரங்களை வீட்டிட எழுமின்!
நீட்டிய வேல்களை நேரிருந்து எறிமின்!
வாளுடை முனையினும் வயந்திகழ் சூலினும்
ஆளுடைக் கால்களடியினுந் தேர்களின்
உருளையின் இடையினும், மாற்றலர்தலைகளை
உருளையில் கண்டு நெஞ்சுவப்புற வம்மின்!"[53]

என்று முழங்குகின்ற வாசகங்கள், வெற்றுக் கவிதைப் புனைவுகள் என்று கொள்ள முடியாது. இப்பாடலின் வீரியம் தாங்கமுடியாத நெருக்கடியால் தான் அப்பாடல் தொடர்ந்து சுதேசமித்திரனில் வெளிவர இயலாது போயிற்று. மேலும், 'இப்பாடலில் வரும் மிலேச்சர்கள் பற்றிய தொடர் இந்து முஸ்லிம் பிரிவினைக்குத் தூபம் இடுவதாக வதந்திகள் நிலவிய வேளையில், இதில் வீர ரஸத்தை மட்டும் கவனிக்க வேண்டுமே யல்லாமல், மகமதிய நண்பர்கள் தமது உதாசீனம் இருப்பதாக நினைக்கக்கூடாதென்று கேட்டுக் கொள்கிறார் பாரதியார். இங்குச்சுட்டப்பெறும் மிலேச்சர் என்னும் தொடர் ஆங்கில ஏகாதிபத்தியத்தை முன்னிறுத்திச் சொல்லப்பெற்றது என்பதைச் சொல்லாமல் சொல்லுகின்ற குறிப்பு அது என்றே கொள்ள வேண்டும். (சுதேசமித்திரன், 17.11.1906, 24.11.1906 மற்றும், 1.12.1906, 8.12.1906 ஆகிய இதழ்களில் வந்து முற்றுப்பெறாத கவிதை இது.

அதேபோல், 'முன்னை யிலங்கை அரக்கர்அழிய முடித்தவில் யாருடை வில்?' என்ற பாடலையும் கருதலாம். இப்படித் தொட்ட இடந்தோறும் பாரதியார் வீரரஸம் செறிந்த பாடல்களைப் பாடியதன் நோக்கம் எந்த உணர்ச்சியுமற்றுப் பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும் இகழ்ச்சி சொல்லப் பான்மைகெட்டுக் கிடந்த தன்மையை மாற்றியமைக்கவே அவர் முயன்றிருக்கின்றார் என்றே

கருத இடமளிக்கின்றது. அதேசமயம், தனிநபர் கொலை, துயர்தரு வன்முறை ஆகியவற்றையும் ஆதரிக்காத உயர்மனப் பாங்கும் பாரதியாரிடத்தில் திகழ்ந்தன என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். ஒட்டுமொத்தமாக மக்கள் ஒரு பெரும் புரட்சிக்குத் தயாராக வேண்டியே பாரதியார் தமது ஆயுதமாகப் பேச்சையும், பேனாவையும், நல்ல காகிதமான பத்திரிகையையும் ஏந்தியிருக்கின்றார் எனலாம்.

பாரதியாரும் சமயமும்

அத்தகு புரட்சிக்கு வாய்ப்பின்றித்தமது முதற்கட்ட எழுச்சியைக் கொடூரமாகத் தாக்கிய ஆங்கில அரசின் போக்கினைத் தொடர்ந்து காட்டமாக எதிர்ப்பதற்காக, இந்தியா இதழைப் புதுச்சேரியிலும் தொடர்ந்தார் பாரதியார்.

இத்தகு சூழலில், அவர் விடுதலைப் பெருநோக்கை, அரசியல் பார்வையை விடுத்து, ஆன்மிகப்பார்வையோடு, சமயப் போக்கிற்குத் தடம் மாறிவிட்டதாகப் பல ஆய்வாளர்கள் கருதுவது மேம் போக்கானது.' அது அவர்கள் அரசியல், ஆன்மிகம் பற்றிய கருத்துகளில் ஏற்பட்ட கோளாறு களால் விளைந்தது என்றே கருதலாம். குறிப்பாக, “பாரதியின் அரசியல் வாழ்க்கையின் பெரும் பகுதி (1907-1918)காவல் துறையால் கடுமையாகக் கண்காணிக்கப்பட்டது. அவரது படைப்புகளும், செயல்களும், கண்காணிக்கப்பட்டன. எழுத்துப் பணியையும், இயக்கத்தையும் வருமானத்தையும் காவல்துறை முடக்கியது. இவரது வாழ்வில் சமயம் வகித்த செல்வாக்கு கருதுதற்குரியது. ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பின் இவரது படைப்புகளில் சமயப் படைப்புகளே அதிகம் இருந்தன. சமயத்தையே தேசியமாகவும் பாரதி பிற்காலத்தில் ஏற்றுக்கொண்டார்” என்று கூறும் கோ.கேசவன் கருத்து பொருத்தமற்றது.[54]

காரணம், பாரதியாரின் பாடல்கள் சமயம் சார்ந்தவைபோல் தோன்றினாலும் அவை பெரும்பாலும் சமுதாயம் சார்ந்தவை. இன்னும் சொல்லப்போனால், அரசியல் சார்ந்தவை. அரசியலும், ஆன்மிகமும், இலக்கியமும், சமுதாயக் கண்ணோட்டமும் பாரதியாரைப் பொறுத்த வரையில், ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்த, பிரிக்க இயலாத கூறுகளாகும். இக்கூறுகளின் ஓரங்களில் ஒதுங்கிவிடாமல் மையத்தில் நின்று அனைத்தையும் ஒருங்கிணைத்து மேலேமேலே முன்னேறும் போக்குப் பாரதியாருக்கு உண்டு. ‘பெரிதினும் பெரிது கேள்’ என்ற வாக்கு தமக்கும் பொருந்தும்படியாய் இயங்கியவர் பாரதியார்.

அதனால்தான், “தம்பி, உள்ளமே உலகம். ஏறு!ஏறு!ஏறு! மேலே, மேலே, மேலே! நிற்கும் நிலையிலிருந்து கீழே விழுந்துவிடாதபடி

கயிறுகள் கட்டி வைத்துக்கொண்டு பிழைக்க முயற்சி பண்ணும் பழங்காலத்து மூடர்களைக் கண்டு குடல் குலுங்கச் சிரி. உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்துபோ. பற!பற!- மேலே, மேலே, மேலே."[55] என்று பரலி சு.நெல்லையப்பருக்கு, உபதேசம்போலக் கடிதம் எழுதுகின்றார்.

மேலும், அவரது தெய்வ பக்தி தேசபக்தியாகவே உருக் கொண்டிருக்கின்றது என்பதற்கு அவர்தம் தெய்வபக்திப்பாடல்களே சான்றுகளாகின்றன. பாரதியாரை ஆங்கில அரசு கைதுசெய்ததற்கான காரணம் கூட அப்படி யானதொரு பாடலைப் பாரதியார் எழுதியதும், பாடியதும் தான். அப்பாடல் மற்றும் செய்திகள் பற்றிச் சற்றே விரிவுறக் காணலாம்.

பாரதியாரின் கிருஷ்ண தோத்திரம்

"பாரதியாரை அரசாங்கத்தாரின் கண்ணில் குற்றவாளியாகத் தோன்றும்படி செய்தது, இந்தியாவில் பிரசுரமான எந்த எழுத்துத் தெரியுமா? ஓர்எழுத்து எனக்கு நினைவு இருக்கிறது. 'என்று தணியும் இந்த சுதந்திரதாகம், என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்?' என்று பாரதியார் ஆரம்பித்திருக்கிறாரே, அந்தக் கிருஷ்ண தோத்திரம் தான். "எனக்குப் பசுக்களைக்கொடு; தேக ஆரோக்கியத்தைக் கொடு; என் குடும்பமும் நானும் க்ஷேமமாயிருப்பதற்கு அருள் புரிவாயாக! உன் பாத மலர் என்றைக்கு என் கண்ணில் படுமோ? யமதூதர்கள் என்னை வேதனை செய்யாமல் தடுப்பாயாக!" என்று கடவுளை ஸ்தோத்திரம் செய்தால் அது பழைய கதை; மிகப் பழைய வேதம். இந்தத் துதியை யாரும் ஏற்பார்கள். அரசாங்கத்தாரும் ஒப்பக்கூடும். தனக்காகவும் தன் குடும்பத்தாருக்கும் தனியாக மௌனமாகக் கடவுளை ஸ்தோத்திரம் செய்தால் யார் கவனிக்கப் போகிறார்கள்? அதனால் பொதுஜனங்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் கோபம் வராதா? 'எங்கள் அடிமையில் மோகம்' என்று சொல்வதற்குப் பாரதியார் யார் என்று ஜனங்களும் அரசாங்கத்தாரும் கேட்கத்தானே செய்வர்? குத்துகிறாப்போல, ஸ்தோத்திரம் செய்தது ஜனங்களுக்குப் பிடிக்கவில்லை. வளர்த்துக்கொண்டே, புதிய வகையில் மாற்றிக்கொண்டே வந்தாலொழிய, ஜனசமூக வாழ்வு நாசமாய்ப்போகும் என்ற உண்மையை அறிந்த அரசாங்கத்தார், பாரதியாரின் புதுப்பேச்சையும், உயிர்நிறைந்த புதுச்சிருஷ்டியையும் காணப்பொறுக்கவில்லை"[56] என்று வ.ரா. குறிப்பிடுகின்றார்.

இப்பாடல் இந்தியா இதழில் *(7.3.1908)* வெளிவந்தது. எனினும், *09.03.1908*இல் சென்னை, திருவல்லிக்கேணி தெற்குக் கடற்கரையில் நடை பெற்ற விபின் சந்திர பாலர் விடுதலையடைந்ததையொட்டிய

பொதுக் கூட்டத்தில் தமது சொற்பொழிவுக்கு முன்னும் பின்னும் பாடியபோது தான் இதன்வீச்சுப் பலமடங்கு பரவியிருக்க வேண்டும். தாளில் அச்சேறிய இக்கவிதை வரிகளைக் கவிவாக்காகக் கேட்ட மக்களுக்குள் பரவிய விடுதலைப்பெருக்கை ஆங்கில அரசின் காவல்துறை நன்கு கண் காணித்திருப்பது இயல்பே. எப்படியேனும் பாரதியாரைக் கைதுசெய்ய வேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்த ஆங்கில அரசு இக்கவிதை வரிகளை மட்டும் நான்கு முறை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நீதிமன்றத்திற்கு அளித்திருக்கிறது என்கின்றார் சீனி.விசுவநாதன்.

ஆக, நெருப்பைப் பொட்டலங்கட்டித்தருவதுபோல், பாரதியார் பக்திப்பாடல் மரபில் அரசியல் பாடல்களையே முன் வைத்திருக்கின்றார் என்பது தான் செய்தியே. இதைவிடுத்து, அவர் தெய்வ பக்திப்பாடல்களைப் பாடியவர், சமயத்தின் பக்கம் சாய்ந்தவர் என்று ஆய்ந்துரைப்பது ஆழமற்ற வாதமாகும். அது குறித்து விரிவாகக் காணலாம்.

புதுவையில் பாரதியார்

எப்படியோ, ஆங்கில அரசுக்குத் தப்பி, புதுவையில் தாம் மட்டும் புகுந்ததாக இல்லாமல், தம்மோடு இந்தியா இதழையும் எடுத்துச் சென்று விட்டார். கூடவே, மண்டயம் ஸ்ரீநிவாச்சாரியாரும்.

பல்வேறு நெருக்கடிகளுக்கிடையே புதுவையிலிருந்து இந்தியா முன்னிலும் தீவிர அரசியல் சிந்தனைகளோடு வெளிவரத் தொடங்கின. வங்கத்தில் புரட்சிவீரராய் இயங்கிக்கொண்டிருந்த அரவிந்தர் சிறை சென்றது, அவர்தொடர்பான விசாரணை. விளக்கங்கள், அவர் விடுதலையான செய்தி, பின்னர் அவர்தம் மேடைப்பொழிவு என அரவிந்தர் முதலான அரசியல் தலைவர்களைப் பற்றிய செய்திகளை உடனுக்குடன் தமிழர்கள் தெரிந்துகொள்ளும்படி வெளியிட்டு வந்தார்.

இவற்றையெல்லாம் தீவிரமாகக் கண்காணித்துவந்த ஆங்கில ஒற்றர்கள் பாரதியாரின் முயற்சிகளுக்கும், இந்தியா பத்திரிகைக்கும் எந்த வகைகளில் எல்லாம் முடியுமோ அந்த வகைகளில் எல்லாம் தடைகள் உண்டாக்கி வந்தார்கள். அவற்றுக்கு நடுவிலும் பாரதியார் தயங்காது பணிதொடர்ந்தார். அரவிந்தர், வ.வே.சு.ஐயர் உள்ளிட்ட அரசியல் பெருந்தலைவர்களைப் புதுவைக்கு அழைத்து வருவதில் முன்னின்று வெற்றியும் கண்டார். மேலும், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தெல்லாம் நாட்டுப் பற்றுடைய இளைஞர்கள் புதுவைக்கு வந்து பாரதியாருக்கு உதவி யிருக்கிறார்கள். விஜயா, கர்ம யோகி, சூர்யோதயம், கர்மயோகி உள்ளிட்ட பல பத்திரிகை முயற்சிகளையும்

மேற்கொண்டார். தொடர்ந்து ஆங்கிலேய ஒற்றர்கள் கொடுத்துவந்த அளப்பரிய தொல்லைகளால் பாரதியார் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமன்று. பொறுக்கமுடியாது,13.2.1910 நாளிட்ட சூரியோதயம் இதழில், பாரதியார் 'தமிழ்நாட்டோருக்கு இறுதி விண்ணப்பம்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரை, அவர் நேரடியாக உரையாற்றுவதுபோன்ற தன்மையுடையது. அவர்தம் ஆத்திரம், வேதனை, தம்மொத்த தோழர்களின் முயற்சியில் ஏற்பட்ட சரிவு, தைரியமிழந்த மக்களின் போக்குக் குறித்த வருத்தம், மீண்டும் போராடுதற்கு மக்களைத் தயார் செய்யும் வேகம் ஆகியன ததும்பும் அவ்வுரை, ஒரு வரலாற்றுப்பதிவு என்கிற அளவிலேயே முடங்கி விட்டது.

காரணம், புதுச்சேரிக்குப் பாரதியார் வந்து அடைக்கலமான அக்காலமானது, இந்திய அரசியல் வானில் இருந்து அனைத்துத் தீவிரவாதிகளும் முற்றாக அகற்றப்பட்ட காலம். வரம்புமீறி அப்புரட்சியாளர்கள் ஒடுக்கப் பட்ட சூழல். இந்திய விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்துச் சென்ற தலைவர்கள் அனைவரும் இந்திய அரசியல் ஈடுபாட்டை மூட்டை கட்டிவிட்டுத் தத்தம் முயற்சியளவுகளில் சுருங்கிக் கொண்டனர். அதாவது,

1. லஜபதிராய் நாடுகடத்தப்பட்டபின், தன் அரசியல்போக்கை, சற்று மாற்றிக் கொண்டு சிறிது காலத்திற்குப் பின் லண்டன் சென்று விடுகின்றார்.

2. விபின்சந்திரபாலர் சிறைத்தண்டனை முடிந்தவுடன் நிதிதிரட்டிக் கொண்டு லண்டன் சென்று சுயராஜ்யப்போதனையில் ஈடுபட்டு விடுகின்றார்.

3. வ.உ.சி.யும், சுப்பிரமணிய சிவாவும் தண்டனைக்குறைப்பு முயற்சியில் ஈடுபட்டு விடுகின்றனர்.

4. பாலகங்காதரதிலகர் கடுங்காவல் முடிந்தவுடன் காலனிய சுயராஜ்யத்தை வலியுறுத்தி, மகாராணிக்கு விண்ணப்பம் செய்யத் தொடங்கிவிடுகின்றார்.

5. தமிழகத்தின் புதுக்கட்சியின் முதுகெலும்பாக விளங்கிய மண்டயம் சீனிவாசன் முழுமூச்சுடன் வணிகத்தில் இறங்கி விடுகின்றார்.

6. அரவிந்தர் நீண்டகால விசாரணைக்கைதியாக இருந்து விடுபட்டவுடன் புதுவை வந்து ஆன்மிக நெறியில் வாழ்வை அமைத்துக் கொண்டுவிடுகின்றார்.[57]

பேசாப்பொருளைப் பேசும் பாரதியார்

இவர்களோடு, பாரதியாரால் புதுவைக்கு வரவழைக்கப்பட்ட

வ.வே.சு. ஐயரும் ஆஷ்துரை கொல்லப்பட்டபின் ஏற்பட்ட காவல்துறைக் கண் காணிப்புக்கிடையில் ஒய்ந்துவிடுகின்றார். இந்தப் பின்னணியில் தன்னுடைய அரசியல் போக்குகளை மென்மைப் படுத்திக்கொண்டாலும் பாரதியாரால் சும்மாயிருக்கமுடியவில்லை. அரவிந்தருடன் இணைந்து வேதம் கற்கிறார். பதஞ்சலியோக சூத்திரத்திற்கும், பகவத் கீதைக்கும் விளக்கவுரை எழுதுகின்றார். வேதம் தமிழ் செய்யும்போதே அதில் புதுமையும் செய்கின்றார். புதுவை மணக்குளவிநாயகர், புதுவை தேசமுத்து மாரியம்மன் முதலான சிறு தெய்வங்களையும், கண்ணன், முருகன், சக்தி, இராமன், இயேசு கிறிஸ்து, முதலான அனைத்துத்தெய்வங்களையும் பாடிப் பரவுகின்றார். இவர்கள் சமயக் கடவுளர்கள் ஆயினும் பாரதியார் நோக்கில் சமயங்கடந்து நிற்கின்றார்கள்.

இப்பட்டியலைப் பார்த்தவுடனேயே பக்திப்பாடல் பாடியோர் வரிசையில் வைத்துப் பாரதியாரைச் சமயவுலகில் அடக்கிவிடுகின்ற போக்கு அத்துணை நியாயமானது இல்லை. இத்தெய்வங்களை முன்வைத்து, அவர் என்ன பாடுகின்றார், எப்படிப் பாடுகின்றார் என்பதை அறிந்தால்தான் அவர்தம் நோக்கும் போக்கும் புரிபடும்.

அப்போதும், பாரதியாரிடம்,'பாரதமாதா பராசக்தியாகித் தன்னைப் பாடு' என்று பணிக்கின்றாள். அதனை,

"நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென்றொரு தெய்வம் கூறுமே
கூட்டி மானுடச்சாதியை ஒன்றெனக்
கொண்டு வையம் முழுதும் பயனுறப்
பாட்டிலே அறம் காட்டெனும் ஓர்தெய்வம்
பண்ணில் இன்பமும் கற்பனை விந்தையும்
ஊட்டி எங்கும் உவகை பெருகிட
ஓங்கும் இன்கவி ஓதுஎனும் வேறொன்றே
நாட்டுமக்கள் நலமுற்று வாழவும்
நானிலத்தவர் மேனிலை எய்தவும்
பாட்டிலே தனி யின்பம் காணவும்
பண்ணிலே களி கூட்டவும் வேண்டி,நான்
மூட்டும் அன்புக் கனலொடு வாணியை
முன்னுகின்ற பொழுதில் எல்லாங்குரல்
காட்டி அன்னை பராசக்தி ஏழையேன்
கவிதை யாவும் தனக்கெனக் கேட்கின்றாள்!"[58]

என்று பாடுகின்றார். இவ்வாறெல்லாம் தன்னிலை விளக்கம் அளிக்கின்ற பாரதியார் தெய்வத்தை முன்னிறுத்தித் தன் மனதைக்

கேட்பாளராக்கித் தனக்குத் தானே பேசிக்கொள்கின்றார். தனக்காகத் தனக்குள்ளே சொற் பொழிவாற்றுகின்றவராகப் பாரதியார் மாறிவிடுகின்றார். உபதேசம் போலவும், உபந்நியாசம் போலவும், உதவி கேட்கின்ற உரையாடல் போலவும் பாரதியாரிடமிருந்து பாடல்கள் பிறக்கின்றன.

'வையகத்துக்கில்லை மனமே நினக்கு நலம்
செய்யக் கருதியிவை செப்புவேன்-பொய்யில்லை'[60] என்று மகாசக்தி வெண்பாப் பாடுகின்றார்.

'இன்னுமொரு முறை சொல்வேன், பேதைநெஞ்சே
எதற்கும் இனி உளைவதிலே பயன்ஒன்றில்லை!'[61] என்று பேதை நெஞ்சை விளித்துப் பேசுகின்றார்.

"நாட்டினைத் துயரின்றி நன்கமைத்திடுவதும்
உளமெனும் நாட்டை ஒருபிழையின்றி
ஆள்வதும், பேரொளி ஞாயிறே யனைய
சுடர்தரு மதியொடு துயரின்றி வாழ்தலும்
நோக்கமாக் கொண்டு நின்பதம் நோக்கினேன்!"[62]
என்று புதுவை மணக்குளவிநாயகரிடத்தில் பேசுவதும்,

இதுவரையில் சமய, இலக்கிய, ஆன்மிக உலகில் யாரும் 'பேசாத பொருளைப் பேசவும், கேட்காத வரத்தைக் கேட்கவும்' பாரதியார் துணிந்திருக்கின்றார்.

சுடர்மிகு அறிவுடன் தன்னைப் படைத்துவிட்டு, ஒன்றுக்கும் பயனின்றி வீணாய் விதியின் கையில் கொடுத்து வீணே புழுதியில் விட்டெறிந்த வீணையைப் போலே தான் ஆகிப்போன அவலத்தில், 'சொல்லடி சிவசக்தி என்று சினத்தொடு விளித்து, வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே' என்று வரம் வேண்டுகின்றார்.

கேணியும், பத்துப்பன்னிரண்டு தென்னைமரங்களும் கொண்ட காணி நிலத்தைப் பாரதியார் பராசக்தியிடம் கேட்டது கூடப் பாட்டுத் திறத்தாலே இந்த வையத்தைப்பாலித்திட வேண்டித்தான்!

எந்த நிமிடமும் வந்து வந்து பயமுறுத்தும் ரகசியப்போலீசிடம் இருந்தும், தேச விரோதிகளிடம் இருந்தும் தம்மை (விடத் தம்மை நம்பி வந்தணைந்த அரவிந்தர், வ.வே.சு.ஐயர் உள்ளிட்ட நண்பர்களை)யும், (அவர்களுடையதும், தம்முடையதுமான) குடும்பத்தையும் காக்கவேண்டிய கட்டாய நிலையில் அவர் பட்டபாடும் அதற்கிடையில் இந்தத்தேசத்தின் நிலைகுறித்து வருந்தும் நிலையும் எதற்கு அஞ்சாத நிலையில் தற்காத்துக் கொள்ளத் தம் மனத்திடையே இடையறாது பேசிக்கொண்டே இருந்திருக்கின்றார்.

அந்த நிலையில்தான், பாரதியார் மணக்குள விநாயகரைச் சாட்சியாக்கித் தம் சிந்தைக்குரைக்கின்றார்.

"நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்குழைத்தல்
இமைப்பொழுதும் சோராதிருத்தல்- உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நம்குடியை வாழ்விப்பான்
சிந்தையே இம்மூன்றும் செய்!"[63]

ஆக, எந்த நிலையிலும் பாரதியாருக்கு, நாடு, நாடு நாடு என்று நாட்டைப்பற்றித்தான் சிந்தனை. அந்தச் சிந்தனை மேலே மேலே விரிந்து உலகுதழுவிய, பிரபஞ்சம் தழுவிய சிந்தனையாக மெருகேறுகின்றது.

இந்தச் சூழலில், மேடை, பொழிவு, கேட்போர், பத்திரிகை, என யாரும் எதுவும் இல்லாதநிலையிலும் தம்தொழிலைப் பாரதியார் தடையறத் தொடர்ந்ததன் அடையாளங்கள்தாம் அவரை மகாகவியாக்கிய அவர்தம் படைப்புகள். ஒருவேளை, அவர் சிறைப்பட்டிருந்தாலும், தனிமைச்சூழலில் இப்படியான படைப்புகள் அவரிடமிருந்து வெளிப் பட்டிருக்கவும் கூடும். ஒரு வகையில் தம்மைத்தாமே சிறைப்படுத்திக் கொண்ட புதுவைவாழ்வில் அவர் கண்டதை, கேட்டதை, காண விரும்பியதைக் கவிதைகளாக, உரை நடைகளாக, கட்டுரைகளாக, கதைகளாகக் கொட்டித் தீர்த்திருக்கின்றார்.

அந்த நிலையில்தான், தம்மொத்த மானுடர்க்குள்ளேயே கண்ணனைத் தந்தையாகவும், தாயாகவும், காதலனாகவும், காதலியாகவும், ஆண்டானாகவும், பணியாளனாகவும் கண்டு பாடுகின்ற கண்ணன்பாட்டுப் பிறக்கின்றது. வேதாந்தச் சிமிழில் விடுதலைப் பெருநோக்கை விடுகதை போல் வைத்துக் குயில்பாட்டுப் பிறக்கிறது. பாரதமாதாவைப் பாஞ்சாலி யாக்கிச் சபதமிட வைக்கின்றார். தமிழன்னையாய்த் தாமே மாறிச் 'சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்று கட்டளையிடுகின்றார். இப்படி, பாரதியார் தொட்ட இடந்தோறும் தொடர் சொற்பொழிவாகக் கவிமழை பொழிகின்றார். இப்படி,

"வெள்ளத்தின் பெருக்கைப்போல் கவிப்பெருக்கும்
கலைப்பெருக்கும் மேவுமாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவிகொள்வார்!"[64]

என்று நம்பிக்கை கொள்கின்றார்.

"சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்!" என்று கூவுகின்றார். அதுவுமற்ற நிலையில் அவர் கொள்ளும் மௌனம் கனத்துச் 'சித்தக்கடலாகி', எழுத்தேறும்போது அது நிரந்தரப் பேச்சாகிவிடுகின்றது.

பாரதியாரின் தனியுரை - சித்தக்கடல்

ஒரு நாட்குறிப்புப் போலவும், தன் மனதுக்குச் சொல்வதுபோலவும், பராசக்தியிடம் உரையாடுவதுபோலவும், தன் மனதை மகனாக, சீடனாகப் பாவித்து உபதேசிப்பது போலவும், பல இடங்களில் சுயபுலம்பல்போலவும் பாரதியார் எழுதிய சித்தக்கடல் அவர்தம் தனியுரை என்று சொல்லத்தக்க அளவில் அமைகின்றது. ஒளிவு மறைவற்று, அகஎழுச்சிபெற்ற பாரதியார், ஆணவத்திடைச் சிக்கிக் கிடக்கும் புறப்பாரதியாரின் லஜ்ஜையைப் போக்கி இலட்சியவானாக ஆக்க எடுத்துக் கொள்ளும் முயற்சியாகவும் இது விளங்குகின்றது. இன்னும் பல தேடல்களுக்கு விடைபகரும் பாரதியாரின் இப்படைப்பு,தனித்தன்மைமிக்க சொற்பொழிவுத் தன்மையோடு துலங்குவதைக் காணலாம்.

"*1915 ஜூலை 1*

காலை கண்விழிக்கும்போதே பணம் என்ற ஞாபகம். எழுந்து வீட்டுக்குப் போதல். போகையில் மனக்கிளர்ச்சி. இடைவழியில் துருக்கன். அவனுக்கு வழிவிட்டதைப்பற்றி மனநோதல். மரணபயம். அதன் மடமையுணர்ச்சி. கடற்கரையில் தனியேயிருத்தல். அங்கு சாரர், மன வெறுப்பு. உதாஸீனம். செ.மாலை என்ற வார்த்தை - ஒரு பொய்.

இந்த மனமாகிய கடலை வென்றுவிடுவேன். பல நாளாக இதை வெல்ல முயன்று வருகிறேன். இந்த மனத்தை வெல்ல நான் படும்பாடு தேவர்களுக்குத் தெரியும். இதிலே, ப்ராண பயம். வியாதி பயம். தெய்வ பக்திக்குறைவு. கர்வம், மமதை, சோர்வு முதலிய ஸம்ஸ்காரங்கள் மிகுதிப் பட்டிருக்கின்றன. இவற்றை ஒழித்துவிட வேண்டும்.

சலோ, தெய்வமுண்டு. அது அறிவுமயம். அந்த அறிவுக்கடலில் நான் என்பது ஒரு திவலை. அதற்கும் எனக்கும் ஒரு குழாய் வைத்திருக்கிறது. அந்தக் குழாயை அஹங்காரம் என்ற மாசு மூடியிருக்கிறது. இந்த அஹங்காரத்தை நீக்கிவிட்டால் தெய்வ சக்தியும் தெய்வ ஞானமும் எனக்கு உண்டாகும்.

புகையிலைச் சாற்றினால் தலை கிறுகிறுக்கிறது. 20 லக்ஷம் தரம் புகையிலையை நிறுத்திவிடுவதாக ப்ரதிக்கினை செய்து இருக்கிறேன். இதுவரை கைகூடவில்லை. ஸம்ஸ்காரம் எத்தனை பெரிய விலங்கு பார்த்தாயா? மகனே, ஸம்ஸ்காரங்களை சக்தியினால் வென்றுவிடு.

உடல் படுத்துக்கொண்டது. உடலை வைரம்போல உறுதி உடையதாகவும், பக்ஷிகளைப் போல லாவகமுடையதாகவும், சிங்கத்தைப் போல வலியுடையதாகவும் செய்ய வேணும். உடல் வசப்படாவிட்டால் இந்த உலகத்தில் வாழ்க்கை பெருந்துன்பந்தான். உடம்பே, எழுந்துட்காரு. உடம்பு எழுந்துவிட்டது. முதுகு கூனுகிறது. அந்த வழக்கத்தைத் தொலைத்துவிட வேண்டும்.

வயிறு வேதனை செய்கிறது. உஷ்ணமிகுதியால். நோயற்றிருப்பதற்கு சக்தியை ஓயாமல் வேண்டிக்கொள். நோயில்லையென்று மனத்தை உறுதி செய். மனம்போல உடல்.

மகனே, உடலை வெற்றிகொள். அது எப்பொழுதும் நீ சொன்னபடி கேட்க வேண்டும். அது சொன்னபடி நீ கேட்கலாகாது. அது மிருகம். நீ தேவன். அது யந்திரம். நீ யந்திரி.

ஜூலை 2

வியாதி, பயம், சோம்பர். இன்று காலைப்பொழுதையும் இவை வந்து வீணாக்கிவிட்டன. செ.வழக்கம்போல் வந்தான். பரமேஸ்வரி. மகாசக்தீ, உன்னிடத்தில் அமரத்தன்மை கேட்கிறேன். என்னை மனக் கவலை யிலிருந்து விடுவிக்க வேண்டும். உன்னை எப்போதும் சிந்தனை செய்து கொண்டும், உனது மஹா அற்புதமான உலகத்தை எப்போதும் கண்டு தீரா மகிழ்ச்சியடைந்துகொண்டும், தர்மங்களை இடைவிடாமல் நடத்திக் கொண்டும் வருந்திறமை எனக்கு அருள் செய்ய வேண்டும்.

மனமாகிய குரங்கு செய்வதையெல்லாம் எழுதிக்கொண்டு போனால் காலக்கிரமத்தில் அதை வசப்படுத்திவிடலாமென்பது என்னுடைய கருத்து. ஒன்றை அடக்குமுன்பாக அதன் இயல்புகளையெல்லாம் நாம் அறிந்து கொள்ள வேண்டும். நம்மால் நன்றாக அறியப்படாததை நாம் வசப்படுத்த முடியாது. சித்தத்தை வசப்படுத்துமுன் சித்தட்தை அறிய வேண்டும். அதன் சலனங்களை ஓயாமல் கவனித்து எழுதிக்கொண்டு வந்தால் அதன் தன்மை முழுதையும் அறிய ஹேதுவுண்டாகுமென்பது என்னுடைய தீர்மானம்.

பராசக்தீ, ஒவ்வொரு கணமும் எனது சித்தம் சலிக்கும் முறைகளை அப்போதப்போது பொய்ம்மையில்லாமலும், வஞ்சகமில்லாமலும் எழுதுவதற்கு எனக்குத் தைரியம் கொடுக்கவேணும்.

நான் எழுதுவதைப் பிறர் பார்க்க நேரிடுமென்று கருதி நமது துர்ப்பலங்களை எழுத லஜ்ஜையுண்டாகிறது. பராசக்தீ, என் மனத்கில் அந்த லஜ்ஜையை நீக்கிவிடவேண்டும்.

பாரதியினுடைய மன நடைகளை நான் எழுதப்போகிறேன். நான் வேறு. அவன் வேறு. நான் தூய அறிவு. அவன் ஆணவத்திலே கட்டுண்ட சிறு ஜந்து. அவனை எனக்கு வசப்படுத்தி நேராக்கப் போகிறேன். அவனுடைய குறைகளை எழுத அவன் லஜ்ஜைப் படுகிறான். அந்த லஜ்ஜையை நான் பொருட்டாக்காதபடி அருள் செய்யவேண்டும்.

எழுது. பராசக்தியின் புகழ்ச்சிகளை எழுது. அடா, பாரதீ, அதைக் காட்டிலும் உயர்ந்த தொழில் இவ்வுலகத்தில் வேறொன்றுமில்லை. பராசக்தி வாழ்க. அவள் இந்த அகில உலகத்துக்கு ஆதாரம். அகிலம் நமக்கு மூன்று வகையாகத்தெரிகிறது. ஜடம்,உயிர், அறிவு - என, இவை தம்முட்கலந்தன. அறிவுலகத்திலே பல படிகள் இருப்பதாக யோகிகள் நிச்சயித்திருக்கிறார்கள்.

இவற்றுள் ஜடத்துக்கு உயிரும், உயிருக்கு அறிவும் காரணமா மென்று யோகிகள் சொல்லுகிறார்கள்.

இவையனைத்திற்கும் மூலப்பொருளாய், இவையனைத்தையும் தனது உறுப்புக்களாகக் கொண்டு, இவையனைத்தும் தானாய், இவை யனைத்தின் உயிர் நிலையாக, ஒரு பொருள் உண்டு. அதனை மஹாசக்தி என்கிறோம். அதை இடைவிடாமல் த்யானம் செய்வதால் உனது குறைகளெல்லாம் நீங்கும். பெரிய பொருளை இடைவிடாது பாவனை செய்யும் அறிவுதான் பெருமையடைகிறது.

சித்தம் ஒரு கண்ணாடி. ஓயாமல் பராசக்தியை த்யானம் செய்யுமானால் அவளுடைய சாயை இதிலே படும். அதிலே சுகம் உண்டு.

பத்திரிகைகளுக்கு வியாஸங்கள் எழுத வேண்டும். - கடிதங்கள் எழுத வேண்டும். சோம்பர் உதவாது. வெற்றிலை போடுவதைக் குறைக்க வேணும். பணமில்லாதது பற்றிக் கவலைப்படலாமா? மூடா, மூடா, மூடா. நாம் சுத்த அறிவல்லவா? உலக வ்யவஹாரங்களை நாம் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டிருக்க வேணும். ஆணவக் கட்டிலே அகப்பட்ட சித்தத்தின் விருப்பப்படி இந்த உலகில் ஏதாவது நடக்கிறதா? சாகாத ஜந்து உண்டா? எல்லா ஜந்துக்களும் ஓயாமல் உயிரைக் காக்கின்றன. அதில் பயனுண்டா? உயிரே ஜீவனுடைய வசமில்லாதபோது வேறெதைப் பற்றிக் கவலைப்படுவதிலேயும் என்ன பயன்? பராசக்தியின் கட்டளைப்படி உலகம் நடக்கிறது. உனக்கு வேண்டிய இன்பங்களை அவளிடம் வேண்டிக் கொள். அவள் கொடுப்பதைப் பெ:ற்றுக் கொண்டு சுகமாக இரு.

எப்போதும் பாடுபடு. எப்போதும் உழைத்துக்கொண்டிரு.

உழைப்பிலே சுகமிருக்கிறது. வறுமை. நோவு முதலிய குட்டிப் பேய்களெல்லாம் உழைப்பைக் கண்டவுடன் ஓடிப்போய் விடும்.

பராசக்தியை த்யானம் செய்துகொண்டேயிருந்தால் எல்லாத் துன்பங்களும் நீங்கிவிடும். உடலும் உயிரும் ஒளி பெற்று வாழும். நூறுவயதுக்குக் குறைவில்லை. இது ஸத்யம். நூறு வயது நிச்சயமாக வாழ்வாய். மனிதனுக்கு நூறாண்டு இயற்கையிலே ஏற்பட்டது. இயற்கை தவறாமல், மூடக் கவலைகளில்லாமலிருந்தால் நூறுவயது அவசியம் வாழலாம். மகனே அச்சத்தைப் போக்கு.

மண்ணையும், காற்றையும், கடலையும் எத்தனை யுகங்கள் ஒரே வடிவத்தில் வைத்துக் காப்பாற்றுகிறாய்? பராசக்தீ, எனது கருவி கரணங்களிலே நீ பரிபூர்ணமாக ஸந்நிதி கொண்டு என்னையும் அங்ஙனமே காக்க வேண்டும்.

இன்பமில்லையா?

பராசக்தீ, இந்த உலகத்தின் ஆன்மா நீ.

உனக்கு அறிவில்லையா? உனக்குக் காதுகேட்காதா? நாள்தோறும் உன்மீது பாட்டுப் பாடுகிறேன். நான் கேட்கும் வரங்களையெல்லாம் கொடுத்துவிடக்கூடாதா?

முதலாவது, எனக்கு என்மீது வெற்றி வரவேண்டும். குழந்தைக்கு ஜ்வரம் வந்தது. நினது திருவருளால் குணமாய்விட்டது. இரண்டு மாதக் காலம் இரவும் பகலுமாக நானும் செல்லம்மாளும் புழுத்துடிப்பதுபோலத் துடித்தோம். ஊண் நேரே செல்லவில்லை - இருவருக்கும். உறக்கம் நேரே வரவில்லை - இருவருக்கும். எப்போதும் சஞ்சலம். பயம். பயம். பயம்! சக்தி, உன்னை நம்பித்தானிருந்தோம். நீ கடைசியாகக் காப்பாற்றினாய். உன்னை வாழ்த்துகிறேன்.

கடன்காரர் தொல்லையும், அத்துடன் வந்து கலந்தது. வைத்தியனுக்குக் கொடுக்கப் பணமில்லை. குழப்பம். குழப்பம் - தீராத குழப்பம். எத்தனை நாட்கள். எத்தனை மாதங்கள். எத்தனை வருஷங்கள்.

பராசக்தீ, ஓயாமல் கவிதை எழுதிக்கொண்டிருக்கும்படி திருவருள் செய்ய மாட்டாயா? கடன்களெல்லாம் தீர்ந்து தொல்லையில்லாதபடி என் குடும்பத்தாரும் என்னைச் சார்ந்த பிறரும் வாழ்ந்திருக்க, நான் எப்போதும் உன் புகழை ஆயிரவிதமான புதிய புதிய பாட்டுக்களில் அமைக்க விரும்புகிறேன். உலகத்தில் இதுவரை எங்குமில்லாதபடி அற்புதமான ஒளிச்சிறப்பும், பொருடபெருமையும் உடைய பாட்டொன்று என் வாயிலே தோன்றும்படி செய்ய வேண்டும்.

தாயே, என்னைக் கடன்காரரர் ஓயாமல் வேதனைப்படுத்திக் கொண்டிருந்தால், நான் அரிசிக்கும், உப்புக்கும் யோசனை செய்து கொண்டிருந்தால் - உன்னை எப்படிப் பாடுவேன்?

மனைவியைப் பிரிந்து செல்லும்படி சொல்வதில் பயனில்லை. அவளும் உனது சரணையே நம்பி, என்னுடன் எப்போதும் வாழ்ந்துகொண்டு, உனது தொழும்பிலே கிடைக்கும் புகழில் பங்கு பெற்று மேன்மையுற விரும்புகிறாள். இயன்றவரை, உண்மையோடு தான் இருக்கிறாள். அவளையும் நீ ஸம்ரக்ஷனை செய்ய வேண்டும்.

அவளுக்கு நோயின்மை, கல்வி, கவலையின்மை, பக்தி, ஞானம் முதலிய சோபனங்களெல்லாம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

குழந்தையை உனது குழந்தையாகக் கருதி, இவ்வுலகத்தில் நீடித்துப் புகழுடன் வாழும்படி திருவருள் செய்ய வேண்டும். காசியிலிருக்கும் குழந்தையையும் நீதான் காப்பாற்ற வேண்டும்.

எனது குடும்பப் பாரமெல்லாம் உன்னைச் சேர்ந்தது. உன்னைப் புகழ்ச்சி புரியும் தொழில் என்னைச் சேர்ந்தது. தாயே, ஸம்மதந்தானா?

மஹா சக்தீ, என்னுள்ளத்தில் எப்போதும் வற்றாத கவிதையூற்று ஏற்படுத்திக் கொடு.

ஓயாமல் வியாதி பயம் கொண்டு உளைகின்ற நெஞ்சமே! தூ! தூ! தூ! கோழை!

புகையிலை வழக்கம் இன்றோடு தொலைந்துவிட்டது. பராசக்தியின் அருளால். இனி கஸரத் வழக்கம் ஏற்பட வேணும். பராசக்தியின் அருளால் தோள் விம்மி விம்மி வயிரம் போலாக வேணும். நெஞ்சுவிரிந்து திரண்டு, வலிமையுடையதாக வேணும். இரத்தம் மாசு தீர்ந்து நோயின்றி நன்றாக ஓடி, உடலை நன்கு காத்துக் கொண்டிருக்க வேணும் - பராசக்தி அருளால்.

செட்டி பணத்துக்கு எத்தனை நாள் பொய் சொல்லுகிறது? பொய் வாயிதா, பொய் வாயிதா, பொய் வாயிதா- தினம் இந்தக் கொடுமை தானா? சீச்சி!

பராசக்தி- உன்னை நான் நம்புவதை முற்றிலும் விட்டு நிச்சயமாக நாஸ்திகனாய் விடுவேன். நீ என்னை அற்பத்தொல்லைகளுக்கு உட்படுத்திக் கொண்டேயிருந்தால்.

மஹாசக்தி - நீ யிருப்பதை எவன் கண்டான்? உனக்கு அறிவுண் டென்பதை எவன் கண்டான்? இந்த உலகம் - சரி, சரி. இப்போது உன்னை வையமாட்டேன். என்னைக் காப்பாற்று. உன்னைப் போற்றுகிறேன்.

பிறருக்கு நான் தீங்கு நினையாதபடி நீ அருள் புரிந்தால் நல்லது. துஷ்டர்களைக்கூட, நீ தண்டனை செய்துகொள். எனக்கு அதிலே ஸந்தோஷம் இல்லை. எனக்குப் பிறர் செய்யும் தீங்குகளை நீ தவிர்க்க வேண்டும். நான் உன்னையே சரணமடைந்திருக்கிறேன்.

சொல்லு, மனமே! சொல்லு, பராசக்தி.
வெல்க! பராசக்தி வெல்க!"[65]

ஏறத்தாழப் பத்தாண்டுக் காலம் புதுவை வாழ்வை நடத்திய பாரதியாரின் வாழ்வியல் குறித்த இப்பதிவுகள் அவர் அடைந்த அக-புறத் துயர்களை அடையாளங்காட்டி நிற்கின்றன. இவற்றுக் கிடையிலும் அவர் வழக்கம் போல, தமது இல்லத்தில் பொது மற்றும் மகளிர்கூட்டங்களைத் தொடர்ந்து நடத்தி வந்திருக்கின்றார். பிரெஞ்சுப் பகுதியாக இருந்த புதுவையில் அவர் கேட்ட சொற்பொழிவுகளும் உண்டு. காலக்கட்டத்தால் புதுவையில் பாரதியார் இருந்த காலத்தில் அவர்தம் சொற்பொழிவுகள் சமுதாயச் சீர்திருத்தச் சொற்பொழிவுகளாகவே அமைந்திருக்கின்றன. அவை தனித்த தலைப்பின்கீழ் இந்நூலுள் விரிவாகத்தரப்பெற்றுள்ளன.

பாரதியார் கைது

இப்படியாகப் புதுவைமண்ணில் பல புதுமைகளைப்புகுத்திய பாரதியார் பத்தாண்டுகள் கழித்துத் தமிழகம் நோக்கித் திரும்பும்போது, கடலூரில் 20.11.1918 அன்று கைது செய்யப்பட்டார். அப்போது அவர்தம் வயது36.

சுதேசிய உபந்நியாசி என்றும், அரசியல் கிளர்ச்சியாளர் என்றும் சொல்லப்பட்ட பாரதி கைது செய்யப்பட்ட விதம் சற்று விநோதமாகத் தான் காணப்பட்டது. 1914ஆ ஆண்டைய இந்திய நுழைவுச் சட்டத்தின்கீழ் (Ingress into India Act 1914) பாரதியார் கைது செய்யப்பட்டார். இச்சட்டமானது 1914ஆம் ஆண்டு போர் மூண்டதால் ஏற்படுத்தப்பட்டது. நாட்டுக்காப்புக்கருதி, இச்சட்டத்தைப்பயன்படுத்திக் கைது செய்யப் பட்டவர்களெல்லாம், போர்முடிந்தகையோடு விடுதலை செய்யப் பட்டனர். அதன் பின்னர் நீக்கப்படவேண்டிய இச்சட்டத்தைக் கொண்டு கொஞ்சமும் பொருத்த மின்றிப் பாரதியாரைக் கைதுசெய்தது குறித்து அக்காலத்தியப் பத்திரிகைகள் கண்டனம் செய்தன. எனினும் காவல் துறை நெடுநாள் காத்திருந்து செய்த கடமையின் காரணமாகப் பாரதியார் கடலூர் சிறையில், 21 நாட்கள் அடைக்கப்பெற்றுப் பின்னர் சில நிபந்தனைகளுடன் விடுவிக்கப்பட்டார்.[66]

கடைய வாழ்விலும்...

அரசியல் தொடர்பான நூல்களை எழுதுவதில்லை என்ற வாக்குறுதி தந்து வெளியேறிய பாரதியார், செல்லம்மாள் பிறந்த ஊராகிய கடையம் ஏகினார். எனினும் அவர்தம் பணிகள் தொடர்ந்து கொண்டுதான் இருந்தன. "கடலூரில் சிறைவாசத்திற்குப் பிறகு அவர் அரசாங்கத்திற்குக் கொடுத்த முக்கியமான வாக்குறுதியான அரசியல் நூல்களை வெளியிடுவ தில்லை என்ற கொள்கையை தடை நீங்கிய பிறகும்கூட மீறுவதற்கு அவருக்கு மனதில்லை. அரசியல் தொண்டு கட்டுரைகளின் மூலமின்றி, கடற்கரைச் சொற்பொழிவுகள், பாட்டுக்கள்மூலம்தான் செய்யப்பட்டது. புதுவை வாசத்திற்குப்பிறகு பாரதியார் கவிதைகள் இயற்றுவதைவிட, சொற்பொழிவு கள் ஆற்றுவதிலும், கட்டுரைகள் எழுதுவதிலும் தன்னுடைய காலத்தைக் கழித்தார்"[67] என்கிறார், வை. சச்சிதானந்தன். அத்தகைய பொழிவுகள் பெரும்பாலும் நாட்டுநலனில் அக்கறை கொண்ட, ஆன்மிக, இலக்கிய மற்றும் சமுதாயச் சீர்திருத்த உரைகளாகவே அமைந்திருந்தன. அவை முறையே அந்தந்தத் தலைப்புகளின்கீழ் இந்நூலில் விளக்கப்பெறுகின்றன.

பாரதியாரின் ஆங்கிலச் சொற்பொழிவுகள்

எனினும் கடையவாழ்விற்கு நடுவே 1919 ஆண்டுவாக்கில் வேதாந்த சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்காகச் சென்னை வந்திருக்கிறார் பாரதியார். அப்போது "சில நாட்கள் சென்னையில் தங்கவும் செய்தார். அச்சமயம் ஸர்.எஸ். சுப்பிரமணிய ஐயர் (பிற்காலத்தில் மகான் மணிஐயர் என்று அழைக்கப்பட்டவர்) தலைமையில் விக்டோரியா பப்ளிக் ஹாலில் ஆங்கிலத்தில் வேதாந்தச்சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்."[68] இப்பொழிவுகள் தேடித்தொகுக்கப்பெற்றால், அவர்தம் வேதாந்தச் சிந்தனைகள் பற்றி விரிவாகக் காண இயலும்.

இச்சொற்பொழிவுகள் மூலம் தமது நூல்வெளியீட்டிற்காகப் பணந் திரட்டவும் முனைந்திருக்கின்றார் பாரதியார். இதுகுறித்து அவர்தம் நண்பர் பண்டிட் எஸ். நாராயண அய்யங்கார் கூறும் செய்தியாவது:

"ஒய்.எம்.சி.ஏ சங்க ஆதரவில் கோகலே ஹாலில் பாரதியாரின், 'சுதேசிய கீதங்களை அவரே பாடுவார்!' என்று விளம்பரம் செய்து நாலணா டிக்கட் வைத்து நடத்தலாம் என்று யோசித்தார் பாரதியார். நான் அதை அங்கீகரிக்கவில்லை. விளம்பரச் செலவு, அச்சுக்கூலி மிஞ்சுமே ;தவிர, வசூல் ஆவது சிரமம் என்று வாதித்தேன். பாரதியார் கேட்கவில்லை. ஒரு குறிப்பிட்ட தேதியில் தீர்மானித்தபடி விளம்பரம்

செய்து கூட்டம் ஏற்பாடாகிவிட்டது. ஹாலில் ஐந்தாறு பேர்கள். நாங்கள் சிலர். கூட்டம் வராதது கண்டு, 'டிக்கட்' என்ற பதத்தை அடித்துவிட்டு, 'இலவசம், அனைவரும் வருக!' என்று போட்ட பிறகு கூட்டம் சேர்ந்தது. பாரதியார் கூட்டத்தைக் கண்டதும் உற்சாகம் மேலிட்டுத்தம் பாடல்களைப் பாடி மக்களை மகிழ்வித்தார்"[69]

'மகாகவியும் மகாத்மாவும்' - வ.ரா.சாட்சியாய்

இந்தக் காலக்கட்டத்தில்தான், ரௌலட்சட்டத்திற்கு எதிரான கூட்டத்திற்குத் தலைமையேற்கக் காந்தி சென்னைக்கு வந்து ராஜாஜியின் பங்களாவில் தங்கியிருந்த சமயம், பாரதியார் காந்தியைச் சந்திக்க வந்திருக்கின்றார். அப்போது வாயிற்காவல் வ.ரா. அந்தப் பின்னணியைத் தக்க சாட்சியமாய் நின்று கண்டதைப் பின்வருமாறு காட்டுகின்றார் அவர்.

"ஒருநாள் மத்தியானம் இரண்டு மணி இருக்கும். காந்தி வழக்கம்போலத் திண்டு மெத்தையில் சாய்ந்துகொண்டு வீற்றிருந்தார். அவர் சொல்லிக் கொண்டிருந்ததைப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மகாதேவதேசாய் எழுதிக் கொண்டிருந்தார்...சேலம் பாரிஸ்டர் ஆதி நாராயணசெட்டியார் குடகுக் கிச்சிலிப் பழங்களை உரித்துப் பிழிந்து கொண்டிருந்தார். ஒரு பக்கத்துச் சுவரில் ஏ. ரங்கசாமி அய்யங்கார், சத்தியமூர்த்தி முதலியவர்கள் சாய்ந்து நின்று கொண்டிருந்தார்கள். அந்தச் சுவருக்கு எதிர்ச்சுவரில் ராஜாஜியும் மற்றும் சிலரும் சாய்ந்து கொண்டு நின்றிருந்தார்கள். நான் வாயில் காப்போன். யாரையும் உள்ளே விடக்கூடாது என்று எனக்கு உத்தரவு... அறைக்குள்ளே பேச்சு நடந்துகொண்டிருக்கிற சமயத்தில் பாரதியார் மடமடவென்று வந்தார். என்ன ஓய் என்று சொல்லிக்கொண்டே, அறைக்குள் நுழைந்துவிட்டார். என் காவல் கட்டுக் குலைந்து போய் விட்டது.

உள்ளே சென்ற பாரதியாரோடு நானும் போனேன். பாரதியார் காந்தியை வணங்கிவிட்டு, அவர் பக்கத்தில் மெத்தையில் உட்கார்ந்து விட்டார். அப்புறம் பேச்சு வார்த்தை ஆரம்பித்தது.

பாரதியார்: மிஸ்டர் காந்தி இன்றைக்குச் சாயங்காலம் ஐந்தரை மணிக்கு நான் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு கூட்டத்தில் பேசப்போகிறேன். அந்தக் கூட்டத்துக்குத் தாங்கள் தலைமை வகிக்க முடியுமா?

காந்தி: மகாதேவபாய், இன்றைக்கு மாலையில் நமது அலுவல்கள் என்ன?

மகாதேவ்: இன்றைக்கு மாலை ஐந்தரை மணிக்கு நாம் வேறோர் இடத்தில் இருக்கவேண்டும்.

காந்தி: அப்படியானால், இன்றைக்குத் தோதுப்படாது. தங்களுடைய கூட்டத்தை நாளைக்கு ஒத்திப்போட முடியுமா?

பாரதியார்: முடியாது. நான் போய் வருகிறேன். மிஸ்டர் காந்தி, தாங்கள் ஆரம்பிக்கப்போகும் இயக்கத்தை நான் ஆசீர்வதிக்கிறேன்.

பாரதியார் போய்விட்டார்.

பின்னர், இவர் யார்? என்று காந்தி கேட்ட கேள்விக்கு, ராஜாஜி, அவர் எங்கள் தமிழ்நாட்டுக் கவி என்று பதிலளித்திருக்கிறார். இவரைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்குத் தமிழ்நாட்டில் ஒருவரும் இல்லையா? என்றார் காந்தி. எல்லோரும் மௌனமாக இருந்து விட்டார்கள்.[70]

இவ்வாறு, காந்தியைச் சந்தித்த பாரதியார் அவரைத் தலைமை தாங்கக் கேட்டது, அரசியல் தொடர்பான கூட்டத்திற்காக இருக்கலாம். அந்தக் கூட்டம், எப்படி, என்ன நோக்கில் எங்கு எப்போது நடத்தப்பெற்றது என்பது ஆய்வாளர்கள் தேடுதற்குரியது.

திரு.வி.க. குறிப்புரையில்

இந்தக்காலக்கட்டத்தில், 1919 ஏப்ரல் ஆறாம் நாள். காந்தியடிகள் காட்டிய வழியில் தெய்வ பக்தியோடு கூடிய தேசபக்திப் பஜனை நடைபெற்றது. "முன் ஏற்பாட்டின்படி காலையில் இராயப் பேட்டையிலுள்ள பஜனைக் கோஷ்டிகளும், மற்றவர்களும் 'தேச பக்தன்' நிலையம் போந்தார்கள். அவர்களுடன் சுப்பராய காமத்தும், யானும் ஊர்வலம் வந்தோம்; பிற்பகல் ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 'குகானந்த நிலையத்'தை அடைந்தோம். சுப்பிரமணிய பாரதியார் பஜனை கோஷ்டியில் எங்கேயோ எப்படியோ கலந்துவந்தார். அவரைக் கண்டதும் செவி அவரது பாட்டை விரும்பியது. பாரதியாரைப் பாடுமாறு கேட்டேன். தமிழ்ப்பெருமான், 'முருகா- முருகா' என்று பாடத் தொடங்கினார். பாட்டு- தமிழ்ப் பாட்டு- தேனினும் இனிய முருகன் பாட்டு- படத்திலுள்ள ஓவிய முருகனை நகரச் செய்தது. ஓவிய உருவம் வீறுடன் வெளிவருவது போன்ற தோற்றம் உண்டாயிற்று. அன்பர்கள் மெய்கள் அரும்பின; விதிர்விதிர்த்தன; சிலர் மயங்கினர்; சிலர் விழுந்தனர்; சிலர் கண்ணீர் உகுத்துத் தம்மை மறந்தனர்; எல்லாரும் ஆனந்தப் ப்ரவசராயினர்; பாரதியார் சித்திரப் பதுமை யானார். பாட்டுக்கும் ஓவியத்துக்கும் உள்ள ஒருமைப்பாட்டை யான், கண்ணாரக் கருத்தாரக் கண்டேன். சிறிதுநேரங் கழித்துப் பாரதியார் விடை பெற்றுச் சென்றார்."[71]

அழைப்பைப் பற்றி யாதொரு கவலையும் இன்றி, எங்கெல்லாம், நாட்டு நலன் கருதிக் கூட்டம் சேருகின்றதோ, அங்கெல்லாம்

தோன்றித் தம் பணியைச் செவ்வனே ஆற்றுபவராகப் பாரதியார் திகழ்ந்திருக்கின்றார் என்பதற்கான சான்றுதான் மேற்சுட்டிய பதிவு. அக்கூட்டத்தில் பாரதியார் பாடிய முருகன் பாட்டு பக்திப்பாடல் ஆயினும், அது நாட்டுநலனில் தேட்டமுடைய பாட்டு.

வடிவேலுடனே மயில் மீதினில் வருவாய் முருகா என்று முருகனை வரவேற்கும் பாட்டு. முருகனின் வரவு எதற்காக? நாட்டுநலனில் அக்கறை கொண்ட வீரர்கள் அடியார்கள் அக-புறச் சிறைகளுக்குள்ளே அகப்பட்டுக் கிடக்கின்றார்கள். அவர்களை விடுவிப்பதற்காக.

"அடியார் பலரிங்குளரே -
அவரை விடுவித்தருள்வாய்!"[72]

என்று வேண்டியும்,நாட்டுநலன் ஒன்றையே,
"கருதிக் கருதிக் கவலைப்படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல்!"[73]

முருகனை வரவேற்று இப்பாடலைப் பாடுகின்றார்.

இப்பாடலில் முருகனைப் பற்றிய புராணச் செய்திகள் இல்லை. புனைவுகள் இல்லை. மேலும்,இப்பாடலில் வரும் முருகன் வழக்கமாய்க் கோயிலில் கொலுவீற்றிருக்கும் முருகன் இல்லை. இவன் கொண்ட கோயில் வேறு; இவன் அமர்ந்திருக்கும் தாய்மடி வேறு.

இவன் அறிவாகிய கோயிலில், அருளாகிய தாய்மடியில் பொறி வேலுடன் வளர்பவன். அடியார்கள் புதுவாழ்வு உறுதற்காக, தாய்மடி விட்டிறங்கிப் புவிமீது அமர வேண்டிப் பாடுகின்றார், பாரதியார்.

"அறிவாகிய கோயிலிலே
அருளாகிய தாய் மடியிலே
பொறிவேலுடனே வளர்வாய்! அடியார்
புதுவாழ் வுறவே புவிமீதமர்வாய்!"[74]

ஆக, தேசபக்தியும், தெய்வபக்தியும் இணைந்து பெற்ற புதிய ஆன்மிக எழுச்சியின் அடையாளமாகப் பாரதியாரின் சொல்லும் செயலும் முகிழ்த்த காலக்கட்டம் இது.

### காரைக்குடியில் பாரதியார்

இந்த நிலையில் மீண்டும் கடையம் திரும்பிய பாரதியார், கானாடு காத்தான் வயி. சு. சண்முகஞ்செட்டியாரின் அழைப்பை ஏற்றுக் காரைக்குடி செல்கின்றார். சில நாட்கள் தங்குகின்றார். அந்நாட்களில் அன்பர்கள் இல்லங்களிலும், தோட்டங்களிலும் நண்பர்களோடு இருந்து உரையாடி யிருக்கின்றார். நாமக்கல் கவிஞர் சந்தித்து ஆசிபெற்றதும் இங்கேதான்.

பாரதியார், இங்குள்ள ஹிந்துமதாபிமான சங்கத்தில் பாடியும், பேசியும் மகிழ்வித்திருக்கின்றார்.

"பலநூல்கள் பதிப்பித்தும் பலபெரியோர் பிரசங்கம் பண்ணுவித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசாலைபலவும் நாட்டியும்தம்
குலம் உயர, நகர் உயர, நாடுஉயர, உழைக்கின்றார்,கோடிமேன்மை
நிலவிட இச்சங்கத்தார் பல்லூழி வாழ்ந்தொளிர்க, நிலத்தின் மீதே!"[75]

என்று பாரதியார் பாடப்பெற்ற பெருமைக்குரியது, காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கம். பலநூல்கள் பதிப்பித்த பெருமைக்குரியது. பல பெரியோர்களை வரவழைத்துச் சொற்பொழிவாற்றை வைத்த சிறப்புக்குரியது. இச்சங்கத்தில் பாரதியார் சில நாட்கள் தங்கியிருந்தபோது கூடியிருந்த அன்பர்களுடன் கலந்துரையாடிய தோடு, தமது பாடல்களை அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கப் பாடியுமிருக்கின்றார். அவரது பாடுந்திறனை வியந்து அவ்வனுபவங்களைச் சிறப்புறப் பதிவு செய்திருக்கின்ற பாரதி அன்பர்கள் அவர்தம் உரைபற்றி விரிவுற எழுதாதது இழப்புத்தான். அவர்தம் கவியாற்றலைக் கண்டு வியந்தவர்களுக்கு அவர்தம் சொல்லாற்றலின் சிறப்புப் புலப்படவில்லை என்றே தோன்றுகின்றது.

செட்டிநாட்டில் நிரந்தரமாகத் தங்கி இலக்கியப் பணிபுரிய அனைத்து வசதிகளையும் வயி.சு. சண்முகஞ்செட்டியார் செய்து தந்தும் செல்லம்மாள் உடன் வந்துறைய மறுத்ததால் பாரதியார் கடையம் திரும்ப வேண்டிய தாயிற்று.

### திரும்பவும் சென்னையில்...

எப்படியேனும் தமது படைப்புகள் அனைத்தையும் நூல்களாக்க வேண்டும் என்று தாம் கண்ட கனவு கொஞ்சமும் நனவாக வாய்ப்பின்றிப் போனநிலையில் பாரதியார், சுதேசமித்திரனில் பணியாற்ற வேண்டித் தம் குடும்பத்துடன் வந்து சென்னையில் குடியேறுகின்றார். இதழியல் பணி புரிந்துகொண்டே இடையிடைப் பொதுக்கூட்டங்களிலும் பங்கேற்றிருக் கின்றார். அவை முறையே அவ்வவற்றிற்கான பொருண்மைகளின் அடிப்படைகளில் இந்நூலுள் விளக்கம் பெறுகின்றன. அவற்றுள் குறிப்பிடத்தக்க நிகழ்வுகளும் பலவுண்டு.

பாரதியார் திரும்பவும் சென்னைக்கு வந்தகாலத்தில், அதாவது **1920**ஆம் வருஷத்தில் சத்தியாக்கிரக இயக்கமும், கிளாபத் கிளர்ச்சியும் மும்முரமாக இருந்தன. முஸ்லிம்கள் அதில் அதிகமாகப் பங்கெடுத்துக் கொண்டிருந்தார்கள். காந்தி மஹாத்மாவின் அரசியல் செல்வாக்கும் உச்ச கட்டத்திற்கு வந்த நேரம் அது. அப்போது அரசியல்

பொதுக்கூட்ட நிகழ்ச்சிகள் திலகர் கட்டத்திலேயே நடைபெறும்.. இந்தக் கூட்டங்கள் பெரும்பாலும் மாலை நேரங்களில்தான் நடைபெறும். இந்தப் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சமயத்தில், முஸ்லிம் சகோதரர்களுக்குத் தொழுகை நேரம் வந்துவிடும். அதற்காகக் கூட்டத்தின் நிகழ்ச்சிகள் சற்று நேரம் தள்ளிவைக்கப்படும். கூட்டம் கலையவே கலையாது. முஸ்லிம் சகோதரர்கள் தவிர மற்றவர்கள் அப்படியே இருப்பர். அந்தச்சமயத்தில் உணர்ச்சி ஊட்டக்கூடிய தேசியப்பாடல்கள் பாடப் பெறும். இவற்றுள் பாரதியாரின் தேசியப் பாடல்கள்தாம் அதிகப்படியாக ஒலிக்கும். சில சமயங்களில் பாரதியாரே பாடுவார். ஒரு சமயம் 'அல்லா அல்லா அல்லா' என்ற பாடலையும், பின்னொரு சமயம் 'பாரத சமுதாயம் வாழ்க வாழ்கவே' என்ற பாடலையும் பாடி கூட்டத்திரை உணர்ச்சி வசப்படுத்தினார்.[76]

தொழிலாளர் கூட்டங்களில்...

அரசியல் கூட்டங்களில் பங்கேற்ற பாரதியார், தொழிலாளர் கூட்டங்களிலும் பங்கேற்றுப் பாடியும் பேசியும் இருக்கின்றார்.தான் மட்டுமன்றித் தம் நண்பர்களையும் அக்கூட்டங்களில் பாரதியார் பேசவைத்திருக்கின்றார். அவற்றை நேரில் கண்ட ப.கோதண்டராமன் தமது நூலில்,"பாரதியார் சென்னையில் பலகூட்டங்களில் பேசிவந்தார். இந்நூலாசிரியர் (ப.கோதண்டராமன்) சென்னையில் அக்காலத்தில் தொழிலாளர் இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தபோது பெரம்பூரில் ரயில்வேத் தொழிலாளர் கூட்டத்திற்கு நெல்லையப்பரையும், பாரதியாரையும் அழைத்திருந்தார். அப்போது தம் பாடல்கள் சிலவற்றை அருமையாகப் பாடினார் பாரதியார்"[77] என்று குறிப்பிடுகின்றார்.

பாரதியார் உபதேசம்

தேசங்காக்கும் பணியில் தலைநின்ற மெய்யடியார்களுள் ஒருவர் சுப்பிரமணிய சிவா. அவர் நோய்வாய்ப்பட்டிருக்கும்நிலையில் அவருக்கு உதவுவது தேசக்கடமை என்று பாரதியார் கருதினார். அதனால், 7.1.1921 அன்று சென்னை தம்புச் செட்டி தெருவில் உள்ள சாந்தாச்சிரம உரையில் அவர் நிலை குறித்து நெகிழ்வோடு உரை நிகழ்த்தியிருக்கின்றார். அவருக்கென உண்டியல் ஏந்தி நிதி வசூல் செய்யப் பெற்றிருக்கின்றது. அத்தொடு நில்லாமல் சுதேசமித்திரன் இதழானது இக்கூட்டச் செய்தியை, 'ஸ்ரீபாரதியாரின் உபதேசம்' என்ற தலைப்பில் செய்தியாக்கி, சிவாவுக்கு நிதி உதவி செய்ய அவர்தம் முகவரியையும் தந்திருக்கின்றது. ஆக, 'தேசம் காத்தல் செய்' என்று பாரதியார் புதிய ஆத்திசூடியில் குறிப்பிட்டதுபோல்,

தேசபக்தர்களையும் காத்தல் செய்ய வேண்டிய கடப்பாட்டில் அவர் தலை நின்ற பாங்கை இந்நிகழ்வு சுட்டிநிற்கின்றது எனலாம்.

இனி, அச்செய்தி பின்வருமாறு:

"ஸ்ரீ பாரதியாரின் உபதேசம்: நேற்றிரவு தம்பு செட்டிவீதி சாந்தாச்ரமத்தில் ஸ்ரீமான் ஸி.சுப்பிரமணிய பாரதியார் தனது பாடல்களை இனிமையாய்ப் பாடினார். அச்சமயம் ஸ்ரீசிவம் நிதிக்கு உண்டி வசூல் செய்யப்பட்டது. முடிவில் ஸ்ரீ பாரதியார் சபையோரை நோக்கி அடியிற் கண்டபடி உபன்யாஸித்தார். வந்தே மாதரம் என்று சொல்வதே ராஜத்துரோகமெனக் கருதப்பட்ட நாள் முதல் ஸ்ரீசுப்பிரமணிய சிவம் ஸ்ரீபாரத மாதாவுக்கு இடைவிடாது பக்தி செய்துவந்ததாலும் கஷ்ட மடைந்திருக்கிறார். தேச சேவையிலீடுபட்டு நொந்து மெலிந்திருக்கும் அவ்வீரருக்கு உதவி புரிவது ஸ்ரீ பாரதமாதாவுக்குச் செய்த தொண்டாகும். இச்சமயத்தில் தேச சேவை செய்யப் பல தொண்டர்கள் வேண்டும். பழைய தொண்டர்களை நீங்கள் ஆதரிக்கா விட்டால் புதுத்தொண்டர்கள் எங்ஙனம் துணிந்து முன்வருவர்? இன்னும் ஸ்ரீசிவத்தின் கைங்கர்யம் பாரதமாதாவுக்கு மிகவும் இன்றியமையாதது. அவர் தேறி மீண்டும் தமது கடமையைச் செய்வது உங்களைப் பொறுத்து நிற்கிறது. ஆகவே சிவத்தை ஆதரித்து மாதாவை அகமகிழச் செய்யத் தவறாதீர்கள். ஸ்ரீமான் சுப்பிரமணிய சிவனுடைய வீட்டுவிலாஸம்: 11, அம்பட்டன் வாராவதி ரஸ்தா, திருவல்லிக்கேணி. பணம் அனுப்புவோர் அவருடைய மேற்கண்ட விலாஸத்துக்கு நேராகவே அனுப்பிவிடுதல் நன்று."[78]

### வெளியூர்க் கூட்டங்களில்...

சென்னையில் இருந்த காலத்தில் பாரதியார் உள்ளூர் நிகழ்வுகளில் பங்கேற்றதோடு, வெளியூர் அன்பர்களின் அழைப்பையும் ஏற்றுச் சென்று பல ஊர்களில் தங்கிச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தி யிருக்கின்றார்.

அந்த வகையில், கூடலூர் மற்றும் திருவண்ணாமலை ஆகிய இடங்களில் பாரதியார் ஆற்றிய உரைகள் நாட்டின் தற்(அக்)கால நிலையைப் பற்றியதாக அமைந்திருந்தன. முன்னர் நாடு திகழ்ந்த பெற்றி, தற்கால நிலை, இனி வருங்காலம் இந்தியாவிற்கு வழிகாட்டப் போகும் பாங்கு பற்றியெல்லாம் பல்லாயிரக்கணக்கான மக்களின் முன்னால் நம்பிக்கையோடு எடுத்து மொழிந்திருக்கின்றார். சென்ற இடந்தோறும் சிறப்பான வரவேற்பினைப் பெற்ற பாரதியார், திருவண்ணாமலையில் உடல்நலக்குறைவோடு இருந்தபோதிலும் உரை நிகழ்த்தாமல் இருக்கவில்லை. அதனால் அடிக்கடி அரங்கைவிட்டு வெளிவந்து மீண்டும் அரங்கேறியிருக்கின்றார். உரைக்

கிடையில், 10 நிமிட இடைவெளிப் பொழுதிலும் அக்கூட்டம் பாரதியாரின் வருகைக்காகப் பொறுமையுடன் காத்திருந்து கேட்டது சிறப்பு. இந்துக்களோடு, முஸ்லீம் சமயத் தலைவர்களும் மக்களும் இரயில் நிலையத்திற்கு வந்து மேளதாள வாத்தியத்துடனும், கொடிகளுடனும் வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்றிருக்கின்றார்கள் என்பதும் மகிழ்வளிக்கும் செய்தி. இத்தகு நிகழ்வுகளைச் சுதேசமித்திரன் இதழ்கள் பின்வருமாறு செய்தியாக்கி யிருக்கின்றன.

கூடலூரில் பாரதியார்

கூடலூர், 25.3.21. ஸ்ரீமான் ஸி.சுப்பிரமணிய பாரதி சென்னையிலிருந்து புறப்பட்டு வியாழக்கிழமை காலை இவ்வூருக்கு வந்துசேர்ந்தார். ஸ்டேஷனில் அவரை இவ்வூர் ஹிந்து முஸ்லீம் தலைவர்கள் வரவேற்றனர். பெரிய ஜனக்கூட்டமும் வந்திருந்தது. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து பாரதியார் மேளவாத்தியங்களுடனும் கொடிகளுடனும் வந்தே மாதர கோஷத்துடனும் நகருக்கு அழைத்துச் செல்லப்பட்டார். மாலையில் ஹரத்தைக் காண முஸ்லீம் மசூதிக்கருகிலுள்ள பெரிய மைதானத்தில் 5000 ஜனங்களடங்கிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. மிஸ்டர் பாரதியைக் கண்ட ஜனங்கள் சந்தோஷக் கடலில் மூழ்கி மிகவும் உற்சாகம் காட்டினார்கள். இவ்வளவு வைபவங்களுக்கிடையே மிஸ்டர் பாரதியார் எழுந்து, தற்கால நிலைமையும் நமது கடமையும் என்ற விஷயத்தைக் குறித்து இரண்டுமணி நேரம் உபந்யசித்தார். ஜனங்கள் மிகவும் உபந்யாசத்தைக் கேட்டுப் பரவசமடைந்து விட்டனர். இன்றைய தினம் மாலை நியூ டவுனில் இன்னொரு உபந்யாசம் நடைபெறும் என்று ஒரு நிருபர் தந்தி மூலம் அறிவிக்கிறார்.[79]

திருவண்ணாமலையில் பாரதியார்

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் நேற்று மாலை கோவிலுக்கு எதிரில் ஒரு பெரிய பொதுஜனக் கூட்டத்தில், இந்தியாவின் எதிர்காலநிலைமை என்ற விஷயத்தைக் குறித்து ஓர் உபந்யாசம் செய்தார். நமது வேதங்களில் வெகு நாளைக்கு முன்பாகக் கூறப்பட்டுள்ள ஏகை சுபாவம் என்ற தத்துவத்தை இப்பொழுதுதான் ஐரோப்பியர்கள் கண்டுகொண்டிருக்கிறார்கள் என்றும், இந்தத் தத்துவத்தைக் கொண்டுதான் நம் பாரதநாட்டின் எதிர்கால நிலைமை சீர்படுத்தப்படவேண்டுமென்றும், தேசீய விடுதலை அல்லது ஸ்ராஜ்யத்திற்கும் இந்த மார்க்கமே தக்க கருவியாய் இருந்து இந்தியாவே அதற்குத் தலைமை ஸ்தானம் வகிக்க வேண்டுமென்றும், உலகத்தில் நடைபெறும் சம்பவங்களினால் நாம் அப்பேர்ப்பட்ட

பாதையில் போய்க் கொண்டிருக்கிறோமென்றும், இந்தியாவின் விடுதலைக்கு எதிரிடையாய் உள்ளவர்களையும் கடவுள் சரியானபடி தண்டித்து வருகிறார்களென்றும், கூடிய சீக்கிரத்தில் நாம் விடுதலை யடைவோம் என்றும் ஸ்ரீ பாரதியார் பேசினார். ஊரெங்கும் இப் பிரசங்கம் ஒரு மஹத்தான பரபரப்பை உண்டாக்கிவிட்டதென்று ஒரு நிருபர் தந்தி மூலம் அறிவிக்கிறார்.[80] என்பது சுதேசமித்திரன் இதழில் வெளியானது.

திருவண்ணாமலைத் திருக்கோயிலில்...

தெருக்கூட்டங்களில் மட்டுமன்றித் திருக்கோயில் வளாகத்திலும் தேசியம் மற்றும் அரசியல் சிந்தனைகளையும் பாரதியார் பேசியிருப்பது கவனத்திற்குரியது. அப்படியான உரை திருவண்ணாமலைத் திருக்கோயில் வளாகத்தில் அரங்கேறிய செய்தியினைச் சுதேசமித்திரன் பதிவு செய்கின்றது. இக்கூட்டத்தில் தான் பாரதியார் நலக்குறைவு காரணமாகக் கூட்டத்திடையே வெளிவந்து திரும்பச் சென்று உரை நிகழ்த்த நேர்ந்திருக்கின்றது.

"ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி: ஸ்ரீ அருணாசலேசுவரர் கோயில் பதினாறு கால் மண்டபத்தில் ஸ்ரீமான் ஆர்.வி.கிருஷ்ணசாமி ஐயரின் அக்கிராசனத்தின்கீழ், 3ந்தேதி ஒரு பொதுக்கூட்டம் கூடிற்று. சுமார் ஆயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள். மித்திரன் உபபத்திராதிபர் ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியார் இக்கூட்டத்தில் பிரசன்னமாகி, 'இந்தியாவின் தற்கால நிலைமை' என்னும் விஷயமாய் நீண்டதோர் பிரசங்கம் தெள்ளிய தமிழ்நடையில் செய்தார். இந்தப் பிரசங்கம் கேட்போர் மனத்தில் உற்சாகத்தையும் எழுச்சியையும் தரத்தக்கதாயிருந்ததென்பதற்கையமே யில்லை. தற்கால இந்தியா உலகத்திற்குப் பரமாசாரியனாக விளங்கிவிட ஏதுவிருக்கிற தென்பதற்கு உதாரணங்கள் பல காட்டினார். இராஜீய ஞானத்தில் இனி ஒப்புவமையில்லை என்று சொல்லும்படியான மகாத்மா காந்தி இந்தியாவில் உற்பத்தியாகியிருக்கிறார் என்றும், விஷயங்களைக் கற்றுக்கொண்டவரையில் இந்தியா சிஷ்யனாக இருந்ததென்றும், இனி ஆசாரியனாக இருக்கும் பதவியை வகிக்க முன்வந்து விட்ட தென்றும், எடுத்துக்காட்டினார். இனி ஸ்ராஜ்யம் தமக்குச் சித்திக்கப்போகிறது நிச்சயமென்றும் தைரியஞ்சொன்னார்.

ஸ்ரீமான் பாரதியின் வரவை எதிர்பார்த்துக் கூட்டம் அதிகமாய்க் கூடிற்று. ஆனால் அவர்க்கு எதிர்பாராது ஏற்பட்ட தேக அசௌகரியத் தினால் அவர் பிரசங்கம் செய்யும்போது இடையிடை மீட்டிங்கை விட்டு வெளிச்செல்ல நேர்ந்தது என்றாலும், அவர் 10 நிமிஷ காலத்திற்குள் மீண்டும் வந்து 'ஜயபேரிகை கொட்டடா, கொட்டடா'

என்று பாட்டுப்பாடியது ஜனங்களுள் ஒரு உற்சாகத்தை எழுப்பியது. அவரும் அந்தப் பாட்டுப் பாடிப் பிரசங்கத்தை மன எழுச்சியுடன் செய்ததைத் திருவண்ணாமலை நிருபர் எழுதுகிறார்."[81]

இந்த வரிசையில் பாரதியார் வெளியூரில் சென்று பங்கேற்ற கூட்டம் ஈரோடு வாசக சாலைக்கூட்டமாகும். அது குறித்து ஆன்மிகச் சொற்பொழிவு என்னும் தலைப்பில் காணலாம்.

பாரதியாருக்கான கூட்டம்

இவ்வாறு எத்தனையோ கூட்டங்களை முன்னின்று நடத்தியும், பின்னிருந்து இயக்கியும் உடனிருந்து உரையாற்றியும் சிறப்பித்திருக்கின்றார் பாரதியார். அவரது உரைக்கும் பாட்டுக்கும் எப்போதும் மயங்கிக் குழுமி யிருக்கும் மக்கள் வெள்ளம்.

சென்னையில் அவ்வாறான நிகழ்வு ஒன்றைப் பாரதியன்பர் வ.ரா. தமது நூலில் பதிவு செய்கின்றார்.

"பாரதியார் புதுவையிலிருந்து சென்னை வந்தபின், திருவல்லிக்கேணிக் கடற்கரையில் அடிக்கடி கூட்டம்போட்டுப் பேசுவது வழக்கம். பாரதியாரின் சொற்பொழிவைக் கேட்க, இளைஞர்கள் நூற்றுக்கணக்கில் கூடிவிடுவார்கள்; வெகு நேரம் காத்துக் கொண்டிருப்பார்கள். "பாரதியாரின் சொற்பொழிவு வெறும் பிரசங்கமா? அது சண்டமாருதமல்வா?" என்று அவர்களில் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இவ்வாறு கூட்டப்பட்ட கூட்டங்களில் ஒன்றில், ஸ்ரீசத்திய மூர்த்தியும் இன்னொருவரும் (அவர் பெயர் நினைவில் இல்லை) முதலில் பேசிவிட்டார்கள். அது பாரதியாருக் காகவே கூட்டப்பட்ட கூட்டம் என்பதைக்கூடக் கவனிக்காமல் சத்தியமூர்த்தி துடுக்காக, 'நீங்கள் வழக்கமாகக் கேட்கும் பாரதியார் நாளைக்குப் பேசுவார். இன்றைக்கு இத்துடன் கூட்டம் முடிவு பெற்றது' என்று அறிவித்துவிட்டுப்போய்விட்டார். ஆனால் கூட்டம் கலைய வில்லை. பாரதியார் எழுந்திருந்தார். ஸ்ரீமான் சத்தியமூர்த்திக்கு அழகான சொற்களில், விதரணையாகச் சன்மானம் கொடுத்தார். பிறகு, காட்டாற்று வெள்ளம் கரைபுரண்டு ஓடுவதுபோல் ஓயாது என்று சொல்லும்படியான கரகோஷங்களுக்கு இடையே, பாரதியார் பிரசங்க மாரி பொழிந்தார். அன்றிரவு கூட்டம் கலையும்பொழுது மணி பதினொன்று இருக்கும். அன்றைக்குத்தான் என்றும் உயிரோடு இருக்கக்கூடிய, 'பாரத சமுதாயம் வாழ்கவே!' என்ற அற்புதப் பாடலைப் பாரதியார் பாடினார். கூட்டம் பதினொரு மணிவரையில் கலையாமல் இருந்ததற்கு வேறு சாரணமும் வேண்டுமா?"[82]

பாரதியாரும் அரசியலும்

பாரதியாரின் பொழிவுகளில் ஆன்மிகம், இலக்கியம், சீர்திருத்தம் முதலான கூறுகள் அமைந்தபோதிலும் அவர் தமக்கான அரசியல் தடத்தை விட்டு விலகியதே இல்லை. அந்தவகையில் அரசியலையும், அவரையும் பிரிக்க இயலாது என்பதற்கு ஒரு நிகழ்வைச் சுட்டலாம்.

சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் திருக்குறள் பற்றிய கூட்டத்திற்குத் தலைமை தாங்கியிருக்கின்றார் பாரதியார். அப்போது நடந்ததாகத் தாம் கேள்விப்பட்டதைச் ச.து.சு.யோகியார் நினைவுகூர்கிறார்: "நான் கேள்விப்பட்ட மற்றொரு பிரசங்கத்தைப் பற்றியும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேன். சென்னை முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூலில் ஒரு நாள் திருக்குறளைப் பற்றிய பேச்சு; தலைவர் பாரதி. பிரசங்கம் ஆரம்பிக்குமுன் பயந்த சுபாவமுள்ள ஒருவர் பாரதியாரிடம் 'அரசியலைக் குறித்து... அப்படி, இப்படி' என்று ஏதோ தடை போட்டாராம். அன்றும் வழக்கப்படிப் பிரசங்கங்கள் நடந்தன; பாரதி முறை வந்ததும், அவர் எழுந்தாராம்; பாடினாராம்.

"உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரியம்மாஎங்கள் முத்துமாரி"

என்ற முத்துமாரிப்பாட்டு. ஓர் அழகான கட்டத்தில் பாரதிக்குப் பாட்டு மறந்துவிட்டது.

"துணிவெளுக்க மண்ணுண்டு எங்கள் முத்துமாரியம்மா -
எங்கள் முத்துமாரி
தோல் வெளுக்கச் சாம்பருண்டு எங்கள் முத்துமாரியம்மா
எங்கள் முத்துமாரி
மணி வெளுக்கச் சாணையுண்டு எங்கள் முத்துமாரியம்மா
எங்கள் முத்துமாரி

இந்த இடத்தில் பாட்டுத்தடைப்பட்டுவிட்டது. முத்துமாரீ முத்துமாரீ" என்று மேலும், ஆவேசம் பொங்க முழங்கலானார் பாரதி; அவ்வாவேசம் மற்றவர்களையும் பற்றிக் கொண்டதாம். எல்லோரும் தம்மை மறந்தனராம். 'முத்துமாரீ, முத்துமாரீ' என்ற அநுநாதம் செய்தார்களாம். திருக்குறள் கூட்டம் தேவியின் பஜனைக் கூட்டமாக மாறிவிடும்போல் தோன்றியதாம். நல்ல வேளை, பாரதிக்குப் பாட்டும் நினைவு வந்துவிட்டது.

"மணிவெளுக்கச் சாணையுண்டு எங்கள்முத்துமாரி - எங்கள் முத்துமாரி
மனம் வெளுக்க வழியில்லையே எங்கள் முத்துமாரி - எங்கள் முத்துமாரி"

என்று மேலே மேலே 'பிணிகளுக்கு மாற்றுண்டு, பேதமைக்கு மாற்றில்லை, அணிகளுக்கோர் எல்லையில்லை எங்கள் முத்துமாரி' என்றெல்லாம் பாட்டை முடித்தார். அப்பாட்டின் பரவசத்திற் சிக்கிய மற்றவர்களும் பாடினர். ஆனால், பிரசங்கமோ இரண்டே வரிகள் தாம்.

"கட்டுப்பாட்டுக்குள் நின்று கொண்டு என்னால் பேசமுடியாது. திருக்குறள் ரொம்ப நல்ல புஸ்தகம். எல்லோரும் படிக்க வேண்டிய நூல்".

அவ்வளவுதான்; பாரதி உட்கார்ந்துவிட்டாராம்."[83]

ஆக, கட்டுப்படுத்தும் அடிமைத்தனத்தை உடைத்தெறிந்து எல்லோரும் எல்லாமும் பெற்றுய்ய வழிவகை செய்யும் இந்திய அரசியல் தன்மை குறித்துப் பேசத் தடை சொன்னவர்களின் மனம் வெளுக்க வழிவேண்டி முத்துமாரியைப் பாடி முடிக்கின்றார். துணிவெளுப்பையும், தோல் வெளுப்பையும் கவனத்தில் கொள்ளுகின்ற இம்மனிதர்களின் மனம் வெளுக்க வேண்டும் என்கின்ற பாரதியாரின், ஆன்மிக, இலக்கிய நோக்கம் இங்கு அரசியல் நோக்கமாகவே வெளிப்படுகின்றது.

பாரதியாரின் கடைசிக்கூட்டம்

கூடிய மட்டிலும், பாரதிபணியில் உடனின்று இயங்கிய வி.சக்கரைச் செட்டியார், பாரதியாரின் கடைசிக்கூட்டம் பற்றிய காட்சியை நினைவு கூர்வதோடு, பாரதியாரின் கடைசிப் பயணத்தையும் தத்துவநோக்கோடு பதிவு செய்கின்றார்.

"பாரதியாரின் கடைசித்தோற்றம் கடற்கரையில் நடந்த ஓர் ஒத்துழையாமைக் கூட்டத்திலாகும். அவரைத் தமது பாடல்களொன்றைப் பாடும்படி ஜனங்கள் கேட்ட போது, 'பாரத ஸமுதாயம்' என்ற பாடலைப் பாடினார். அப்பாடல் துணிவான கருத்தும், உயர்ந்த மனவெழுச்சியும் பொருந்தியதாகும்.

பின்னர் அவர் நோயுற்றார். 1921 வருடம் செப்டம்பர் மாதம் 11 தேதி இருள் மிகுந்த இவ்வுலகினின்று உண்மையும் ஒளியும் நிலவும் உலகில் ஏகினார். ஆங்கு அவர் பிறவியின் அரிய ஆதர்சம் மஹோன்னதமாய் சபலமடையுமென நம்புகிறேன். மயானத்தில் நான் அவரது உடலத்தைக் கேவலம் ஓர் எலும்புக்கூடாகவும் தீக்கிரையாவதையும் கண்டேன். ஆயினும் ஒருகால் அஃது அவரது எழுச்சி மிகுந்த ஆத்மாவுக் குற்ற கருவியாக இருந்ததன்றோ? ஆனால், இந்த மாமிசத்தோற்றம் அழிவதேயாகும். ஆத்மாவோ அழிவின்றி விளங்குவதாகும். அதிர்ஷ்ட லக்ஷ்மியின் வலைக்கும்

அகங்காரிகளுடைய ஏளனத்திற்கும் உட்படாமல் விலகி நிற்பது அதுவே" என்று வி.சக்கரைச் செட்டியார் குறிப்பிடுகிறார்.[44]

பாரதியாரின் பாதை

மன,மொழி,மெய்களால் தம் வாழ்நாள் முழுவதும் நாட்டு நலனுக்காகத் தொண்டு செய்த பாரதியார் நாட்டை வாழ்த்திப் பாடிய பாடலோடு மேடையிலிருந்து விடை பெற்றிருக்கின்றார். தொடக்க முதல் நிறைவுவரை அவர் தாம் வகுத்துக்கொண்ட கடப்பாட்டி லிருந்து விலகாது இயங்கிய தன்மைகளை அவர்தம் வாழ்வு, மற்றும் வாக்குக் கொண்டு நோக்கும்போது, காலந்தோறும் அவர்தம் சிந்தனைகள் மெருகேறி வந்திருப்பதைக் காணமுடியும். எந்தவொரு ஒளிவுமறைவும் இன்றி, அவர் நல்லது என்று கண்டு தெளிந்ததை ஊருக்குச் சொல்வதைக் கடமையாகவே கொண்டிருந்தார்.

அந்தவகையில் அவருடைய அரசியல் சிந்தனைகள், செயற் பாடுகள், குறிப்பாக, அரசியல் சொற்பொழிவுகள் பரிணாம வளர்ச்சி பெற்றிருக்கின்றனவே ஒழிய, முரண் பாடுற்றிடவில்லை. அதனை முரண் எனக் கருதுவோர் மீண்டும் அவர்தம் படைப்புகளை ஆழ நோக்கல் இன்றியமையாதது.

திலகர் தலைமையில் தொடங்கிய பாரதியாரின் அரசியல் பிரவேசம் காந்தியின் தலைமையிலான காலத்தில் நிறைவு பெற்றிருக்கின்றது. இவ்விடைப்பட்ட காலத்தை முன்னிறுத்திப் பாரதியார் பற்றிய கணிப்பில் குழம்பும் ஆய்வாளர்களுக்கு ந.இரவீந்திரன் அளிக்கும் விளக்கம் இங்கு கருதத்தக்கது.

"திலகரை சுதந்திர இயக்கத் தலைவராக வரித்தபோதே அவருக்கு மாறான கோட்பாடுகளான சாதி ஒழிப்பு, பெண்விடுதலை எனும் சமூக விடுதலை அம்சங்களிலும் நாட்டம் செலுத்தியவர் பாரதி. அரவிந்தருடன் ஆன்மிக ஆய்வில் இணைந்திருந்தபோதிலும் மன ரீதியான அடிமைத்தனங்களை உடைத்தெறியும் இலட்சியத்தால் அவரோடு முழுமையாக ஒன்றாமல் விலகிச் சென்றவர் பாரதி. காந்தியத்தின் சாரத்துடன் ஒட்டுறவில்லாதிருந்தபோதிலும் கிளர்ச்சிதனை வளர்ப்பவராய்க் கண்டதும் சுதந்திரப்போராட்ட இயக்கத்தின் தலைவராய்க் காந்தியைத் தயக்கமின்றி ஏற்றவர் பாரதி. இவற்றைக் கொண்டு பார்க்கும்போது பாரதியை முரண்பாடுடையவர் என்பதா? தத்துவ ரீதியாகவும் பாரதி தன்னை அத்வைத வேதாந்தியெனக் கூறியபோதிலும் பல அம்சங்களில் அத்வைதக் கோட்பாட்டில் அத்வைத வேதாந்தத்தைவிட சாங்கியமே சரியென்றவர். அவற்றைப் பார்க்கையில் அவரே தன்னை அத்வைதி யாகக் கருதினும், அத்வைத வேதாந்தியாகக் கொள்ள முடியாதவர்.

அது அனைத்துக்கோட்பாடுகளிலும் மேலோட்டமாகக் கவனஞ் செலுத்தித் தனக்குகந்தவற்றை ஏற்றுக் கொள்பவர் எனக் காட்டுவதா? தத்துவ நோக்கிலும், நடைமுறையிலும் இத்தகைய போக்குகள் காணப்படுவது, அவர் காலத்தில் இந்திய மெய்ஞ்ஞானம் அடியந்த மான மாற்றத்திற்கு உட்படும் வரலாற்றுப் போக்குக் கொண்டிருந் தமையினாலாகும். அந்த மாற்றுப்போக்கை அதன் முன்னேற்றத் திசைவழியே முழுமையாக வெளிப்படுத்தியதிலேயே பாரதியின் மேதைமை புலப்படுகிறது. அத்திசை வழியே இயங்கித் தத்துவத் தளத்தில் நிலை மறுப்பின் நிலை மறுப்பாளராகச் செயற்பட்ட பாரதியின் இந்த வரலாற்றுப் பாத்திரம் காரணமாகவே, பலரும் முரண் பட்ட ஒருவராக அவரைக் காணக் காரணமான குணாம்சங்கள் அவரிடம் காணப்பட்டது. மாறாக, பாரதியோ தெளிந்த தத்துவ ஞானச்செழுமையுடன் தனது சமூகப் பங்களிப்பை முன்னெடுத்துச் சென்றிருக்கிறார்"[83] என்பது தெளிவாகின்றது.

இதனைத் தெளிவாக விளங்கிக்கொள்ள பாரதியாரின் ஆன்மிகச் சொற்பொழிவுகள் துணைசெய்யும் என்பதால் இனிவரும் தலைப்பில் அவற்றைக் காணலாம்.

**சான்றெண் விளக்கம்**


1. கோ.கேசவன், பாரதியும் அரசியலும், ப. 181.
2. வ.ரா., மகாகவி பாரதியார், ப.26.
3. பெ.தூரன், பாரதிதமிழ், ப.86.
4. மேலது.
5. ரா.அ.பத்மநாபன்(தொ.ஆ),, பாரதியைப்பற்றி நண்பர்கள், ப.33.
6. ரா.அ.பத்மநாபன்.(தொ.ஆ), பாரதி புதையல் பெருந்திரட்டு.ப267.
7. ரா.அ.பத்மநாபன்(தொ.ஆ),, பாரதியைப்பற்றி நண்பர்கள், , ப.37.
8. சீனி.விசுவநாதன், பாரதி புதிய உண்மைகள், பக்.98-99.
9. கோ.கேசவன், பாரதியும் அரசியலும், பக்.76-79.
10. ரகுநாதன், பாரதி காலமும் கருத்தும், ப.340.
11. கோ.கேசவன், பாரதியும் அரசியலும், பக். 81-82.
12. சீனி. விசுவநாதன், பாரதி புதிய உண்மைகள், பக்.102-103.
13. சீனி. விசுவநாதன்,சில புதிய உண்மைகள், பக்.110-111.
14. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள், ப.194.
15. ப.கோதண்டராமன், பாரதியுகம், ப.37.
16. மேலது, பக்.39-40.
17. ரா.அ.பத்மநாபன்(தொ.ஆ),, பாரதியைப்பற்றி நண்பர்கள், , ப.37.
18. சீனி. விசுவநாதன், காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொ-3, ப. .
19. திரு.வி.க. வாழ்க்கைக்குறிப்புகள், ப.195.

20. ஆ.இரா.வேங்கடா சலபதி, வ.உ.சி.யும், பாரதியும், , பக்.148-149.
21. சீனி. விசுவநாதன், காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொ-3, பக்.822.
22. நாவலர் பாரதியார். பாரதி சரித்திரம், பக்.36-38.
23. சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, ப.269.
24. கோ. கேசவன், பாரதியும் அரசியலும், ப. 77.
25. ஆ.இரா.வேங்கடாசலபதி, வ.உ.சி.யும், பாரதியும், , பக்.144-145.
26. சீனி. விசுவநாதன், கா.பா.ப. தொ-3, பக்.160-161.
27. ஆ.இரா.வேங்கடாசலபதி, வ.உ.சி.யும், பாரதியும், பக்.26-27.
28. செல்லம்மா பாரதியார் சரித்திரம், ப..
29. பாரதியார் கதைகள், பக்.41-42.
30. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.296-297.
31. கோ.கேசவன், பாரதியும் அரசியலும், பக்.76-79.
32. ப.கோதண்டராமன், பாரதியுகம், ப.43.
33. கோ.கேசவன், பாரதியும், அரசியலும், ப.83.
34. மேலது, ப.83.
35. ரா.அ.பத்மநாபன்(தொ.ஆ), பாரதியைப்பற்றி நண்பர்கள், பக்.39-41.
36. ரகுநாதன், பாரதி காலமும் கருத்தும், பக்.270-271.
37. மேலது.
38. சீனி. விசுவநாதன், காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொ-3, பக்.130-131.
39. மேலது, பக்.138-139.
40. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக். 334-33.
41. மேலது,, பக்.341-343.
42. மேலது, ப.342.
43. ரா. அ. பத்மநாபன், (தொ.ஆ) பாரதியின் கடிதங்கள், ப.32.
44. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, ப.354.
45. ஆ.ரா.வேங்கடாசலபதி, வ.உ.சி.யும், பாரதியும், ப.35.
46. பாரதியார் கதைகள், ப.42.
47. ரகுநாதன்,பாரதி, கருத்தும் காலமும், ப.358.
48. ரா.அ.பத்பநாபன். (தொ.ஆ), பாரதியைப்பற்றி நண்பர்கள், பக்.42-43.
49. கோ.கேசவன், சோசலிசக் கருத்துகளும் பாரதியாரும், பக்.138-139.
50. ரகுநாதன்,பாரதி, கருத்தும் காலமும், ப..
51. (ரா.அ.பத்மநாபன்,(தொ.ஆ) பாரதியின் கடிதங்கள், பக்.43-44.
52. பாரதியார் கவிதைகள், வீரசிவாஜி,பா.எ.-4-12,ப.90.
53. மேலது, பா.அ.-116-122, ப.90.
54. கோ.கேசவன், பாரதியும் அரசியலும், பக்.181-182.
55. ரா.அ.பத்மநாபன், (தொ.ஆ), பாரதியின் கடிதங்கள், ப.54.
56. வ.ரா, மகாகவி பாரதியார், பக். 50-51.
57. முனைவர் சொ.ஏழுமலை, காங்கிரசு அரசியலில் பாரதி, மகாகவி பாரதியார் கருத்தியல் நெறி,முனைவர் அ.அறிவுநம்பி, முனைவர் இரா. சந்திரசேகரன் (தொ.ஆ), பக்.93-94.

58. பாரதியார் கவிதைகள், பராசக்தி,பா.எண்-2-3, ப.269
59. மேலது.
60. மேலது.
61. மேலது.
62. மேலது.
63. மேலது.
64. மேலது.
65. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.473-479.
66. மேலது, ப. 492.
67. வை. சச்சிதானந்தன், பாரதியார் வாழ்க்கையும், நூல்களும், ப. .
68. சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.500-501.
69. தி.முத்துக்கிருஷ்ணன், மகாகவி பாரதியார் வாழ்க்கைச் சித்திரம், மே.கா, ப.325.
70. வ.ரா, மகாகவி பாரதியார், பக்.164-165.
71. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்.236-237.
72. பாரதியார் கவிதைகள், முருகா முருகா. பா.எண்-2.ப.232
73. மேலது, பா.எண் -3.ப.232
74. மேலது, பா.எண் -5 ப.232
75. மேலது, ஹிந்துமதாபிமான சங்கத்தார்,பா.எண்-7, ப. 572.
76. சீனி.விசுவநாதன், தமிழகம் தந்த மகாகவி,ப.428.
77. ப.கோதண்டராமன், பாரதி யுகம், ப.94.
78. ஆ.இரா.வேங்கடாசலபதி,(தொ.ஆ) விஜயா கட்டுரைகள், (சுதேசமித்திரன், 8.1.1921) ப.423.
79. மேலது, (சுதேசமித்திரன், 25.3.1921)ப.425.
80. மேலது, (சுதேசமித்திரன், 3.5.1921)ப.426.
81. மேலது,(சுதேசமித்திரன், 5.5.1921)ப.427.
82. வ.ரா, மகாகவி பாரதியார், பக்.162-163.
83. பாலபாரதி ச.து.சு.யோகியார்,(மே.கோ) ஈரோட்டில் பாரதி (தொ.நா. பக்.- குறிப்பிடப்படவில்லை.
84. வி.சக்கரைச்செட்டியார், "ராஜீய வாழ்வு" நாவலர் பாரதியார், பாரதி சரித்திரம், பக்.36-38.
85. ந.இரவீந்திரன், இந்துத்துவக் காலச் சூழலின் மறுவாசிப்பில் பாரதியின் மெய்ஞ்ஞானம், பக்.145-146.



## பாரதியாரின் ஆன்மிகச் சொற்பொழிவுகள்

இந்திய வாழ்வியல் மற்றும் சிந்தனைப்போக்குகளின் ஊடே இழையும் ஆன்மிகச் சிந்தனைகள் சமயங்களோடு தொடர்புடையவை யாயினும், அவை கடந்தவை. வேத, உபநிடத, சைவ, வைணவ, சாக்த, சமண, பௌத்த சிந்தனைகளைத் தம் வாழ்நிலைக் கேற்பத் தேர்ந்துகொண்டோ, தவிர்த்தோ தமக்குத் தக்கபடி வடிவமைத்துக் கொண்டோ ஏற்றுக்கொள்ளுகின்ற அல்லது மறுதலிக்கின்ற சுதந்திரம் இந்தியச் சிந்தனை மரபுக்கு உண்டு. .

அந்தவகையில் தத்தமது காலத்தில் ஆன்மிகச் சிந்தனைகளை வடிவமைத்து வழங்கிய பெருமக்கள் வரிசையில் இந்த நூற்றாண்டில் மகாகவி பாரதியார் முன்னிற்கின்றார். வள்ளலார் சொன்னதுபோல், வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் வந்து வள மிகுந்த சிந்தனைகளை வாழ்வியல் நெறிகளாக்கி வாழ்ந்து காட்டியவர் பாரதியார்.

பாரதியாரின் ஆன்மிகத்தளம்

"விட்டுவிடுதலையாகி வீடாகிய மோட்சம் பெறும் தன் முன்னேற்ற சிந்தனையாக, மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையிலான தனி அனுபவமாக மகாகவி ஆன்மீகச் சிந்தனையை முன்வைக்கவில்லை. மாறாக, மக்கள் கூட்டம் முழுவதையும் எவ்வித வேறுபாடுமின்றி மேன்மை பெறவும் தளைகளிலிருந்து விடுபடப் போராடி உரிமை பெற்றுச் சமமாக அச்சமின்றி வாழவும் உதவுவதாக ஆன்மீகச் சிந்தனைகளை முன் வைக்கிறார். தன்னனுபவம், தன் முன்னேற்றம் என்ற நிலையிலிருந்து ஜன சமூகம் முழுவதற்குமான மேன்மை என்பதான பரந்த அனுபவமாக, மக்கள் அனைவரின் முன்னேற்றமாக ஆன்மீகத்தைக் காட்டுவது அவருடைய சிந்தனை. மனிதனுக்கு அச்சத்தை நீக்கி, கட்டுக்களை எதிர்த்துப் போராடும்

குணத்தையும் வாழ்க்கை பற்றிய நம்பிக்கையையும் ஏற்படுத்துவதாக ஆன்மீக வளர்ச்சிக்கோட்பாட்டை மகாகவி விளக்குகிறார். வேதகாலக் கவிஞர்களின் கவிதைகள் தந்த பாக்தி, சமயச் சிந்தனைகளில் இருந்து அவர் காலத்திற்கு முன் வாழ்ந்த தத்துவராயர், தாயுமானவர், வள்ளலார், கோபாலகிருஷ்ண பாரதியார் வரையிலுமுள்ள பக்திக் கவிஞர்களின் தாக்கம் அவரிடம் உண்டு. நாட்டுப்புறச் சமயநெறி யிலுள்ள சிந்தனைகளும் ஆதிசங்கரரின் அத்வைதமும் இராமாநுசரின் விசிட்டாத்துவைதமும் அவரிடம் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. இவையனைத்திலு முள்ள சாரத்தை உள்வாங்கி தன்காலச் சூழலுக்கு ஏற்றமுறையில் மனிதனுக்கு அச்சமின்றி நம்பிக்கை தருவதையும் விடுதலை பெற்று உரிமையும் சமத்துவமும் பெற்று வாழ்வதையும் முன்வைக்கிறார். அவ்வாறு மனிதனுக்கு உதவும் உறவுகளாக (ஸர்வபந்துவாக) இறைவனை அவர் அடையாளம் காட்டுகிறார். இறுதியில் தெய்வம் நீ என்றுணர் என்று மனிதனைத் தெய்வமாக உயர்த்தும் அகம் பிரம்மாஸ்மி, தத்துவம் அஸி என்ற அத்வைத நிலைக்குப் புதிய விளக்கம் தருகிறார். ஆன்மீக வளர்ச்சிச் சிந்தனையின் புதிய முழுமையான வீச்சாகும் இது"[1] என்று பாரதியாரின் ஆன்மிகச் சிந்தனை குறித்து விளக்கமளிக்கின்றார் முனைவர் சு.வெங்கடராமன்.

### இளமைப்பருவந்தொடங்கி...

பாரதியாரின் ஆன்மிக வளர்ச்சிக்குத் தொடக்கத் தூண்டுகோலாக இருந்தவர் அவர்தம் தாய்வழிப்பாட்டனார். அவரோடு பாரதியார் புரிந்த வாதங்கள் நாத்திகத் தன்மை மேலோங்கியிருந்தவை. அக்காலத்தில் பாரதியார், தமது, "இளம்பிராயத்திலே தமது பெரிய தாத்தாவான அப்பாசாமி சிவனுடன் நாஸ்திக வாதம் செய்து பெரியவரைத் தர்க்கத்தில் வென்றுவிடுவாராம். அத்தகைய சந்தர்ப்பங்களில் தாத்தாவுக்குப் பெருங்கோபமூண்டு பேரனை அடிக்க ஓடி வருவாராம். பின்னும் அடுத்த நாள், மறுபடி எவ்விதமேனும் பேரனுக்குக் கடவுள் நம்பிக்கை ஏற்படுத்த வேண்டுமெனும் நல்ல எண்ணத்தால் வாதம் செய்யத் தொடங்குவார்களாம்"[2] என்று சகுந்தலாபாரதி குறிப்பிடுகின்றார். இதனை உறுதி செய்வதுபோல்,

"மாயைபொய்யெனல் முற்றிலும் கண்டனன்
மற்றும் இந்தப் பிரமத்தியல்பினை
ஆயநல்லருள் பெற்றிலன் தன்னுடை
அறிவினுக்குப் புலப்பட லின்றியே
தேயமீதெவரோ சொலுஞ்சொல்லினைச்
செம்மையென்று மனத்திடைக் கொள்வதாம்
தீயபக்தி யியற்கையும் எய்திலேன்!"[3]

என்ற பாரதியாரின் சுயசரிதைப்பாடல் விளங்குவதைக் காணலாம்.

எப்பொருள் எத்தன்மைத்தாயினும், யார்யார் வாய் கேட்பினும் அப்பொருளின் மெய்ப்பொருள் காணும் நல்லறிவு பாரதியாருக்கு இயற்கையிலேயே வாய்த்திருந்தது. மேலும், தன்னுடைய தொடர் தேடலின் காரணமாக, அறிவை நன்கு மெருகேற்றுக் கொண்டுவந்தார். அவரது தேடலுக்குக் குருவாகவும், தோழர்களாகவும், சீடர்களாகவும் வந்த அன்பர்கள் பலராவர். அவரவர் நிலையில் உரைக்கும் மொழிகளை உள்வாங்கி அவற்றைத் தம்மெய்யறிவுச் சுடரில் தீரக் கண்டறிந்து தன் கருத்தை உரத்து முன்வைப்பதில் பாரதியார் தனித் தன்மைமிக்கவராகத் திகழ்கின்றார்.

பாரதியாரின் ஆன்மிகப் பயணம்

மேற்சுட்டிய வண்ணம் பாரதியார் தொடங்கிய ஆன்மிகப் பயணமானது, இந்திய மரபுகளை அடிப்படையாகக் கொண்டது; அறிவியல் சார்ந்தது; அறவழிப்பட்டது. அதன் அடிப்படை தெளிவு; குழப்பமற்ற தெளிவு. பாரதியார் கவிதைவழி சொல்வதானால்,

"தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர
மொழிந்திடுதல்; சிந்திப்பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
கனவுபல காட்டல், கண்ணீர்த்
துளிவர உள்ளுருக்குதல், இங்கிவையெல்லாம்"[4]

ஒளிவளரும் தமிழ்வாணி அருளும் தொழில்கள். ஒருவகையில் தமக்குத் தொழில் என்று பாரதியார் வகுத்துக்கொண்ட கவிதையின் இயங்குநிலைகள். இதற்கான வழித் தடங்கள், செயற்களங்கள் அரசியலாக, ஆன்மிகமாக, இலக்கியமாக, சமுதாயச் சீர்திருத்தமாகப் பாரதியாரின் வாழ்வில் அமைந்திருந்தன. இவை தனித்தனியே பெயர் பெற்றிருந்தாலும், இவற்றின் மையமான வாழ்வு பொதுமையாகப் பாரதியாரால் காணப்பெற்றது. எல்லார்க்கும் எல்லாமும் என்பதான சமத்துவ விடுதலைச் சமுதாயத்தைக் கட்டமைக்கும் பணியில் இமைப் பொழுதும் சோர்வற்று இயங்கப் பாரதியார் பக்தியைத் துணையாகக் கொண்டார். பராசக்தியைத் தெய்வமாகப் போற்றினார். அத் தெய்வத்தைப் பெண்மையாகக் கண்டார். வாழ்வில், தாயாக, மனைவியாக, மகளாக, குழந்தையாக, வேலைக்காரப் பெண்ணாக வரும் அனைத்தும் பெண்மையும் சக்தியென்று தெளிந்தார். அதனை அனைவர்க்கும் பிரகடனப் படுத்தினார்.

இச்சக்தி, சிவனாக, இராமனாக, முருகனாக, விநாயகராக, அல்லவாக, கிறிஸ்துவாக, ஆணாக, பெண்ணாக, அலியாக, இயற்கையாக, தானாகப் பாரதியாரிடத்தில் தரிசனம் காட்டிற்று. அதனைத் தரிசிக்க எந்தவொரு கூட்டுக்குள்ளும் சிக்கிக்கொள்ளாது

பாரதியார் போல, விட்டுவிடுதலையாகி நின்றால் போதும். இம்மந்திரத்தைச் சிட்டுக் குருவியிடம் கற்றுக்கொண்டவர் பாரதியார். மானிடர்களிடத்து மட்டுமன்றி, இயற்கையின் ஒவ்வொரு இயங்கு நிலையிலிருந்தும் தமக்கான ஆன்மிக உபதேசத்தைப் பெற்றுக் கொண்டவர் பாரதியார். இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகாநந்தர், நிவேதிதாதேவி, திலகர் எனப் பெரிய குரு பரம்பரையே பாரதியாருக்கு உண்டு. அவர்கள் குருவென்பதற்காக, அவர்கள் சொன்ன அனைத்தையுமே வேதம் என்று கண்மூடித்தனமாக ஏற்றுக்கொண்டவரில்லர் பாரதியார். அவர்களையும் கடுமையாக விமர்சித்திருக்கிறார். இது பாரதியாரின் இயல்பு. இதேபோல் அரவிந்தர், வ.வே.சு. ஐயர், சிவா உள்ளிட்ட தம் நண்பர்களிடத்தும் நடந்துகொண்டிருக்கின்றார். எனினும் அனைவர்பாலும், அனைத்தின் பாலும் அளவற்ற அன்பு பொழியும் உள்ளம் பாரதியாருக்கு இருந்தது.

அன்பே அடிப்படை

பாரதியாரின் ஆன்மிகத்திற்கு அடிப்படை அன்பாகும். அந்த அன்பு பக்தியாக, தொண்டாக, கவிதையாகக் கனிந்து அவர்தம் சொல், செயல் அனைத்திலும் பரந்து நிற்பதைக் காணமுடிகின்றது. அந்த அன்பு தாயாகி ஈன்ற குழந்தை அருள். 'அருள் என்னும் அன்பு ஈன் குழவி' என்பது வள்ளுவர் வாக்கு.

அறிவியல் பார்வையிலான ஆன்மிகப் பொழிவு

சுமார் இருபத்துமூன்று இளைஞரான பாரதியார் அரங்கேறி முழங்கிய முதல் பொழிவு, ஆன்மிகப்பொழிவாக அமைகின்றது. அன்பு ஈன்ற அருள் ஆகிய 'கருணை' பற்றியது. பெரியோர்களையும் முதியோர்களையும் கூட்டி வைத்து மோட்ச உலகிற்கான வழிகளை சமயவழியில் அலசும் பொழிவு இல்லை. மாறாக, அறிவியல் பார்வையில் விரியும் ஆன்மிகம் எது என அடையாளம் காட்டும் உரை: அது, இளமைப்பருவத்தார் உறையும் தலமாகிய சென்னை பிரசிடென்சிக் கல்லூரியின் தமிழ்ச்சங்க உரையாக மலர்கிறது. அன்பின் அடிப்படையில் உயிர்களை விலங்கு, மானுடம், தெய்வம் என்ற மூன்று படிநிலைகளில் அமைத்துச் சாதாரண அன்பு, காதல், உயர்தர அன்பு என வரிசைப்படுத்தி, 'கருணை என்பது யானறிந்த மட்டிலும் மனிதனுக்கே விசேஷ குணமாகும்' என்று தெளிவுபடுத்தும் நல்லுரை இது. வரலாற்றுப் பின்னணியோடு கதை சொல்லும் பாங்கும், சிறுமை கண்டு சீறுகின்ற, அறச்சினம் பொங்குகின்ற தன்மையும், படிக்கிறபொழுதே அரங்கில் இருந்து கேட்கும் பெற்றியும் உடையதாக இவ்வுரை விளங்குகின்றது. அன்பிற்கு எதிரான பொய், பொறாமை, சினம், கர்வம் உள்ளிட்ட தீய குணங்களை அடையாளம்

காட்டி அவை மனிதர்களின் புராதனச் சரித்திரங்களில் புகுந்து செய்த சதிகள், சரிவுகள் பலவற்றைப் போகிற போக்கில் பேச்சுவாக்கில் விமர்சனப்பாங்கோடு தெளிவுபடுத்திவிட்டுப் போய்விடுகின்றார். டைமர், நீரோ போன்ற கொடுங்கோலர்களின் கருணையில்லாச் செயல்களைச் சுட்டும் பாரதியார், மதுரைமன்னன் கூன் பாண்டியனையும் குற்றவாளியாக்கிக் காட்டுகின்றார். "என் வயிற்று வலியை எந்த மதத்தின் ஆசாரியர்கள் சொஸ்தம் செய்கிறார்களோ, அவர்கள் மதமே மேலானது, எதிரி மதஸ்தர்களையெல்லாம் கழுவேற்றிவிடுவேன் என்று போர் மூட்டிவிட்டு தனது குன்மநோயைச் சொஸ்தம் புரிந்த சைவர்களுக்குப் பரிந்து 8000 சமணர்களைக் கழுவேற்றிய பாண்டியராஜனைக்" கண்டனம் செய்கின்றார்.

'ஏழைகள், நாதனற்றிருப்போர் (விதவையர்க்குப் பாரதியார் இடும்பெயர்- தலைமையற்றுத் தனித்திருக்கும் அபலைகள் என்றும் பொருள் கொள்ளலாம்) இவர்களின்மீது செலுத்துவது மானுஷிகக் கருணை. உனக்குத் தீங்கு செய்வோர், உன் மனத்தைப் புண்படுத்து வோர், உன் பொருளையழிப்போர், உன்னை நிந்திப்போர் -இவர்கள் மீது செலுத்தப்படும் கருணை தெய்விகக் கருணை' என்று வகைப்படுத்தி விளக்கும் பாரதியார், முடிவில், " Love. Universal Love. "காதல்", "கருணை", "ஸார்விகக்கருணை", "தெய்விகக் கருணை". இஃதே மானிடர் உடலையும், மனத்தையும், அறிவையும், ஆன்மாவையும் பற்றிய நோய்களுக்கெல்லாம் மருந்தென்று புத்தர் கண்டார்.

நண்பர்களே, இத்தெய்விகக் கருணையின் பெருமையை என்னால் அளவிட்டுரைக்க முடியாது. அதைப்பற்றி விவாதம் செய்யாதே; செய்துபார். அதன் இயற்கை தெரியும்.

உனக்குத் தீயன செய்து வருவோனுக்கு நீ நல்லன செய்து வா.

நீ உடனே மகானாகி விடுகின்றாய்; உடனே தெய்வமாகி விடுகின்றாய்.

என்னால் வருணிக்கமுடியாததும் எனது வணக்கத்திற்குரியதுமான பொருளாய் விடுகின்றாய்!" என்று கூறுமிடத்து, அரசியல், சமூகச் சீர்திருத்தம், இலக்கியம் என அனைத்தும் அறிவியல் நோக்கில் ஆன்மிக ஒளி பெற்றுத்துலங்குவதைக் காண முடிகின்றது. இவை குறித்து இன்னும் சொல்ல எத்தனையோ உள்ளடக்கியிருக்கும் அக் கட்டுரையை முழுமையாய்ப் பார்க்கலாம்.

பாரதியாரின் முதல் சொற்பொழிவு

"சென்னை பிரசிடென்சி காலேஜ் தமிழ்ச்சங்கத்தில் பாரதி ஆற்றிய முதல் சொற்பொழிவே இக்கட்டுரை. பாரதி முதன்முதலாக மேடை

யேறிப் பொதுநிகழ்ச்சியில கலந்துகொண்டு பேசியதைக் கருணை என்கிற கட்டுரை வாயிலாக ஆதாரபூர்வமாக அறிந்து கொள்ள முடிகிறது. பாரதி பெயரால் சுதேசமித்திரன் இதழை அணிசெய்யும் முதல் படைப்பு கருணை என்னும் தலைப்பிலான வசனம் என்பதையும் நம்மால் கண்டுணரமுடிகிறது. பாரதியைப் பொது மேடையில் ஏறிப் பேசச் செய்த பெருமையும் சென்னை பிரசிடென்சி காலேஜ் தமிழ்ச்சங்கத்தாரையே சார்கின்றது"[5] என்கின்றார் சீனி.விசுவநாதன்.

"சென்னை மாணவர் தமிழ்ச்சங்கத்து வருஷாந்திர மீட்டிங்கில் மிஸ்டர் சி.சுப்பிர மணிய பாரதி செய்த பிரசங்கம்" (சுதேசமித்திரன், *29.4.1905, 1.5.1905,2.5.1905-ப.3)* என்ற குறிப்போடு, சுதேசமித்திரன் இதழ்களை அணிசெய்த அக்கட்டுரை பின்வருமாறு:

### கருணை

கருணையானது மானுஷிகக் கருணை, தெய்விகக்கருணை என்றிரு வகைப்படும். இவையிரண்டும் மனிதர்களிடத்துக் காணப்படுவன வேயாம். இவற்றுள்ளே தெய்விகக் கருணையுடையார் மனிதர்களுக் குள்ளே தேவர்களாவார். அஃதில்லாது மானுஷிகக் கருணை மட்டுமுடையோர் சாதாரண மனிதர்களாவார். அம்மானுஷிகக் கருணை யில்லாதாரோவெனின், இரு கால்விலங்குகளாவார்.

மானுஷிகக் கருணை, தெய்விகக்கருணை என்று பகுத்து, அவற்றைப் பற்றி மேலே ஒருவன் மனிதன் என்ற பெயருக்குத் தகுதியுள்ளவனாயிருப்பானாயின், அவனுக்கு மற்ற மனிதர்க ளிடத்திலும் பொதுவாக மற்றெல்லா உயிர்களிடத்திலும் இயற்கையாக இருக்கவேண்டியது உயர்தரத் தன்பு.

அன்பில் உயர்தரத்தன்பென்று வேறுபடுத்திச் சொல்லியதென்ன வென்றால் கூறுகின்றேன். மனிதனுக்குத் தன்மகனிடத்திலும், அரபிக்குத் தன் குதிரையிடத்திலும், அரசனுக்குத் தனது அடிமை யிடத்திலும், நோயாளிக்குத் தன் வைத்தியனிடத்திலும், வைத்தியனுக்குத் தனக்குப் பணம் கொடுக்கும் நோயாளியிடத்திலும், ஆண் சிங்கத்திற்குப் பெண்சிங்கத்தினிடத்திலும், தாய்ப்புலிக்குப் புலிக்குட்டியிடத்திலும், இன்னும் பலவாறாகவும் தோன்றுகிற அன்பு சாதாரண அன்பாகும். இவை உயர்தர அன்பு அல்லது கருணை என்று கூறப்படுவதில்லை.

இவ்விதச் சாதாரண அன்பெல்லாம் காதல், நன்றியறிவு, இயற்கைப் பற்று, தன்னயம் பாராட்டல் என்று பலப்பல பெயர்களாற்கூறப்படும். இவற்றுள்ளேயும் தாரதம்மியமுண்டு. தன்னயம் பாராட்டலினும்

இயற்கைப்பற்று உயர்வானது; அதைக் காட்டிலும் நன்றியறிவு சிறந்தது; அதனிலும் காதல் மேற்பட்டது. எனினும் இவையெல்லாம் உயர்தர அன்பாகமாட்டா. இவையெல்லாம் மனிதனுக்கு மட்டிலும் சிறப்பாக உள்ள குணங்களல்ல.

திருஷ்டாந்தமாகத் தன்னயம் பாராட்டாமல் இல்லாத ஜீவ ஜந்துவே கிடையாது. ஓரறிவுச்சிற்றுயிர்கள் முதல் மனிதன் வரையுள்ள எல்லா ஜந்துக்களுக்கும் தன்னயம் பாராட்டுங்குணமுண்டு. இயற்கைப்பற்று புலிக்குண்டு; கரடிக்குண்டு; அனேகமாய் எல்லா விலங்களுக்குமுண்டு. நன்றியறிவுக்கு நாய் பெயர் போனது. காதலுக்குப் பறவைகள் புகழ் பெற்றனவாகும். இவையெல்லாம் உயர்தர அன்பாகமாட்டா.

கருணையென்பது யானறிந்த மட்டிலும் மனிதனுக்கே விசேஷ குணமாகும். தான் தின்னவேண்டுமென்று வைத்திருந்த உணவைத் தன்னிலும் பசியுடையவனாக ஒருவன் வரக் கண்டவுடன் அவன் முகங்கண்டிரங்கி, "தம்பி, உணவில்லாமல் இன்னும் சிறிது நேரம் யானுயிரோடிருக்க மாட்டுவன். நீ ஆகாரமில்லாவிடின், இப்போதே இறந்துவிடுவாயென்று தோன்றுகிறது. நீ இதையெடுத்துக்கொள்" என்று அவனிடம் கொடுத்துவிடுகிறான். இது கருணை.

கன்னமுலர்ந்து போய்க் கண்கள் குழி விழுந்து, எண்ணெய் அறியாது புதர்பட்ட தலையும் ஸ்நாநமறியாத உடலும், கிழிந்த கந்தையுமுடுத்த அரையுமாகிச் சோறு வேண்டுமென்று கேட்கவு மெண்ணாமல், மூலையில் இரண்டு குமாரத்திகள் படுத்திருக்க, நோயிலே வருந்தி வாயினால் நலிவு கூறிக் கண்ணால் பழிகூறிக் கொண்டு மனைவியொரு பக்கத்தில் விழுந்திருக்க, வெளியே பிச்சைக் கென்று போன பிள்ளைகள் எப்போது வருவார்களென்று அவர்களடிச் சத்தம் கேட்கும்பொருட்டு மேலெல்லாஞ் செவிகளாகக் காத்திருக்கும் வாதநோய் கொண்ட கிழவனொருவன், மக்கள் வருகிறார்களா என்று பார்க்கும்பொருட்டு நகர்ந்து நகர்ந்து வெளியே வந்து நோக்கும்போது, அங்கே ஓர் பசித்த நாயிருப்பது கண்டு, திரும்பவும் நகர்ந்து உள்ளே சென்று எந்த ஆச்சரியத்தாலோ தாங்களுண்ணாமல் வைத்திருந்த சிறிது பழஞ்சோற்றைக் கொண்டுவந்து அந்நாய்க்குப் போடுவதை நான் பார்த்திருக்கிறேன். இது உயர்தர அன்பு, இது காருணியம்.

போர்க்களத்திலே, சிட்னி என்பவர் தாம் காயமுண்டு கிடந்தபோது மரணதாக மெடுக்க, 'தண்ணீர், தண்ணீர்' என்று புலம்பிவிட்டுச் சிலர் கொண்டுவந்தபோது அருகே குற்றுயிரோடு கிடக்கும் போர்வீர னொருவன் அந்நீரை ஆவலுடன் பார்ப்பது கண்டு, "அப்பா, அவனுடைய தாகம் என்னுடையதைக் காட்டிலும் பெரிது; இந்த

ஜலத்தை அவனிடம் கொடுத்து விடுங்கள்" என்று சொல்ல, மூச்சுப் போய்விட்டது. இது காருணியம்.

தன்னலம் பற்றிச் சொல்வதன்று. தன்மகன், தன்மகளென்பது பற்றி ஏற்படும் இயற்கைப்பற்றன்று. செய்தற்கு மாறு செய்யும் நன்றியன்று. அன்புடன் முத்தமிட்டுத் தழுவி மகிழ்ந்திருந்த உடல் வருந்துகின்றதே என்று பொங்கியெழுகின்ற காதற் றுன்பமன்று. இது கருணை. மனிதர்களுக்குள்ளே இக்கருணையுணர்ச்சி மிகக்குறைவாக இருத்தல் பரிதபிக்கக்கூடிய விஷயமாகும்.

தன்னயங்கருதல், பொய், பொறாமை, சினம், கர்வம் முதலிய துர்க்குணங்களே பெரும்பாலும் மனிதர்களை ஆளுகின்றன என்பதை நாம் அறியமாட்டோமா? மனிதர்களின் புராதனச் சரித்திரத்தைப் பார்வையிடுவோமானால் அவற்றில் நிறைந்து கிடக்கும் அநீதிகளுக்கோர் கணக்குண்டா?

நமது ஆரிய தேசசரித்திரங்களையும், ரோம், கிரீஸ் முதலிய நாடுகளின் புராதன வர்த்தமானங்களையும், இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, ருஷியா, ஆஸ்திரியா முதலிய நவீன ராஜ்யங்களின் பழைய சமாசாரங்களையும், எகிப்து நாட்டுப் பழமைகளையும், ஹிப்ருக் கதைகளையும், அரபி தேசத்துக் காலக் குறிப்புகளையும் நோக்குவோமாயின், எளியோரை வலியோர்களும், யாதொன்றுமறியாத பேதை ஜனங்களைக் கபடமும், துர்ப்புத்தியும், சுயலாபக் கருத்தும் உருவாகத் திரண்ட பாதகர்களும் துன்பப்படுத்தியதற்கோர் எல்லையுண்டா? கொடுங்கோன்மன்னர்களும், வயிற்றைக்கடவுளாக வணங்கும் மதாசாரியார்களும், மந்திரிகளும், ராஜ்ய தந்திரிகளும் ஏழை ஜனங்களைப் படுத்திய பாடு சொல்லவும் படுமா?

சகோதரர்களே! கருணையென்பது இவ்வுலகத்தில் மிகவும் குறைவு. புராதன சரித்திரத்திலிருந்து ஸிட்னியென்ற ஒருவரை உதாரணமாக எடுத்துக் காட்டினோம். இவ்வாறு எத்தனை ஸிட்னிகளிருந்திருக் கின்றார்கள்?

ஆனாலோ, பிணங்களை முன்னாலே பரப்பிக் கொண்டே அதன் பின்பு சேனைகளை நடத்திச் செல்கின்ற டைமர் போன்றோர்களும், நகர முழுவதும் தீயைக் கொளுத்தும்படி ஆக்கினை புரிந்துவிட்டுத் தீயிலே இளங்கன்னிகளும், மழலைமாறாக் குழந்தைகளும், கண்தெரியாக்கிழவர்களும் கிடந்து புழுத்துடிப்பதுபோலத் துடிப்பதை மாளிகைச் சிகரத்தின் மேலிருந்து பார்த்துக் களிக்கூத்தாடுகின்ற நீரோ சக்ரவர்த்தி போன்றோர்களும், என் வயிற்றுவலியை எந்த மதத்தின் ஆசாரியர்கள் சொஸ்தம் செய்கிறார்களோ, அவர்கள் மதமே மேலானது. எதிரி மதஸ்தர்களை யெல்லாம் கழுவேற்றிவிடுவேன்

என்று போர் மூட்டிவிட்டு தனது குன்ம நோயைச் சொஸ்தம் புரிந்த சைவர்களுக்குப் பரிந்து 8000 சமணர்களைக் கழுவேற்றிய பாண்டிய ராஜன் போன்றோர்களும் சரித்திரங்களில் மொய்த்துக் கிடக்கின்றார்கள்.

சரித்திரங்களில், கருணைக்காகப் புகழ்பெற்றவர்கள் ஆயிரத்தி லொருவர். பாதகர்களோ எண்ணிறந்தவர்கள். உலகப்புகழிலோங்கி, செல்வத்திற்செருக்கி, பொன்னும் முத்தும் வயிரமுமணிந்து பல்லக்கிலேறிச் சுற்றும் பெரும் புதவிகளிலே மானிடப் புலிகள், மானிடப் பாம்புகள், மானிடப்பிசாசுகள், மானிட ராக்ஷதர்க ளிருந்திருக்கிறார்கள். இவர்களைப்பற்றி நாம் இப்போது பேச வேண்டியதில்லை. கருணையைப் பற்றிப் பேசவந்த இடத்தில் நாம் சிலரிடம் மாற்சரியம் காட்டுதல் அழகாக மாட்டாது. இவர்களை யெல்லாம் நாம் மறந்துவிட்டுப் புராதன சரித்திரங்களிலேயும், தற்காலச் சரித்திரங்களிலேயும் கருணை வடிவுடையோராயிருக்கும் பெரியோர்களின் வழக்கத்தைக் கைக்கொள்வோம்.

இதுவரை மானுஷிகக் கருணையைப் பற்றிப் பேசிவந்தேன். இனித் தெய்வக் கருணையின் தன்மை கூறுகின்றேன்.

தெய்வங்களால் மானிடர்மீது செலுத்தப்படுங் கருணையைத் தெய்வீகக் கருணை யென்று கூறவில்லை. இங்கு அதனைப் பிரஸ்தாபிக்க இடமுமில்லை. தொடக்கத்தில் யான் கூறியபடி இத்தெய்விகக் கருணையும் மனிதர்களிடமேயுள்ளது. மனிதர்களிட முள்ள குணமொன்றுக்குத் தெய்விகமென்ற பெயர் ஏன் கொடுக்க வேண்டும் என்றால், சொல்கிறேன். மானுஷிகக் கருணை யென்ற ஒரு குணத்தைப் பற்றிக் கூறி வந்த யான் அதனிலும் கோடிமடங்கு சிறந்ததாகிய ஓர் பெருங்குணத்தைப் பற்றிப் பேசத் தொடங்கிய காலத்து அதற்கோர் பெயர் கொடுக்கவேண்டுவது அவசிய மாதலால், அதனைத் தெய்விக் கருணையென்ற சிறப்புப் பெயராற் கூறினேன்.

இனி வேறு காரணங்களுமிருக்கின்றன; அவற்றைப் பின்பு வெளியிடுகின்றேன். இத்தெய்விகக் கருணையென்னும் அரிய பொருள் யாது? இதுவரை கூறிவந்த தன்னலம், இயற்கைப்பற்று, நன்றியறிவு, காதல், மானுஷிகக் கருணை என்பவற்றினின்றும் எவ்வாறு வேறுபட்டது? எனிற் கூறுவேன்.

ஏழைகள், நாதனற்றிருப்போர் இவர்களின்மீது செலுத்துவது மானுஷிகக் கருணை; உனக்குத் தீங்கு செய்வோர், உன் மனத்தைப் புண்படுத்துவோர், உன் பொருளை யழிப்போர், உன்னை நிந்திப்போர் - இவர்கள்மீது செலுத்தப்படுங்கருணை தெய்விகக் கருணை. இது சாதாரண மனிதர்களிடம் இராது. எல்லாமனிதர்களிடமும் இவ்விதக்

கருணை இருக்குமாயின், உலகத்துக்குக் கேடே விளையுமென்று சிலர் சொல்வார்கள். ஆனால், இவர்கள் சொல்வது வெறுங்கதை. கோடிஜனங்களில் ஒரு மகாத்மாவுக்குக் கூட இல்லாத இப்பெருங்குணம் உலகமெங்கும் பரவின், அதிகக் கெடுதியுண்டாய் விடுமென்று இவர்கள் அஞ்சுவது அநாவசியமா யிருக்கின்றது. தவிரவும், அந்தக் கருத்தே பிழைபட்டது. தெய்விகக் கருணை யுடைமையினால் உடையோனுக்கே சில தீங்குகள் விளையுமல்லாது உலகத்துக்கு நன்மைதான் உண்டாகும்.

அம்மகானோ தீமையைக் கருதாதோன். எனவே, கேடொன்றுமிலது. நான் இவ்விஷயமாக என் நண்பரொருவரிடம் பேசிக்கொண்டிருந்தபோது அவர் என்னிடம், "இதென்ன, அசம்பாவிதமாயிருக்கின்றது. என் வீட்டை ஒருவன் தீயிட்டுக் கொளுத்தும்போது நான் அவனைத் தண்டனை புரியாமல் நன்மை செய்து வருவேனேயானால் அவன் இன்னும் பத்து வீட்டில் தீபோற்சவம் செய்து பார்ப்பானல்லவா?"என்று பலப்பலத் திருஷ்டாந்தங்கள் கூறி நகைத்தனர். அவர்க்கும் அவர்போன்றோர்க்கும் நான் சொல்கிறேன். இப்பெருங்குணம் நும்போன்றவர்களுக் கேற்பட்டதன்று. இது சொல்லிவரக் கூடியதன்று. இயற்கையாக வரவேண்டியது. புஷ்பத்தில் தேனும், சூரியனில் பிரகாசமும், குயில்வாயில் செவியுருக்கும் இசையும் எவ்வாறு இயற்கையாக அமைந்திருக்கின்றதோ, அதுபோலவே, மகான்கள் சிலரிடம் கருணைக் குணம் இயல்பிலே அமைந்துள்ளது. ஸ்ரீபுத்தர், ஸ்ரீகிறிஸ்தர் முதலிய புண்ணிய புருஷர்களெல்லாம் இப்பெருங்குணம் வாய்ந்தோர்கள். அவர்களுக்கு ஒருவர் சொல்லிக்கொடுத்து வந்ததன்று. அவர்களின் தெய்விகக் கருணையைப் பார்த்துவிட்டு அக்காலத்து ஜனங்கள் இவர்கள் மனிதர்களல்லர், தெய்வங்களென்றே கருதினர். இக்காலத்திலும் எத்தனையோ ஜனங்கள் அவ்வாறே நினைக்கிறார்கள். ஆம். இவர்கள் தெய்விக இயற்கையுடையோர் என்பதில் என்ன ஆக்ஷேபமிருக்கின்றது? கடவுள் ஒருவன் இருப்பானேயாயின், அவன் இம்மகான்களுடைய தன்மை கொண்டே யிருத்தல் வேண்டும்.

கிறிஸ்துவுக்கு முள்முடி தரித்துச் சிலுவையிலேற்றி அங்கந்தோறும் ஆணியறைந்து, மேலெல்லாம் காறியுமிழும்போது, அவர், "எனது பிதாவே! இவர்கள் அறியாது செய்கின்றார்கள். இவர்களை மன்னித்தருளும்" என்று சொல்லிவிட்டு இறந்துபோயினர். ஸ்ரீபுத்த நாதருடைய கருணை கடலுக்கேயொப்பாகும். 'உன்னைத் தீண்டும் அரவையும் கொல்லாதே' என்பது இம்மகானின் வாக்கியம்.

உலகத்திலே இருக்கும் துன்பங்களையெல்லாம் பார்த்துவிட்டுச் "சீச்சீ! நான் அரசாளுவேனா? நான் சிங்காதனத்திலிருப்பேனோ?

அதிசுந்தரமுள்ள மாதர்கள் கவரிவீச, திலோத்தமைகள் போன்ற நாட்டியக்கணிகையர் நடனம் புரிவதை நான் பார்த்துக் கொண்டிருக்கும்போது, தெருவிலே சாக்கடையோரத்தில் குஷ்ட நோய் கொண்ட ஒருவன் சோறின்றி மூச்சு வாங்குவதை நான் சகிப்பேனா?" என்று புத்த பெருமான் யோசனை புரிந்தார். தனது ஆசைக் காதலியையும், சிறு குழந்தையையும், செல்வத்தையும், சிறப்பையும், அரண்மனையையும், பூஞ்சோலையையும் விட்டுவிட்டுப் புலியைக் கண்டோடும் மான் போல ஓடிவந்துவிட்டார்.

"இவ்வுலகத்தில் இன்னும் இத்தனை தீமையிருக்கின்றதே. இத்தனைக்கும் நிவாரண மென்ன? என்று புத்தர் மனதினுள்ளே ஆராய்ந்தார். பிராமண ஞானிகளிடம் போய்க் கேட்டார். அவர்கள் நூறே நூறு வெள்ளாடுகளைக் கத்தியில்லாமல் கொன்று பாகம் (சமையல்)செய்து வபையை யெடுத்து அக்னியிலே ஆஹூதி பண்ணி நாமும் கொஞ்சம் சாப்பிட்டுவிடுவோமாயின் இந்திரலோகத்துக்குப் போய்விடுவோம். பிறகு பூலோகத் துன்பமின்றி யிருக்கலாம்" என்றார்கள்.

"இந்திரலோகத்திலே நாம் போனால் சர்வஜனங்களுக்கும் துக்கம் நீங்கிவிடச் செய்யலாமா?" என்றார் புத்தர்.

"சர்வ ஜனங்களோ,அவர்களெல்லாம் பாவத்துக்குத் தக்கபடி நரகாதிகளிலே அனுபவிப்பார்கள். யாகம் புரிந்த நாம் சுவர்க்கத்திலே, அமிருதபானம் புரிந்து விட்டு, நரை, திரை, மூப்பு, மரணம் என்பன யாவுமின்றித் தேவ கன்னிகைகள் சகிதமாக எப்போதும் இளமை நீங்காது ரமிக்கலாம்" என்றனர், பார்ப்பனக் குருக்கள். "சிச்சீ, நாம் மாதர்களையும், நடனத்தையும், இளமையையும் சுகத்தையும் இகழ்ந்து தள்ளிவிட்டு உலகமனைத்தும் இன்பம் கொண்டிருக்க வழியென்ன?"வென்று கேட்க, அதற்கு விடைசொல்லாமல் இவர்கள் ஏதேதோ கூறுகின்றார்கள். நாம் தேடி வந்த சரக்கு இந்தக் கடையிலே அகப்படா தென்று எண்ணி அங்கிருந்து புறப்பட்டுவிட்டனர்.

புத்தநாதர் பிறகு எங்கெங்கெல்லாமோ சுற்றி அயர்ந்துபோய் கயா க்ஷேத்திரத் தருகேயுள்ள ஒர் வனத்தில் போதி விருக்ஷத்தருகே போய்க் களைத்து உட்கார்ந்தார். திடீரென ஒர் யோசனை தோன்றிற்று. இரகசியத்தைக் கண்டு விட்டார்; மோக்ஷோ பாயம் அவருக்குத் தெரிந்துவிட்டது. ஆனந்த ஸாகரத்தி லமிழ்ந்துவிட்டார். அஃது என்ன உபாயம்? அவருக்கு எந்த ஞானம் உண்டாயிற்று? அரசநிலையைத் தூவென்று துப்பி வந்து பிச்சைக்காரராகத் திரிந்த கௌதம சாக்கியர் எவ்வாறு புத்தராய்விட்டார்? அத்தனை உயர்ந்த தெய்வ ரகசியம் அவருக்கென்ன புலப்பட்டுவிட்டது?

பூலோகத்திலுள்ள மானிடர் அனைவரும் துயரநீங்கியிருப்பதற்கு வழி கருணை என்று அவர் அறிந்துவிட்டார். Love. Universal Love. "காதல்", "கருணை", "ஸார்விகக் கருணை", "தெய்விகக் கருணை". இஃதே மானிடர் உடலையும், மனத்தையும், அறிவையும், ஆன்மாவையும் பற்றிய நோய்களுக்கெல்லாம் மருந்தென்று புத்தர் கண்டார்.

நண்பர்களே, இத்தெய்விகக் கருணையின் பெருமையை என்னால் அளவிட்டுரைக்க முடியாது. அதைப்பற்றி விவாதம் செய்யாதே; செய்து பார். அதன் இயற்கை தெரியும்.

உனக்குத் தீயன செய்து வருவோனுக்கு நீ நல்லன செய்து வா.

நீ உடனே மகானாகி விடுகின்றாய்; உடனே தெய்வமாகி விடுகின்றாய்.

என்னால் வருணிக்கமுடியாததும் எனது வணக்கத்திற்குரியதுமான பொருளாய் விடுகின்றாய்"[6]

பாரதியாரின் சொற்பொழிவுப் பாங்கு

இப்பொழிவில் மேடைக்குரிய தன்மைகள் விளங்குவதையும் காணமுடிகின்றது. பார்வையாளர்களை முன்னிலைப்படுத்தி, 'சகோதரர்களே, நண்பர்களே' என்று விளிக்கின்ற பாங்கைப் பாரதியார் கைக்கொள்கின்றார்.

இவ்வுரையில் பின்வருமாறு இடம்பெறுகின்றது.

'இதுவரை மானுஷிகக் கருணையைப் பற்றிப் பேசிவந்தேன். இனித் தெய்வக் கருணையின் தன்மை கூறுகின்றேன்' என்று கூறும்பொழுது, இதற்குமுன் சொல்லப் பெற்றது, இனிச் சொல்லப்புகுவது ஆகியவற்றைத் தொகுத்தும், பகுத்தும் சொல்லுகின்ற பண்பு பாரதியாரிடம் வெளிப்படுகின்றது.

எழுத்து, படிப்பு, சொல் என வரிசையில் வந்து, நிறைவில் செயல்தளத்திற்கு கேட்பாளர்களை உயர்த்திச் செல்லும் போக்கு இவ்வுரையில் அறியக் கிடைக்கின்றது. சொல்லைக் கடந்த மேன்மையைச் சொல்லமுடியாத் த்ன்மையைச் சொல்லிவிடுகின்ற பெற்றி பாரதியாருக்கு இவ்வுரையிலிருந்தே கைவந்திருக்கின்றது என்பதை, "நண்பர்களே, இத்தெய்விகக் கருணையின் பெருமையை என்னால் அளவிட்டுரைக்க முடியாது. அதைப்பற்றி விவாதம் செய்யாதே; செய்துபார். அதன் இயற்கை தெரியும்.

உனக்குத் தீயன செய்து வருவோனுக்கு நீ நல்லன செய்து வா.

நீ உடனே மகானாகி விடுகின்றாய்; உடனே தெய்வமாகி விடுகின்றாய்.

என்னால் வருணிக்கமுடியாததும் எனது வணக்கத்திற்குரியதுமான பொருளாய் விடுகின்றாய்!" என்ற முடிப்புரை நன்கு உணர்த்திவிடுகின்றது.

## முற்றத்தில் நடந்த பட்டிமன்றம்

மேடைகளில் மட்டுமன்றி, அன்றாடம் தன் நண்பர்களோடு உரையாடும்போதும், விவாதிக்கும்போதும் பாரதியாரின் சொற்பொழிவுத் தன்மை மேலோங்கியிருப்பதைப் பாரதியன்பர்களின் பதிவுகளில் இருந்து பெற முடிகின்றது.

தமது வீட்டில் மட்டுமன்றி, அவர் தங்கியிருக்கும் எந்த இடமானாலும் அந்த இடத்தில் பாரதியார் சபை கூடிவிடும். பாரதியார் அக்கிராசனம் (தலைமை) வகிக்கத் தொடங்கிவிடுவார். அன்றைய சூழலுக்கேற்ப, அவரது உரை, அரசியல், ஆன்மிக, இலக்கிய, சீர்திருத்த உரைகளாகவோ, அல்லது இவை மொத்தமும் கலந்த உரைகளாகவோ வெளிப்படக்கூடும். சில சமயங்களில் பாட்டரங்கமாகவும், கதையரங்கமாகவும் உருப்பெறுதல் உண்டு.

அவ்வகையில் ஒரு நிகழ்வைப் பட்டிமன்றம் என்பதாக குஞ்சித பாதம் என்னும் அன்பர் பதிவுசெய்கின்றார்.

"ஒட்டிய சமயத்து உறுபொருள்வாதிகள்
பட்டிமண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்"[7] என்று மணிமேகலை உரைக்கும் வண்ணம் தத்தமது கருத்துக்களைச் சுதந்திரமாக முன்வைக்கும் பட்டிமன்றமாகப் பாரதியார் இருக்கும் இடம் அமைந்து விடுகின்றது. பாரதியாரின் தராசுக்கடை ஒருவகையில் பட்டிமன்ற, வழக்காடு மன்ற, விவாத மன்ற அரங்குகளாகப் பேசப் பெறும் பொருண்மைக்கேற்பப் பரிமாணங்கொள்வதைக் காணமுடியும்.

புதுவையில் பாரதியார் பாஞ்சாலி சபதம் பாடிய காலக்கட்டம். கண்ணன் பாட்டுப் பாடிய காலமும் அதுவே. அதுசமயம், பாரதியாரின் நண்பரான தீக்ஷிதர் ஒருவர் இல்லத்தில் உட்கார்ந்து கிருஷ்ணாவதாரம் பற்றியும், இராமாவதாரம் பற்றியும் விவாதித்துக் கொண்டிருந்தபோது எழுந்த வாதம் தான். அவதார மேன்மையில் உயர்வுடையது இராமவதாரமா? கிருஷ்ணாவதாரமா? என்பது. தீக்ஷிதர் இராமன் அணி. பாரதியார் கண்ணன் அணி. அத்தோடு அவரே நடுவரும் ஆகிவிடுகின்றார். வாத, எதிர்வாதங்கள் பற்றியும், பாரதியார் தீர்ப்புப்பற்றியும், தீக்ஷிதர் மகன் ஸ்ரீ வி.எஸ். குஞ்சிதபாதம் நடையிலேயே காணலாம்.

## இராமனா? கண்ணனா?

"ஒருநாள் பாரதியார் வழக்கம்போல் காலையில் ஹிந்து தினசரி பேப்பரைப் படிக்க எங்கள் வீட்டிற்கு வரவில்லை. மாலை சுமார் 7

மணியிருக்கும். நான் வெளியே கடற்கரைக்குப்போய்ப் பாரதியை அங்கும் காணாமல் வீடு திரும்பினேன். அப்போது எங்கள் வீட்டின் முற்றத்தில் பாரதியாருக்கும் என் தந்தையாருக்கும் ஒரு சின்ன பட்டிமன்றம் நடந்து கொண்டிருந்தது. அவர்கள் சர்ச்சையில் தீவிரமாக ஆழ்ந்திருந்தார்கள். நான் சற்றே விலகிநின்று கேட்டதில் பட்டிமன்றம் ஸ்ரீராமனைப் பற்றியும், ஸ்ரீகிருஷ்ணனைப் பற்றியும் ஒரு ரசமான வாதம் என்று தோன்றியது. மேலும், கவனித்ததில், பட்டிமன்றத்தின் பொருள், 'அவதாரமேன்மையும் உயர்வும் இராமனைக் காட்டிலும் கண்ணனுக்கே சாரும்' என்பது விளங்கிற்று. இதில் பாரதியார் கண்ணனின் சார்பில் பேசினார். அவர், "பரிபூரண அவதாரம் என்று சொன்னால் அது கண்ணனுக்கே உரியது; அது இராமனுக்கு உரியதன்று", என்று வாதித்து, "கண்ணபிரான் தம் பிறவி முதல் ஒரு மாபெரும் அவதாரம் என்பதைச் சிறந்த முறையில் வெளிப்படுத்தின அளவிற்கு இராமன் செய்யவில்லை" என்றார். 'இராமர் பிறந்து சில வருடங்களுக்குப் பிறகு, வசிஷ்டரிடம் உபதேசம் பெற்ற பின்பே தாம் அவதாரம் என்பதை உணர்ந்தார். கண்ணன் செய்ததுபோன்ற பல அற்புதமான லீலைகளையும் அவர் செய்யவில்லை' என்றும் வாதித்தார். பகவத்கீதையையும் கண்ணனையும் பிரிக்கவே முடியாது. கீதையில் கிருஷ்ணன் தாம் அவதாரம் என்பதை வெளிப்படுத்தி, அதற்கேற்ப ஜகத்குருவாய் உலகிற்கு உபதேசம் செய்து, எல்லோருக்கும் அருள் புரிந்தார். அதுபோல, இராமர் தம் அவதார மஹிமையை விளக்கி ஓர் உபதேசமோ, நூலோ செய்யவில்லை என்றும் வாதித்து, அதை என் தந்தையையும் ஏற்கச் செய்து, பட்டி மன்றமுடிவைக் கூறியபின், தம் கையிலிருந்த ஒரு காகிதத்தை எடுத்தார். பட்டிமன்றத்தின் முடிவுமூலம் கண்ணனே பரிபூரண அவதார புருஷன் என்று நிலை நாட்டியபிறகு அதை வெளியி லெடுத்தார். அதுவரையில் அந்தக் காகிதம் பாரதியார் சட்டைப்பை யிலிருந்தது. அந்தக் காகிதத்தை எடுத்தவுடன் சர்ச்சையிலாழ்ந்த பாரதியார் மாறிவிட்டார். வாதம் செய்யும்போது இருந்த வேகமோ, ஆவேசமோ இல்லை. வாதத்தின் வேகத்தையடக்கிய மனநிலையுடன் அமைதியாக, கண்ணில் நீர்த்துளிகள் தோன்ற உருக்கமாக மூன்று பாடல்களைப் படிக்கலானார்".[8]

அப்பாடல்கள், 'ஆதிப்பரம்பொருள் நாரணன்', 'நானெனும் ஆணவந்தள்ளலும்', 'ஆயிரங்கால முயற்சியால்' என்று தொடங்குகின்ற பாஞ்சாலிசபதப் பாடல்களாகும்.

இதுபோல் இன்னும் பாரதியன்பர்கள் பதிவில் காணக்கிடைக்கும் நிகழ்வுகள் பலவாகும். தேடித்தொகுத்தால் பாரதியாரின் நாநலத்தை இனிது நுகரலாம்.

பாரதியாரின் வழிபாட்டுப்பாங்கு

பொதுவாய்ப் புராணங்கள் குறித்துத் தெளிந்த பார்வையுடைய பாரதியார் அக்கட்டுக்கதைகள் உணர்த்தும் மெய்ம்மைகளை அடியொற்றியே தமது உரையை அமைத்துக் கொண்டிருக்கின்றார்.

இங்கே இன்னொன்றையும் கவனத்தில் கொள்ளவேண்டும். தமது கருத்தாக்கங் களில் இந்து மதக் கடவுளர்களைப் பற்றி எழுதுகின்ற, பேசுகின்ற பாரதியார் எந்த வொரு இந்துமதக் கோயில்களுக்கும், வழிபாட்டுத் தலங்களுக்கும் ஈடுபாட்டோடு போனதில்லை. அதேசமயம், உழைக்கும் மக்களின் உயர்சாதி இந்துக்களால் புறக்கணிக் கப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களின் வழிபாட்டுத் தலங்களுக்கு நேரே சென்றதோடு அத்தெய்வங்கள் பற்றியும் பாடல்கள் பாடி யிருக்கின்றார். குறிப்பாக, புதுச்சேரியில் சிறப்புமிக்க பெருங் கோயில்களாக, சைவ, வைணவத்திருக்கோயில்கள் இருக்க, ஆங்கெல்லாம் சென்றிராத பாரதியார் உப்பளத்துத் தேசமுத்து மாரியைப் போய்ப் புகழ்ந்து பாடியிருக்கின்றார். இந்துக்கள் மட்டு மன்றிப் பிற நாட்டார்களும் தொழும் மணக்குளவிநாயகரைப் பாடி யிருக்கின்றார். மேலோட்டமாகப் பார்த்தால் பாட்டுடைத் தலைவர்கள் இத்தெய்வங்களாக இருக்கும். உட்புகுந்தால் இத்தகு சிறப்பத் தோற்றங்களையெல்லாம் உருத்தெரியாதாக்கித் தமது கருத்தை, மூலஸ்தானத்தில் எழுந்தருளச் செய்துவிடுவார் பாரதியார். இது குறித்து எனது பாரதியாரின் விநாயகர் வழிபாடு நூலில் விரிவாகக் காணலாம்.

பாரதியார் கோயிலுக்குப் போன கதை

இன்னும் சொல்லப்போனால் பாரதியாருக்குக் கோயிலுக்குள் சென்று வழிபடும் முறைகள் கூடச்சரியாகத் தெரிந்திருக்கவில்லை யென்றே தோன்றுகின்றது. "அவர் கோயில் குளங்களைச் சென்று பார்த்து கிடையாது. கடவுள், ஆண்டவன் என்று சொல்கிறார்களே, அதை எப்படி வணங்குவதென்றே அவருக்குத் தெரியாது. ஒரு சமயம் எங்களூரில் உள்ள பிரமுகர்கள் சிலர் முத்தியாலுப்பேட்டையில் உள்ள அம்மன் கோயில் ஒன்றில் தாங்கள் செய்யும் உற்சவத்தைக் காண வரும்படி, பாரதியாரை அழைத்தனர். நானும் அதற்குச் சிபாரிசு செய்தேன். பாரதியார் நிலை எனக்குத் தெரியுமாதலால், கோயிலுக்குப் போனால் இப்படி இப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டும். தருமகர்த்தாவிடம் மரியாதையாக நடந்துகொள்ள வேண்டும் என்று நானும் மற்றவர்களும் அவருக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்து வந்தோம். பாரதியார் எல்லாவற்றுக்கும் தலையாட்டி வந்தாரேயொழிய, அங்கே போனதும் எங்களை வரவேற்க எதிர்நோக்கி

வந்த தருமகர்த்தாவை இன்னாரென்று சொன்னதும், அந்தச் செட்டியார் முன்னிலையில் மண்டியிட்டுக் கும்பிட்டவாறு அப்படியே நின்று விட்டார். அதன்பின்னர், அவர் அம்மன் கோயில் கருப்பக்கிருகத்துக்குள் செருப்புக் காலுடனேயே நுழைந்துவிட்டார். அவரைக் கூப்பிட்டவர்களுக்கு, 'ஏனடா, இவரை அழைத்து வந்தோம்' என்ற ஆயாசமுண்டாகி விட்டது"[9] என்று குறிப்பிடுகின்றார் பாரதிதாசன்.

பாரதியாரின் சமயப்பொதுமை

ஆக, சடங்குகள் ஆச்சாரங்கள் நிறைந்த சமயரீதியான கடவுள்களுக்கும், பாரதியாருக்கும் எந்தவகையிலும் சம்பந்தமில்லை. ஆனால், மக்கள் வணங்குகின்ற, நேசிக்கின்ற எந்தக் கடவுளர்மீதும் அவருக்கு நிந்தனையில்லை. மாறாக மக்களோடு இணைந்து நம்பிக்கை வைத்தார். அவர்களோடு சேர்ந்து அந்தக் கடவுளரையும் பாடி அம்மக்களைத் தம் வழிக்குக் கொண்டுவருவதில் தலைநின்றார். அதிலும் சமயப் பொறையில், அனைத்துச்சமயஒப்பியல் ஒழுகலாறில் பாரதியாரின் போக்கு அதி முற்போக்குத்தன்மை வாய்ந்தது. குறிப்பாக, அந்நிய ஏகாதிபத்தியம் சாதி, சமய நெறிகளில் பேதமேற்படுத்திப் பிரித்தாளும் முயற்சியில் ஈடுபட்டபோதெல்லாம் அனைத்து மக்களையும் ஒருங்கிணைப்பதற்காகப் பாரதியார் மேற்கொண்ட முயற்சிகள் மிகுதியானவை. சாதி,சமய, இன, மொழிக்கூறுகளில் காணப்பெறும் எதிர்மறைத் தன்மைகளைப் புறந்தள்ளி, அவற்றிடையே உள்ள உடன்பாட்டுத் தன்மைகளை வளர்த்தெடுப் பதில் பாரதியார் கவனம் செலுத்தினார். அனைத்துத் தரப்பினங் களிலும் பொதுமைபேணுதலைத் தம் வாழ்வியல்நெறியாகக் கொண்டார். அதனால் பாரதியாருக்கு உறவினர்களைக் காட்டிலும் நண்பர்களே அதிகம். அவர்கள் பல மதங்களை, பல கொள்கைகளைச் சார்ந்தவர்களாக இருந்தபோதிலும், அவர்களைத் தமது கவித் திறத்தாலும், நாவன்மையாலும் வென்றெடுக்கும் பெற்றி இவரிடம் இயல்பாக இருந்தது என்பதற்குச் சகுந்தலாபாரதியின் கருத்தொன்றைச் சுட்டலாம்.

"என் தந்தைக்கு நண்பர்கள் கூட்டம் மிக அதிகம். எந்த மதத்தவ ரானாலும் எந்தக் கொள்கையை உடையவரானாலும் என் தந்தையின் கவித்திறனுக்காக அவர் தம் அரிய உயர் குணத்திற்காக அவரிடம் அன்பும் மதிப்பும் கொண்டவர்கள் அநேகர். இதுவன்றி அவரிடம் நெருங்கிப் பழகி இணைபிரியா நேசமும் பக்தியும் கொண்டவர்கள் பலர் உண்டு. என் தந்தை முதன்முதலாக 1904ம் வருஷம் சென்னைக்கு வந்து சுதேசமித்திரனில் உதவி ஆசிரியர் வேலை பார்த்துவந்த அந்த நாளில் அவருடன் நெருங்கிப் பழகிய நண்பர்களில் அநேகர்

பின்னாளில் பல துறைகளிலும் தேச சேவை செய்து வந்திருக்கிறார்கள். இதனின்றி, தமது கொள்கைக்கு முற்றிலும் மாறான கொள்கை உடையவரேனும் சரி, அவர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு பின் தமது கொள்கைமுறைகளை அவர்கள் பின்பற்றி அனுசரிக்கும்படி அவர்களிடம் தர்க்கம் செய்து வெல்லும் வசீகரத் தன்மை என் தந்தைக்கு இயற்கையாகவே அமைந்திருந்த தென்று நினைக்கிறேன்"[10] என்கின்றார்.

மகாகவி பேச்சுக்குக் கிடைத்த மரியாதை

இத்தனை சிறப்புகள் இருந்தும் பாரதியாரின் சீர்திருத்தக் கருத்துக்களால், புரட்சிகரச் செயல்களால் கலவரப்பட்ட கடைய மக்கள், அவரின் மேதைமையைப் புரிந்துகொள்ளாத கடையர் களாகவே அக்காலத்தில் இருந்திருக்கின்றார்கள். எனினும் அவர்களைக் குறைகூறவோ, சபிக்கவோ செய்யாத அருள் உள்ளம் பாரதியாரிடம் இருந்தது. அதற்கும்அப்பால் அவர்களுக்கும் தமது சிந்தனைகளை, சீரிய கருத்துக்களை எடுத்துச் சொல்ல விழைந்திருக்கின்றார் பாரதியார்.

அதற்கென, கடையத்தில் உள்ள இராமசாமி கோயில் வாயிலில் தாம் பிரசங்கம் செய்வதாகவும், கிராமத்தார் கேட்க வரவேண்டும் என்றும் பாரதியார் கூறியிருக்கின்றார்.

நடந்தது என்ன? தகுந்த சாட்சியமான சகுந்தலாபாரதி கூறுகிறார். "சாயங்காலம் ஐந்து மணிக்கு பிரசங்கம். கோயில் கிணற்றில் தண்ணீர் எடுக்க வந்த ஸ்திரீகளைத் தவிர, அங்கு வேறு யாரும் வரவில்லை"[11] இதுதான் மகாகவி பேச்சுக்குக் கிடைத்த மரியாதை. ஆனாலும் இதற் கெல்லாம் சோர்ந்துவிடாத நம்பிக்கை உடையவராகப் பாரதியார் இருந்தார். அவரது நம்பிக்கைக்கு உரிய இடமாக, அவரது சமயங் கடந்த ஆன்மிகப் பேருரைக்கு அணிசெய்யும் வண்ணமாகப் பொட்டல்புதூர் இசுலாமிய சபை துணைநின்றது.

சமயம் கடந்த ஆன்மிகப்பேருரை

கடையவாழ்வில் சிக்கித் தவித்த பாரதியாரின் தமிழாற்றலுக்குத் தக்க களமளித்தது, பொட்டல்புதூர் இசுலாமிய சபையாகும். தாயுமானவரைத் துணைக் கொண்டு ஒர் இந்து, இசுலாமிய சபையில் நபிகள்பெருமானின் பெருமையையும், இசுலாமிய மார்க்கத்தின் சிறப்பையும் உணர்ந்து ஓதமுடியும் என்பதை எடுத்துக் காட்டும் வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்வாகும். எந்த நிலையிலும் சாதி, சமய, இனச் சிறைகளில் தம்மை முடக்க வாய்ப்பளிக்காமல் எல்லா நிலைகளிலும் எல்லா நேரங்களிலும் தம்மை ஒரு மனிதத்துவம்

நிறைந்த, இந்திய நாட்டின் இறையாண்மையை எப்போதும் உணர்ந்து உணர்த்துபவராகவும் பாரதியார் விளங்கி யிருக்கின்றார் என்பதற்கு இச்சொற்பொழிவு சிறந்த சான்றாக அமைகின்றது.

தன்னுளம் உணர்ந்ததை யாருக்காகவும் மறைக்காமல் மாற்றாமல் பக்தி சிரத்தையோடு பாரதியார் பேசும் ஆன்மிகப்பேருரையாகத் திகழ்கின்றது, இப் பொழிவு. அவர்தம் தெய்வவழிபாட்டுணர்வில் சக்திவழிபாட்டோடு முரணாது அல்லாவின்மீதான வழிபாட்டுணர் வாகவும் இது பொருந்தி நிற்பதைக் காண முடிகின்றது.

'எடுத்த காரியம் யாவினும் வெற்றி' எனத்தொடங்கும் சக்திப் பாடலின் முதல் மூன்றடிகள் அப்படியே இருக்க, நான்காம் அடியான 'வேண்டினேனுக்கு அருளினள் காளி' என்ற அடிக்குப் பதிலாக 'வேண்டும் முன்னர் அருளினர் அல்லா' என்று அமைவதைக் காண முடிகின்றது. கதைசொல்லும் பாங்கும் தன் அனுபவம் உரைக்கும் பெற்றியும் தடையற்றுப் பொங்கிப்பிரவாகம் எடுப்பதைக் காண முடிகின்றது. பாரதியாரை இந்துத்துவாக் கூண்டுக்குள் இன்னும் வைத்துப் பார்க்கும் சிறுமதியாளர் கள் தயவுகூர்ந்து படிக்க வேண்டிய கட்டுரை மற்றும் பொழிவு இது. இதற்கான பின்னணிகளைப் பாரதியாரின் புதல்வி சகுந்தலா பாரதி பின்வருமாறு பதிவுசெய்கிறார்.

சகுந்தலாபாரதியின் பதிவு

"என் தந்தையாரிடம் பேசுவதற்குக் கடையம் அருகிலுள்ள பொட்டலப் புதூரிலிருந்து சில முகம்மதிய நண்பர்கள் வருவதுண்டு. அவர்கள் என் தந்தையின் விசால மனப்பான்மையையும், அவரது சொற்களிலே மிளிரும் உண்மை ஒளியையும் கண்டு, அவர் பிரசங்கத்தைத் தம் ஊர் மக்களும் கேட்டு அனுபவிக்க வேண்டு மெனும் பேராவலினால் அவரைப் பொட்டலப்புதூரில் வந்து சில பிரசங்கங்கள் செய்யும்படி வேண்டினார்கள். ஆனால் என் தந்தையாரின் மனப்பான்மையையும், அவரது உன்னத நோக்கங் களையும் அதுவரை அறிந்திராத தமது சமூகத்தார், என் தந்தையை ஒரு ஹிந்து மதத்தவராதலால், தகுந்த மதிப்புடன் வரவேற்று அரவது போதனைகளைப் பொறுமையுடன் கேட்கமாட்டார்கள் என்ற எண்ணத்தினால், அவர் முதலாவதாக பேசும் விஷயம் அவர்கள் மனத்திற்குகந்த மத விஷயமாக இருக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே பொட்டலப்புதூரில் முகமதிய பொதுச் சங்க மொன்றில் என் தந்தை இஸ்லாம் மார்க்கத்தின் மகிமை என்ற விஷயம் பற்றி பிரசங்கம் செய்தார். தாம் அன்று இயற்றிய அல்லாப் பாடலைப் பாடிவிட்டுத் தமது உபன்யாசத் தைத் தொடங்கினார். அவர் அங்கு பேசிய விஷயத்தைத் தாமே எழுதி சுதேசமித்திரன்

பத்திரிகையில் பிரசுரிக்கும்படி அனுப்பியிருந்தார். அதில் ஒரு விஷயத்தை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன். இஸ்லாம் மார்க்கத்தைப் பற்றி முகமதியரிடத்தே பேசும் போதிலும்கூட சிறிதும் மாற்ற மில்லாமல் தமக்குத் தோன்றும் கருத்துக்களை, உண்மைகளை வெளியிடத் தயங்குவதில்லை. முகமது நபியைப் பற்றிப் பேசிவரும் போது பின்வருமாறு சொல்கிறார்.

'இடையிடையே நான் என் மனத்திற்குள் முஹம்மது நபி (ஸல் லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் பற்றிச் சித்திரம் போட்டுப் பார்ப்பது வழக்கம். நடுப்பாலைவனத்தில், நள்ளிரவிலே தனிமணல் வெளியிலே, ஒட்டகையின்மீது தனியாக ஏறிக்கொண்டு போகிறார். அல்லது, அங்கொரு குன்றின் மேல் ஏறி நிற்கிறார். கேள்வியாலும், நெடுங்காலத்துப் பக்தியாலும், நிகரற்ற அன்பினாலும், ஞானத்தினாலும் பக்குவப்பட்ட இவருடைய ஹிருதயம் அப்படிப் பட்ட இடத்தில் அல்லாவை நாடுகிறது. வேறு நினைப்புக்கு இடமில்லை. அப்போது அங்கு ஞான வொளி வீசிற்று. நபி அல்லாவைக் கண்டார். சுகப்பிரம்ம ரிஷிக்கு நேர்ந்த, அனுபவம் முஹம்மது நபிக்கு எய்திற்று'என்று"[12]இவ்வாறு யாரையும் திருப்திப் படுத்த வேண்டும் என்பதற்காக அல்லாமல், தமது உள்ளத்து உணர்வுகளை உள்ளவாறே உரைத்திருக்கின்ற பாங்கை சகுந்தலா பாரதி நன்கு விளக்கியிருக்கின்றார்.

*(20.06.1920)* ஞாயிற்றுக்கிழமை மாலையில், பொட்டல் புதூரிலே தெற்குப் புது மனைத்தெருவில், எல்லாவகைகளிலும் பெருமை பொருந்திய ஒரு முஸ்லீம் ஸபையின் முன்னே, 'இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை' என்ற விஷயத்தைக் குறித்து ஸ்ரீமான் சி.சுப்பிரமணிய பாரதி செய்த பிரசங்கத்தின் சாரம்) என்ற குறிப்புடன் தொடங்கும் அவ்வுரை பின்வருமாறு:

இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை

"இன்று மாலை எடுத்துக் கொண்ட விஷயத்தைப் பற்றிப் பேசு முன்பு நான் அல்லாவின்மீது பாடிக் கொணர்ந்திருக்கும் தமிழ்ப் பாட்டை இங்கு வாசித்துக்காட்ட அனுமதி தரும்படி வேண்டுகிறேன். ஏற்கெனவே அரபி பாஷையில், "பாத்திஹா" (ஜபம்) ஓதி முடிந்துவிட்டது. அதற்கு அனுஸரணையாக இந்தத் தமிழ்ப் பாட்டைப் பாடுகிறேன்.

பல்லவி

அல்லா அல்லா அல்லா

சரணங்கள்

1. பல்லாயிரம் பல்லாயிரம் கோடி கோடி யண்டங்கள்
எல்லாத் திசையிலுமோ ரெல்லை வெளி வானிலே
நில்லாது சுழன்றோட நியமனஞ் செய்தருள் நாயகன்,
சொல்லாலு மனத்தாலுந் தொடரொணாத பெருஞ்ஜோதி
(அல்லா அல்லா அல்லா)

2. கல்லாதவராயினும் உண்மை சொல்லாதவராயினும்
பொல்லாதவராயினும் தவமில்லாதவராயினும்
நல்லாரை நீதியின்படி நில்லாதவ ராயினும்
எல்லோரும் வந்தேத்து மளவில்யம பயங்கெடச் செய்பவன்
(அல்லா அல்லா அல்லா)

எனக்கு முதல் முதல் இஸ்லாம் மார்க்கத்திலே அன்புண்டானதின் காரணம் பின்வருமாறு.

பல வருஷங்களின் முன்பு நான் ஒரு ஆங்கிலேய பண்டிதர் எழுதிய புஸ்தக மொன்றைப்படித்துக் கொண்டிருந்தேன். அதில் முஹம்மது நபியின் சரித்திரத்தைக் குறித்து சில விஷயங்கள் காணப்பட்டன. அவற்றைப் படித்துப் பார்த்தபோது, நான் அற்புதமுண்டாய்ப் பரவசமடைந்தேன்.

மக்கா நகரத்தில். பூஜாரிகளின் சபை கூடியிருக்கிறது. பிரமாண்ட மான ஸபை. நாட்டிலுள்ள பூஜாரிகள் அத்தனைபேரும் சேர்ந்து கூடும் வருஷாந்தரத் கூட்டம். திருவிழாக் காலத்தை ஒட்டி நடந்தது. முஹம்மது நபி மேற்படி பூஜாரிகளின் வம்சத்தில் பிறந்தவர். அரபி தேசத்து ஜனங்கள் அந்தக் காலத்தில் விக்ரஹாரதனை யிலும் பல தேவ உபாஸனையிலும் தற்காலத்தில் தணிந்த ஜாதி ஹிந்துக்கள் எத்தனை மூழ்கிக் கிடக்கிறார்களோ, அத்தனை மூழ்கிக் கிடந்தார்கள். அவர்களிடையே முஹம்மது நபியின் குடும்பத்தார் கோவிற் குருக்களையும் பட்டர்களையும் ஒத்திருந்தனர். இவர்களுடைய வைதிகக் கோஷ்டியின் ஸபைக்கு நடுவே முஹம்மது நபியின் எழுந்து நின்று சொல்லுகிறார்:- "நான் அல்லாவை நேரே பார்த்திருக்கிறேன். அவர் என்னைத் தமது முக்கிய பக்தராகவும், பிரதிநிதியாகவும் நியமனம் செய்திருக்கிறார். நீங்கள் இனிமேல் அவரைத் தொழுங்கள். அவரை மாத்திரம் தொழுதால் போதும். கடவுள் ஒருவர்தான் இருக்கிறார். பல ஈசுவரர் இல்லை. ஈசனைத் தவிர வேறு ஈசன் வேறில்லை. லா இலாஹா இல் அல்லா. அல்லாவைத் தவிர வேறு அல்லா கிடையாது. (அரபி பாஷையில் அல்லா என்ற பதத்திற்குக் கடவுள் என்று அர்த்தம்) அவர் நம்மைப்போல் தோலுடம்பும் கைகால் முதலிய உறுப்புக்களு முடையவரல்லர். அவரைச் சிலைகள்

வைத்துத் தொழுவதிலும் அவருக்கு உங்களுடைய ஆகாரங்களை நைவேத்தியம் பண்ணுவதிலும் பயனில்லை. அவர் எல்லாவற்றையும் படைத்து எல்லாவற்றையும் இயக்கிக் காத்து எல்லாவற்றையும் வடிவு மாற்றிக்கொண்டிருக்கிறார். அவர் எல்லாவற்றையும் தம்முடைய உடம்புகளாகவும், தம்முடைய ரூபங்களாகவு முடையவர். அறிவு வடிவமாக நிற்பவர். அருள் வடிவமாக நிற்பவர். அவரை மனமாகிய கோயிலில் நிறுத்தி, வீரியம் பக்தி என்ற பூக்களால் அர்ச்சிப்பதே சரியான பூஜை. இடைவிடாமல் அசையாமல் அவரிடம் தீராத மாறாத பக்தி செலுத்துங்கள். அவ்விதமான பக்தி, இஸ்லாம் என்று சொல்லப்படும். இந்த இஸ்லாமைத் தரித்திருப்போர் நித்தியானந்த வாழ்க்கையாகிய முக்தி வாழ்க்கையை எய்துவார்கள். ஆதலால், நீங்கள் இந்தப் புராதனக் கிரியைகளையும் கொள்கை களையும் விட்டுவிட்டு என் மதத்தில் சேர்ந்து அல்லாவின் திருவடி அடைந்து வாழ முற்பட்டு வாருங்கள்" என்று முஹ:ம்மது நபியாண்டவர் திருவாய் மலர்ந்தருளினார்.

இதைக் கேட்ட மாத்திரத்தில், அங்கிருந்த பெருச்சாளிக் குருக்க ளெல்லாம் தங்கள் சிஷ்யர் ஸஹிதமாக முஹம்மது நபியைப் பரி ஹாஸம் பண்ணினார்கள். அந்தச் சமயத்தில் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம்) அவர்களின் மருமகனாகிய அலி என்பவர் எழுந்து, "மாமா, உங்கள் கொள்கையை யார் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, நான் நம்புகிறேன். லாஇலஹா இல் அல்லா முகம்மதூர் ரஜுல் உல்லா, அல்லாவைத் தவிர, வேறு கடவுள் இல்லை. அவருக்குச் சிறந்த நபி முஹம்மது" என்று பிரதிக்கினை செய்து கொடுத்தார். இது ஒரு செய்தி.

இரண்டாவது செய்தி, முஹம்மது நபியைத் தமது குமஸ்தாவாகப் பல வருஷம் வைத்திருந்த பிறகு, அவருக்கு மாலையிட்டவராகிய, கதீஜா பீவியம்மை அவருடைய மதத்தில் சேர்ந்து கொண்டது. ஒருவன் தான் நேரே கடவுளைப் பார்த்தாகவும் அதனின்றும் தெய்வங்கள் தன்னிடத்தில் விளங்குவதாகவும், வெளியூராரிடம் சொல்லி, அவர்களை நம்பும்படி செய்தல் எளிது. இரவு பகல் கூடவே யிருந்து, நீ நோய் வேதனை பொறுக்கமாட்டாமல் அழுவதையும் இன்னும் உன்னுடைய பலஹீனங்கள், அதைர்யங்கள், அச்சங்கள், அநீதிகள், குரூரங்கள், பொறாமைகள், அதர்மங்கள், குறைகள் எல்லாவற்றையும் ஸஹிப்போராகிய உன் சுற்றத்தாரும், அத்யந்த நண்பர்களும், பக்கத்துவீட்டாரும் உன்னைக் கடவுளின் அருளும் அம்சமும் அடைந்த மஹானென்று நம்பவேண்டுமானால், நீ உண்மையிலேயே தெய்வத்தைக் கண்டால்தான் முடியும். மற்றபடி ஏமாற்றலினாலும், வேஷங்களாலும், நடிப்புகளாலும் இவர்களை

நம்பும்படி செய்தல் சாத்தியமில்லை. இதுபற்றியே, இங்கிலீஷில், "எந்த மனிதனும், தன் சொந்த ஊரில் தீர்க்கதரிசியாக மாட்டான்" என்றொரு வசனம் சொல்லுகிறார்கள்.

முஹம்மது நபியை முதன்முதல் அலியும், அதைக் காட்டிலும் ஆச்சர்யந் தோன்றும்படி, கதீஜாபீவியும் கடவுளின் முக்கிய பக்தரென்றும், தெய்வ அருள் பெற்றவரென்றும் பூமண்டலத்தில் கடவுளுடைய பிரதிநிதியாக அவதரித்த மஹானென்றும் அங்கீகாரம் செய்து கொண்டதைக் கவனிக்குமிடத்தே, அவர் நிகரில்லாத ஞானி யென்பதும், பக்தகுல சிரோமணியென்பதும் மிகத் தெளிவாக விளங்குகின்றன.

மக்கத்தில் முஹம்மது நபிக்கு அநேகர் சீடராகச் சேர்ந்து விட்டார்கள். அவருடைய மதம் நாளுக்குநாள் பிரபலமாகத் தொடங்கிவிட்டது. இதைக்கண்டு பழைய விக்ரஹாராதனைக் காரருக்குப் பொறாமையும், அச்சமும் மிகுதிப்படலாயின. மக்கத்து அதிபதி, நபியவர்களையும் அவருடைய முக்கிய நண்பர்களையும் சீடரையும் பிடித்துச் சிறையிலிடும்படி, தன் சேவகரிடம் கட்டளையிட்டான். இந்தச் செய்தி நபி ஆண்டவனுடைய செவிக்கு எட்டி விட்டது. இது 622 கி.பி. வருஷத்தில் நடந்தது. அப்பால், சில நண்பரின் வேண்டுகோளுக்கும் அல்லாவின் உத்தரவுக்கும் இணைந்த முஹம்மது ஒரே ஒரு சீடருடன் மதினாவுக்குப் புறப்பட்டார். போகிற வழியில் காடு. இவ்விருவரும் தனியே சென்று கொண்டிருந்தனர். இவர்கள் ஊரை விட்டுத் தப்பிய செய்தியறிந்து மக்கத்து அதிபதி இவர்களின் பின்னே ஒரு குதிரைப் படையை அனுப்பினான். இவ்விருவரும் காட்டுவழியே போகையில், பின்னே குதிரைப்படை வரும் சத்தம் இவர்களுடைய காதிற்பட்டது. அங்கொரு புதருக்குள்ளே போய்ப் பதுங்கிக் கொண்டார்கள். குதிரைப்படையின் பாத ஒலி மிகவும் சமீபத்தில் கேட்டது. அப்போது நபியுடன் இருந்த சீடர், ஐயோ, இனி என்ன செய்யப்போகிறோம்? நாம் தப்புவது கிடையாது. நம்மை இவர்கள் பார்த்துத்தான் போடுவார்கள். மக்கத்திற்குப் போனால் நம்மை வெட்டிக் கொல்வார்களோ, தூக்குத்தான் போடுவார்களோ என்று பலவாறு சொல்லிப் பலவாறு பரிதபிக்கலானான். அப்போது முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர் சொல்லுகிறார். கேளாய், நண்பனே, நான் இந்த உலகத்தில் அல்லாவின் காரியஸ்தனாக வேலை செய்து வருகிறேன். அல்லாவினால் எனக்கு மானுஷ லோகத்தில் நிறைவேற்றும்படி விதிக்கப்பட்டிருக்கும் காரியங்களெல்லாம் நிறைவேறி முடியும்வரை, என்னை உலகத்து மன்னர்களெல்லோரும் ஒன்றுகூடிக் கொல்ல விரும்பினாலும் எனக்கொரு தீங்கு

வரமாட்டாது. என் தலையில் ஆயிரம் இடிகள் சேர்ந்து விழுந்தபோதிலும் எனக்கு மரணம் நேரிடாது. அல்லா ஸர்வ வல்லமையுடையவர். அவருடைய சக்திக்கு மேற்பட்ட சக்தி இந்த ஜகத்தில் வேறில்லை. ஆதலால் எனக்குப் பயமில்லை. என்னுடன் இருப்பதனால் உனக்கும் ஆபத்து வராது. நீயும் பயப்படவேண்டிய அவசியமில்லை என்றார்.

அப்பால் அந்தக் குதிரைப்படை அவர்களைப் பாராமலேயே போய்விட்டது.

இந்தச் சமாச்சாரத்தை நான் வாசித்துப் பார்த்தவுடனே என் மனதில் முஹம்மது நபியிடமிருந்த மதிப்பு ஆயிரம் மடங்கு மிகுதியாயிற்று. ஸாதாரண காலங்களில் தைர்யத்துடனிருப்பது ஸுலபம். ஆபத்து நேரே தலையை நோக்கி வரும்போது, கடவுள் துணை செய்வார். எனக்குப் பயமில்லை என்று மனதுடன் சொல்வோன் உண்மையான தெய்வபக்தன். தெய்வ பக்தி ஒன்றைத் தவிர வேறெந்த சக்தியும் மனிதக் குண்டின் முன்னே தைர்யம் கொடுக்காது. சீறிவரும் பாம்பை நோக்கி அஞ்சாமல் நகைக்கவல்ல தீரர் கடவுளின் கருணை பெற்றோரேயாவர். மற்றப்படி வேறெந்த பலமும் அவ்விதமான தைர்யத்தைத் தராது. பாம்பென்றால் படையும் நடுங்கும் இன்னும், மதீனாவுக்கு நபி சென்ற பிறகு இதுவரை பல தடவைகளில் மக்கத்தாரின் கொரேஷ் படைகள் எதிர்த்து வந்தன. முஹம்மது நபியிடம் சேர்ந்தவர்கள் தக்க ஸைன்யப் பயிற்சி பெறவில்லை. பயிற்சி பெற்று வந்த படைகளைப் பயிற்சியற்ற மனிதர்களைத் துணைக்கொண்டு முஹம்மது நபி வென்றார். கலங்காத நெஞ்சுடைய ஞான தீரமும் அழியாத நம்பிக்கையும் அவரிடத்தேயிருந்தன. ஆதலார் அவருக்கு,

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி எதிலும் வெற்றி
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டும் முன்னர் அருளினர் அல்லா

இடையிடையே நான் என் மனத்திற்குள் முஹம்மது நபி (ஸல் லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் பற்றிச் சித்திரம் போட்டுப் பார்ப்பது வழக்கம். நடுப்பாலைவனத்தில், நள்ளிரவிலே தனிமணல் வெளியிலே, ஒட்டகையின்மீது தனியாக ஏறிக்கொண்டு போகிறார். அல்லது, அங்கொரு குன்றின் மேல் ஏறி நிற்கிறார். கேள்வியாலும், நெடுங்காலத்துப் பக்தியாலும், நிகரற்ற அன்பினாலும், ஞானத்தினாலும் பக்குவப்பட்ட இவருடைய ஹிருதயம் அப்படிப்பட்ட இடத்தில் அல்லாவை நாடுகிறது. வேறு நினைப்புக்கு

இடமில்லை. அப்போது அங்கு ஞானவொளி வீசிற்று. நபி அல்லாவைக் கண்டார். சுகப்பிரம்ம ரிஷிக்கு நேர்ந்த அநுபவம் முஹம்மது நபிக்கு எய்திற்று.

அங்கமே நின் வடிவமான சுகர் கூப்பிட நீ
எங்கும் ஏன் என்றதென்ன, பராபரமே

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார்.

இந்தக் கதை எப்படியென்றால், சுகப்பிரம்மரிஷி காட்டுவழியாகப் போய்க் கொண்டிருக்கையில், கடவுளைப்பார்க்க வேண்டுமென்ற தாக மேலிட்டால், கடவுளே, கடவுளே, என்று கதறிக்கொண்டு போனாராம். அப்போது, காட்டிலிருந்த கல், மண், மணல், நீர், புல், செடி, மரம், இலை, பூ, காய், காற்று, ஜந்துக்கள் எல்லாவற்றினின்று, ஏன், ஏன்? என்ற மறுமொழி உண்டாயிற்று. அதாவது, கடவுள் ஞான மயமாய் எல்லாப்பொருள்களிலும் நிரம்பக் கிடப்பதைச் சுகமுனிவர் கண்டார் என்பது இக்கதையின் பொருள். முஹம்மது நபி மஹா ஸுந்தரபுருஷர், மஹா சூரர், மஹா ஞானி, மஹா பண்டிதர், மஹா பக்தர், மஹா லௌகிக தந்திரி, வியாபாரமானாலும், யுத்தமானாலும் முஹம்மது நபி கவனித்தால் அந்த விஷயத்தில் வெற்றி மிகவும் உறுதி. ஆதலால் அவர் மிகவும் அபிமானிக்கப்பட்டார்.

எனினும், புதிய மதமொன்று கொண்டுவந்ததினின்றும் அவர் சுற்றத்தாரும், அத்யந்த நண்பர்களும் பகைமை செலுத்தலாயினர். ஆனால், நபி பொருட்டாக்கவில்லை. முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், உலகத்தின் பொது நன்மைக்கும் தர்மத்திற்கும் நீதிக்கும் ஸத்தியத்திற்கும் அல்லாவிற்கும் முன்னே, தம்முடைய சொந்த ஸுகங்களையும், ஸௌகர்யங்களையும், வாழ்வையும், செல்வத்தையும், அதனால் விளையும் பெருமை களையும், இன்பங்களையும், ரக்ஷணைகளையும், உயிரின் பாதுகாப் பையுங்கூடச் சிறிய பொருளாகக் கருதினர்.

இவரிடத்தில் இத்தனை உறுதியான பக்தியிருப்பதை நோக்கியே அல்லா இவரைத் தமக்கு மிகவும் பிரியமான நபியாகத் தெரிந்தெடுத்தார். (இங்கு ஸ்ரீமான் சுப்பிரமணியபாரதி முஹம்மது நபியவர்களின் சரித்திரத்தைச் சுருக்கமாக எடுத்துரைத்தார். ஆனல் ரவண ஸமுத்திரத்திலே இஸ்லாம் மதத்தின் மஹிமையைக் குறித்துச் செய்த உபன்யாஸத்தில், அவ்விஷயம் சொல்லப்பட்டு ஏற்கனவே மித்திரனில் வெளிப்பட்டு இருப்பதால், இங்கு மீண்டும் ப்ரசுரம் செய்யவில்லை)

அரபியா தேசத்தில் மக்கா நகரத்தில் அப்துல்லா என்ற மஹானுக்கு அவருடைய தர்ம பத்தினியாகிய ஆமீனாவுக்கும் குமாரராக, கி.பி.

570ஆம் ஆண்டில் நமது நபி ஜனித்தார். புஸ்தகப் படிப்புக் கிடையாது. கேள்வியால் மஹா பண்டிதரானார். ஸஹவாஸத்தால் உயர்ந்த ஞானியானார். நிகரில்லாத பக்தியால் அரசனும், கலீபும் தீர்க்கதரிசியுமானார். மக்கத்தில் பெருஞ்செல்வியாகிய கதீஜா பீவியையும், வேறு எட்டு ஸ்திரீகளையும் மணம் புரிந்தார். தம்முடைய ஒன்பது பத்தினிகளிலே அபூபக்கரின் குமாரியான ஆயிஷா பீவியைப் பிரதான நாயகியாகக் கொண்டிருந்தார். நாற்பதாம் ஆண்டில் தம்மை ஈசன் நபியாக்கிவிட்டதாக, உலகத்துக்குத் தெரிவித்தார். கி.பி. 632இல் இந்த மண்ணுலகை விட்டு முஹம்மது நபி வானுலகம் புகுந்தார்.

மக்கத்தை விட்டு, இளமையிலேயே இவர் வியாபாரத்துக்காக வெளிநாடுகளில் ஸஞ்சரிக்கும்படி நேர்ந்த ஸமயங்களில் யூத கிருஸ்தவ பண்டிதர்களைக் கண்டு அவர்களுடைய மதக்கொள்கையைப் பற்றி விசாரணை செய்வது வழக்கம். அதனின்றும் விக்ரஹாராதனை விஷயத்திலும் பல தேவர் வணக்கத்திலும் இவருக்குப் பற்றுதலில்லாமற் போக ஹேது உண்டாயிற்று. ஏகேசுவர மதத்தைக் கைக்கொண்டார். யூதருக்கும் கிருஸ்தவருக்கும் பொதுவாகிய, பழைய ஏற்பாடு என்ற பைபிலின் பூர்வ பாகத்தை இவர் உண்மையாகவே அங்கீகாரம் செய்து கொண்டார். கிருஸ்தவ நாதரையும் இவர் ஒரு சிறந்த நபியாகக் கொண்டார். கடவுளின் அவதாரமாக ஒப்புக் கொள்ளவில்லை. விக்ரஹங்களிடத்தே கடவுளைக் காட்டி வணங்குதல் பொருந்தாத காரியமென்று யூதருக்கும் கிருஸ்தவருக்கும் தோன்றியது போலவே, ஒரு மனிதன் பக்தி ஞானங்களில் எவ்வளவு சிறப்பெய்தியபோதிலும், அவன் கடவுளை நேருக்கு நேரே கண்டறிந்த வரையிலும், அதுபற்றி அவனை மிக உயர்ந்த பக்தனென்றும் முக்த னென்றும் போற்றலாமேயல்லாது, மனித வடிவத்தில் ஸாக்ஷாத் கடவுளையே சார்த்துதல் பொருந்தாதென்று முஹம்மது நபி எண்ணினார்போலும். இந்த அம்சத்தில் என்னுடைய சொந்தக் கருத்துப் பின்வருமாறு.

இந்த உலகம் முக்காலத்திலும் உள்ளது; இது அசைகிறது; அண்டங்களாக இருந்து சுழன்றோடுகிறது; காற்றாகத் தோன்றி விரைகின்றது; மனமாக நின்று சலிக்கிறது; ஸ்தூல அணுக்களும் ஸூக்ஷ்ம அணுக்களும் ஸதா மஹாவேகத்துடன், மஹா மஹா மஹா மஹா வேகத்துடன், இயங்கிய வண்ணமாகவே இருக்கின்றன. இந்த உலகத்திலிருந்துகொண்டுஇதனை அசைக்கின்ற சக்தியையே கடவுளென்கிறோம். எல்லாம் அவன். உலகத்தின் செயல்களெல்லாம் கடவுளுடைய செயல்கள்.

அவனுடைய நிஜ வடிவம். அதாவது, பூர்வ வடிவம் யாது?யய சைதன்யம் அல்லது சுத்தமான அறிவே கடவுளின் மூலரூபம். மனிதருடைய ஸாதாரணச் செயல்கள் யாவுமே கடவுளின் செய்கைகளேயன்றி வேறில்லை. எனினும், ஜகத்தில் ஞான மயமான கடவுள் எங்கும் நிரம்பிக் கிடப்பதை நேரே ஒருவன் கண்ட பிறகு, அந்த மனிதனுடைய செயற்பாடுகளிற் பல, கடவுளின் நேரான கட்டளையின் படி செய்யப்படுகின்றன. அப்படிப்பட்ட நிலைமையை யெய்தின மனிதனை நபி அல்லது தீர்க்கதரிசி என்கிறோம். அப்பால் அல்லா. எப்போதுமே ஒருவனுடைய ஹ்ருதயத்தில் அந்தக் கரணத்துக்கு நன்றாக விளங்கும்வண்ணம் குடிபுகுந்து, கற்றறிந்தவனுடைய அறிவு முழுவதையும் தாம் விலை கொடுத்து வாங்கிய கருவி போலேயாக்கிக் கொண்டு, புறச் செயல்களும் உலகத்தாருக்கு வழிகாட்டிகளாகும்படி பரிபூர்ண சைதன்ய நிலையிலே நடத்திக்கொண்டு வரத்திருவுளம் பற்றுவாராயின், அப்படிப்பட்ட மனிதனைக் கடவுளின் அவதாரமென்று சொல்லலாம். ஆனால், கிருஸ்துநாதர் இந்நிலை அடைந்ததாக முஹம்மது நபி நம்பவில்லை போலும். இது நிற்க.

இஸ்லாம் மார்க்கத்தின் முதலாவது கலீபாவாக முஹம்மது நபி அரசாண்டார். அவருக்குப்பின் அபுபகர் அந்த ஸ்தானத்தை ஐந்து வருஷம் வகித்தார். அப்பால் ஏழு வருஷம் உமர்கலீபாவாக ஆண்டார். அந்தக்காலத்திற்குப் பின்பு, முஸல்மான்களிலே, ஷியா, ஸூந்நி என்ற இரண்டு பிரிவுகள் உண்டாயின.

குரான் இஸ்லாம் மார்க்கத்திற்கு வேதம். இதை முஹம்மது நபி தன்னுடைய வாக்காகச் சொல்லவில்லை. கடவுளுடைய வாக்கு. தேவ தூதரின் மூலமாகத் தமக்கு எட்டியதென்றும், தாம் அதை ஒரு கருவி போலே நின்று உலகத்தாருக்கு வெளியிடுவதாகவும் சொன்னார்"[13] இக்கட்டுரை இன்னும் இருக்கக்கூடும்.

பாரதியார் என்றொரு சித்தர்

பாரதியாரின் ஆன்மிகப் பார்வையைச் செழுமைப்படுத்தியதில் வேதங்களுக்குச் சிறப்பான இடமுண்டு. புதுச்சேரியைப் புகலிடமாகக் கொண்டு, எந்தவொரு தேசப் பணியிலும் ஈடுபடமுடியாமல் முடங்கிக்கிடந்த பாரதியாருக்கு உற்ற ஆன்மிகத் தோழராய் வாய்த்தவர், அரவிந்தர். யோகநெறியில் மூழ்கிய அவரொடு இணைந்து நாள்தோறும் வேத ஆய்வுகளில் ஈடுபட்டவர் பாரதியார். அதன்வழி,வேதம் தமிழ் செய்யவும், பதஞ்சலியோகச் சூத்திரத்திற்கும், பகவத்கீதைக்கும் உரை எழுதினார். இத்தகு பணிகளுக்கென, ஆங்கிலத்தில் அரவிந்தர் கொண்டுவந்த கர்மயோகின் இதழைத் தழுவித் தமிழில் கர்மயோகி இதழை நடத்தினார், பாரதியார்.

பல நிலைகளில் அரவிந்தர் பாரதியார் பற்றிய ஆய்வுகள் தமிழில் வந்த வண்ணம் இருக்கின்ற இந்தவேளையில், குள்ளச்சாமி மற்றும் கோவிந்தசாமி, யாழ்ப்பாணத்துச் சாமி உள்ளிட்ட சித்தர் கூட்டத்தோடு பாரதியார் கொண்டிருந்த உறவு. அதன்வழி பாரதியார் பெற்ற ஆன்மிக அனுபவங்கள் பறிய ஆய்வுகள் மிகவும் குறைவு.

ஒருபுறத்தில், படித்த, ஆராய்ச்சி நுட்பங்களை நன்கு புரிந்து கொள்ளக்கூடிய வேதவல்லுநர்களுடைய உறவுகள் பாரதியாரின் ஆன்மிகச் செழுமையை வளர்த்ததற்கு இணையாக, இன்னொரு புறத்தில் இத்தகு சித்தர்கூட்டமும் பாரதியாரின் ஆன்மிகத் தெளிவிற்குப் பெரிதும் துணை புரிந்திருக்கின்றன.

கவிப்பாங்கோடு பாரதியாரின் வாழ்வில் குள்ளச்சாமி உணர்த்திய ஆன்மிக நுட்பங்கள் ஓரளவிற்குப் பாரதியாரால் பதிவுசெய்யப் பெற்றிருக்கின்றன.

வேதபுரம் என்று அழைக்கப்பெறும் புதுச்சேரியில் வசித்துவந்தவர் குள்ளச்சாமி. அவரை ஞானகுரு என்று போற்றுகின்றார் பாரதியார்.

"முப்பாழுங் கடந்தபெரு வெளியைக்கண்டான்
முக்தியெனும் வானகத்தே பரிதியாவான்
தப்பாத சாந்தநிலை அவித்த கோமான்
தவம்நிறைந்த மாங்கொட்டைச் சாமித் தேவன்
குப்பாய ஞானத்தால் மரணமென்ற
குளிர்நீக்கி யெனைக் காத்தான் குமாரதேவன்!"[14]

என்று பாடிப்பரவுகின்றார். இவர்தம் பெருமை பேசிமுடியாப் பெற்றியது. அதனை,

"வாயினால் சொல்லிடவும் அடங்காதப்பா-
வரிசையுடன் எழுதிவைக்க வகையும் இல்லை
ஞாயிற்றைச் சங்கிலியால் அளக்கலாமோ?
ஞானகுரு புகழினை நாம் வகுக்கலாமோ?
ஆயிரநூல் எழுதிடினும் முடிவுறாநம்
ஐயனவன் பெருமை"[15]

என்று விளக்குகின்றார். மேலும், அவரின் தோற்றம் மற்றும் பண்புநலன்கள் பற்றித் தமது கதையொன்றில் பாரதியார் பின்வருமாறு எழுதுகின்றார்:

"வேதபுரத்தில் குள்ளச்சாமி என்றொரு பரதேசியிருக்கிறார். அவருக்கு வயது ஐம்பதோ, அறுபதோ, எண்பதோ யாருக்கும் தெரியாது.கருநிறம். குண்டுசட்டியைப் போல் முகம். உடம்பெல்லாம் வயிரக் கட்டை போலே நல்ல உறுதியான பெயர்வழி.

அவருக்கு வியாதி என்பதே கிடையாது. சென்ற பத்துவருஷங்களில் ஒரே தடவை அவர்மேலே கொஞ்சம் சொறி சிரங்கு வந்தது. பத்து நாளிருந்து நீங்கிவிட்டது. அந்த மனுஷ்யன் ஜடபரதருடைய நிலையிலே யிருப்பதாகச் சொல்லலாம். பேசினால் பயித்தியக்காரன் பேசுவது போலிருக்கும். இழுத்திழுத்து, திக்கித் திக்கி, முன்பின் சம்பந்தமில்லாமல் விழுங்கிவிழுங்கிப் பேசுவார். தெருவில் படுத்துக் கிடப்பார். பசித்தபோது எங்கேனும் போய்ப் பிச்சை வாங்கிச் சாப்பிடுவார். கள் குடிப்பார். கஞ்சாத் தின்பார். மண்ணிலே புரள்வார். நாய்களுடன் சண்டை போடுவார்." [16]

இத்தகு இயல்புடைய குள்ளச்சாமி மக்களின் நம்பிக்கைக்கும் கேலிக்கும் உள்ளாகியவர். அவர் திருநீறு கொடுத்தால் நோய்கள் குணமாகும் என்கின்ற நம்பிக்கை மக்களுக்கு இருந்திருக்கின்றது. ஒருநாள் அவர் கிழிந்த பழங்கந்தைகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டு வீதி வழியே வந்தபோது, பாரதியார் எதிரில் வந்தார். வணக்கம் தெரிவித்துவிட்டுப் பாரதியார் அவரிடத்தில், உனக்கென்ன பயித்தியமா, கந்தைகளைக் கட்டி ஏன் முதுகிலே சுமக்கிறாய்? என்று கேட்டிருக்கின்றார். அதற்கு அவர் அளித்த பதில் பாரதியாரின் ஆன்மிகச்சிந்தனையைப் பெரிதும் கிளர்ந்திருக்கின்றது.

குள்ளச்சாமி, "நீ நெஞ்சுக்குள்ளே சுமக்கிறாய், நான் முதுகின்மேலே சுமக்கிறேன்!" என்று சொல்லிவிட்டு ஓடிப்போய்விட்டார். உடனே நான் பொருள் தெரிந்து கொண்டேன். அஞ்ஞானப் பழங்குப்பை களையும், பழங்கவலைகளையும், பழந்துன்பங் களையும், பழஞ்சிறுமை களையும் மனதில் வீணாய்ச் சுமந்து திரியும் சாமான்ய மனிதனுடைய அறிவீனத்தை விளக்கும்பொருட்டு சாமியார் இந்தத் திருஷ்டாந்தத்தைச் சொன்னாரென்று தெரிந்து கொண்டேன்"[17] என்று எழுதுகின்றார்.

இந்நூலில், அரசியல் சொற்பொழிவுகள் பகுதியில் இடம்பெற்ற சித்தக்கடல் பகுதியில் பாரதியார் பட்ட பாடுகளுக்கான மருந்தாகக் குள்ளச்சாமியின் இந்த உபதேசம் அமைந்துவிட்டது எனலாம். இதே கருத்து, பாரதி அறுபத்தாறு கவிதையில், 'சென்றதினி மீளாது மூடரே' எனத்தொடங்கும் கவிதைவரிகளில் இடம்பெறக் காணலாம்.

இத்தோடன்றிக் குருசீடர் உரையாடல் மரபில் பாரதியார் குள்ளச்சாமியிடம் பேசிப் பெற்ற உபதேசங்கள் பலவாகும்.

பாரதியாரின் வினாக்களும் குள்ளச்சாமியின் உபதேச மொழிகளும்

கேள்வி :- "ஞான நெறியில் செல்ல விரும்புவோன், முககியமாக எதை ஆரம்பத் தொழிலாகக் கொள்ள வேண்டும்?"

பதில் :- "முதலாவது, நாக்கை வெளுக்க வேண்டும். பொய் சொல்லக் கூடாது. புறஞ்சொல்லக் கூடாது. முகஸ்துதி கூடாது. தற்புகழ்ச்சி கூடாது. வருந்தச் சொல்லலாகாது. பயந்து பேசக் கூடாது. இதுதான் வண்ணான் தொழில் ஆரம்பம். பிறகு அந்தக் காரணத்தை வெளுத்தல் சுலபம். சில இடங்களில் பொய்சொல்லி தீரும்படியாக இருந்தால் அப்போது மௌனத்தைக் கொள்ள வேண்டும். மௌனம் சர்வார்த்த சாதகம். அதைவிட்டுப் பேசும்படி நேர்ந்தால், உண்மையே சொல்ல வேண்டும். உண்மை விரதம் தவறக் கூடாது. தவற வேண்டிய அவசியமில்லை. உண்மை கூறினால் தீங்கு நேரிடுமென்று நினைப்போர் தெய்வம் உண்மையென்பதை அறிய மாட்டார்கள். தெய்வம் உண்மை. அதன் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. ஆதலால் பயப்படுகிறவன் மூடசிகாமணி. அந்தக் கரணத்தை வெளுத்தலாவது அதிலுள்ள பயத்தை நீக்குதல். அந்தக் கரணத்தை சுத்தி செய்து விட்டால் விடுதலையுண்டாகும்."

இங்குச் சுட்டப்பெறும் 'வண்ணான் தொழில்' என்பதன் பொருளைக் குள்ளச்சாமி பிறிதொருமுறை விளக்கியதாகப் பாரதியார் குறிப்பிடுகின்றார்.

"வண்+ஆன் =வண்ணான். ஆன் என்பது ரிஷபம். வள்ளலாகிய ரிஷபம் நந்திகேசுரர். அவருடைய தொழில் சுத்தஞான மூர்த்தியாகிய சிவனைச் சுமந்து கொண்டிருத்தல். தமிழ்நாட்டு ஞானாசாரியர்களுக்கு ஆதிமூர்த்தியும் வள்ளலுமாகி நிற்கும் இந்த நந்திபகவானுடைய தொழிலாகிய ஆசாரியத் தொழிலையே நான் வண்ணான் தொழில் என்று சொல்லுகிறேன். எனக்கு வண்ணான் தொழில்"[18] என்றார் குள்ளச்சாமி.

இது கேள்வி கேட்டுக் குள்ளச்சாமியின் வாய்மொழியாகப் பாரதியார் பெற்ற உபதேசமாகும். பின்வரும் உபதேசம், குறியீட்டுப் பொருளில் குள்ளச்சாமி உணர்த்தியதாகும்.

'அப்பனே, தேசிகனே, உன்னை ஞானி என்றும், பித்தன் என்றும் சொல்லு கின்றார்கள். ஒப்பனை காட்டாமல் உண்மையில் நீ யார் என்று எனக்கு உணர்த்த வேண்டும். யார் நீ? உனக்குள்ள திறமை என்ன? யாது உணர்கிறாய்? கந்தை சுற்றித் திரிவது ஏன்? தேவனைப் போல் விழிப்பது ஏன்? சிறியவர்களோடும், நாய்களோடும் தெருவில் விளையாடுவதன் காரணம் யாது? பாவனையில் பித்தன் போல அலைவதும், பரமசிவன் போல் உருவம் படைத்திருப்பதும் ஏன்? எந்த ஆவலும் அற்றிருப்பதற்கான காரணம் யாது? நீ அறிந்த தெல்லாம் எனக்கு உணர்த்த வேண்டும்!' என்று பாரதியார் வேண்ட, அதற்குக் குள்ளச்சாமி யாதும் கூறாமல் ஓட முயன்றிருக்கின்றார்.

பாரதியார் விடாமல் இறுக்கிக் கையைப் பிடித்துக் கொள்ள, அவர் ஒரு மெல்லிய புன்னகை புரிந்தார். பின்னர், பாரதியார் அவர் பாதத்தைப் பார்த்துக்கொண்டிருந்த வேளையில் வெடுக்கென, அவர்தம் பிடியிலிருந்து தம் கையை விலக்கிக்கொண்டு ஓடிப் போனார். பாரதியாரும் விடாமல் துரத்திச் சென்று அவ்வீட்டுக் கொல்லைப்பகுதியில் மறித்துக் கொண்டார்.

அப்போது, பக்கத்து வீடு இடிந்து போய் இருந்த குட்டிச் சுவர் ஒன்றையும், சூரியனையும், கிணற்றுக்குள் தெரிந்த அதன் பிம்பத்தையும் காட்டி, 'அறிந்து கொண்டாயா?' என்று கேட்டார் குள்ளச்சாமி. பாரதியாரும், 'அறிந்து கொண்டேன்' என்றார்.

பாரதியார் அறிந்து கொண்டதென்ன? அதனையே உபதேசம் என்னும் தலைப்பின் கீழ்க் கவிதையாக்குகின்றார்.

"தேசிகன் கைகாட்டி எனக்கு உரைத்த செய்தி
 செந்தமிழில் உலகத்தார்க்கு உணர்த்துகின்றேன்
வாசியைநீ கும்பத்தால் வலியக் கட்டி,
 மண்போலே சுவர்போலே வாழ்தல் வேண்டும்.
தேசுடைய பரிதியுருக் கிணற்றினுள்ளே
 தெரிவதுபோல் உனக்குள்ளே சிவனைக் காண்பாய்
பேசுவதால் பயனில்லை - அனுபவத்தால்
 பேரின்பம் எய்துவதே ஞானம் என்றான்"[19]

இதுபோல் இன்னொரு கேள்வியையும் பாரதியார் குள்ளச் சாமியிடம் கேட்டு உபதேசம் பெறுகின்றார்.

இவை குள்ளச்சாமி வாயிலாகப் பாரதியார் பெற்ற உபதேசங்கள். இன்னொரு சூழலில் பாரதியாரின் இல்லத்து மாடியில் வேணு முதலியும், காளிதாசனாகிய பாரதியாரும் காணக் குள்ளச்சாமி நெடிய சாமி ஆகி, அர்ச்சுனனுக்குக் கண்ணன் விசுவரூபம் காட்டியதுபோலே காட்சி தந்திருக்கிற சீர்த்தியைப் பாரதியார் தமது சும்மா II கதையில் சித்திரப்படுத்தியிருக்கின்றார்.

இவ்வாறெல்லாம் பாரதியார் குள்ளச்சாமியிடம் பெற்ற ஆன்மிக அனுபவங்களைப் பாரதியார் தமது சொந்த நலனுக்கெனக் கொள்ளாமல், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று தன் கவிதைகளிலும், கதைகளிலும், கட்டுரைகளிலும் பதிவு செய்தது போல், மேடைகளிலும் விளக்கியிருக்கின்றார். இவற்றைக் குருவிடம் கேட்டுப் பிறரிடம் ஒப்புவிக்கும் பாடம்போல் அன்றி, அனுபவத்தில் பயன்படுத்தி விளைவுகளை நன்கு உணர்ந்து பின்னர் உலகத்தார்க்கு உணர்த்தியதாகவே பாரதியாரின் உபதேசப்பொழிவுகள் அமைந்திருக் கின்றன எனலாம்.

காரணம் சித்தக்கடல் பலவாறு கலங்கி, மரணபயம் விழுங்கிக் கொண்டிருந்த நேரத்தில் குள்ளச்சாமியின் தோற்றமும், விளக்கங்களும் பாரதியாரை மீட்டுக் கொணர்ந்திருக்கின்றன. அதனால்தான் கடைய வாழ்விலிருந்து மீண்டு பாரதியார் திரும்பவும் சென்னை வாழ்வு மேற்கொண்டபோது குள்ளச்சாமியைத் தன்னிடத்தில் அழைத்துவரும்படி, புதுவை அன்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதுகின்றார். அதன்படி சென்னை வந்திருந்த குள்ளச்சாமியை வ.உ.சி.போன்ற தன் அன்பர்களுக்கும் அறிமுகப் படுத்தி வைக்கின்றார் பாரதியார். அவருக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டும் படியும் வ.உ.சி.யிடத்துக் கூறுகின்றார். இதுகுறித்து அருவெறுப்புக் கொண்ட வ.உ.சி. பாரதியாரின்மீது வருத்தம் கலந்த கோபம் கொள்கின்றார். இவரோடு பரலி சு.நெல்லையப்பரும் சேர்ந்துகொண்டு பாரதியாரைக் கஞ்சா முதலான போதைப் பொருள்களுக்குப் பழக்கியவராகக் குள்ளச்சாமியைக் கடிந்து கொள்கின்றனர். இக்காலத்தில் எலுமிச்சையளவு அபின் உண்டவராகப் பாரதியாரைக் கண்ட வ.உ.சி.யின் கோபம் நியாயம்தான் எனினும், அவர் குள்ளச்சாமியின் இன்னொரு சித்தத்தோற்றத்தை, குள்ளச்சாமியின் அருமை பெருமைகளை உணரவில்லை என்றே தோன்றுகின்றது. இவையாவும் பாரதியாரின் அகவாழ்வு ஒத்தது. ஆனால். புறத்தே மக்கள் மேம்பாடடையக் குள்ளச்சாமியை அழைத்துவந்து சென்னையில் ஒரு கூட்டத்திற்குத் தலைவராகவும் ஆக்கி வைத்திருக்கின்றார். அக்கூட்டத்தில் குள்ளச்சாமி ஒன்றும் பேசவில்லை என்பதைப் பதிவு செய்கின்ற ப.கோதண்டராமன், பாரதியார் என்ன பேசினார் என்பதைப் பதிவு செய்யத் தவறிவிட்டார். ஆனபோதிலும், இப்படி ஒரு நிகழ்வு நடந்திருக்கின்றது என்பதை நேருறக் கண்டு பதிவு செய்திருப்பது கவனத்திற்குரியது. பாரதியன்பர்களின் தேடலுக்கு வழி வகுப்பது. அப்பதிவு பின் வருமாறு:

குள்ளச்சாமி தலைமையில் கூட்டம்

"1918ம் வருஷம் டிசம்பர் மாதம் புதுவையைவிட்டுச் சென்னை சேர்ந்து சிறிது காலம் மண்ணடியிலுள்ள ராமசாமி தெருவில், வக்கீல் சா.துரைசாமி ஐயர் வீட்டில் தங்கியிருக்கையில், பாரதியார் குள்ளச்சாமியைப் புதுவை யிலிருந்து சென்னைக்கு அழைத்துவர ஏற்பாடு செய்தார். சென்னைக்கு விஜயம் செய்து துரைசாமி அய்யரவர்களின் வீட்டில் தங்கியிருந்த போதும், கோகலே மண்டபத்தில் பாரதியார் சொற்பொழிவு நடத்தியபோது தலைமைவகித்தபோதும், இந்நூலாசிரியர் (ப.கோதண்டராமன்) குள்ளச்சாமியைக் கண்டிருக்கிறார். அதுசமயம் அவர் கண்டதும் கேட்டதும் வருமாறு.

குள்ளச்சாமியார் எப்போதும் குழந்தையைப்போல விறுவிறுப்பாக இருப்பார். வீட்டில் சாதாரணமாக முழங்காலுக்குமேலே ஒரு துண்டு உடுத்தியிருப்பார். கோகலே மண்டபத்தில் தலைமைவகித்தபோது மட்டும் ஒரு வெளுப்பான வேட்டியும், சொக்காயும், தலையில் ஒரு காவியேறின முண்டாசும் கட்டியிருந்தார். அவரைக் கண்டோர் யாவரும் அவரைப் பரமசாதுவென்றே கூறினர். இரவு முழுவதும் உறங்காமல் படுக்கையில் உட்கார்ந்த வண்ணமாக இருப்பார். யாருடனும் சகஜமாகப் பேசமாட்டார். பேச்சுக்கொடுத்தாலோ யாதொரு தொடர்புமின்றிப் பேசுவார். அநேகமாகச் சங்கேதமாகவே பேசுவார். கோகலே மண்டபத்தில் தலைமை வகித்த போது அவர் வாயைத்திறந்து யாதொன்றும் பேசவில்லை. பாரதியார் குள்ளச்சாமியிடம் எவ்வளவு அன்புவைத்திருந்தாரோ, அவ்வளவு அன்பு குள்ளச்சாமிக்கும் பாரதியிடம் உண்டு. பல சமயங்களில் குள்ளச்சாமி, 'பாரதி தங்கமானவன்' எனக் கூறியிருக்கிறார்."[20]

இவ்வாறு குள்ளச்சாமியிடத்துப் பாரதியார் தொடர்பு கொண்டதுபோல், கோவிந்த சுவாமியிடத்தும், யாழ்ப்பாணத்துச் சுவாமியிடத்தும் தொடர்பு கொண்டு ஞானத் தெளிவடைந் திருக்கின்றார். இத்தகு சித்தர்களுடனான தொடர்பைப் பாரதியாருக்கு ஏற்படுத்திக் கொடுத்தவர், குவளைக் கிருஷ்ணமாச்சாரியார் எனும் குவளைக்கண்ணன் ஆவார்.

### கோவிந்தசுவாமி தரிசனம்

குவளைக்கண்ணன் துணையினாலே பாரதியார் கோவிந்த சுவாமியைச் சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றார். யானைக்கால் வியாதிகொண்ட அவரது தோற்றத்தைக் கண்டு அருவெறுத்து, இத்தகையோரையெல்லாம் தம்மிடம் கொணர்ந்து சேர்த்த குவளைக் கண்ணனை ஆரம்பத்தில் கடிந்து கொண்ட பாரதியார் பின்னர் அவர்தம் அருமை யுணர்ந்ததும் நன்றி பாராட்டியிருக்கின்றார்.

ஒருநாள் பாரதியார் இல்லத்திற்கு வந்திருந்த கோவிந்த சுவாமி, பாரதியாருக்கு, அவருடைய இறந்துபோன, தாய் தந்தையரின் வடிவங்களைத் தரிசனமாக்கி யிருக்கின்றார்.

"பொன்னடியான் என்மனையைப் புனிதமாக்கப்
போந்தான்இம்முனி ஒருநாள். இறந்த எந்தை
தன்னுருவம் காட்டினான். பின்னர் என்னைத்
தரணிமிசைப் பெற்றவளின் வடிவம் உற்றான்
அன்னவன் மாயோகியென்றும் பரமஞானத்
தனுபூதி யுடையனென்றும் அறிந்துகொண்டேன்

மன்னவனைக் குருவென நான் சரணடைந்தேன்
மரணபயம் நீங்கினேன். வலிமை பெற்றேன்!"[21]

என்று பாடுகின்றார். இவர்வழி பாரதியார் பெற்ற உபதேசமாவது:

'அன்பே தெய்வம். இவ்வுலகில் அனைத்தும் தெய்வம்' என்பதேயாகும்.[22]

யாழ்ப்பாணத்துச் சுவாமி தரிசனம்

பாரதியாருக்குக் குருவாக வாய்த்த இன்னொருவர் யாழ்ப்பாணத்துச் சுவாமி எனும் சிதம்பரத்து நடராஜமூர்த்தி. பாவியரைக் கரையேற்றும் ஞானத்தோணி, பரமபத வாயில் எனும் பார்வையாளன் என்று அவரைப் போற்றுகின்றார் பாரதியார். இவரையும் பாரதியார் இல்லத்திற்கு அழைத்துவந்தவர் குவளைக்கண்ணன். யாழ்ப்பாணத்துச் சுவாமி, பாரதியாரின் அகத்தினிலே பாதமலர் வைத்தவுடன், அன்றேயப்போதே வீடதுவே வீடு என்று பாடிப்பரவுகின்றார். இவ்வீடு, பாரதியாரின் அக - புற வீடுகளையும் விளக்கும் சொல்லாகிப் பொலிவுறுகின்றது.

இவர்களைப் பாடிப்பரவுதலால் பெற்ற பயன்கள் பற்றிப் பாரதியார் பாடுகின்றார்.

"பாங்கான குருக்களை நாம் போற்றிக் கொண்டோம்
பாரினிலே பயந் தெளிந்தோம். பாசமற்றோம்
நீங்காத சிவசக்தி யருளைப் பெற்றோம்
நிலத்தின்மிசை அரமரநிலை உற்றோம். அப்பா!"[23]

இவர்களை வணங்கிப்பெற்ற பெரும்பயனை மற்றவர்களுக்கும் அளிக்கும் வண்ணம் பாரதியார் தமது நிறைவுக்காலத்தில் சொற்பொழிவுகள் ஆற்றியிருக்கின்றார்.

அவற்றுள் ஒன்று, பாரதியாருடன் சுதேசமித்திரன் இதழில் பணியாற்றியதே. உலகநாயகர் என்னும் அன்பர் ஏற்பாட்டில் வன்னியத் தேனாம்பேட்டையில் நிகழ்ந்த கூட்டமாகும்.

"உண்மையைச் சொல்லுகிறேன். அவர் இருந்தபோது அவரது பெருமையை அதிகமாக நான் உணரவில்லை!" என்று பாரதியார் மறைந்தபின்னர் வருந்திக் குறிப்பிடும் உலகநாயகர் பாரதியார் அச்சொற்பொழிவுக்குக் குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாகவே வந்து நண்பரின் குடும்பத்தைக் கண்டு உரையாடி நலம் விசாரித்ததையும், பின்னர் அவர் மேடையில் முழங்கிய பெற்றியையும் பின் வருமாறு விளக்குகின்றார்.

தேனாம்பேட்டையில் பாரதியார்

"அன்று கோகுலாஷ்டமி. தேனாம்பேட்டையில் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தேன். பாரதியார்தான் உபந்நியாசகர். மாலை 5 மணிக்குக் கூட்ட மாகையால், 4 மணிக்கு வந்தால் போதுமென நண்பரிடம் சொல்லியிருந்தேன். அவர் முன்னதாக வந்துவிட்டார்.

"பிரசங்கம் செய்வதற்கு மட்டும் வரவில்லை, தங்கள் குடும்ப க்ஷேமத்தையும் விசாரிக்க வந்தேன். அதனால்தான் சீக்கிரமே புறப்பட்டேன். சாப்பிட்டாகி விட்டது. இனி டிபன்தான் தேவை. கோகுலாஷ்டமி தினத்தில் அதற்குக் குறைவு முண்டோ?" என்றார் பாரதியார். பாரதியாரின் பளிங்குமயமான உள்ளத்தில் ஊறிவந்த வார்த்தைகள் இவை.

இதன்பின்னர் அவரது இல்லத்தாருடன் பாரதியார் சற்றே உரையாடினார். அப்போது அங்குள்ள முருகன் படத்தைப் பார்த்ததும் அதன் அழகில் ஈடுபட்ட பாரதியார், முருகா! முருகா! முருகா! வருவாய் மயில் மீதினிலே! என்னும் பாடலை உணர்வு ததும்பப் பாடத் தொடங்கினார்.

இதற்குள் மணி 4.30 ஆகிவிட்டது. கூட்டத்துக்குப் போகவேண்டும் என்று பாரதியாருக்கு ஞாபகப்படுத்தினேன். "ஆஹா, புறப்படுவோம்" என்று பாரதியார் புறப்பட்டுவிட்டார். டிபனைப் பற்றிய ஞாபகம் அவருக்கில்லை. எனது பெற்றோர்கள் வேண்டு கோளுக்கிணங்கப் பாரதியார் அதன் பிறகு சற்றுத் தங்கிச் சிற்றுண்டி அருந்திக் கூட்டத்துக்குக் கிளம்பினார்."[24]

பாரதியார் ஆற்றிய உரை - 'நித்திய வாழ்வு'

வன்னியத் தேனாம்பேட்டையில் அப்போதிருந்த திலகர் தமிழ் வாசக சாலையின் ஆதரவிலே அன்று பொதுக்கூட்டம் நடந்தது. பாரதியார் சாகாமலிருக்கும் வழியைப் பற்றிப் பேசப்போவதாகக் கேள்வியுற்றுப் பொதுமக்கள் அக்கூட்டத்துக்கு ஏராளமாக வந்திருந்தனர். சாகாமலிருக்கப் பாரதியார் வழி சொல்லுவதைக் கேட்கப் பலர் வந்து கூடுவதில் ஆச்சரியமில்லை. சரியாக மணி ஐந்துக்குப் பாரதியார் பேச ஆரம்பித்தார். அவர் தமது பேச்சை, "காலா, என் அருகே வாடா!" என்ற பாட்டுடன் ஆரம்பித்தார். பேச்சுக்கேற்ற பாட்டு! பாரதியார் பாட்டு மட்டும் பாடவில்லை. பாவம் பிடித்து அபிநயமும் செய்து காட்டினார். அன்று காலன் மட்டும் பாரதியார் கண்முன் தோன்றியிருந்தால் அவன் படாதபாடு பட்டிருப்பான். உண்மையில் அவரது காலால் உதைபட்டிருப்பான்! இதில்

சந்தேகமேயில்லை. அவ்வளவு உக்கிரத்துடன் அவர் தம்மையும் மறந்து எதிரே வந்து நின்ற காலனுடன் பேசுவதுபோல் நடிப்புடன் அப்பாட்டைப் பாடி முடித்தார்.

சபையினர் யாவரும் அப்போதே சாவா மருந்துண்டவர்களைப் போலக் களித்தனர். அவ்விதம் உழுது பரம்படித்த அவர்கள் மனத்திலே பிறகு பாரதியார் விதை தெளிக்க ஆரம்பித்தார். சாகாமலிருக்க அன்று அவர் சொன்ன வழியை இன்று உங்களுக்கு நான் சொல்ல விரும்ப வில்லை. சொன்னாலும் ருசிக்காது. பாரதியாரே மீண்டும் பிறந்து அந்த உக்கிரத்துடனும் முறுக்கிய மீசையுடனும் 'பின்' குத்திய கறுப்புச் சட்டையுடனும் கழுத்தில் மாலையுடனும் சொல்ல வேண்டும்.

அன்று ஒரு மணி நேரம் பாரதியார் பேசினார். கூட்டம் முடிந்தது. கழுத்தில் போட்ட மாலையுடன் பாரதியார் வண்டியேறாமல் நடந்தே செல்வதாகச் சொல்லித் திருவல்லிக்கேணியை நோக்கிப் புறப்பட்டு விட்டார்."[25]

இங்கு பாரதியார் ஆற்றிய உரையின் பாங்கை விளக்கிய உல கநாயகர், அவர் ஆற்றிய உரைக் கருத்தைச் சொல்லாது விடுத்து விட்டார். ஆனால், ஏறத்தாழ இதேபோன்ற தலைப்பில் 'மனிதனுக்கு மரணமில்லை' என்ற தலைப்பில், ஈரோட்டை அடுத்துள்ள கருங்கல் பாளையத்தில் பாரதியார் உரையாற்றியிருக்கின்றார். அதுகுறித்து விரிவான நிலையில் காணலாம்.

பாரதியார் ஈரோடு போன வரலாறு

பாரதியார் தம் நண்பரான ஈரோடு தங்கப்பெருமாள் அழைப்பை ஏற்று, கருங்கல் பாளையத்தில் உள்ள வாசகசாலை ஆண்டுவிழாவிற்கு வர ஒப்புதல் அளித்தார். அதற்கென ரூ.25 அனுப்பவேண்டும் என்று பாரதியார் கேட்டுக் கொண்டதற்கிணங்க தங்கப்பெருமாளும் பணம் அனுப்பிவைத்தார். இடையில் ஏதோ ஞாபகமறதியால் சில குழப்பங்கள் நேரிடப் பின்னர் பாரதியார் சரிசெய்துகொண்டார். இதுபற்றிச் சுதேசமித்திரன் *3.8.1921* இதழில் பாரதியார் எழுதிவந்த விதி நூல் என்னும் தொடரில் (அது தொடர்ந்து வரவில்லை) பின் வருமாறு எழுதுகின்றார்.

"இடையே சிறிது காலம் விதி நூல் எழுதவில்லை. ஜூலை 31ந் தேதி நான் ஈரோடுக்கருகே அரை மைல் தூரத்திலுள்ள கருங்கல் பாளையத்துக்குப் போய் இருந்தேன். அங்கே வக்கீல் தங்கப்பெருமாள் பிள்ளையும், அவருடைய மித்திரர்களும் - முக்யமாக, தாடிச்சாமியும், நாமக்காரப் பிள்ளையும் ராஜோபசாரம் நடத்தினர்.

அவ்வூரில் நேர்த்தியானதொரு வாசகசாலையிருக்கிறது. அதன் காரியதரிசி மேலே கூறிய ஸ்ரீதங்கப்பெருமாள் பி.ஏ.பி.எல் அதன் வருஷோத்ஸவக் கொண்டாட்டம் (5வது) மேற்படி 31ந்தேதி ஞாயிற்றுக்கிழமையன்று கொண்டாடப்பட்டது. அதில் அக்ராஸனம் வகிக்கும் பொருட்டாகவே என்னைத் தங்கப்பெருமாள் பிள்ளை வரவழைத்திருந்தார்.

"25ரூபாய் அனுப்பினால் வருவேன்" என்று தந்தியடித்தேன். சில தினங்கள் தாமதத்திற்கப்பால் ஏதோ ஷரா சொல்லி ரூபாய் அனுப்பினார். அதன்மேல் ஏதோ ஞாபகத் தவறுதலால் அல்லது அஜாக்கிரதையால் சனிக்கிழமையன்று தான் அவர்கள் வருஷோத் ஸவக் கூட்டம் வைத்திருக்கிறார்களென்று நினைத்து, அதை மறுநாள் ஞாயிற்றுக்கிழமை மாலைக்கு மாற்றி வைத்துக் கொள்ளும்படி ஸ்ரீமான் தங்கப் பெருமாள் பிள்ளைக்குப் பின்வருமாறு தந்தி கொடுத்தேன்:- கூட்டத்தை மாற்றி வைக்க, ஞாயிறு மாலை என.

அவர்கள் சனியன்று கூட்டத்தைப் பற்றி என்போலே கனவிலும் காணாதோர் ஆதலால் மேற்படி தந்திக்கு ஞாயிறு மாலையன்று நடத்தப்போகிற கூட்டத்தைத் தள்ளிப் பின்னே எப்போதேனும் வைத்துக்கொள்ளுங்கள் என்று நான் வேண்டியதாக அர்த்தம் பண்ணிக்கொண்டார்கள். எனவே, பந்தல் போடுவதற்காகச் செய்யப் பட்டிருந்த ஆயத்தங்களெல்லாம் நிறுத்திவிடப்பட்டன. மற்றும் எத்தனையோ விசேஷ ஏற்பாடுகளையெல்லாம் தள்ளி வைத்து விட்டார்கள். பொதுவாக, ஊர் முழுமைக்கும் ஆசாபங்கம். பொது ஏமாற்றம். ஸ்ரீமான் தங்கப் பெருமாள் பிள்ளையும், அவருடைய மித்திரர்களும் ஈரோட்டிலுள்ள முஸ்லிம் சங்கத்தாரும் பிறரும் சேர்ந்து கருங்கற்பாளையத்தில் மாத்திரமே யல்லாமல், ஈரோடிலும் ஸர்வ ஜனங்களும் தெரிந்து கொள்ளும்படி பாரதி வரப்போகிறார் என்று பறைசாற்றுவித்திருந்தது. என் தந்தியைக் கண்ட பின்னர் பாரதி வரவில்லை என்று பறைசாற்றுவித்து விட்டனர். இங்ஙனம் பறை சாற்றிவிட்டு தேசாபிமானிகள் அனைவரும் உறங்கிப்போய்க் கிடந்த ஸமயத்தில் - ஞாயிற்றுக்கிழமை காலையில் நான் கருங்கற் பாளையத்தில் ஸ்ரீமான் தங்கப்பெருமாள் பிள்ளை வீட்டில் பிரஸன்ன மானேன்"[26] என்று குறிப்பிடுகின்றார்.

பாரதியாரின் ஈரோட்டுப் பயணக் கட்டுரை

"ஈரோட்டுக்குப் போய்ச்சேர்ந்தேன். அது கொங்குநாடு. அதற்கும் தென்பாண்டி நாட்டிற்கும் யாதொரு வேற்றுமையும் தென்படவில்லை. ஸ்வதேசிய நிகழ்ச்சி தோன்றிய காலம் முதலாக தமிழகத்தின் உட்பகுதிகளுக்குக்கிடையே உள்ள அக வேற்றுமைகள்

குறைவுபட்ட காரணத்தாலே புறவேற்றுமைகளும் குறைவு படுகின்றன. இதற்குச் சுதேசமித்திரன் முதலிய பத்திரிகைகள் பெரிதும் உதவிபுரிந்தன என்பது நிச்சயம். கட்டை வண்டி ஒன்று கிடைத்தது. கட்டை வண்டியில் ஒரு மனிதன் நிமிர்ந்து உட்கார இடமில்லை. ஒன்றரை அடி நீளம். மாடு ஒரு சிறு பூனைக்குட்டி போன்று இருந்தது. நான் ஒன்று, வண்டிக்குரியவன் இரண்டு. அவனுக்குக் கீழே கூலிக்கு வண்டி ஓட்டும் சிறுவன் ஒருவன் எங்கள் மூவரையும் மூன்று பர்வதங்களாக நினைத்து அந்த மாட்டுப் பூனை இழுத்துக் கொண்டு போயிற்று. அரைமைல் தூரத்தில் உள்ள கருங்கல் பாளையத்தில் எனக்கு வேலை. அங்கு ஒரு சிநேகிதருடைய அழைப்பிற் கிணங்கிச் சென்றிருந்தேன். கருங்கல்பாளையத்துப் போய்ச் சேருமுன்னே மாடு வெயர்த்துப் போய் விட்டது. அதன் மேலே குற்றஞ் சொல்வதில் பயனில்லை. அதுசிறு ஜந்து. அதன்மேலே நாங்கள் மூன்று தடி மனிதரும் ஒரு கழுத்தளவுக்குச் செய்யப்பட்ட விதானத்தை உடைய வண்டியும் சவாரி பண்ணுகிறோம்.

ஏறக்குறைய இரண்டு மணிநேரத்துக்குள்ளே கருங்கல்பாளையம் என்ற கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். அந்த கிராமத்தில் ஆண்மக்கள் எல்லோரும் மஹாயோக்கியர்கள். மஹாபக்திமான்கள். புத்திக் கூர்மையிலும், சுறுசுறுப்பிலும், தேசாபிமானத்திலும் மிகவும் பாராட்டுதற் குரியவர்கள்.

இவர்களுடன் ஸல்லாபம் எனக்கு எல்லாவகைகளிலும் இன்ப மயமாக இருந்தது. அங்கே ஒரு புஸ்தக சாலை இருக்கிறது. வாசக சாலை அதன் காரியதரிசி ஒரு வக்கில். மிக நல்ல மனிதர். மஹா புத்திமான். தேசபக்தியில் மிகவும் பாராட்டுதற்குரியவர்.

அந்த வாசகசாலை அவ்வூராரை நாகரீகப்படுத்துவதற்குப் பெரியதோர் சாதனமாக விளங்குகிறது. இங்ஙனம் அதனால் அவ்வூருக்கு பலவித நன்மைகள் ஏற்பட்டுவருகின்றன என்பதை கனம் நரசிம்மையர் (சேலம் வக்கீல்) ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடு, ஸ்ரீமான் கல்யாணசுந்தரமுதலியார் முதலிய முக்கியஸ்தர்கள் தம் நற்சாக்ஷிப் பத்திரங்களாலே தெரிவிக்கிறார்கள்.

இந்த சபையின் வருஷோத்ஸவக் கூட்டத்திற்கு நான் போய்ச் சேர்ந்தேன். என்னை ஒரு பிரசங்கம் பிரசங்கம் பண்ணச் சொன்னார்கள். எனக்கு ஒரு விஷயந்தான் முக்கியமாகத் தெரியும். அதையே அங்கும் எடுத்துப் பேசினேன். அதாவது இந்த உலகத்தில் மானுடர் எக்காலத்திலும் மரணமில்லாமல் இருக்கக்கூடுமென்ற விஷயம்.

ப்ரஹலாதனைப் போன்ற தெய்வபக்தியும், மன்மதனைப்போன்ற ஏக பத்தினி விரதமும் ஒருவன்கைக்கொண்டிருப்பானாயின், அவன்

இந்த உலகத்திலேயே ஜீவன் முக்தியடைந்து, எல்லா அம்சங்களிலும் தேவபதவி எய்தியவனாய், எப்போதும் மகிழ்ச்சி கொண்டிருப்பான் என்பது என்னுடைய கொள்கை. இந்தக் கொள்கையை நான் வேத புராண சாஸ்த்ரங்கள், இதர மதநூல்கள், ஐரோப்பிய ஸயன்ஸ் சித்தாந்தங்கள், ஸ்ரீமான் ஜகதீஸ் சந்திர வஸுவின் முடிபுகள் என்னும் ஆதாரங்களிலே ருஜூப்படுத்தினேன். அங்குள்ள பெரிய வித்துவான்கள் எல்லோரும் கூடி என்னுடைய தர்க்கத்தில் யாதொரு பழுதுமில்லை யென்று அங்கிகாரம் செய்துகொண்டார். பிறகு மறுநாள் என்னை ஈரோட்டுக்கு வந்து வாய்க்கால் கரையில் ஒரு பொதுக்கூட்டத்திலே, இந்தியாவின் எதிர்காலநிலை என்ற விஷயத்தைக் குறித்துப்பேசும்படி கேட்டுக் கொண்டார்கள். நான் உடன்பட்டேன். மறுநாள் கூட்டத்தைப் பற்றிய விஷயங்களை இங்கு விவரித்துக் கொண்டு போனால் இந்த வியாசம் மிகவும் நீண்டுபோய்விடும். ஆதலால் இன்று இவ்வளவோடு நிறுத்தி மற்றை நாள் சம்பவங்களைப் பற்றி நாளை எழுதுகிறேன்"[27] என்று விழாமுன்னோட்டத்தைக் குறிப்பிட்டு நிறுத்திய பாரதியாரின் இன்னொரு க்ட்டுரையைக் காணுமுன் அவரைக் கண்ட ஈரோட்டுப் பெரியவர்களின் அனுபவங்களைக் காணலாம். அவற்றின்வழி, பாரதியாரின் தோற்றங்கள், குணநலன்கள் சித்திரமாகின்றன.

பார்வதி அம்மாள் கண்ட பாரதியார்

பாரதியைக் கருங்கல் பாளையம் வாசக சாலையின் ஆண்டு விழாவிற்கு அழைத்த தங்கபெருமாள் பிள்ளையின் துணைவியார். அவர், பாரதியார், தமது இல்லத்தில் தங்கி இருந்தபோது நடந்த நிகழ்ச்சிகளை, 1. வீட்டில் உள்ள பெண்களுக்குக் கல்வியின் பெருமையை உணர்த்த வேண்டும் என்பதற்காக திரு தங்கபெருமாள் பிள்ளையை வழக்குரைஞர் ஆடையை எடுத்துவரச் செய்து அணிவித்த சம்பவம், 2. முகச்சவரம் செய்து கொண்டு வீட்டினுள் நுழைந்து தந்த அதிர்ச்சி, 3. ஈரோட்டில் முகமதியர் வீடு ஒன்றில் சாப்பிட்டு வந்த புரட்சிகரச் செயல், ஆகியவற்றை நினைவுகூர்கிறார்.

சீனிவாசம்பிள்ளை கண்ட பாரதியார்

தங்கபெருமாள் பிள்ளையின் சகோதரர், 'பாரதி ஈரோடு வந்த சமயம் புகைவண்டி நிலையத்திற்கு வரவேற்கச்சென்று ஏமாந்த சம்பவத்தையும், 'நான் என்ன சரிகை டர்பனும், கோட்டுமாக வருவேன் என்று நினைத்தீர்களோ?' என பாரதி வெகுண்டதையும், வெற்றிலையை அடிக்கடி மென்று துப்பும் பாரதியின் பழக்கத்தையும் அவரின் தாமாகவே முகச்சவரம்செய்து கொள்ளும் வழக்கத்தையும், தமது பேச்சிற்காக பணம் எதையும் பெற்றுக்கொள்ள மறுத்த

பண்பையும்' வியந்து நினைவுகூர்கிறார். அவர் மேலும் குறிப்பிடுகின்றார்.

"அவருக்குப் பூணூல் கிடையாது. பிராமணராக இருந்தாலும் அவருக்குப் பூணூல் கிடையாது. அவர் எந்தவிதமான சாதி வித்தியாசமோ இன வேறுபாடோ இன்றி, இன்னார் இதுதான் சாப்பிட வேண்டும், இதுதான் சாப்பிடக்கூடாது என்ற பாகுபாடில்லாமல் அவர் என்ன கருத்துக்களைச் சொன்னாரோ அந்தக்கருத்துக்களின் படியே தன் வாழ்க்கையை நடத்தி வந்தார்"[28]

ச.து.சு.யோகியார் பார்வையில்...

பாரதியார் அரங்கிற்குச் செல்லுமுன் செய்து கொள்ளும் அலங்காரங்களையும், அப்போது அவர் உரைத்த மொழிகளையும் நேர்முக வருணணைபோல் தம் எழுத்தோவியத்தில் வடித்துக் காட்டுகின்றார் ச.து.சு.யோகியார்.

"அன்று மீட்டிங்குக்குப் போக நேரமாயிற்று. அதற்கு ஏற்பத் தம்மை அலங்கரித்துக் கொள்கிறார் பாரதி. அடடா! அதில்தான் எவ்வளவு அவசரம்! அந்த அவசரத்திலும் எத்துணை அக்கறை! யாரோ ஒருவனுடைய எட்டு முழ வேஷ்டி மூலக்கச்சமாய் அவர் இடையைச் சுற்றுகிறது. அங்கு மாட்டியிருந்த ஒரு ஷர்ட் அவரது ஒடுங்கிய மார்புக்கூட்டை மூடுகிறது; சலவை செய்த ஒரு மேல் துண்டு அவர் கழுத்தைச் சுற்றி பரவலாய் விசிறிபோல் தோட்களை அணைத்து மார்பில் தொங்குகிறது. அங்கிருந்த ஒரு 'கோட்டு' இவற்றை வளைத்துக் கோட்டை போடுகிறது; தலையில் மற்றொரு மேல் முஷ்டி முண்டாசாகத் தாண்டவமாடுகிறது. வலக்கை ஊசிமுனை மீசைகளை உருவுகின்றது; கஞ்சா வெறியில் கனலும் கண்கள் மின்னல் கக்கித் தம் திருப்தியைத் தெரிவிக்கின்றன. யாரோ ஒருவரின் கைத்தடியை அவர் கை பற்றிக் கொள்ளுகிறது. அவர் குழந்தைபோல் சிரிக்கிறார்; 'பாண்டியா! பார்!' என்று தம் அலங்காரத்தைத் தாமே புகழ்ந்து கொள்கிறார். இந்தப் 'பாண்டியா!' என்பது அவர் வாக்கில் அடிக்கடி வரும்; தமிழர்கள் யாவரையும் பாண்டி நாட்டு மன்னர்கள் என்று அவர் கருதினார்போலும். ஒரே வார்த்தையில், ஆடை அணி விவகாரங்களில் அவர் அர்த்தமற்றுச் சிரித்துக் களிக்கும் குழந்தையைப்போல் விளங்கினார். நிற்க. இதெல்லாம் விசேஷமில்லை. அங்கே கிடந்த யாருடைய செருப்பையோ மாட்டிக் கொண்டார். அது அவர் காலுக்குக் கொஞ்சம் பெரிது. இருந்தா லென்ன? அதனால் அவர் நடை தளர்ந்ததா? இல்லை. தடுமாறியதா? இல்லவே இல்லை. நிமிர்வு குனிந்ததா? கிடையவே கிடையாது. ஆணேறுபோல் அநாயசமான, அலட்சியமான,

'உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே'

என்று எதிர்ப்புகளையெல்லாம் துச்சமாகக் கருதும் ஏற்றமிக்க நடை. பக்கங்களைப் பாராது நெக்கு நிலைத்த நேர்நோக்கோடு நெட்டுநிமிர்ந்த மத்த கஜம் போன்ற மதோன்னமத்த நடை. வெறியோடு விளையாடும் வீறுகொண்ட விறல் நடை.

'கடம்தரு மதம் கலுழ் களிநல் யானைபோல்
கடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணியே'

என்று கம்பன் வர்ணித்தது போன்ற அப்பீடு நடையை ஒரு முறை கண்டவர்கள் என்றென்றும் மறக்கமுடியாது.

அட! அந்த நடை இருக்கட்டும். அவர் தம் கைத்தடியைப் பிடித்த அலாதியான வகையை என்னென்பது தடி நுனியைப் பற்றி அதன்மேல் சாய்ந்து செல்லும் தற்கால இளங்கிழவரா அவர்? இல்லை. அல்லது வாக்கிங் ஸ்டிக் கை லைசாகப் பிடித்து நைசாக சுழற்றும் ஸ்டைலான டம்பாச்சாரியா அவர்? கிடையாது. தடியின் நடுவிலே பிடிப்பு, தாவி நேருக்கு நேரே, தோளுக்கு நேரே நெட்டு நீண்டு நேராக நிமிர்ந்தசையும் கைகள், வீரர் வருகிறான், வாழ்வில் வெற்றி கண்ட சூரன் வருகிறான், தெய்வ உணர்ச்சியால் தீமையைப் பிளக்கும் கவிதையால் உலகத்தையே ஆளவந்த கம்பீரன் வருகிறான் என்று கண்டவர்களெல்லாம் கட்டியம் கூறுவண்ணம் கெட்டியான பிடிப்பு, கிறுக்கான பிடிப்பு, மிடுக்கான பிடிப்பு, துடுக்கமான பிடிப்பு, அதற்கேற்ற துருதுருத்த நடை, அப்பப்பா! அந்த வீர்ய சௌந்தர்யத்தை வர்ணிக்க என்னாலாகாது.

அன்றிரவு ஒரே ஆரவாரந்தான் - கொந்தளித்துக் குமுறும் கடல்போலக் கொட்ட மிட்டாடிய அட்டகாசம், கொண்டலின் பேரிகை கொட்டி, மின்னலின் வாளைச் சுழற்றி, கரும் பெரும் மேகக் குன்றுகளை உருட்டிப் புடைத்துக் கண்டவற்றை யெல்லாம் கண்ட துண்டம் செய்யும் சண்டமாருத வெறி, மலையைப் பிளந்துகொண்டு கிளம்பும் எரிமலைக் கதிர்களைப் போல, மனத்தைக் கீறிக்கொண்டு கிளம்பும் கவிதைக் கனற்பொறிகள்! அவர் பாடினார், ஆடினார், பாடினார், ஆடிக்கொண்டே சாடினார், சாடினார், சாடினார், ஆஹாஹா! அந்த அற்புதத்தை அநுபவித்தவர்களால்தான் உணர முடியும்.

அவர் பாடும்போது - அதுவும் பராசக்தியைப் பற்றிப் பாடும்போது - அருகில் இருப்பவர்கள் பாடு கொஞ்சம் ஆபத்தானதுதான். அப்போது அவரில்லை - பாரதி என்ற மனிதர் அங்குக் கிடையாது. பாட்டின் ஆவேசம் மட்டுமே உண்டு. அவரே ஆவேசமாய்

மாறிவிடுகிறார். தன்னினைவற்றுத் தானே கவிதையாய்க் கவிதையே தானாய்த் தாவித்தாவித் தாண்டவமாடுகிறார். அவ்வாவேசம் அவரை முன்னுக்குத் தள்ளுகிறது; அந்தக் கோடியிலிருந்து பாட ஆரம்பிப்பவர் படிப்படியாய் முன்னுக்கு நகர்ந்தவாறே இந்தக் கோடிக்கு வந்து விடுவார். அவ்வாவேச கர்ஜனையின் முத்தாய்ப்புகளாகப் பக்கத்தி லிருப்பவர்களின் துடைகள் கன்றும்படியாக அடி விழுவதும் உண்டு. அவ்வடிகளிற்சில அடியேன் பெற்றதும் உண்டு; பாட்டின் ஆவேச வெறியில் அடியின் ஆவேசம் மறைந்து போகும். அந்தக் காலத்தில் அவர் பாடிய பாடல்களில் அசாத்யமான வெறியோடும், வியப்போடும், வீர்யத்தோடும் வெளிப்பட்ட சில வரிகள் அன்று போலவே இன்றும் என் மனக்கண் முன் ஸாட்சாத் காரமாயுள்ளன"[29]

மரணத்தை வென்ற மகாகவி பொழிவு

பாரதியார் அமரராவதற்குச் சரியாக ஒருமாதத்திற்குமுன் (1921 ஆகஸ்ட் முதல் வாரம்) ஈரோட்டில் பாரதியார் ஆற்றிய உரை அவர்தம் வாழ்வியற்செய்தியின் சாரமாக விளங்குவது எனலாம். 'மனிதனுக்கு மரணம் இல்லை' என்னும் பொருளில் அவர் ஆற்றிய சொற்பொழிவும், அதன் எழுத்துவடிவின் நிறைவில், "மனிதனுக்கு மரணமில்லை என்ற பாரதியாரின் கொள்கையை அங்கிருந்த பெரிய வித்வான்கள் அங்கீகாரம் செய்து கொண்டனர்" என்ற குறிப்பும் தரப்பெற்றுள்ளது. இது புதுமை. இதற்குச் சான்றேபோல், இவ்வுரையை நேரில் கேட்கும் வாய்ப்பைப் பெற்ற பாலபாரதி ச.து.சு.யோகியார் அந்த அனுபவத்தை உணர்வுபொங்க எழுதியிருக்கின்றார். அதனைப் பின்வரக் காணலாம்.

ச.து.சு.யோகியார் பதிவில்...

"அவர் பேச்சில் இனிமை இல்லை. கடுமை இருந்தது. கனல் இருந்தது. வேகமும் விறலும் வீர்யமும், வெறியும் தாண்டவமாடின. அப்பப்பா அதை என்னென்பது?... நெருப்புத் தெய்வத்தை நெஞ்சிலே கொண்ட அவர் பேசுவது பேசும்போது உலகமே கிடுகிடு என்று நடுங்குவதுபோல் தோன்றும். மகா காளியே ஆணுருவம் தாங்கி நம்முன் மகா தாண்டவம் செய்வது போலிருக்கும். நெருப்புத் தெய்வத்தின் நெற்றிக்கண் செந்தழலின் நெருப்புப் பொறிகள்போல் நெருப்பு எண்ணங்கள் நெருப்பு வார்த்தைகளால் நிமைக்கு நிமை அதிகமாய்க் கொந்தளித்துக் கூத்தாடும். மூட எண்ணங்கள் முட்டாள் கொள்கைகள், மொண்டி ஞானங்கள், சண்டித்தனங்கள், குள்ள நினைப்புகள், குறுகிய நோக்கங்கள் இவற்றின்மேலெல்லாம் சீறி விழுவார். சள்ளெனக் கடிப்பார். சினத்தோடு சிரிப்பார். வெறி கொண்டவர்போலக் குதிப்பார்.

அன்று எங்கள் ஊர் வாசகசாலையில் ஆண்டுவிழா. தலைவர் பாரதி. மூன்று மணிநேரம் பண்டிதர்களின் மூச்சுமுட்டும் முழக்கடித் தமிழ்; அதுவரையில் பாரதி ஆடவில்லை; அசையவில்லை; சுவாசம் விட்டாரோ என்னவோ, அதுகூடச் சந்தேகம்; ஏதோ ஒரு சிற்பி செதுக்கிய ருத்ரன் சிலை அமர்ந்திருப்பதுபோல் தோன்றியது மீசை. முறுக்கும்போதன்றி வேறு யாதொரு சலனமும் கிடையாது. ஆனால் அவர் முறை வந்தது. எழுந்தார். எழுந்தார் என்பது தப்பு. குதித்தார். நாற்காலி பின்னே உருண்டது. மேஜை முன்னே தாவித் தயங்கியது. பேச்சோ, அதில் வாசக சாலையைப் பற்றி ஒரு வார்த்தை கூடக்கிடையாது. பண்டிதர்களின் மூன்றுமணி நேரப் பிரசங்கங்கள் முக்கால் நிமிஷ முடிவுரை கூடப் பெறவில்லை. எடுத்த எடுப்பிலேயே, 'நான் மனிதருக்கு மரணமில்லை என்கிறேன்' என்றார். அவ்வளவுதான், பாடலானார். அடடா, அவர் பாடும்போது கேட்கவேண்டும். அது என்ன மனிதன் குரலா? இல்லை, இடியின் குரல், வெடியின் குரல். ஒஹோஹோவென்றலையும் ஊழிக்காற்றின் உக்ர கர்ஜனை. ஆனால் அவைகளைப் போல் வெறும் அர்த்தமில்லாத வெற்றோசையல்ல. அர்த்த புஷ்டி நிறைந்த அசாதாரண வீர்யத்தோடு கூடிய வேதக்கவிதையின் வியப்புக் குரல்.

'ஜயமுண்டு பயமில்லை மனமே - இந்த
ஜன்மத்திலே விடுதலை யுண்டு நிலையுண்டு'

ஆம்! இந்தப் பாடலைத்தான் நான் முதல்முதலாக அவர் வாய்மூலம் கேட்டேன். அதன் முத்தாய்ப்புக்கு மேல் முத்தாய்ப்பான, ஜாஜ்வல்ய ஜங்காரத்வனி, மூர்ச்சனாக்ரமம் தவறாது மூர்க்காவேச முழக்கமான மூர்த்தன்யம், அண்டாண்டங்களையெல்லாம் துண்டு துண்டாய் உடைத்துருட்டுவது போன்ற உத்தண்ட சண்டமாருத வீர்யம்.அன்று போலவே இன்றும் என் நெஞ்சிலே கனல் மூட்டுகிறது.

பயனுண்டு பக்தியினாலே- நெஞ்சில்
பதிவுற்றுக் குலசக்திச்சரணத்தில் முடிதொட்டு

இந்த அநுபல்லவியைக் கேட்ட யாவருமே பக்தர்கள் ஆகிவிட்டனர். பாட்டிலே அவ்வளவு பரவசம்!

'புயமுண்டு குன்றத்தைப் போலே- சக்தி
பொற்பாதம் உண்டதன்மேலே'

இந்த வரிகளில்தான் எத்துணை வீர்யம்! உண்மையிலேயே அவரது ஒடுங்கிய புயங்கள் ஓங்கின போலும் தோன்றின. அன்னையின் பொன்னடிகளை அவைகள் தாங்கின என்றுதான் காளிதாசனாகிய எனக்கும் கனவுண்டாயிற்று.

'நியம மெல்லாம் சக்தி நினைவன்றிப் பிறிதில்லை
நெறியுண்டு குறியுண்டு குலசக்தி வெறியுண்டு'

ஆம்!தன்னை மறந்து தேவியாய் நிறைந்த தெய்வாவேச வெறி எல்லோர் உள்ளத்திலும் தாண்டவமாடியது. எல்லோருடைய உள்ளங்களிலும் ஒரு தெய்விகச் சக்தியால் பூரித்தன; பாவங்கள் நீங்கின. அடுத்தபடி-?

'மதியுண்டு செல்வங்கள் சேர்க்கும் - தெய்வ
வலியுண்டு தீமையைப்போக்கும்'
'விதியுண்டு தொழிலுக்கு விளைவுண்டு குறைவில்லை
விசனப் பொய்க்கடலுக்குக் குமரன் கைக் கணையுண்டு'

தெய்வ சக்தி தெய்வமாகவே பரிணமித்துவிட்டது.. கடைசியாக?
'அலைப்பட்ட கடலுக்கு மேலே - சக்தி
அருளென்னும் தோணியினாலே'

ஆமாம்! அலையலைக்கும் கடல். ஆரவாரிக்கும் கடல். அகாதமாக, அகோரமாகக் கொந்தளித்துக் குமுறும் கடல். அதுதான் துன்பமும் இன்பமான சூறையில் சிக்கித் தடுமாறும் வாழ்க்கைக் கடல். அதிலே மூழ்கி அழியாமல் காப்பது தேவதேவியின் தெய்வத்தோணி. அவளது கருணை இருந்தால் போதும். அப்புறம்-?
'தொலையெட்டிக் கரையுற்றுத் துயரற்றுவிடு பட்டுத்
துணிவுற்ற குலசக்தி சரணத்தில் முடிதொட்டு'

துன்பக்கடலின் தொலைவிலுள்ள கரை எட்டுகிறது. துயரங்கள் நீங்குகின்றன. விடுதலை கிடைக்கிறது. தேவியின் சரணார விந்தங்களை அடைகிறோம். அப்பால் ஜயமுண்டு, பயமில்லை, எங்கும் வெற்றி, எதிலும் வெற்றி.

'எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி எதிலும் வெற்றி
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டினேனுக் கருளினள் காளி
தடுத்து நிற்பது தெய்வதமேனும்
சாரும் மானிட மாயினும் அஃதைப்
படுத்து மாய்ப்பள் அருள்பெரும் காளி
பாரில் வெற்றி எமக்குறுமாறே!'

இவ்வாறாகப் பாட்டு முடிந்தது. பாட்டுமுடிந்தவுடன் 'பாரறியோம் விண்ணறியோம்' என்றபடியே கேட்ட நாங்கள் இவ்வுலகத்தை விட்டு, ஜயமுண்டு பயமில்லை' என்னும் ஜீவன் முக்தி உலகத்திலே, முருகன்

துணையுடன், தேவதேவியின் ஸந்நிதானத்திலே ஸஞ்சரித்தோ மென்றால் அது மிகையில்லை.

அப்புறம் பாரதி ஒரு மணிநேரம் பேசினார். மனிதனுக்கு மரணமில்லை என்று கடல் மடை திறந்துவிட்டாற்போல் தங்கு தடையின்றிச் சண்டப்ரசண்டமாய் ஸ்தாயிக்குமேல் ஸ்தாயியாகப் பிரசங்கம் உத்கோஷித்தது. அங்கிருந்த எல்லோரும் தங்களை மறந்துவிட்டனர். பாரதி என்ன பேசினார் என்றால் ஒருவருக்கும் தெரியாது. ஆனால் பேச்சின்போது ஏதோ மரணமற்ற வானுலகில இருப்பதாய்த்தான் ஒவ்வொருவருக்கும் ஞாபகம். ஏனெனில், பேச்சில் அவ்வளவு ஆவேசம். ஆதர்சம். ஆர்வம் உள்ளத்திற்கும் உரைக்கும் இடையே ஓர் அனன்ய ஐக்கியபாவம். இவையாவற்றையும் ஒரே வார்த்தையில் சொல்லப்போனால் பாரதியார் ஒரு நடக்கும் எரிமலை. மேற் சொன்னது நான் நேரில் கண்டது"[30] என்று பாலபாரதி ச.து.சு. யோகியார் குறிப்பிடுகின்றார்.

இனி சுதேசமித்திரனில் வெளியான மனிதனுக்கு மரணமில்லை என்னும் இச்சொற் பொழிவினை பாரதியார் எழுத்துவடிவிலான கட்டுரையாகக் காணலாம்.

'மனிதனுக்கு மரணமில்லை'

"என்னைப் பிரசங்கம் செய்யுமாறு சொல்கிறீர்கள். எனக்கு ஒரே ஒரு விஷயம்தான் முக்கியமாகத்தெரியும். அதையே இங்கும் எடுத்துப்பேச விரும்புகிறேன். அதாவது, இந்த உலகத்தில் மானுடர் எக்காலத்தும் மரணமில்லாமல் இருக்கக்கூடும் என்ற விஷயம். இதுவே என்னுடைய கொள்கை. பெரிய மகான்கள் கூடிய இச்சபையில் அதைப்பற்றித் தர்க்கம் செய்யவே இங்கு வந்திருக்கிறேன். எனது கொள்கையைத் தக்க ஆதாரங்களுடன் ருஜூப்படுத்தி உங்களுடைய அங்கிகாரம் பெறவே உங்கள் ஊருக்கு வந்திருக்கிறேன்.

"சொல்லடா ஹரியென்ற கடவுளெங்கே?" என்று உறுமிக்கேட்ட ஹிரணியனுக்கு, நல்லதொரு மகனான ப்ரஹ்லாதன், "நாராயணன் தூணிலுமுள்ளான். துரும்பிலும் உள்ளான்" என்றான். வல்ல பெருங் கடவுளில்லா அணுவொன்றில்லை. மஹாசக்தியில்லாத வஸ்துவில்லை. சுத்த அறிவே சிவமென்றுரைத்தார் மேலோர்; சுத்த மண்ணும் சிவமென்று உரைக்கும் வேதம். வித்தகனாம் குரு சிவமென்று உரைத்தார் மேலோர்;வித்தையில்லாப் புலையனும் அஃதெனும் வேதம். முன்னோர்கள் எவ்வுயிரும் கடவுளென்றார். பயிரும் உயிர்வகையான ஊர்வனவும் பறப்பனவும் மட்டுமின்றி இங்குப் பார்க்கின்ற பொருளெல்லாம் தெய்வம். வெயிலளிக்கும் இரவி, மதி, விண்மீன், மேகம், மேலுமிங்குப் பலப்பலவாம் தோற்றம்

கொண்டே இயலுகின்ற ஜடப்பொருள்கள் அனைத்தும் தெய்வம். எழுது கோல் தெய்வம், இந்த எழுத்தும் தெய்வம். வேதபுராண சாஸ்திரங்களும் இதர மத நூல்களும் சொல்கின்ற முடிவான கருத்தையே நம் முன்னோர்கள் மேற்கொண்டனர். நானும் அதனையே சொல்லிலும், செயலிலும் மேற் கொண்டிருக்கிறேன். அத்வைதநிலை கண்டவருக்கு மரணமேது? பார்மீது யார் சாகினும் நான் சாகா திருப்பேன் காண்பீர்!

"நாணத்தைக் கவலையினைச் சினத்தைப் பொய்யை, அச்சத்தை, வேட்கைதனை அழித்துவிட்டால் அப்போது சாவும் அங்கே அழிந்து போகும்" என்று சித்தரெல்லாம் உரைத்திட்டார். இதனையே ஐரோப்பிய ஸயன்ஸ் சித்தாந்தங்களும் தெளிவுபடுத்துகின்றன. சினத்தை முன்னே வென்றிடுவீர். மேதினியில் மரணமில்லை. சினங்கொள்வார் தம்மைத்தாமே தீயாற் சுட்டுச் செத்திடுவாருக்கு ஒப்பாவர். சினம் பிறர்மேற்கொண்டு கவலைப்பட்டுத் தாம் செய்தது எண்ணித் துயர்க்கடலில் வீழ்ந்து சாவர். எனவே, சினம் காரணமாகக் கவலையும், கவலையினால் சாவும் நேரிடுகின்றன. பொறுத்தவரே பூமியினை ஆள்வார் என்னும் அருத்தமிக்க பழமொழியும் தமிழில் உண்டு. அவனியிலே பொறையுடையான் அவனே தேவன். அறக் கடவுள் புதல்வன் என்னும் உதிட்டிரனும் இறுதியிலே பொறுமை நெறி தவறி இளையாருடன் பாரதப்போர் புரிந்தான். பரத நாட்டைப் போர்க்களத்தே அழித்துவிட்டுப் புவியின்மீது வறுமையையும், கலியினையும் நிறுத்தி வானம் சேர்ந்தான். போரினால் புவியிலுள்ள உயிர்கள் எல்லாம் அநியாய மரணமெய்தல் கொடுமையன்றோ? "நாடியிலே அதிர்ச்சினால் மரணம்"என்று விஞ்ஞானியாகிய ஜகதீச சந்த்ரவசு கூறுகின்றான். ஞானானுபவத்திலும் இதுதான் முடிவு. கோபத்தால் நாடியிலே அதிர்ச்சியுண்டாம்; கொடுங்கோபம் பேரதிர்ச்சி; அச்சத்தால் நாடியெல்லாம் அவிந்துபோகும்; தாபத்தால் நாடியெலாம் சிதைந்துபோகும்; கவலையினால் நாடியெலாம் தழலாய் வேகும். எனவே, கோபத்தை வென்றிடலே பிறவற்றைத் தான் கொல்வதற்கு வழியென நான் குறிக்கிறேன்.

தாங்காமல் வையத்தை அழித்து முடிவில் தருக்கி வீழும் வேந்தர் தாரணியில் பலருள்ளார். ஏங்காமல் இடர் செய்யாமல் என்றுமருள் ஞானியரே நமக்கு வேந்தர். மனத்தினுள்ளே பழம்பொய்கள் வளர்ப்பதாலே இன்னலுற்ற மாந்தரெல்லாம் மடிவார் வீணே. இருதயத்தில் விடுதலையை இசைத்தல் வேண்டும் என்று இயம்புகின்ற மன்னவனைக் குருவென நாம் சரணடைந்தால் மரணபயம் நீங்கும்; வலிமை பெறுவோம்; பாங்கான குருக்களை நாம் போற்றிக் காண்டால், பாரினிலே பயம் தெளிவோம். நீங்காத சிவசக்தி அருளைப்

பெறுவோம்; நிலத்தின்மிசை அமரநிலை உறுவோம்.

மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வமென்றால் மனையாளும் தெய்வமன்றோ? பெண்ணுக்கு விடுதலை நீரில்லை என்றால் பின்னிந்த உலகிலே வாழ்க்கை இல்லை. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்றாள் ஔவை. தாய்க்கு மேல் இங்கே ஓர் தெய்வம் இல்லை. தாயும் ஒரு பெண்தான். பெண்டாட்டி தனை யடிமைப் படுத்தவேண்டிப் பெண்குலத்தை முழுதடிமைப்படுத்த லாமோ? வீட்டிலுள்ள பழக்கமே நாட்டில் உண்டு. வீட்டினில் தமக்கடிமை பிறராம் என்பவன் நாட்டினில் பிறரை அடிமைப்படுத்த நாடோறும் முயன்று நலிந்து சாவான். எனவே, காட்டிலுள்ள பறவைகள் போல் வாழ்வோம். காதலிங்கே உண்டாயிற் கவலையில்லை.

காதலினால் மானுடர்க்குக் கவிதையும், கானமும், சிற்பம் முதலிய கலைகளும் உண்டு; காதலினால் சாகாமலிருத்தல் வரும். கவலை போம்; அதனாலே மரணம் பொய்யாம்; ஆதலினால் உலகத்தோர் காதல் செய்யவேண்டும். காதல் செயும் மனைவியே சக்தி. கடவுள் நிலை அவளாலே எய்தல் வேண்டும். நாடகத்திலும் காவியத்திலும் காதலைக்கண்டு வியப்பெய்தும் மக்கள் ஊரிலும் வீட்டிலும் காதலென்றால் உறுமுகின்ற காரணம் என்னவோ? பாடை கட்டி அதனைக் கொல்ல ஏன் வழி செய்ய வேண்டும்? பாரினிலே காதலென்னும் பயிரை மாய்க்க, மூடரெல்லாம் பொறாமையினால் விதிகள் செய்து முறை தவறி இடரெய்தி ஏன் கெட வேண்டும்? காதலிலே இன்பமெய்திக் களித்துநிற்கும் மன்னவரும், மந்திரிமாரும், படைத்தலைவரும் போர்த் தொழிலை மனங்கொள்வாரா?

ஆனால், "காதலிலே விடுதலை" என்றோர் கொள்கை ஐரோப்பாவில் கடுகி வளர்கிறது. பேதமின்றி மிருகங்கள் கலத்தல்போலே, பிரியம் வந்தால் கலந்து பின்பு பிரிந்திடும்போது, வேதனையொன்றில்லாது பிரிந்து சென்று வேறொருவன்தனைக் கூடவேண்டும் என்னும் விடுதலைக் காதல் உண்மையில் பொய்மைக் காதல். களவின்பம் விரும்பும் ஆண்கள் ஈரமின்றி எப்போதும் பெண் களிடம் கற்பே மேலென்று உபதேசங்கள் செய்யலாமா? ஆண்க ளெல்லாம் கற்பைவிட்டுத் தவறு செய்தால் அப்போது பெண்மையும் கற்பழிந்திடாதோ? வீட்டைச் சுட்டால் நலமான கூரையுந்தான் எரிந்திடாதோ? பேணுமொரு காதலினை வேண்டியன்றோ பெண்மக்கள் கற்புநிலை பிறழுகின்றார்? எனவே, கற்பு நிலை என்று சொல்ல வந்தால் இரு கட்சிக்கும் அஃதைப் பொதுவில் வைப்போம்.

"அதுவே நீ", என்பது வேதவாக்கு. "அவனியிலே பொருளெல்லாம் அதுவே, நீயும் அதுவன்றிப் பிறிதில்லை", என்பது தெளிவு. "எல்லா

உயிர்களிலும் நானே இருக்கின்றேன்" என்றுரைத்தான் கண்ண பெருமான், ஆகவே, மானுடர் பிறரைக் கொல்ல நினையாமல் வாழ்ந்திட்டால் அனைவருக்கும் உணவு உண்டாகும். "ஒரு மொழியே பல மொழிக்கும் இடம் கொடுக்கும்" என்ற கருத்துப்படி, ஓம் நமசிவாய, ஹரிஹரி, ராமராம, சிவசிவ, ஓம் சக்தி என்ற மொழிக ளெல்லாம் ஒரே பரம்பொருளைக் குறிக்கின்றன. எல்லாமதங்களின் சாரமும் இதுதான். பூமியிலே கண்டமைந்து. மதங்கள் கோடி. யாவினுக்கும் உட்புதைந்த கருத்து ஒன்றே. ஈரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார். எப்போதும் அருளை மனத்திசைத்துக் கொள்ள வேண்டும். பேருயர்ந்த யேஹோவா, அல்லா நாமம் பேணுமவர் பதமலரும் பேணல் வேண்டும். பூமியிலே வழங்கிவரும் மதத்திற் கெல்லாம் ஒரே பொருள்தான். 'சாமிநீ;சாமிநீ; கடவுள் நீயே; தத்வ மஸி; தத்வமஸி; நீயே அஃதாம்'. பூமியிலே நீ கடவுளில்லை என்று புகல்வது நின் மனத்துள்ளே புகுந்த மாயை. சாமி நீ, அம்மாயை தன்னை நீக்கி ஸதாகாலம் சிவோஹம் என்று சாதிப்பாயே.

எனவே, ப்ரஹ்லாதனைப்போன்ற தெய்வ பக்தியும், மன்மதனைப் போன்ற ஏகபத்தினி விரதமும் ஒருவன் கைக்கொண்டிருப்பானாயின் அவன் இந்த உலகத்திலேயே ஜீவன் முக்தியடைந்து எல்லா அம்சங்களிலும் தேவ பதவி எய்தவனாய் எப்போதும் மகிழ்ச்சி கொண்டிருப்பான்,

("மனிதனுக்கு மரணமில்லை"என்ற பாரதியாரின் கொள்கையை அங்கிருந்த பெரிய வித்வான்கள் அங்கீகாரம் செய்து கொண்டனர்)[31]

இவ்வுரையின் தாக்கம் அப்படியே பாரதியாரின் 'கனவு' எனும் தலைப்பில் 'பாரதி அறுபத்தாறு' என்பதாக அப்படியே கவிதையாக அமைந்திருப்பதைக் காண முடிகின்றது. இத்தகு உரைகளின் கருத்துகள் கவிதைக் கனிகளாகவும், இச்சொற் பொழிவுக் கருத்துக்கள் அக்கவிதைக் கனிகளின் சாறாகவும் திகழ்வதைப் பாரதியார் படைப்புகளை நுகர்ந்து பழகியவர்கள் இனிதுணரலாம்.

சித்தர் பாரதியார்

இவையாவும் குள்ளச்சாமி, கோவிந்தசாமி, யாழ்ப்பாணத்துச்சாமி உள்ளிட்ட சித்தர்கூட்டங்களோடு கலந்து பழகி அவர்கள் வழங்கிய உபதேசங்கள் வழி உய்த்துணர்ந்த உண்மைகளைப் பாரதியார் வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

பத்திரிகையாளராகப் பணியேற்று, கவிஞராகவும், கதைஞராகவும், கட்டுரையாளராகவும், மொழிபெயர்ப்பாளராகவும், சொற்பொழி வாளராகவும், ஆய்வாளராகவும் பரிமாணங்கொண்ட பாரதியார்

இச்சித்தர்களின் தொடர்பால் தம்மையும் ஒரு சித்தராக உணர்கின்றார்.

"எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தாரப்பா
யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்தநாட்டில்!"[32]

எனத் தொடங்கிச் சித்தர் இலக்கிய பாணியில் பாரதியார் பாடிய பாரதி அறுபத்தாறு கவிதைகளும், அதன் பிழிவாக, விளக்கவுரையாக அமைந்த இப்பொழிவும் பாரதியாரின் தனித்தன்மையைக் காட்டுகின்றன.

வழக்கமாய், சித்தர்கள் நிலையாமையை நன்கு பாடுபவர்கள். பாரதியாரோ நிலையாமையின் நிலையாமையை, அதாவது நிரந்தர இருப்பைப்பற்றிப் பாடுகிறார், பேசுகிறார். உடம்பை இழுக்கென்றும், பெண்ணைப் பேய் என்றும் பேசும் போக்குப் பாரதியாரிடம் இல்லவே இல்லை. மாறாக, உண்மை பேசுதல், ஏகபத்தினி விரதனாயிருத்தல், பெண்களைத் தெய்வமாகப் போற்றுதல் போன்ற புதிய பண்புகள் ஒளிர்விடுகின்றன. அனைத்திற்கும் மேலே நம்பிக்கை ஒளிவிடும் சுடர்த்தன்மை பாரதியாரிடம் மிகுந்து காணப்படுகின்றது.

சென்னையில் இருந்து கிளம்பிப் புதுவையில் அடைக்கலமாகிய பாரதியார் சித்தக்கடலை அடக்க வழிதேடி வேதங்களிலும், உபநிடதங்களிலும் மூழ்கிக் கற்றுக் களைத்துச் சற்றே ஒதுங்கிய வேளையில் கிடைத்த இத்தகு சித்தருலகம் பாரதியாரைத் துன்பமற்று, இன்பநிலையில் எப்போதும் இருக்கச் செய்திருக்கின்றது. இதற்கு அவர் சித்தர்கள் தொடர்பால் ஏற்பட்ட போதைப்பொருள்களின் பயன்பாடுதான் காரணம் என்று பேசுவதும், எழுதுவதும் அவ்வளவு பொருத்தமானதன்று. ஏனெனில், அவ்வாறு போதை பழகியவர் எல்லாம் மேதைமையுடையவர்களாக இருந்ததில்லை. பாரதியாரின் மேதைமைக்குப் போதை ஒருபோதும் துணை செய்ததில்லை. தொல்லை செய்ததும் இல்லை. காரணம் பாரதியார் தமது உடல்கடந்து வெகுதூரம் உட்பயணம் மேற்கொண்டுவிட்டார். அவரது ஆன்மா கடந்த தூரங்களும் பெற்ற அனுபவங்களும் விவரிக்கவொண்ணாநிலையை எட்டிற்று. அது குறித்துப் பாரதியார் இன்று எனும் தலைப்பில் எழுதிய கட்டுரையைக் காணுங்கால் உண்மை புலப்படும்.

'இன்றுபுதிதாய்ப் பிறந்தோம் என்று எண்ணமதைத் திண்ணமுற இசைக்க வேண்டும்' என்று பாரதியார் பாடுகின்றாரே அந்த இன்று இப்படித்தான் இருக்க வேண்டும் போலும்.

என்று எடுத்துப் படித்தாலும், யார் எடுத்துப் படித்தாலும், அவர் நான் தான். அன்று, இன்றுதான். கால,இட எல்லைகள் கடந்து எல்லா ஆன்மாக்களும் அந்த நானில் ஒன்றுபட்டுப் பேதமற்று நின்று

பேசும்போது, உணரும் போது அதனைப் படிக்கும் மனிதனுக்கு மரணமில்லைதான். அந்த என்றைக்குமான இன்றை இப்போது காணலாம். ஒரு ரிஷி குமாரனாய் இருந்து பாரதியார் எழுதியது.

***இன்று***

***(ஒரு ரிஷி குமாரன் எழுதியது)***

"இன்று தேவர்களை அழைக்கிறோம்.

இந்த மண்ணுலகத்திலே மீளவும் கிருதயுகத்தைக் காட்டும் பொருட்டாக.

அறிவின்மை, அசுத்தம், சிறுமை, நோய், வறுமை, கொடுமை, பிரிவு, அநீதி, பொய் என்ற ராக்ஷஸக் கூட்டங்களையழித்து மனித ஜாதிக்கு விடுதலை தரும்பொருட்டாக.

கல்வி, அறிவு, தூய்மை, பெருமை, இன்பம், செல்வம், நேர்மை, ஒற்றுமை, நீதி, உண்மை என்ற ஒளிகளெல்லாம் வெற்றியடையும் பொருட்டாக.

இன்று தேவர்களை அழைக்கிறோம். எம்மை ரிஷிகளாகச் செய்து தரும்பொருட்டு எமது குற்றங்களையெல்லாம் நீக்கிக் கோணல்களை நிமிர்த்தி, எமக்கு அமர இன்பத்தைத் தரும்பொருட்டு.

எமதறிவையே தேனாக்கிக் கொடுக்கிறோம். இந்தத் தேனை தேவர்கள் உண்டு களிபெறுக. எமது மந்திரங்கள் தேவருடைய திருவடியைப் பற்றுக. அவர்களை இந்த வேள்வியிலே கொண்டு தருக. எமதுடலையும், உயிரையும், அறிவையும் அவர்களுக்குக் கோயிலாக்குகிறோம். எமதுடைமைகள் எல்லாம் அவர்களைச் சார்ந்தன; எமது மனைவி மக்கள் அவர்களுக்குச் சேவகர்; எமது வீடு, வாசல், மாடு, கழனியெல்லாம் அவர்களுக்குரியன. எமது தொழில் அவர்களுடையது. எமது நினைப்புக்களெல்லாம், ஆசைகளெல்லாம் விருப்பங்கள் எல்லாம், இன்பங்கள் எல்லாம் தேவர்முன்பு வைக்கிறோம்; அவை அவரின் உணவாகுக.

வானவரே, வந்து சுவை கொள்ளுவீர்.

அன்பே வா மித்ரா; உன்னைப் பணிகின்றோம். உன்னாலே காக்கப்பட்டவன் அழிவதில்லை; தோல்வி பெறுவதில்லை. இவனை இங்கிருந்தேனும், தொலைவில் இருந்தேனும் தீங்குவந்து தீண்டுவதில்லை என்று எமது முன்னோர் கண்டனர். நாமும் அங்ஙனமே காண்கிறோம்.

அனைத்தையும் ஆழ்ந்து நிற்கும் அநந்த நிலையே, வருக வருணா, எல்லையற்ற நினதாண்மை, இந்த எமதறிவாகிய யாகஸ்தலத்திலே

நிறுத்தி, எமது கட்டுகளை எல்லாம் வெட்டிவிடு. வலிமையே, நினது வரவு நல்வரவு. உன்னை மிகவும் வேண்டுகிறோம். அர்யமந், எமக்கு வலிமை தருதல் வேண்டும்.

இன்பமே வா,வா,வா. பகதேவா, எப்போதும் எம்மோடு கூடி வாழ்ந்திரு. உனது முகம் மிகவும் அழகுடையது. அதைப் பார்த்துக் கொண்டே யிருந்தால் போதும். எமதுள்ளம் நிறைந்திருக்கும். உனது உதயதேவி முன்னமே வந்துவிட்டாள். இளையவள், செந்நிற முடையவள், என்றும் விழிப்பவள், இவளைத் தீ கொணர்ந்து கொடுத்தான். தீ எம்மிடத்தே வளர்கிறான். தீ வலியவன். அவன் உண்மையுடைய கடவுள். உள்ளத்தை அவனுக்கு விறகாகக் கொடுத்தோம். அதில் என்றும் எரிவான்; அவிந்துபோகமாட்டான். நீ எமது தலைவன். அவனை முப்போதும் சரணமடைகின்றோம்.

இன்று இப்போது தேவர்களை அழைக்கிறோம். வா, சூர்யா, தெய்வ ஒளியே, ஞானச்சுடரே, அமிர்த ஊற்றே, வலிமையின் தந்தையே, வானவர் வழியே, அநந்த விரிவே, ஆக்கமே, புகழே, வெற்றியே, எமதரசே, நின்வரவு நன்று. மிகவும் நன்று.

மருத்துக்களே, புயற்காற்றுக்களே, மனதின் அசைவுகளே, மதிகளே, ஒளிமிகுந்தீர், வலிமையுடையீர், வானத்தையும் மண்ணையும், வலிமைக் களியிலே, குமுறும்படி செய்வீர். மேகங்களைப் புடைத்து நல்ல மின்னல் காட்டுவீர். மருத்துக்களே, வாரீர். மனதிலே, நேரும் சோர்வுகளையெல்லாம் உங்கள் விரதத்தினாலே தீர்த்துவிடுக. நீங்கள் வாயுமண்டலத்தைப் புனிதப் படுத்துகிறீர்கள். வானத்திலிருந்து மழை பொழியச் செய்கிறீர்கள். வருக.

இன்று தேவர்களை அழைக்கின்றோம்.

காற்றே வா. இங்கேயே இரு எப்போதும்; திரும்பியே போகாதே. நீ உயிர். உன்னை வரிக்கின்றோம். அசுவினி தேவர் உயிர்ப்பரிகளிலே ஏறி வருகின்றனர். அவர் நோய்களைத் தீர்ப்போர். அவரை எம்முள்ளே பதியும்படி செய்கின்றோம்."[33]

இந்த இன்று என்றும் நிரந்த இன்றாக இருக்கப் பாரதியார் தமிழருக்கு என்று தலைப்பிட்டு ஓர் உபதேசம் போலக் கட்டுரை தருகின்றார். விடுதலைக்கு வழி என்றுஅடைப்புக்குறிக்குள் விளக்கம் தந்து, தியானங்களும் மந்திரங்களும் என்று எழுதுகின்றார். ஆரோக்கிய ஸம்பந்தமான மந்திரங்கள், அமரத்தன்மையைக் குறித்த மந்திரங்கள் என்று தனித்தனியே தருகின்றார். அவற்றை ஒருசேரத் தினமும் உள் வாங்கிப் படித்து உணர்கின்றபோது பாரதியாரின் உள்ளக்கிடக்கை புரியவரும்; அவரும் ஓர் உன்னதச் சித்தர் என்பது உணரப்பெறும்;

மெய்யாகவே, அவர் மரணம் எய்தவில்லை என்பது புரிய வரும். உறுதியாக, அவர் சொன்னதுபோல், மனிதர்க்கு மரணம் இல்லைதான்; நமது மகாகவிக்கு இன்னும் உறுதியாய்.

"தந்தை அருள் வலியாலும் இன்று
சார்ந்த புலவர் தவவலியாலும்
இந்தப் பெரும்பழி தீரும் புகழ்
ஏறிப்புவிமிசை என்றும் இருப்பேன்!"[34]

என்று தமிழன்னை அவர்காலத்தில் அனுபவித்த இன்னல்களையும் பழிகளையும் தீர்த்துப் புகழ் ஏறிப் புவியின் மீது என்றும் இருப்பதாகப் பாரதியார் - தமிழன்னை யாகவே மாறிப்பாடுகின்றாரே, அப்படி அவர் என்றும் தமிழாக, எல்லாமாக, இருப்பது நிச்சயம். அவரது நிரந்தரத்தன்மை கொலுவீற்றிருக்கும் திருக்கோவில் அவர்தம் இலக்கியப் படைப்புகள்தாமே!

இனி அவர்தம் இலக்கியச் சொற்பொழிவுகளைக் காணலாம்.

<u>சான்றெண் விளக்கம்</u>


1. முனைவர் சு.வெங்கட்ராமன், 'பாரதியின் ஆன்மிகம்', முனைவர் அ.அறிவுநம்பி, முனைவர் இரா.சந்திரசேகரன், (தொ.ஆ) "மகாகவி பாரதியார் கருத்தியல் நெறி", பக். 258-259.
2. சகுந்தலாபாரதி, என்தந்தை,ப.41.
3. பாரதியார் கவிதைகள், கனவு, பா-2,ப.29.
4. மேலது,பாஞ்சாலி சபதம், பா-154.
5. சீனி.விசுவநாதன், கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொ-1, ப.35.
6. மேலது, ப.
7. மணிமேகலை,பா.எண்-60-61, ப.54.
8. ஸ்ரீவி.எஸ். குஞ்சிதபாதம், புதுவையில் பாரதியார் நான் கண்டதும், கேட்டதும், பக்.113-114.
9. நாரண. துரைக்கண்ணன், பாரதிதாசன் திருவுள்ளம், மன்னர் மன்னன், முல்லை முத்தையா, (தொ.ஆ) பாரதிதாசன் நறுமலர்க் கொத்து, பக். 132-133.
10. சகுந்தலாபாரதி, என்தந்தை,ப.77.
11. மேலது, ப.65.
12. மேலது,பக்.65-66.
13. பாரதியார், பாரதியார் கட்டுரைகள், பக்.52-58.
14. பாரதியார் கவிதைகள், பாரதிஅறுபத்தாறு, பா - 20, ப.55.
15. மேலது, பா-22, ப.56.

16. பாரதியார் கதைகள், ப.241.
17. மேலது.
18. மேலது.
19. பாரதியார் கவிதைகள், பாரதி அறுபத்தாறு, பா - 28, ப.58.
20. பா.கோதண்டராமன், புதுவையில் பாரதி,ப.85.
21. பாரதியார் கவிதைகள், பாரதி அறுபத்தாறு, பா-39.
22. மேலது,பா-38.
23. மேலது,பா-44.
24. பத்மநாபன்.ரா.அ.,(தொ.ஆ) பாரதியைப்பற்றி நண்பர்கள், பக்.229.
25. மேலது, பக்.229 - 231.
26. சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.515-516.
27. ஈரோட்டில் பாரதி, பக்கம் குறிப்பிடப்படவில்லை
28. மேலது.
29. மேலது.
30. சது.சு.யோகியார், ரா.அ.பத்மநாபன், (தொ.ஆ) பாரதியைப்பற்றி நண்பர்கள், பக்.219-220.
31. ஈரோட்டில் பாரதி, ப.குறிப்பிடப்படவில்லை.
32. பாரதியார் கவிதைகள், பாரதி அறுபத்தாறு,பா-1, ப.50.
33. பாரதியார் கட்டுரைகள், பக்.153-154.
34. பாரதியார் கவிதைகள்,தமிழ்த்தாய், பா.எண்-12, ப.162.



## பாரதியாரின் இலக்கியச் சொற்பொழிவுகள்

பாரதியாரின் இலக்கியப்பாங்கு

பாரதியாரின் இலக்கிய ஆர்வம் மீச்சிறு வயதிலிருந்தே வளர்ந்து வந்தது. கவிதைக் காதலில் தன்னை மறந்து மின்னலைச் சுவைத்த மகாகவி, பாரதியார். ஓராயிரம் ஆண்டு ஒய்ந்துகிடந்ததன்பின் வாராது வந்த மாமணி அவர்.

"தமிழரின் உயிர்நிகர் தமிழ்நிலை தாழ்ந்ததால்
தமிழகம், தமிழுக்குத் தகும்உயர்வளிக்கும்
தலைவனை எண்ணித் தவங்கிடக்கையில்
இலகு பாரதிப் புலவன் தோன்றினான்!"[1]

என்று பாரதிதாசன் பாடுகின்றார். தமிழில் தரமிகு கவிபாடியவர் அவர் என்பதைவிடவும் அவரே தமிழாய்த் தலைநிமிர்ந்து நிற்பதனைத் தெளிவுற உணர்ந்த திறத்தால்,

"தமிழால் பாரதி தகுதி பெற்றதும்
தமிழ், பாரதியால் தகுதி பெற்றதும்"[2] என்று அவரால் சொல்லமுடிந்தது.

எந்த நிலையிலும் தமிழுக்கு இழுக்கு வரும் எனில் மீசை துடிக்க, அவர் ஆவேசத்தோடு பேசும் சொற்கள் கடிதங்களில், கதைகளில், பாரதி யன்பர்களின் பதிவுகளில் விரிவாய்க் காணமுடிகின்றது.

அதனால்தான் முதன்முதலில் பாரதியாரைப் பார்க்க வந்த வ.ரா. ஆங்கிலத்திலேயே பேசத்தொடங்கியதைக் கேட்டு, 'ஒரு தமிழன் மற்றொரு தமிழனோடு எவ்வளவுகாலம் ஆங்கிலத்திலேயே பேச வேண்டும்?' என்று கோபத்தோடு கேட்டிருக்கின்றார், பாரதியார். மேலும் தொடர்ந்த பேச்சுக் கிடையில், "நாட்டின் விடுதலைக்கு

முன், நரம்பின் விடுதலை வேண்டும். நாவுக்கு விடுதலை வேண்டும். பாவுக்கு விடுதலை வேண்டும். பாஷைக்கு விடுதலை வேண்டும்..." இவ்வாறு அடுக்கிக்கொண்டு போனார். வெறும் சொல்லடுக்குக்காகச் சொன்னதல்ல என்றுஇப்பொழுது நன்றாக எனக்குப் புலனாகிறது"[3] என்று பின்னாளில் வ.ரா. நினைவுகூர்கின்றார்.

ஒரு பேச்சுக்காக அல்லாமல் மெய்யாகவே தமிழுக்காய் உழைத்து நின்றவர் பாரதியார். ஆங்கிலக் கல்வி தமிழ்க்கல்விக்கு அழிவைத் தரும் அபாயம் உணர்ந்த அவர்தம் செல்லமகள் சகுந்தலாவைப் பள்ளிக்கே அனுப்பாமல் தமது இல்லத்தில் வைத்துத் தமிழ் சொல்லித் தந்திருக்கின்றார். காரணம், பள்ளிப்பருவத்தில் தமிழ் படிக்க விரும்பிய தன்னை நெல்லையூர் சென்று ஆங்கிலக்கல்வி கற்கத் தந்தையார் அனுப்பி வைத்ததுபோல் தம்மகளுக்குத் தாம் எதிராய் ஆகிவிடக் கூடாது என்ற எண்ணம்.

அந்தக்காலத்தில் தமது தந்தைக்குத் தெரியாமல் எட்டயபுர மன்னருக்குப் பாரதியார், எழுதிய சீட்டுக்கவியில் தமிழ்படித்தோர் ஆதரிப்போர் இன்றி அடையும் இன்னல்களைக் காரணம் காட்டித் தாம் ஆங்கிலம் படிக்கப்போன அவலத்தை எழுதுகின்றார்.

"இன்னமுதினும் சுவை எய்வுறீஇ அமைந்த
செந்தமிழ்த்திருமொழி சிறிதும் ஆதரிப்பவர்
இன்மையின் இந்நாள் இனிது கற்பவர்க்கு
நன்மை பயவாது நலிந்திட, மற்றைப்
புன்மொழி பலவும் பொலிவுறலாயின.
உகதன்மத்தான் உலகினைப் பற்பல
வகையினர் புலைஞர் மாண்பினொடுஆளலின்.
ஆதலின்,
ஐயநின் அருளே அருங்கதி யென்ன
உய்யஇவண் வந்துஉற்ற என் தந்தையார்
என்னையும் புறமொழி கற்க என்று இயம்புவர்.
என்னை யான் செய்குவது இன்தமிழ் கற்பினோ
பின்னை ஒருவரும் பேணார் ஆதலின்
கன்ன யான், அம்மொழி கற்கத் துணிந்தனன்"[4]

இவ்வாறு, விருப்பமில்லாமலேயே பள்ளிச்சிறையில் அடைபட்ட பாரதியாருக்குத் தந்தை மறைவும், குடும்ப வறுமையும் அஞ்சாதே என்று உரைக்க யாரும் இல்லாத் துயரமும் மிஞ்சிய வேளையில் விதி, அவரைக் காசிமாநகரில் கொண்டு போய்ச் சேர்த்தது. அங்கு நடந்த ஒரு நிகழ்வில் பாரதியாரின் தமிழுள்ளம் கவியுள்ளமாக, இலக்கியப் பெருக்கெடுத்து நின்ற பெற்றியைப் பாரதிதாசன் பதிவு செய்கின்றார்.

தனித்தமிழ்ச்சிறப்பு

'பாரதி தனித்தமிழ்ப்பாட்டு' எனும் தலைப்பில், பாரதிதாசன் எழுதிய இக்கட்டுரை, 1962 சென்னை ஆனந்தவிகடன் வெளிவந்து, பாரதிதாசனின் குயில் புதுவையிதழில் 1967ல் மறுபிரசுமாயிருக்கின்றது. இதனை, பாரதி தாசனாரின் புதல்வர் மன்னர்மன்னன், தமது பாட்டுப் பறவைகள் நூலில் பதிவு செய்கின்றார்.

காசியில் பாரதியாரின் மாமா கிருஷ்ணசிவம், காசி மடத்தின் அதிகாரி. உடையவரும் அவரே. அதனால் அங்கிருந்து படிக்கும் வாய்ப்புப் பாரதியாருக்கு ஏற்பட்டது. அந்நாளில், பாரதியாரின் மாமா, தமது நண்பரான ஈஸ்வரலால் என்பவருக்குப் பாரதியாரை அறிமுகம் செய்து வைக்கும்போது, 'இவன் பிஞ்சுக் கவியல்ல, கவிப்பழம்' என்று சொன்னாராம். உடனே ஈஸ்வரலால், பாரதியைப் பார்த்து, 'எந்த மொழியில்?' என்று கேட்க, கிருஷ்ணசிவமே அதற்கு விடையாகத் 'தமிழ்' என்று சொன்னாராம்.

"ஈஸ்வரலால் முகம் விளக்கெண்ணெய் குடித்ததுபோல் ஆயிற்று. 'சமஸ்க்ருதம் ஒன்று உண்டு. அது தனிமொழி. தமிழ் என்று ஒரு மொழியும் உண்டா? சம்ஸ்க்ருதம் பெற்ற பிள்ளையைச் சம்ஸ்க்ருதம் என்றே சொல்லுவதில் நாணம் ஏன்?' ஈஸ்வரலால் இவ்வாறு அடுக்கிக்கொண்டே போனார்.

ஈஸ்வரலால் பேச்சு பாரதியாருக்கு அப்போது புரியவழியில்லை. கிருஷ்ணசிவம் பாரதியாருக்கு மொழிபெயர்த்தார். அப்போது பாரதியார் ஈஸ்வரலாலை நோக்கிக் கேட்ட முதற்கேள்வி, "சம்ஸ்க்ருதம் ஒரு மொழி என்று சொல்லும் தகுதி அதற்கு என்ன இருக்கிறது?" என்பதாகும். அதைத் தொடர்ந்து பாரதியார் நடத்திய சொற்பொழிவின் முதற்பகுதி ஈஸ்வர லாலை எரிச்சலுக்குள்ளாக்கியிருக்கலாம். ஆயினும் அதில் வெளியான உண்மைகளை ஈஸ்வரலாலே பாராட்டியிருக்கிறார்.

"ஈஸ்வரலால் அவர்களே, தமிழ்பேசும் வட்டாரத்தில் கோயில்களில் குறிப்பிட்ட நேரங்களில் சிலர் சம்ஸ்க்ருத மந்திரங்கள் சொல்லுகிறார்கள். தொழில் முடிந்தவுடன் அவர்கள் எங்கும் எப்போதும் பேசுவது தமிழ்தான். திருமணக் காலங்களில் சிலர் சம்ஸ்க்ருத மந்திரம் சொல்லுகிறார்கள். தொழில் முடிந்ததும் அவர்கள் எங்கும் எப்போதும் பேசுவது தமிழ்தான். திருவிழா நாட்களில் வேதபாராயணம் முடிந்ததும், கூலி கேட்பதுகூடத் தமிழில்தான்.

அதுபோலவே, இந்தி பேசும் வட்டாரத்தில் சம்ஸ்க்ருதம் கேட்கப் படுகிறது. அடுத்தபடி அவர்கள் எப்போதும் பேசுவது இந்திதான்.

நாங்கள் வாழும் வட்டாரத்தில் சம்ஸ்க்ருதப்பள்ளி இல்லை. வட்டாரமொழியாகிய தமிழ்ப்பள்ளிகள் தாம் எங்கும் உண்டு. சம்ஸ்க்ருதம் என்ற வேடிக்கை மொழியின் எழுத்துகளைத் தெரிந்துகொள்ள நான் இவ்வளவு தூரம் வர வேண்டியதாயிற்று. சம்ஸ்கிருதப்பள்ளியில் பல மொழிக்காரர்கள் படிக்கிறார்கள் என்று பெயர். அவரவர்களின் இந்தி, இந்துஸ்தானி, மராட்டி, முதலியவற்றில்தான் எங்கும் எப்போதும் பேசுகிறார்கள்.

சமஸ்க்ருதம் என் தாய்மொழி என்று சொல்ல யாரையும் காணோம். ஈஸ்வரலால் அவர்களுக்கும் சம்ஸ்க்ருதம் தாய்மொழியல்ல. ஆரியருக்குச் சம்ஸ்க்ருதம் தாய்மொழியாம். ஆரியர் இருந்தால் அவர்கள் சம்ஸ்க்ருதம் பேசவேண்டுமே. அப்படி ஒன்றும் தெரியவில்லை. சம்ஸ்க்ருதம் என்ற சொல், பலமொழிச் சொற்களைக் கொண்டு திருத்தி அமைத்தது என்று சொல்லுவதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஆனால், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து முன்தோன்றியதான ஒரு மொழியைக் கேள்விப்பட்டால், அது சம்ஸ்கிருதத்திலிருந்துதான் வந்தது என்று சொல்ல மட்டும் இந்த நாட்டில் அதிகம் பேர் கிடைக்கிறார்கள்.

தனிமொழி என்பதான ஒன்றைக் கண்டால், அதைக் கொல்லவேண்டும் என்பதில் காட்டப்பட வேண்டிய ஊக்கம், சம்ஸ்க்ருதத்தை உயிர்ப்பிப்பதில் செலவழிக்கப்படவில்லை.இது என்ன வேலை?"

பாரதியார் பேச்சை மொழிபெயர்த்துச் சொல்லிக்கொண்டே வந்த கிருஷ்ண சிவத்தை ஈஸ்வரலால், 'அப்படியா?' என்று கூறி நிறுத்தினார். பாரதி சம்ஸ்க்ருதம் உயர்த்தப்படவேண்டும் என்றுதான் சொல்லுகிறார். அவர் கருத்து நம்மையெல்லாம் உணர்ச்சியில் ஆழ்த்துகின்றது.

"தமிழ்பற்றி எனக்குள்ள ஐயப்பாட்டைச் சொல்லுகிறேன். அதுபற்றி எனக்கு நல்ல தெளிவு வேண்டும். தமிழில் நூல்கள் உண்டா?" "உண்டு" என்றார் பாரதியார்.

"தமிழிலா?"

"தமிழில்!" என்றார் பாரதியார்.

"இன்னும் ஒரு கேள்வி, தனித்தமிழிலா?"

"தனித்தமிழில்தான்!" என்றார் பாரதியார்.

"அப்படி நான் கேள்விப்படவில்லை. தமிழ் நூல்களில் சில தமிழ்ச் சொற்கள் காணப் படும். அவையும் சம்ஸ்க்ருதத்திலிருந்து வந்தவைகளே!" என்றார் ஈஸ்வரலால்.

ஈஸ்வரலாலுக்கு நேரம் ஆயிற்றாம். அவர் அப்படிச்சொல்லி எழுந்து போகுமுன் கூறினார் - "தனித்தமிழில் நீங்களாவது பத்துவரி எழுதி வையுங்கள். நாளைக்கு என் நண்பர்கள் சிலரோடு வருகின்றேன்!" என்றார் ஈஸ்வரலால்.

பாரதியார், "சற்றே இருங்கள். பல வரிகள் எழுதித்தருகிறேன். அதைக் கையோடு கொண்டுபோய் உங்கள் நண்பர்களுக்குக் காட்டலாம்."

அப்போது பாரதி விரைந்து எழுதிய வரிகள் நாற்பத்தெட்டு, அவற்றில் பதினாறு வரிகள் இவை.

"காற்றென்று சொல்வதோ ராற்றல் மற்றுக்
கனலென்று சொல்வதொ ராற்றல்
மாற்றமி லாததோர் விண்ணும் இம்
மண்ணும் புனலுமோர் ஆற்றல்
தோற்றுமிவ் வாற்றல்கள் எல்லாம் இங்குத்
தோன்றிடச் செய்தது யாதோ
ஆற்றலுக் காற்றலும் ஆகி அதற்
கப்பாலும் உள்ளபே ராற்றல்
ஒன்றெனக் கண்டவர் மேலோர் அதில்
ஒன்பது சொல்பவர் மூடர்
என்றும் எங்குமிருந்தாலும் அதை
இல்லைஎன் றுரைத்தாலும் அதில்
முன்னாதல் என்பதோர் ஆழி
முத்துக் குளித்திடும் போதில்
தன்திறம் எனுமொரு மேட்டில் நன்கு
தட்டுப் படும்பே ராற்றல்!"[5]

என்பது பாரதிதாசன் தரும் வரலாற்றுக் குறிப்பு.

பாரதியாரின் தமிழ்நேயம்

இந்த உணர்ச்சி, பாரதியாரிடம் இறுதிவரையிலும் வளர்ந்து கொண்டே இருந்தது என்பதற்கான சான்றுகளை அவரிடம் நிறையக் காணலாம். 'இயன்றவரை தமிழிலேயே எழுதுவேன்; பேசுவேன்' என்று தனக்குத்தானே விரதம் பூண்டு அதனைச் செயற்படுத்தியவர் பாரதியார். அக்காலத்தில் அவரைப்பிரிந்திருந்த இளம்மனைவி (பன்னிரண்டுவயதுச்) செல்லம்மாவின் கவலைக்கு மருந்தாகத் தமிழை முன்வைக்கின்றார்.

"நீ இந்தமாதிரி கவலைப்படும் நேரங்களில் தமிழை நன்றாகப் படித்து வந்தாயானால் மிகவும் சந்தோஷமுறுவேன்" என்று கடிதம் எழுதுகின்றார்.[6]

"நீ எனக்கு இனிமேல் இங்கிலீஷில் காயிதம் எழுதாதே. நீ எழுதும் தமிழ் எத்தனை கொச்சையாக இருந்த போதிலும் அதைப்படிக்க நான் ஆவலுறுவேன்" என்று தம்பி சி.விசுவநாதனுக்குக் கடிதம் எழுதுகின்றார்.[7]

"தம்பி - நான் ஏது செய்வேனடா?

தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாயிருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்குச் சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது"[8] என்று எழுதுகிற உள்ளம் பாரதியாரின் உள்ளம். இதில் காழ்ப்போ, பகையோ இல்லை. அத்துணை தகுதிகள் இருந்தும் தமிழ் மற்ற மொழிகளின் முன்னே தாழ்ந்துகிடப்பதும், மற்ற மொழியினர் முன்னே தமிழர் தாழ்ந்துகிடப்பதும் பாரதியாருக்கு உடன் பாடில்லை.

அந்தச் சீற்றத்தில்தான்,

"வேறுவேறு பாஷைகள் கற்பாய் நீ
வீட்டுப்பாஷை கற்கிலாய் போ போ போ!"[9]

என்று மொழியுணர்வற்ற இளையபாரதத்தை வீட்டைவிட்டுத் துரத்துவதுபோல் நாட்டைவிட்டுப் பாட்டினாலே துரத்துகின்றார் பாரதியார்.

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா"[10]

என்று பாப்பாவுக்குப் பாடம் சொல்கின்றார். மொழி என்று வருகையில் தமிழையும், இனம் என்று வருகையில் தமிழினத்தையும், நாடு என்று வருகையில் இந்தியாவையும், உலகம் என்று வருகையில் மானுடத்தையும், பாரதியார் விட்டுக் கொடுப்பதே இல்லை. இதில் பிளவுண்டாக்கிப் பேதப்படுத்திக் குளிர்காய வருவோரைப் போட்டுக் கொளுத்திவிடுகின்ற கவிதைக்காரராகப் பாரதியார் திகழ்ந்திருக்கின்றார் என்பதையே பாரதியார் படைப்புகள் நமக்குப் புலப்படுத்து கின்றன. அத்தகு உரைகள் பல இடங்களில் பாரதியாரிடம் இருந்து வெளிப்பட்டிருக்கின்றன.

அத்தகு தமிழ்ப்பற்றின் காரணமாக, காசியிலிருந்து எட்டயபுர மன்னரின் அழைப்பை ஏற்றுத் தமிழகம் திரும்பினார் பாரதியார். அரண்மனைவாசம் அத்தனை உவப்பாக அவருக்கு இல்லாமல் போனதற்குக் காரணமும் அவருக்கு இருந்த தமிழ் மற்றும் இலக்கியப் பற்றேயாகும். 'வாராய் கவிதையாம் மணிப்பெயர்க் காதலி' என்னும் கவிதையில் இவ்வுணர்வைக் கதைசொல்வதுபோல் சொல்லி யிருக்கின்றார் பாரதியார். அதனால்தான் தமிழோடு தொடர்புடைய பணியான தமிழாசிரியப் பணியேற்க மதுரைக்கு வருகின்றார். அதுவும் தற்காலிகப் பணி. தமிழார்வம் மேலுந்தத் தகித்திருக்கும் பாரதியாரைப் பத்திரிகைஉலகம் சென்னை நோக்கிக் கொண்டுவந்து சேர்த்தது. இதழியல் பணியோடு தன்னை முடக்கிக்கொள்ளாமல் அவர் சென்னை பிரசிடென்சிக் கல்லூரித் தமிழ்த் துறையின் தமிழ்ச்சங்கவிழாக்களில் பார்வையாளராக இருந்து கேட்டு மகிழ்ந்த செய்திகளை உடனுக்குடன் உலகுக்கு அறிவிக்க இதழிலும் எழுதி யிருக்கின்றார். அவரும் அந்த மேடைகளில் ஏறி முழங்கியிருக்கின்றார். அத்தகு முழக்கங்களுள், பட்டினத்துப் பிள்ளை சரித்திரம் பற்றிப் பாரதியார் ஆற்றிய இலக்கியச்சொற்பொழிவும் ஒன்று. (ஸ்ரீசுப்பிரமணிய பாரதி சென்னை பிரசிடென்சி காலேஜ் தமிழ்ச் சங்கத்திலே செய்த பிரசங்கத்தின் சுருக்கம்) (The Extract of a lecture by C.Subramania Bharati at the Presidency College Tamil Sangam.) என்கிற அறிவிப்போடு சுதேசமித்திரன் இதழில் பாரதியார் எழுத்துப் பதிவாக அறியக் கிடைக்கிறது. இப்பொழிவு பாரதியாரின் தமிழ் இலக்கியப் புலமைக்கும், வரலாற்றுத் தேடலுக்கும், உண்மைவழிநின்று ஆராயும் தன்மைக்கும் தக்க சான்றாய்த் திகழ்கின்றது. தமிழ்த்துறையின் விழா என்பதால் புலவர் தமிழில் இவ்வுரை பொலிவு பெற்றிருக்கின்றது.

### புலவர் தமிழில் ஒரு பொழிவு

வரலாறு தேடல், கவித்துவம் காணல் ஆகிய தன்மைகளோடு பட்டினத்துப் பிள்ளை சரித்திரம் பதிவு பெற்றிருக்கின்றது. கல்லூரியின் தமிழ்ச்சங்கவிழா என்பதால் அக்காலத்துப் பண்டிதத்தமிழ் சற்றே தூக்கலாகத்தெரிவது கேட்போரை மனதிற்கொண்டு பாரதியார் சொற்பொழிவாற்றிய பாங்கை வெளிப்படுத்துகின்றது எனலாம்.

பட்டினத்தடிகளின் வாழ்வும் தமது வாழ்வும் ஒரோரிடங்களில் ஒப்புமை காணக் கூடிய அளவில், தந்தையார் மரணம், உண்மைகளைக் கவிதைகளில் தயங்காது வெளியிடும் தன்மை ஆகியவற்றைப் பாரதியார் இனிது கண்டு உரைக்கின்றார். காய்தல் உவத்தல் அகற்றி ஆய்வுரைக்கும் பாங்கும் இவ்வுரையில் வெளிப்பட்டு நிற்பதைக் காண முடிகிள்றது. "நமது வெண்காட்டுப் புலவர்

பெருமானது உண்மைநிலை உணராது அவர் மாட்டு பொய்ப்பக்தி செலுத்துவோர் சிலர் அவர் இளமையில் காமாதுரராக வாழ்ந்தனரென்பதை மறுத்துப்பேசுவார்" என்று விளக்கம் தந்து அதற்குச் சான்றாகும் பாடல்களை முன்வைக்கின்றார்.

"'பெண்ணாகி வந்து', 'சீறும் வினையறு', 'நாறுங்குருதி' என்ற தொடக்கங்களையுடைய பாக்களில் தம்மைத்தாமே சினமிகுதியாற் கண்டனை செய்துகொள்ளும் வெறுத்தற்குரிய செய்யுள்களை நுமக்கெடுத்துக்கூற எமது நாக்கூசுகின்றது" என்று சுட்டக் கருதிய இடத்தை அவை மரபு கருதி, அரங்கில் சொல்லமுடியாச் செய்திகளைக் குறிப்பால் நயமாகச் சுட்டிக்காட்டும் பாங்கும் இனிது புலப்படுகின்றது.

மேடைப்பொழிவிற்குப் பெரிய நெருக்கடி காலச்சுருக்கம். விரித்துரைக்கும்போதே வந்து கவ்வும் காலத்தை முன்னிறுத்தித் தமது உரைக்கு அவ்வப்போது கடிவாளம் இடவேண்டிய கட்டாயம் பொழிவாளர்க்கு நேர்வது இயற்கை. இங்ஙனமிருக்க, நிற்க, என்ற சொற்பயன்பாடுகளோடு, "...இதனை எத்துணை சுருக்கமுடியுமோ அத்துணை சுருக்க வேண்டிய முயற்சி செய்கிறேன்" என்று கூறும் இடங்களும் அவர்தம் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முயற்சிக்குரிய காட்டுகளாகத் திகழ்கின்றன.

"தமிழ்ச்சங்கத்தில் பாரதி பேசுவது இது இரண்டாவது தடவையாகும். எழுதுவதிலே எளிமையைக் கடைப்பிடித்த பாரதி, தமிழ்ச்சங்கத்திலே பேசுகிற சமயத்தில் மட்டும் சற்றுக் கடின நடையைக் கையாண்டுள்ளார் என்பது இந்தச் சொற்பொழிவுக் கட்டுரையைப் படிப்பவர்கள் எளிதில் உணர்ந்துகொள்ளலாம்"[11] என்பது சீனி.விசுவநாதன் கருத்தாகும். இனி அவ்வுரையினைக் காணலாம்.

பட்டினத்துப்பிள்ளை சரித்திரம்

"வெண்காட்டு ஞானியார் அவதரித்த காலம் இன்றைக்கு 1500 வருடங்களின் முன்னென்பர். இவரது காலவரையறை புரிந்ததற்கு பின்வரும் சுற்றுவளைவுக் காரணம் தொழுதூர் வேலாயுதமுதலியாரால் கூறப்படுகிறது. என்னை? கம்பர் இன்றைக்கு 1021 வருடங்களுக்கு முன் கவியரங்கேற்றியதை நாம் அறிவோம். "எண்ணிய... மென்னூற் றேழின் மேற் கம்பனாடன் கண்ணிய அரங்கமுன்னே கவியரங்கேற்றினானே" என்று கூறப்படுதலான். இனி, கம்பர் சேக்கிழாரைத் தமது "திருக்கை வழக்க நூலிற்" புகழ்ந்திருக்கிறார். எனவே, சேக்கிழார் காலம் கம்பர் காலத்துக்குப் பல்லாண்டுகளால்

முற்பட்டு இருக்கிறது. சேக்கிழார் செய்த பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறை எனத் துதிக்கப்பெற்று வருகிறது.

பட்டினத்துப்பிள்ளையார் இயற்றியனவாகக் கூறப்படும் கோயினான் மணிமாலை முதலிய பிரபந்தங்கள் பதினோராம் திருமுறையுள்ளே நம்பியாண்டார் நம்பியாற் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. எனவே, பட்டினத்தடிகள் நம்பியாண்டாரானுக்கு முற்காலத்தினராதல் பெற்றான். நம்பியார் சேக்கிழாருக்கு முற்காலத்தவர். எனவே, கம்பரிலிருந்து சேக்கிழாருக்கும், சேக்கிழாரிலிருந்து நம்பியாண்டார்க்கும், நம்பியாண்டாரிலிருந்து பட்டினத்தடிகளுக்குமாக ஒரு விதத்தே கணக்கிட்டுப் பார்த்து 503 வருஷங்கள் சென்றிருக்கவேண்டும் என்று வைத்துக்கொள்வோம். அதன்மேல் பட்டினத்துப்பிள்ளையின் காலம் 1500 வருஷங்களுக்கு முன்னென்பது தெளிவாகி விட்டதன்றோ? என தொழுவூர் முதலியார் வரைகின்றனர்.

ஆங்கிலேயர் நம்மவர்க்குச் சரித்திரம் எழுதுவதிலும், பண்டை நூலாரிசியர், மன்னர், ஞானியர் முதலிய பெருமக்களின் காலம், செய்கை முதலியவற்றை நிர்ணயித்தலிலும் ஆற்றல் போதாதென் கிறார்கள். அக்கொள்கைக்கு நிதரிசனம் வேண்டுவோர் முதலியாரின் ஆராய்ச்சி வகையை வந்து காணலாமென்று சிலர் கருதக்கூடும். நான் அங்ஙனமொன்றுங் கூறுகில்லேன். வேறெவ்வகையானும், பட்டினத்தார் வாழ்க்கையாலும் அவரது பாடல்களாலும் நாம் அறிந்துகொள்ளத் தக்க பேருண்மை யாதென ஆராய்வான் முன் வந்தனன். நமக்கு அவரது கால நிச்சயம் அத்தனை அவசியமுமன்று. மேலும், நம்பியாண்டார் பதினோராம் திருமுறையைத் தொகுத்திருக்கும் நூல்களால் அன்று பட்டினத்தார் தமிழ் நாட்டின் அன்பிற்கும் பெருமதிப்பிற்கும் இடனாயிருத்தல் அவரது தனித் திருப்பாடல்கட்கும், அவரது வாழ்க்கைக்கும் பெருமையேயாகும். பெரும்பாலும் தனிப்பாடல்களினுள்ளே காணப்படும் கருத்துகளே ஏனைப் பெருநூல்களிலும் காணப்படுமாயினும், பாடல்களிலிருக்கும் உரை வண்மை பிறவற்றில் இல்லை. தனிப்பாடல்களுக்குள்ளே, பிற்காலத்தில் செறுகப்பட்டனவும், பட்டினத்தார் மனம் ஞானப்பித்தம் வரம்புமீறி இருப்புளிப் பாடப் பட்டனவுமாகிய சிலவற்றையொழித்துவிட்டு, மற்றவற்றையே நம் நம்பியாண்டார் தமது திருமுறையில் சேர்த்திராதவாறு புலப்படவில்லை.

இனி, அக்காலத்து பட்டினத்தாரின் பொதுப்பாடல்கள் வழக்கத்தில் இருந்தனவென்பதற்கு யாதொரு சான்றும் காணப்பட்டிலது. இனி, அவர் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்தன

ரென்று கேட்கிறோம். இதனின்றும், அவரது கால நிர்ணயம் செய்யப்புகுவார் சிலர் சிலப்பதிகார கதை நடந்த அற்றைய நாள் காவிரிப்பூம்பட்டினம் அழிந்திருக்குமாயின் பட்டினத் தடிகள் உறுதியாக இத்தனை வருஷத்து முற்பட்டவர் தானென்று வரையறுத்துக்கூறுதல் சாலும். காவிரிப்பூம்பட்டினத்தின் அழிவைப் பற்றி யாதொன்றும் தெரிந்திலது. எனவே, இத்தனை வருஷங்களுக்கு முன்னர்தான் பட்டினத்தார் இருந்தனர் என்று கூறுதல் பொருத்தமில்லை. எனினும், அவரது நடைமுறை நோக்கியும் அவரது செய்யுட்களில் ஒன்றில், "குலாமர் " என்ற உருது பாஷை சொல் ஒன்று வந்திருப்பதாலும், அவர் தென்னாட்டில் உருது (ஹிந்துஸ்தானி) பாஷை வழக்கமான பின்பு தோன்றியிருத்தல் வேண்டுமெனச் சிலர் கூறுவர்.

(குலாம் என்ற சொல் அடிமை என்ற பொருள்பட்டு இழிதகையுடை யோரைச் சுட்டுவதாகும்) இதுநிற்க.

நமது ஞானியார் சரித்திரத்துட்புகுவாம்.

ஃ ஃ ஃ ஃ ஃ

சோழமண்டலத்தின் கிழ்க்கரையில் பண்டு நெடுங்காலம் சோழ மன்னர்களின் இராஜதானியாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினம் காவிரியாற்றின் முகத்துவாரத்தின்கண்ணே விளங்கிற்று. பண்டைத் தமிழர்களின் கடல் வாணிகத்தலங்களுக்குள்ளே முற்பட்ட இப்பெருநகரம் செல்வத்தினும் சிறப்பினும் நிகரிலதாக இருந்திருத்தல் வேண்டுமென்பது கூறாமே போதரும்.

சிலப்பதிகாரத்து இளங்கோவடிகளால் வருணிக்கப்பட்டதாகிய இப்பெருநகரத்தை ஈண்டு எம்போன்றோர் அணியத் தொடங்குவது கிள்ளை கூறிய சொற்களைக் காக்கை உடன் சொல்ல முயல்வதனை யொக்கும். எனினும் நுமது மனத்தின்கண் அந்நகரின் பெருஞ் செல்வத்தைப் பற்றி ஆழ்ந்த கருத்து விளைக்க விரும்புகின்றேன். அச் செல்வமிகுதியை மறவாதிருப்போமாயின், நம் பிள்ளையின் மனமாறுதல்களை நாம் உணர்வதற்கு அஃது பெருந்துணையாகும்.

இந்நகரத்தில் மற்றைச் சாதியார்களைக் காட்டிலும், பெரும்பாலும் கடலோடித் திரவியங் கொணரும் வணிகர்களே அளவிறந்த நிதியுடையோராயிருந்தனர். அவருக்குள்ளே சிவநேசச்செட்டி என்ற செல்வனொருவனிருந்தான். இவனே பட்டினத்துப் பிள்ளையின் தந்தையாவான். இச்செட்டி மரபு மாமிச போஜனம் செய்யும், பேரி செட்டிகளென்பார்களைச் சேர்ந்ததா, அல்லது மாமிசமுண்ணாத வேளாண் செட்டிகளைச் சேர்ந்ததா? என்பதைப் பற்றி அவ்விரு

வகுப்புச் செட்டிகளுக்குள்ளும் விவாதங்கள் நடைபெற்றுவருகின்றன. பட்டினத்தாரின் குடும்பத்தினர் செட்டி, பிள்ளை என்ற இருபெயரானும் வழங்கப்படுதலின் அக்குடும்பத்தோர் வேளாண்செட்டியாராகவே இருத்தல் வேண்டுமெனச் சிலர் ஊகிக்கின்றார்கள்.

கொன்றேன னேகமுயிரை யெல்லாம்
பின்பு கொன்று கொன்று
தின்றேன தன்றியும் தீங்கு
செய்தேனது தீர்க வென்றே
நின்றே னின்சன்னிதிக்கே யதனாற்
குற்ற நீ பொறுப்பா
யென்றே யுனை நம்பினே
னிறைவா கச்சி யேகம்பனே

என்ற செய்யுளை நோக்குமிடத்து, வெண்காட்டுச் செட்டி மாமிச பக்ஷணம் செய்யும் குலத்திலேயே பிறந்திருத்தல் வேண்டுமென்பது உறுதியாகப் புலப்படுகின்றதென யாம் கருதுகின்றோம். அஃதெவ்வாறாயினு மாகுக.

சிவநேசச் செட்டியின் குமாரர் அடுத்திருக்கும் திருவெண்காட்டுக் கடவுளின் பெயரால், வெண்காடரென்றழைக்கப்பட்டார். வெண்காடச் செட்டி பிறந்த நாள் முதல் தந்தைக்குச் செல்வம் மேன்மேலும் பொங்கத் தொடங்கி விட்டது. சிவநேசச் செட்டியின் வீட்டில் குபேரன் வந்து அவதரித்திருக்கிறானென ஊரார் சொல்லிக் கொள்ளத் தொடங்கினர்.

வெண்காடச் செட்டி தந்தைக்கு வயது காலத்துக் குழந்தையாதலாலும் ஒரே மகனாதலாலும் மிகவும் அருமையாக வளர்க்கப்பட்டான். அருமை வளர்ப்பென்றால் சொல்லவேண்டுவதில்லை. வெண்காடன் விரும்பியதற்கு மாறே கிடையாதென்றாகி விட்டது.

தந்தை மரணம்

இங்ஙனமிருக்க, வெண்காடனுக்கு ஐந்து பிராயமாகுமுன்னமே தந்தையு மிறந்து போய்விட்டான். வேறென்ன வேண்டும்? வெண்காடனுக்கு அருமை ஏறத் தொடங்கிவிட்டது. அவன் இட்டதுதான் சட்டம். அவனை முகஸ்துதி செய்வதற்கு எத்தனையோ வேலையாட்களும் தாதிகளு மிருந்தனர். அவனுடனொரே வயதாகிய குழந்தைகளெல்லாம் அவனுக்குக் கீழ்ப்பட்ட மிருகங்கள் போல நடந்து கொண்டதை விரித்துக் கூறியென்ன பயன்? வெண்காட்டுப்பிள்ளை ஓர் ஜமீன்தார் குழந்தை போல

வளர்ந்தான். ஆயினுமென்ன? சேற்றிலே தாமரையுதிக்கவில்லையா? சேற்றின் கெட்ட நாற்றத்தினால் தாமரைக் கமழ் குறைந்தா போகின்றது? அதுபோலச் சூழல்கள் எத்தனை இழிவுடையனவாயிருப்பினும், அதனால் வெண்காடனுக்கு இயற்கையில் வாய்ந்திருந்த ஒளி சிறிதேனும் குன்றிலது.

இளமையிலே இவனுக்குக் கவிதைக்காதல் பிறந்துவிட்டது. இவனுக்கு, அக்காலத்துமுறைமைப்படி கல்வியளிக்கப்பட்டதில் செய்யுட்களினழகில் தீரா மோகமுண்டாயிற்று. செல்வத்துச் செருக்கியிருந்த காவிரிப்பூம் பட்டினத்தில் கவிஞர்களும் பலரிருந்தனர். அவர்களின் பழக்கம் வெண்காடனுக்கு மிகுதியாய் விட்டது. இங்ஙனம், சிலநாட் செல்ல இளமைப்பருவந் தோன்றிவிட்டது.

சகோதரர்களே, வெண்காடனது இளமைக் காலந்தொட்டு, ஞானியாக வெளியேறிச் சென்ற காலம் வரை இடைப்பட்ட நாட்கள் பெரிதும் புகழத் தக்கவாறு கழிக்கப்படவில்லை. இதனை, எத்துணைச் சுருக்கமுடியுமோ அத்துணைச் சுருக்க வேண்டிய முயற்சி செய்திருக்கின்றேன்.

இங்கிலாந்தில் பைரன் என்ற கவிஞர் கோமான், செல்வர் மரபிற் பிறந்து, இளம்பிராயத்தே தந்தையை இழந்து செய்யுட் காதலுடையவனாகித் திரிந்தனன். அவனது இளமை நாட்கள் எவ்வாறு செலவிடப்பட்டன? ஆனால், பைரனுக்கும், வெண்காடனுக்கும் ஓர் வேற்றுமையுளது. அவன் செல்வர் குடும்பத்துத் தோன்றினன்.

நமது வெண்காட்டுப் புலவர் பெருமானது உண்மைநிலையுணராது அவர்மாட்டுப் பொய்ப்பக்தி செலுத்துவோர் சிலர் அவர் இளமையிற் காமதுரராக வாழ்ந்தாரென்பதை மறுத்துப்பேசுவர்.

1. நற்றோகையரைப் பன்ன...........
இப்பாவி நெஞ்சற்கு ........... வைத்தாய்?

2. முட்டற்ற............... முகமினுக்கி
மெட்டிட்டு.......... விளக்கியிட்டு
பட்டப்பகலில்........ பாவையர்மீ
திட்டத்தை நீ............ யேகம்பனே.

இவற்றுள்ள "முட்டற்ற" என்னும் செய்யுளில் தமக்கு வேசையர் மீதிருந்த மையலை நன்கு விளக்கியிருக்கின்றார்.

இதற்கு மேலும் அவர் இக்கவிகள் தமது சொந்த நடையைக் கருதித் தானோ கூறினாரென்று ஐயுறுவோர் பின்வரும் செய்யுள் கண்டு தெளிக.

அழலுக்குள் வெண்ணெ யெனவே யுரு
கிப் பொன்னம்பலத்தார்
நிழலுக்கு ணின்று தவ முஞற்றாமனிட்
டூரமின்னார்
குழலுக் கிசைந்த வகை மாலை கொண்டு
குற்றேவல் செய்து
விழலுக்கு முத்துலை யிட்டிறைத்தே
னென் விதிவசமே

இம்மட்டா?

"சற்றாகிலுந் தன்னைத் தானறியாய்" என்று தொடங்கிய செய்யுளொன்று "பரத்தையர்பாலிற் சென்றனென் பெற்றாய் மடநெஞ்சே யுன்போலில்லை பித்தனுமே" என முடிந்திருக்கின்றது.

இனி, "பெண்ணாகி வந்து", "சீறும் வினையது", "நாறுங் குருதி" என்ற தொடக்கங்களையுடைய பாக்களில் தம்மைத்தாமே சினமிகுதியாற் கண்டனை செய்துகொள்ளும் வெறுத்தற்குரிய செய்யுட்களை நுமக்கெடுத்துக் கூற, எமது நாக்கூசுகின்றது.

இவையெல்லாமிருக்க, அவர் இளமைப்பிராயத்தில் ஏகபத்னி விரதராக இல்லறம் பிறழாது நடத்தினரென்று மூடபக்தியாற் கூறுவோர், "பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே" யன்றி வேறாகார்.

அன்றியும் இளமையில் வரம்பின் மிஞ்சிய காமாதுரராக இருந்தமை தான் பட்டினத்தடிகள் பிற்காலத்து வரம்பு கடந்த துறவியாவதற்கு முக்கிய காரணமென்பதைப் பூர்வபக்ஷிகள் மறந்துவிடுகின்றனர்.

பட்டினத்துப்பிள்ளை துறவுக்குத் தலைமை காரணம் யாதோவெனில், உலகின்பங்கள் அளவுமிகுதியானும் ஒரே தன்மையுடையானும் அவர்க்குக் கைப்புண்டாகிவிட்டமையே.

தேவாமுதமுண்டு களித்திருக்கப் பிறந்தவனுக்குத் தினந்தினம் ஒரே மாதிரியான பாயசம் கொடுக்கப்படுமாயின், அவனுக்கு அப்பாயசம் விடமாகவன்றோ தோன்றும்?

ஞானவின்ப நுகர்ந்து களித்திருக்க வேண்டுமென்னும் இயற்கை யுடையவராகிய வெண்காட்டுச் செட்டியாருக்கு மாறி மாறி ஒரே தன்மை யுடையவனாகிச் சாதாரண மனிதர்களுக்குக் களிப்புத்தரும் உலக வின்பங்கள் வெறுப்பையே விளைத்தன. அக்காலத்திற் செல்வத்தாலும, பதவியாலும் நுகர்தற்குரிய வின்பங்களனைத்தும் அவர்க்குப் புதுமை யின்றிப் பழம்பொருள்களாய்விட்டன.

"உண்டதே யுண்டு முடுத்ததே யுடுத்து
மடுத்தடுத் துரைத்ததே யுரைத்தும்
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டுங்
கழிந்தன கடவு நாளெல்லாம்
விண்டதா மரைமேல ன்னம்வீற் றிருக்கும்
விழவறா வீதிவெண் காடா
அண்டர்நா யகனே யம்பலத் தாடு
மையனே யுய்யுமா றருளே"

என முறையிடுகிறார்.

தன்னை யாக்கியோன் அமைத்த தொழில்களையே மீட்டுமீட்டும் சோம்பரின்றிச் செய்து அதில் மனக் களைப்படையாதிருக்கும் இயந்திரமா வெண்காட்டுச் செட்டி? அன்றி அவ்வியந்திரங்கள் போலப் புதுமை நயவாது ஓர் முறைப்படியே சலிப்பின்றிச் சலிக்கும் மானிடரி லொருவரா வெண்காட்டுச் செட்டி? அவர் கவிஞர். அவர் ஞானியரல்லரோ? உலகச் சக்ரத்தைச் செப்பனிடும் பொருட்டு இடையிடையே சில புது உண்மைகள் கொண்டு அவதரிக்கும் குருமணிகளிலொருவரல்லரோ?

நிற்க. காமனம்பிற் கிலக்காகிப்பலவாறு பொருளை வாரியிறைத்துக் கொண்டிருந்த செட்டியாருக்குத் தாயின் வற்புறுத்தலின் பேரில் விவாகம் நடந்தது.

சிதம்பரச் செட்டியார் என்பவரின் மகள் அடிகளுக்கு மணஞ் செய்யப் பட்டனள். அம்மாதின் பெயர் சிவகலையென்ப.

மனைவியுடனிருந்து வெண்காடச் செட்டியார் நடாத்திய இல்வாழ்க்கை அவருக்குச் சிறிதேனும் மனச் சுகமளித்திலது. சிவகலைக்குப் பிள்ளைப் பேறும் வாய்க்கவில்லை. அன்றி, இவரது குடும்பவின்பத்திற்கு வேறுபல குறைகளும் நேர்ந்திருக்க வேண்டுமென ஊஹிக்க இடமிருக் கின்றது. இவரது காமாதுரநடைகளே பெரும்பாலும் இவ்வின்பத்திற்குக் கோடரியாக இருந்திருக்கும். காமாதுரனுக்கு இல்ல மாதர்மீது விளையும் ஐயங்களோ அளப்பிலவாகும். இதனைப் பெருகக் கூறுதல் எவ்விதப் பயனுமிலதாகும்.

நமது தேசத்தாருக்குள்ளே பிள்ளையில்லாக் குறை பெருங் குறையாக எந்நாளும் கருதப்பட்டு வந்ததாகலின் வெண்காடர் தமது செல்வத்திற்கும், சிறப்பிற்குமோர் சந்ததியில்லாது போயினமை பற்றிப் பெருந்துயர் கொண்டிருந்தார். நெடுநாளான பிறகு இவர்க்குத் திருவிடைமருதூர்ப் பார்ப்பானொருவன் ஓர் குழந்தை கொண்டுவந்து விலைக்குக் கொடுத்தான்.

இதனிடையே பட்டினத்தார் நெஞ்சத்தில் உலகவெறுப்புடன் ஒப்பற்ற தெய்வபக்தியும் உடன் வளர்வதாயிற்று.

சைவ சித்தாந்த சாஸ்திரங்களில் இவர் பழக்கம் மிகுதிப்பட்டு வளர்தலுற்றது. ஜன்மாந்தரத்துத் தீச்செயல்களின் தண்டனையே இவ்வுடலம். இவ்வுடற்சுகங்கள் இகத்திலேயே வெறுக்கத்தக்கனவும், கேவலமானவையுமாதலன்றிப் பரத்திலும் பெருந்துன்பந்தரக்கூடியன. இவையே மேன்மேலும் பிறப்புக்களுக்கு வித்துக்களாம். உலகத்துச் சுகம், துக்கம், நன்மை, தீமை, விருப்பு, வெறுப்பு என்ற அனைத்தையு மொருங்கே தொலைத்து கடவுளடிக்கே ஆளாகி இருந்தவனே பிறப்புத்துன்ப நீங்கப் பெறுவான் என்ற கொள்கைகள் இவர் மனதிலே வேருன்றி, பரிதியின் கிரணத்தினின்றும் ஒளி பிரிக்கப்படாதவாறுபோல இவர் மனத்திற்கு இயற்கையாய் விட்டன.[12]

முடிவுறாக் கதை

பாரதியாரின் வாழ்வு போலவே, அவர் எழுதி வந்த பட்டினத்தாரின் சரித்திரக் கட்டுரையும் முழுமைபெறாமலேயே முடிந்துபோயிற்று. இன்னும் வரும் என்று அடைப்புக்குறிக்குள் தந்து முடிந்துவிட்ட அச்சரித்திரம் முழுமையாகப் பிரசுரமாகவில்லை என்பது வருத்தம் தரும் செய்திதான்.

பத்திரிகைப்பணிகளோடு பாரதியார் முழுநேர அரசியல் பணியிலும் ஈடுபட்டிருந்த காரணத்தால் தனியே இலக்கியத்துக்கென நேரம் வகுத்துக் கொள்ளவில்லை. இன்னும் சொல்லப்போனால், அவர்தம் அரசியல் பெரு நோக்கிற்கு உதவும் ஒருவகையான கலைச்சாதனமாகவே அவர் இலக்கியத்தைக் கொண்டார் எனலாம். அதேசமயம் இலக்கியத்திற்கும், மொழிக்கும் உரிய மதிப்பை, அதன் இன்றியமையாத் தன்மையை அவர் கருத மறந்ததில்லை. மறுத்தவர்களையும் விட்டு வைக்கவில்லை.

அதனால்தான் அத்துணை பணிகளுக்கிடையிலும் அவர் கவிதைகள் எழுதிக்கொண்டிருந்தார். மேடைகளில் பாடிக்கொண்டிருந்தார். அச்சில் ஏறிய கவிதைகளைக் காட்டிலும், எச்சில் ஊறும் நாவுகளில் அவர் பதித்த கவிதைகள் அதிகம். தாளில் பதிந்த வரிகளை விடவும், மக்கள் நாவில் பதிந்து, செவிகளில் நின்றொலித்து, இதயங்களில் நிறைந்து குருதியில் கலந்து தமிழர்களின் வாழ்வில் முளைத்து எழுந்தது எனலாம். அதுகருதியே, ஆங்கில அரசு அவரைக் கைது செய்யப் பரபரத்தது. தமக்குப் பின்னும் ஒரு தமிழ்ப்பரம்பரையை, சவிக்குலத்தைத் தோற்றுவிக்க வேண்டு'ம் என்று கருதித்தான் பாரதியாரைப் புதுவைக்கு அனுப்பி வைத்ததுபோலும், காலம்.

புதுவையில் பூத்த இலக்கிய உரைகள்

புதுவையில் பத்தாண்டுக்காலம் கழித்த பாரதியார் ஆற்றிய பொழிவுகள் அதிகம். இன்னும் தேடப்பெறவேண்டிய அவற்றை, பாரதியாரின் அன்றாட நிகழ்வினைச் சொல்லும் ஒரு பாடலின்மூலம் பதிவு செய்கின்றார் பாரதிதாசன்.

"பொழுதுவிடியப்புதுவையிலோர் வீட்டில்
விழிமலர்ந்த பாரதியார் காலை வினைமுடித்து
மாடிக்குப் போவார்; கடிதங்கள் வந்திருக்கும்.
வாடிக்கை யாகவரும் அன்பரெல்லாம் வந்திருப்பார்;
சென்னைத்தினசரியின் சேதி சில பார்ப்பார்.
'முன்னாள் அனுப்பிய கட்டுரையும் பாட்டும்
சரியாய்ப் பதிப்பித்ததுண்டா இல்லையா' என்று
வரிமேல் விரல் வைத்து வாசிப்பார் ஏட்டை.
அதன்மேல் அடுக்கடுக்காய் ஆரவாரப் பணி.
நதிப்பெருக்கைப் போல் கவிதை நற்பெருக்கின் இன்பஒலி;
கிண்டல்கள்; ஓயாச் சிரிப்பினைக் கிளப்புகின்ற
துண்டு துணுக்குரைகள்; வீரச் சுடர்க்கதைகள்;
என்னென்ன பாட்டுக்கள்; என்னென்ன பேச்சுக்கள்;
பன்னத்தகுவதுண்டோ, நாங்கள் பெறும் பாக்கியத்தை?
வாய்திறப்பார் எங்கள் மாக்கவிஞர், நாங்களெல்லாம்
போய் அச்சப் பேயைப் புதைத்துத்திரும்பிடுவோம்!
தாம்பூலம் தின்பார்; தமிழ் ஒன்று சிந்திடுவார்!
காம்பின் கனிச்சாறாய்க் காதலின் சாற்றைப்
பொழிகின்ற தன்மையால் எம்மைப் புதுக்கி
அழிகின்ற நெஞ்சத்தை அன்பில் நனைத்திடுவார்!"[13]

இப்பாடல் பாரதியாரின் பணிகளையும், அதற்கிடையே அவர் பொழிந்த செந்தமிழ் உரைகளையும், அவர்தம் சீரிய இலக்கிய நோக்கினையும் நன்கு வெளிப்படுத்தி நிற்கின்றன எனலாம்.

காலச்சுழலில் ஓரிடத்தில் முடங்கிக்கிடக்க முடியாமல் எப்படியேனும் தமிழகம் புகுந்து தம்பணி தொடரவேண்டும் என்கின்ற ஆவலில் கடையம் நோக்கிக் கிளம்பிய பாரதியாரைக் கடலூர்ச்சிறை தம்வசம் அடைத்தது. அப்போதெல்லாம் அவர்மனம் தமக்குத்தாமே என்னவெல்லாம் பேசியதோ? கவியுளத்தோடு அதனைக் கற்பனை செய்து பாரதி கைதி எண் 253 எனும் தன்னுணர்ச்சிப் பாக்களைத் தந்திருக்கின்றார் கவிஞர் சிற்பி. கவியின் உணர்வைக் கவிஞரே உணர முடிந்ததின் அடையாளம் அது.

கடையவாழ்வில் பாரதியார் மேற்கொண்ட சொற்பொழிவு முயற்சிகள் தோல்வியைத் தந்தது. ஆனாலும், அதற்கெல்லாம் சளைக்காது, வெளியூர்களுக்குச் சென்று நண்பர்களைச் சந்தித்தும், உரைபல நிகழ்த்தியும் திரும்பிவந்திருக்கின்றார் பாரதியார்.

அப்படியான சூழலில், 1918இல், ஒரு திருமணத்திற்காகக் குடும்பத்தோடு திருவனந்தபுரம் சென்றிருக்கின்றார், பாரதியார். அங்கு நிகழ்ந்த சம்பவம் ஒன்று அவர்தம் சொற்பொழிவு வரலாற்றோடு தொடர்புடையது.

பாரதியாரின் இசைத்தமிழ்

ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை திருவனந்தபுர வீதியில், பாரதியார் போய்க் கொண்டிருந்தபோது, சைவப்பிரகாச சபை என்று தமிழில் ஓர் அறிவிப்புப்பலகையைக் கண்ணுற்று உள்ளே சென்று தன்னை இன்னார் என்று சொல்லிக்கொண்டார். அதனுள் இருந்த அன்பர்களுள் ஒருவரான, எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரதியார் குறித்து ஏற்கெனவே சோமசுந்தர பாரதி உள்ளிட்ட அன்பர்கள் வாயிலாகக் கேள்விப்பட்டிருந் தமையால் அவரை வரவேற்று உபசரித்தார். அத்தோடு. மற்றவர்களுக்கும் அறிமுகம் செய்து வைத்தார். பின்னர் 'சின்னஞ்சிறுகிளியே' என்னும் பாடலையும், 'ஊழிக்கூத்து' என்னும் பாடல்களைப் பாட வேண்டினார்.

அப்போது,"பாரதியார் கண்கள் ஒரு நிமிஷம் மூடுண்டன. முகத்திலே புதியதொரு பொலிவு. அன்பு ததும்பும் குரலில் பாடத்தொடங்கி எங்களைப் பரவசமாக்கினார். பின்னர், ஊழிக்கூத்துப் பாடலைப் பாடும்படி வேண்டினேன். இப்பொழுது நீண்ட நேரம் அவர் கண்கள் மூடியிருந்தன. முகத்திலே ஒரு துடிப்பு. சரீரம் முழுவதிலும் ஒரு வேகம். "வெடிபடும் அண்டத்திடிபலதாளம்போட" என்ற சொற்கள் கம்பீரத்தோடு வெளிவந்தன. ஒவ்வொரு சொல்லும், ஒவ்வோர் அடியும் ஆன்ம சக்தியினின்று பொருளும் ஆற்றலும் பெற்று, எங்கள் மனக்கண்முன் கூத்தாடின. உலகம் தகர்வது. ஊழி முடிவது. ஒன்றொன்றும் கண்முன் நிகழ்வதுபோலவே இருந்தது. பாட்டின் பொருளோடு ஒன்றுபட்டு அவர்பாடும்போது, அவர் கண்கள் சுழன்றன. கருவிழிகள் மேலேறி மறையத் தொடங்கின. "ஊழிக்கூத்தில் அகப்பட்டுவிட்டோம்" என்ற பீதி எங்களுக்கும் உண்டாயிற்று. இசையின் ஆற்றலை நான் அன்று உணர்ந்தது போல் ஒருநாளும் உணர்ந்ததில்லை என்று உணர்வு பொங்க, அவர் 1940ஆம் ஆண்டு லோகோபகாரி, பாரதி மலரில் எழுதுகிறார்.

மேலும் அவர் சொல்வது: "இதற்கப்புறம் பாரதியார் வெகுநேரம் தங்கவில்லை. தாம் ஒரு பிரசங்கம் செய்வதற்கு ஏற்பாடு செய்ய

வேண்டுமென்று எனக்குக் கூறினார். ஏற்பாடு செய்துகொண்டு அவருக்கு அறிவிப்பதாகச் சொன்னேன். ஸ்ரீ.கே.ஜி. சேஷையரவர்கள் வீட்டில் இருப்பதாகவும், மறுநாள் திருவனந்தபுரத்தை விட்டுப் புறப்படத் தீர்மானித் திருப்பதாகவும் தெரிவித்துச் சென்றார். பிரசங்கம் ஏற்பாடு செய்வதற்கு என நண்பர்களோடு கலந்தேன். அவர்களில் பெரும்பாலோனோர் உத்தியோகஸ்தர்களானபடியால் இணங்கவில்லை. பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்ய முடியவில்லை என்பதைப் பாரதியாருக்கு ஆள்மூலம் தெரிவித்து விட்டேன்."[14]

இதில் ஒரு திருத்தம்பெற வேண்டிய செய்தியாக, பி.ஸ்ரீ சொல்லும் தகவல் உள்ளது. அதனைக் காணலாம்.

### ஒரு விளக்கம்

மேற்சுட்டிய தகவலானது, பி.ஸ்ரீ. எழுதிய 'பாரதி நான் கண்டதும் கேட்டதும்' நூலில் சற்றே மாறுதலாக உள்ளது.

அதில்,"இதற்கப்புறம் வெகுநேரம் பாரதியார் தங்கவில்லை. அவர் ஒரு சொற்பொழிவு செய்வதற்கு இணங்கும்படி வேண்டினேன். ஏற்பாடு செய்தால் ஒத்துக் கொள்ளலாமென்று கூறினார். ஏற்பாடு செய்துகொண்டு அவருக்கு அறிவிப்பதாகச் சொன்னேன். ஸ்ரீ.கே.ஜி. சேஷையரவர்கள் வீட்டில் இருப்பதாகவும், மறுநாள் திருவனந்தபுரத்தை விட்டுப் புறப்படத் தீர்மானித்திருப்பதாகவும் தெரிவித்துச் சென்றார். பிரசங்கம் ஏற்பாடு செய்வதற்கு என நண்பர்களோடு கலந்தேன். அவர்களில் பெரும் பாலோனோர் உத்தியோகஸ்தர்களானபடியால் இணங்கவில்லை. பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்ய முடியவில்லை என்பதைப் பாரதியாருக்கு ஆள் மூலம் தெரிவித்துவிட்டேன்"[15] என்பதாகவுள்ளது. ஆக, பாரதியார் சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்யச்சொல்லவில்லை. வையாபுரிப் பிள்ளைதான் அவ்வேண்டுகோளைப் பாரதியாரிடத்து வைத்திருக்கிறார் என்பது இதன்மூலம் புலனாகின்றது.

மேலும், அவர் தம் நூலில் எழுதியுள்ள செய்திகள் கடையவாழ்வில் நெல்லையில் வந்து பாரதியார் ஆற்றிய உரைகளைச் சுட்டுவனவாக அமைந்துள்ளன. அவற்றினைப் பின்வரக்காணலாம்.

### கடைச்சங்கத்தில் பாரதியார்

முதற்சங்கம் முதலான முச்சங்கங்கள் வைத்துத் தமிழ்வளர்த்தது மதுரை என்றால், பாரதியாரின் உரைத்தமிழுக்கு இடமளித்தது நெல்லையில் உள்ள கடைச்சங்கம்தான். அதன் பெயர்க்காரணம் மற்றும் விளக்கத்தோடு இப்பகுதியைத் தொடங்கலாம்.

வேதநாயகம்பிள்ளை என்னும் இலக்கிய நேயர், நெல்லையைச் சார்ந்தவர். பாரதியாரின் கடைய வாழ்வில் அவருக்கு அறிமுகமான இனிய அன்பர். இவர் பிரதாபமுதலியார் சரித்திரம் எழுதிய வேதநாயகம் பிள்ளையல்லர். புதுச்சேரியில் பாரதியார் நடத்திய தராசுச்கடையில் கனக.சுப்புரத்தினம் கிடைத்ததுபோல், கடைய வாழ்விற்கிடையில் நடந்த நெல்லைக்கடைச்சங்கத்தில் கிடைத்த பாரதிதாசன் வேத நாயகம்பிள்ளை ஆவார். ஒரு புத்தகவியாபாரியின் கடையில் வேதநாயகம்பிள்ளையும், இலக்கிய நண்பர்களும் அடிக்கடி கூடிப்பேசுவார்கள். "அந்த இடத்தைத் தான் 'கடைச்சங்கம்' என்று நாங்கள் வேடிக்கையாகச் சொல்லிக் கொள்வோம். அந்தச் சங்கத்திற்குத் தலைவர் வேதநாயகம்பிள்ளைதாம்"[16] என்று குறிப்பிடுகின்றார் பி.ஸ்ரீ.

பாரதியார் முன்னிலையில் அரங்கேற்றம்

வேதநாயகம்பிள்ளையின், 'கடைச்சங்க'த்திற்குப் பாரதியார் வந்திருந்த சமயத்தில், சுந்தரர் மரபில் இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட சான்றோர்களை முன்வைத்துத்தாம் எழுதிய புதிய திருத்தொண்டத் தொகையை அரங்கேற்றம் செய்ய முனைந்தார். அப்போது, "இங்கே இசையறிவுள்ளவர்கள் யாராவது இருந்தால் பழைய திருத்தொண்டத் தொகையை முதன்முதலில் பாடிக் கேட்கலாமே!" என்றார் பாரதியார். உடனே, ஓர் அன்பர், காம்போதி ராகத்தில், 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று பாடத்தொடங்கினார். உடனே, பாரதியார் குழந்தைபோலக் குதூகலமடைந்து குறுக்கிட்டார்; 'என்ன புரட்சிகரமான கருத்து' என்றார்.[17]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் செய்த புரட்சி

உடனே, கடைச்சங்க அன்பர் ஒருவர், "எல்லாம் உங்களுக்குப் புரட்சியாகத்தான் தோன்றுகிறது" என்று சொல்லியிருக்கிறார்.

உடனே பாரதியார், "நான் சும்மா சொல்லுகிறேனா? தில்லைவாழ் அந்தணரையும் திருநீலகண்டத்துக் குயவனாரையும் ஒன்றாக இணைத்தது நானா, சுந்தரமூர்த்தி சுவாமிகளா? அதே சக்தியைத் தேசபக்தியாக்கிப் பொருளற்ற சாதிப் பிரிவுகளைப் போக்கி நாட்டை ஒன்றாக்கலாமா? என்று நான் கனவு காண்கிறேன், கவி பாடுகிறேன்" என்றார்.

உடனே, மதநம்பிக்கை இல்லாத வேதநாயகம்பிள்ளை, "உங்கள் பக்தி நாட்டின் பக்தி. ஆனால் பக்தி மதமெல்லாம் அப்படித்தான் என்று சொல்லமுடியுமா?" என்று கேட்டிருக்கிறார். அதற்குப்

பாரதியார், "சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகையிலே வரும் 63 நாயன்மார்களும் ஒரு சாதியா, ஒரு காலமா, ஒரு ஊரா, திசையா..." என்றெல்லாம் பிரசங்கம் செய்யத் தொடங்கிவிட்டார்"[18] என்று பி.ஸ்ரீ குறிப்பிடுகின்றார். ஓர் இலக்கியப் பொழிவாகப் பாரதியார் ஆற்றிய உரையின் சாரமே இதன் மூலம் கிடைக்கிறது, மூலப் பதிவு இல்லாதது இழப்பு என்றாலும், அவர்தம் கவிநோக்கும் தெளிந்த பார்வையும் இக்குறிப்பின்மூலம் இனிது புலப்படுகின்றது.

பாரதியார் நடத்திய இசைச்சொற்பொழிவு அல்லது ஓரங்கநாடகம்

முன்னர்ச்சுட்டிய வேதநாயகம்பிள்ளை தமது தபோவன(ம் என்ற பெயருடைய தமது இல்ல)த்தில் பாரதியாருக்கு விருந்து கொடுத்தார். அந்த விருந்து முடிந்த மாலையில் தாமிரவருணி ஆற்றங்கரைக்கு அந்நண்பர் குழாம் பாரதியார் தலைமையில் பெயர்ந்தது. ஒரு வசதியான இடத்திலே பாரதியார் அமர்ந்துகொண்டு பாடத்தொடங்கி விட்டார். 'விருந்தும் மறுவிருந்தும்' என்ற தலைப்பில் பாட்டு நடந்து கொண்டிருப்பதாகத் தெரிய வந்தது என்று குறிப்பிடும் பி.ஸ்ரீ. பாரதியாரின் பாஞ்சாலி சபத முற்பகுதியில் உள்ள காட்சி ஒன்றைத் தனிநடிப்புப் போலவும், இசைச்சொற்பொழிவு போலவும் பாரதியார் பாடி நடித்துக் காட்டிய பாங்கை ஒரு பார்வையாளன் கோணத்தில் கண்டு பின்வருமாறு பதிவு செய்கிறார்.

"எதனை உலகில் மறப்பினும் யான் இனி மாமனே - அவர்
யாகத்தை என்றும் மறந்திடல் என்பதொன்று ஏது காண்?"

என்று குலாவிக்கேட்கிறான் மருமகன் அருமை மாமனிடம். அந்த அநாவசியமான ஞாபக சக்தியை மேலும் தூண்டிவிடுவதுபோல் கேட்டுக் கொண்டிருக்கிறான் சகுனி.

"விருந்து செயலில் அளவற்ற பொன்செலவிட்டதும்"

என்று துரியோதனன் மறுபடியும் ஞாபகப்படுத்துகிறான் அந்த யாக வைபவத்தை.- 'என்ன விருந்து மாமா? அடடா என்ன செலவு!' என்று வியப்பது போல.

'தன் விழியற்ற தந்தைக்கு உன் மகன் அந்தச் செல்வம் பெறாவிட்டால் செத்துப்போவான்' என்று மாமா சொல்ல வேண்டு மென்றும் மருமகன் வேண்டிக் கொள்கிறான். 'அந்த விருந்தையும் வேள்வியையும் ஏன் இவனால் மறக்க முடியவில்லை' என்பதற்குக் காரணம் வெட்ட வெளிச்சமாகி விடுகிறது.

'விருந்தாளிகளில் முதலாவது இடமாவது நமக்குக் கிடைத்ததா?' என்று ஏங்கும் துரியோதனன், கண்ணனுக்கு அவர்கள் உபசாரம்

செய்ததன் உட்பொருளைத் தந்தை தெரிந்து கொள்ளவேண்டும் என்றும் விரும்புகிறான்.

"மஞ்சன நீர் தவ வேத வியாசன் பொழிந்ததும்- பல
வைதிகர் கூடி நன்மந்திர வாழ்த்து மொழிந்ததும்
வஞ்சகன் கண்ணன் புனிதம் உறும் கங்கைநீர் கொண்டு
மஞ்சனம் ஆட்டும் அப்போதில் எவரும் மகிழ்ந்ததும்"

என்று விருந்தினர்களின் மகிழ்ச்சியை முகூர்த்தப் பரபரப்புடனே 'ஒலி பரப்பி'யும் படம் பிடித்துக் காட்டுவதுபோலப் பேசிப் பெருமூச்சு விடுகிறான்.

அவ்வளவு மகிழ்ச்சியைத் தாங்க அவனால் முடியுமா?

"மூச்சை அடைத்த தடா! சபை தன்னில் விழுந்து நான் - அங்கு
மூர்ச்சை அடைந்தது கண்டனையே, என்தன் மாமனே!"

என்று பரிதவிக்கிறான். இந்தப் பகுதியைத் தமக்கே உரிய தோரணையில் பாடியும் நடித்தும் காட்டினார் பாரதியார்.

அந்த மகத்தான சந்தர்ப்பத்திலே துரியோதனச் சக்கரவர்த்தி அப்படி ஆட்டம் போட்டு விழுந்ததும், அங்கே இருந்தவர்களால் சிரிப்பை அடக்க முடியவில்லையாம். அந்த நகைப்பையும் ஏச்சையும் எண்ணிப் பார்க்கும்படி மாமனை வேண்டிக்கொள்ளும் மருமகன், 'அந்த ஏந்திழையாளும் என்னைப் பார்த்துச் சிரித்தாள் இதை எண்ணுவாய்!' என்கிறான்.

பாஞ்சாலி சிரித்தது சிரிப்பாகவா தோன்றுகிறது? நெருப்பாக வந்து விழுகிறது, பொறாமையில் காய்ந்த நெஞ்சிலே! எனவே,

"நகை செய்தார் தமை நாளை நகைப்போம்" என்கிறான் மகன் தந்தையிடம். 'சிரிப்புக்கு எதிர்ச்சிரிப்பு' என்ற அந்த நினைப்பிலேயே, 'பாஞ்சாலியின் துகில் உரிதல்' என்ற அந்த அடாபிடிச் செயலுக்கு விதை விழுந்துவிடுகிறது என்று சுட்டிக்காட்டினார் பாரதியார்.

திருதராட்டிரனிடம் சகுனி அந்த எதிர்ச் சிரிப்புத் திட்டத்தைக் குறிப்பாகவும், தந்திரமாகவும் வெளியிடப் பார்க்கிறான். அவனோ, 'மைத்துனியின் சிரிப்பை அவ்வளவு மிகுதிப்படுத்தி விரிவுரை விளக்கம் செய்ய வேண்டாம். தவறி விழுபவரைத் தாயும் சிரிப்பாள்!' என்று புத்தி சொல்லுகிறான். இந்தக் கட்டத்தைப் பாரதியார் சுவையாக எடுத்துக் காட்டினார்.

கடையாகக் கிழத்தந்தையின் அன்பு, அறிவைப் புதைத்து விடுகிறது. 'விதி, விதி, விதி மகனே!' என்று தலையிலடித்துக்

கொண்டே விதியின் தலையில் பாரத்தைப் போட்டு, மதியைப் பறிகொடுக்கத் தயாராகிவிடுகிறான் திருதராட்டிரன். 'இதனைத் தடுத்தல் அரிதோ?'- என்று விதுரன் மன்றாடிப் பார்த்தும் பயனில்லை. இத்தகைய திருதராட்டிரனாகப் பாரதியார் நடித்தபோது, 'வில்லி பாரதத்தில் நாம் காணமுடியாத ஒரு பாத்திரத்தை எவ்வளவு அழகாகப் படைத்துக் காட்டுகிறார் இந்தப் புதுமைக் கவிஞர்!' என்று நாங்கள் வியப்புற்றோம்.

தந்தைக்குக் கீழ்ப்படிவதே தன் கடமை என்று தருமன் தீர்மானித்ததும், வீமசேனன் முதலான தம்பிமார்கள் தடுக்கப் பார்க்கிறார்கள். அதற்கு விடையாகத் தருமன் விதியின் விசித்திரத்தை விளக்கப் பார்க்கிறான். 'எல்லாம் காரண காரிய முறைப்படி முன்பின் தொடர்ச்சியாகத்தான் வருகின்றன. இந்தச் சங்கிலித் தொடர்தான் விதி, இதில் வேறு விசித்திரம் இல்லை' என்கிறான்.

இத்தகைய விதிக்குக் கட்டுப்பட்டே தாங்கள் தருமமாகிய கடமையைச் செய்து தீரவேண்டியிருக்கிறது என்பதை வற்புறுத்துகிறான். ஆனால், தருமத்தையே குறியாகக் கொண்ட தருமபுத்திரன் சூதாடலாமா? அதுவும் விதிதானா? சூதாட்டத்திலே நாட்டை இழக்கலாமா? நாட்டு மக்களை இழந்து விடலாமா? இப்படியெல்லாம் புதுமை புதுமையாகப் பிரச்சினைகளை எழுப்பினார் புதுமைக்கவி.

கோயிற்பூசை செய்கிறவன் சாமியின் சிலையைக் கொண்டுவிற்கலாமா? வாயில் காத்துநிற்போன் அந்த வீட்டை வைத்துச் சூதாடலாமா? தருமன், சிறியர் செய்கை செய்தான் என்பது கவிதைக் கூற்று. இப்படிக் கூறியபின்,

நாட்டு மாந்தரெல்லாம் தம்போல்
நரர்கள் என்று கருதார்,
ஆட்டுமந்தை யாமென்று உலகை
அரசர் எண்ணி விட்டார்.

என்று பாடியதும், நாம் பழைய பாரதக் கதையைத்தான் கேட்கிறோமா? அல்லது புதிய பாரதத்தின் விடுதலைப் பிரச்சினையைத்தான் இங்கும் கிளப்பி விடுகிறாரா கவிஞர்? என்று எண்ணமிட்டோம்.

தருமன் தம்பிமாரையும் இழந்து தன்னையும் இழந்துவிடுகிறான். விதியின் பெயரால் திரௌபதியையும் வைத்து இழந்துவிடுகிறான். தருமத்தின் பெயராலும், தான் செய்த காரியம் சரி என்பதுபோலவே கருதிவிடுகிறான். ஆனால், இந்தத் தருமத்தை, இந்த விதியைப்

பாஞ்சாலி ஒப்புக்கொள்ள வில்லை. 'அப்படி என்னை இழக்க உரிமையில்லை' என்று அந்தப் பெண்ணரசு தன் பெண்மை வாயால் வாதாடி வழக்குரைத்துப் பார்க்கிறாள். இந்தக் கட்டத்திலே பெண்மை உள்ளத்தைக் கூடு விட்டுக் கூடுபாய்ந்து கண்டு கொண்டதுபோல் பாரதியார் பாடினார்.

பழைய, பழுத்த அறவுருவாகிய வீட்டுமரும் பாஞ்சாலியின் உரிமையை ஒப்புக் கொள்ளவில்லை. 'எல்லாம் விதிதான்! பதி தவறு செய்தாலும், சதி இணங்கிப்போவதே தருமம்' என்று அந்தப்பெருங்கிழவரும் கருதி ஒதுங்கி நிற்கிறார்.

இந்த வீட்டுமரின் நிலையையும், இவர் கொள்கையையும் மறுத்துப் பேசிய விகர்ணன் என்ற இளைஞனின் நெஞ்சுத் துணிவைப் பாரதியார் வெளியிடும் போதும், 'இன்றைய பாரதப்பிரச்சினை ஒன்றை அலசிப் பார்க்கிறாரோ?' என்றுதான் எங்களுக்குத் தோன்றியது.

பாரதியார் அன்று பாடியது உணர்ச்சியைமட்டும் வசீகரிக்க வில்லை. பகுத்தறிவையும் தூண்டிவிட்டது. விதியின் கதி உண்மையில் இது என்பதையும் உணர்த்தியது. திரௌபதி சிரித்தது தவறுதான். ஆனால், அந்தச் சிரிப்புக்கு இப்படியெல்லாம் எதிர்ச்சிரிப்பு வேண்டுமா தண்டனையாக? இதிலேதான் இருக்கிறது விதியின் விசித்திரம் என்னும் தத்துவத்தை அன்று பாட்டாலும் வசனத்தாலும் நன்கு விளக்கிக் காட்டினார்.

திரௌபதி சிரித்தபோது, விதியும் சிரித்தது! அவளொடும் சிரித்தது; அவளைப் பார்த்தும் சிரித்தது; துரியோதனனுடைய எதிர்ச்சிரிப்புத் திட்டம்கண்டதும், விதி அவனை நோக்கி ஒரு பெருஞ்சிரிப்புச் சிரித்தது. அந்தச் சிரிப்பே நெருப்பாகிப் பாஞ்சாலியையும் பாண்டவர்களையும் சோதித்துத் தங்கமாக்குகிறது. அதே நெருப்பு துரியோதனனைக் குலத்தோடு சுட்டெரித்துச் சாம்பலாக்கிவிடுகிறது. இந்த விதியின் விசித்திர கதியைத்தான் அன்று பாரதியார் பாடிக் காட்டிய பாஞ்சாலி சபதப் பகுதிகளில் கண்டோம்... அன்று பாரதியார் விருந்தும் மறுவிருந்தும் என்ற தலைப்பில் செய்த பாஞ்சாலி சபத காலட்சேபம் பழைய பாரத பாத்திரங்களிலே பாரதியார் எங்களுக்கு அளித்த ஒரு புது விருந்தாகவே தோன்றியது. நான் செய்த விருந்துக்கு மறுவிருந்து கிடைத்துவிட்டது என்று மகிழ்ந்தார் வேதநாயகம்பிள்ளை. ஆனால் பாரதியார் காலட்சேபத்திற்குக் கொடுத்திருந்த தலைப்பின் உட்பொருள் என்ன?

சிரிப்புக்கு எதிர்ச்சிரிப்பு என்றதுபோல், விருந்துக்கு மறுவிருந்து என்று தான் இவர் தலைப்பை அமைத்துக் கொண்டார். அன்று பாஞ்சாலி சபதம் பகுதிகளை அவர் பாடியபோது நன்றாகக்

கவனித்தவர்களுக்குத் தலைப்பும் ஒரு புதிராகத் தோன்றவில்லை. விருந்துச் செயலில் அளவற்ற பொன்... என்று ஏங்கிய துரியோதனனின் தூண்டுதலுக்கு இணங்கித் திருதராட்டிரன் கட்டளையிட, விதுரன் அத்தினாபுரத்திலிருந்து பாண்டவர்களுடைய இந்திரப் பிரத்தம்போய் அவர்களிடம், வந்து எங்கள் ஊரில் மறுவிருந்தாட வேண்டும் என்று அழைக்கிறான். மறுவிருந்தின் பெயரால் நடந்த சதிதான் சூதாட்டம் என்பதை நாம் அறிவோம்.

"கவிதையின் ஆற்றலையும், இசையின் சக்தியையும் புதுமைத் தமிழின் பேராற்றலையும் இன்று துய்த்ததுபோல் நாங்கள் இதற்குமுன் அனுபவித்ததே இல்லை!" என்று விருந்தினர் சிலர் பேசிக்கொண்டார்கள்... முதன்முதல் நான் பாரதியார் வாயிலாகக் கேட்ட பாஞ்சாலி சபதப் பகுதியே, விருந்தும் மறுவிருந்தும் என்ற தலைப்பில் நடந்த பாடல் விருந்தைக் காட்டிலும் வசீகரமாக இருந்தது. அன்று அவலம் நிரம்பிய குரலில் இதயமே உருகி வருவதுபோல் வந்தது பாட்டு; அவலம் ஆவேசமாக மாறியது; கோபாவேசமாக மாறியது. காலத்திரையைக் கிழித்து அந்தத் துகில் உரிதல் காட்சியையும், பாஞ்சாலியின் வெற்றியையும் காட்டியது பாரதியாரின் இசைக்குரல்.

"வந்தவர் போனவர் கண்களுக்கும் - அந்த
வள்ளல் முகம் விருந்தானதம்மா!"

என்று கவிமணி புத்தரை வருணித்திருக்கிறாரல்லவா? அப்படித் தோன்றியது எனக்கு. முதன்முதல் பாரதியார் முகத்தை அக்கவிதை வெறியோடு பார்த்தபோதே.

அத்தகைய உணர்ச்சியை ஓரளவுதான் விருந்தும் மறுவிருந்தும் என்ற காலட்சேபத்தில் என்னால் பெறமுடிந்தது. இந்தக் காலட்சேபம் பெரும்பாலும் அறிவுக்கு விருந்துதான்!"[19] என்று முடிக்கின்றார்.

புதுச்சேரியில் பாரதியார் வாழ்ந்திருந்த காலத்தில் உடனுறைந்த வ.வே.சு.ஐயர், பாரதியார் குரலில் கண்ணன்பாட்டைப் பாடக்கேட்டவர். அந்நூலுக்கு முன்னுரை எழுதும்போது, அதன்பின்புலத்தோடு எழுதுகின்றார்: "கடற்கரையில் சாந்திமயமான சாயங்கால வேளையில் உலகனைத்தையும் மோஹவயப்படுத்தி நீலக்கடலையும் பாற்கடலாக்கும் நிலவொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனா கர்வத்தோடும், சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்"[20] அதனை மெய்ம்மையென்று உணர்த்தும் வண்ணம் பாரதியார் பாடக்கேட்ட உள்ளங்கள் பதிவுசெய்தவை அமைகின்றன.

வேண்டுவோர் விருப்பத்திற்கு இணங்க, நேயர் விருப்பமாகப் பாடிக் காட்டியதோடு தன்விருப்பமாகவும் பாரதியார் பல பாடல்கள் பாடியிருக்கின்றார். அப்படியான பதிவுகளைத் தனியே தொகுப்பின் அப்பாடல்கள் பிறந்த சூழல், சிறந்த சூழல் அனைத்தும் இனிதுபுலப்படும். மேல்தொடர விரும்பும் பாரதி ஆய்வாளர்களுக்கு இப்படிப் பல ஆய்வுப்புதையல்களை ஆச்சரியப்படும்படி அளித்துக் கொண்டே இருப்பதில் பாரதியார் ஒரு வற்றாச்சுரங்கம். எனினும், அவர் - ஆய்ந்து உரை நல்குவதற்கோ, பாடி, இலக்கிய நயம்பாராட்டித் தமக்குச் சிலை வைத்து, பூமாலையும், பாமாலையும், புகழ்மாலையும் அணிவித்துக் கொண்டாட வேண்டும் என்றோ விரும்பியவர் அல்லர்.

அரசியலும், இலக்கியமும் சமுதாயத்தைச் சீர்திருத்தி மானுட வாழ்வை உய்விக்கும் பணியைச் செய்ய வேண்டும் என்ற ஆன்மிக விருப்புடையவர். அவர்தம் அனைத்துப்பாடல்களும், படைப்புகளும், பொழிவுகளும் அத்தகு சீர்திருத்தத்தையே வேண்டிநிற்கின்றன. தம்காலத்திலேயே சீர்திருத்த முடைய கிருதயுகத்தை நாட்டத் தவம் இருந்தவர் பாரதியார். அவர், பாட்டுத்திறத்தாலே இந்த வையத்தைப் பாலித்திட நினைத்தவர்.

அவ்வுணர்வு பாரதியாருக்கு, இடையில் தோன்றி நிலவிய கிளர்ச்சி யன்று. தொடக்கமுதலே இருந்து வளர்ந்து முற்றுப்பெறாமலேயே இன்னும் பல பணிகள் ஆற்றவேண்டிக் காத்திருப்பது. அதுவரையில் பாரதியாருக்கு மரணம் இல்லை என்பதை விட அவருக்கு ஓய்வில்லை. நிறைவில்லை என்றே சொல்லலாம். அதனால்தான் அவரை எடுத்துப் படிப்போரை யெல்லாம், அவர் குறித்துக் கேட்போரையெல்லாம் ஆட்கொண்டு அறப் பணிகள் தொடர்கின்றார்.

இனி அவர் முழங்கிய சீர்திருத்தச் சொற்பொழிவுகள் பற்றிக் காணலாம்.

<u>***சான்றெண் விளக்கம்***</u>

1. பாரதிதாசன் கவிதைகள், புதுநெறி காட்டிய புலவன், ப.206.
2. மேலது.
3. வ.ரா, மகாகவி பாரதியார், ப.8.
4. பாரதியார் கவிதைகள், எட்டயபுர மன்னருக்கு விண்ணப்பம், பா.அ31-44, ப.26.
5. மன்னர்மன்னன், பாட்டுப் பறவைகள், பக்.342-545.
6. ரா.அ. பத்மநாபன், (தொ.ஆ) பாரதியார் கடிதங்கள், ப.25.
7. மேலது, ப.63.

8. மேலது, ப.6
9. பாரதியார் கவிதைகள், போகின்ற பாரதமும் வருகின்ற பாரதமும், பா.எண்- 3, ப.112.
10. பாரதியார் கவிதைகள், பாப்பாப்பாட்டு, பா.எண்-7, ப.573.
11. சீனி.விசுவநாதன்,காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்,தொ-1, ப.777.
12. மேலது,பக்.769-776.
13. பாரதிதாசன் கவிதைகள்,தேன்கவிகள் தேவை, பா-1-3.
14. ரா.அ.பத்மநாபன், (தொ.ஆ),பாரதியைப்பற்றி நண்பர்கள், பக்.189-190.
15. பி.ஸ்ரீ., பாரதி நான் கண்டதும், கேட்டதும், ப.47.
16. மேலது,ப.7.
17. மேலது,ப.50.
18. மேலது, பக்.50-51.
19. மேலது, பக்.67-75.
20. பாரதியார் கவிதைகள், கண்ணன்பாட்டு முன்னுரை, ப.556.



## பாரதியாரின் சீர்திருத்தச் சொற்பொழிவுகள்

பாரதியுகம்

இது பாரதியார் யுகம். அவர் கனவான கிருதயுகம் உருவாகி நிலை கொள்ளும் வரை, இந்த யுகத்தை வேறு யாரும் சொந்தம் கொண்டாட முடியாது. ஏனெனில், தம் காலத்தில் இந்த யுகத்தைப் படைக்கப் பெரிதும் முனைந்தவர் பாரதியார். இதற்கு முன்னோடிகள் பலராவர். அவர்களை அப்படியப்படியே எடுத்துக்கொண்டு பாரதியார் இயங்கிடவில்லை.

" ........................ நன்மையும் அறிவும்
எத்திசைத் தெனினும் யாவரே காட்டினும்
மற்றவை தழுவி வாழ்வீ ராயின்
அச்சமொன்றில்லை ஆரிய நாட்டினில்..."[1]

என்று தொடக்கமும் முடிவும் கிடைக்கப்பெறாமல் இடைப்படக் கிடைக்கும் தமிழச்சாதி கவிதை வரிகள் உணர்த்தும் பாரதியார் பாதை இதுதான்.

முன்னர் நாடு திகழ்ந்த பெற்றியும், மூண்டிருக்கும் இந்நாள் இகழ்ச்சியும், பின்னர் நாடுறு பெற்றியும் கருதி அவர், தம் காலத்தில் ஆற்ற முனைந்த பணிகள் அளப்பரியன. ஆற்றி முடித்தன, அதிகம், அதிகம். சொல்லுக்கும் செயலுக்கும் இடையில் எந்தவொரு முரணுமில்லாது கருதியவண்ணமே கடைப்பிடித்து ஒழுகிய வாழ்வு, இவரது. அதனால்தான் அவரால் சீர்திருத்தம் குறித்துப் பேசமுடிந்தது; எழுத முடிந்தது; இயங்கமுடிந்தது.

வையம் தன்னை இகழ்வதையும், மாசுவந்து எய்துவதையும் குறித்துக் கவலைப்பட்டிருந்தால் கம்பர் காப்பியம் பாடியிருக்க முடியாது. திருவள்ளுவர் திருக்குறள் செய்திருக்கமுடியாது. இவையெல்லாம் வெறும்

புகழுக்காக எழுந்த நூல்கள் இல்லை என்று தொடக்கத்திலேயே தெளிந்து கொண்டவர் பாரதியார். உலகப் படைப்பாளிகள் வரிசையில் வைத்து எவரொடும் ஒப்பிட்டுப் பார்க்கமுடியாத உயரத்தில் சிறக்கும் இப் படைப்பாளிகள் பிறந்த நாட்டில் இவ்வளவு பிழைகள் மலிந்திருப்பது காணப்பொறாத கவியுள்ளம் பாரதியாரின் அன்புள்ளம். அந்த அறச் சினத்தால்தான் அவர் கவிதைகள் வெடிக்கின்றன; கண்ணீரோடு செந்நீரையும் வடிக்கின்றன; அத்தோடு நில்லாமல், விலகிவிடாமல் புரையோடிக்கிடக்கும் இப்பொல்லாத சமூகநோய்க்கு மருந்து தேடுகின்றன.

நோய்நாடி, நோய்முதல் நாடும் பாரதியாருக்கு முதலில் படுவது, கல்வியில்லாத் தன்மைதான். அதிலும் ஆண்கள் எப்படியோ கல்வி பெற்று விடுகின்றார்கள். இம் மானுடச்சாதியின் சரிபாதியான பெண்களோ அறிவற்ற ஜடங்களாக, பொறியற்ற விலங்குகளாக இருப்பது காணப் பொறாதவராக ஆகின்றார். ஆகவே, பெண்கல்வி என்பது பாரதியாரின் பெருங்கனவாக, உடனடிச் செயல் திட்டமாக மாற வேண்டிய பணியாகக் கருதப்படுகின்றது. இப்போக்கு, பாரதியாரின் இளமைப்பருவத்திலிருந்தே காணப் பெறுகின்றது. அதன் முழக்கம் கங்கைக்கரையிலும் கேட்டிருக்கின்றது. அவர் காசியில் இருந்த சமயம் நடந்த நிகழ்வொன்றில் அவர் முழங்கிய உரை பெண்கட்குக் கல்வி வேண்டும் என்பதாகும்.

அவரைப் பொறுத்தவரையில் சமுதாயச் சீர்திருத்தம் இல்லாமல் அரசியல் சீர்திருத்தம் சாத்தியப்படாது என்பது தீர்க்கமான முடிவு.

"சமுதாயச் சீர்திருத்தம் சாராத அரசியல் சீர்திருத்தம் என்பது வெறும் கனவும் கற்பனையுமே ஆகும். ஏனெனில், அரசியல் சுதந்திரம் என்ன என்பதைச் சமூகஅடிமைகள் உண்மையாகவே புரிந்துகொள்ள மாட்டார்கள். நம்முடைய சமுதாய சீர்திருத்த மகாநாடுகள் வெற்றி யடையாத வரைக்கும், நம் தேசிய காங்கிரஸ் என்பது வெறும் தூசியும் கண் கூச வைக்கும் பிரகாசம் மட்டுமே ஆகும்!" (காண்க - பின்னிணைப்பு-5) என்று இந்து ஆங்கில நாளிதழுக்குக் கடிதம் எழுதுகின்றார்.[2]

1904ஆம் ஆண்டின் இறுதியில் திரு. சி.சங்கரன் நாயர் என்பார் தமது சொற்பொழிவு ஒன்றிலே பிரிட்டிஷ் ஆட்சியைப்பற்றியும், இந்திய சாதி முறைகளைப்பற்றியும் குறிப்பிட்டுப்பேசினார். அதனை மறுத்து ஓர் அன்பர் எழுதிய மறுப்புரைக்குப் பாரதியார் எழுதிய மறுப்புரைக்கடிதத்தின் நிறைவுக்கருத்துத்தான் இது. இந்தக்கடிதத்தில் பாரதியார் முதன்முதலில் ஒரு சமூக சீர்திருத்த சங்கத்தின் உறுப்பினர் என்று கையெழுத் திட்டிருக்கின்றார். அச்சங்கம், 1887ல் சென்னையில்

காங்கிரஸ்வாதிகளால் தொடங்கப்பெற்ற National Social Reform Conference ஆக இருக்கலாம் என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார்.[3]

அதனால்தான் அவர்காலத்து அரசியலாளர்கள் தீவிர அரசியல் வியூகம் வகுத்து நிற்கும்போதெல்லாம் உடனின்ற பாரதியார் அதன் சமுதாய நோக்கையும் விடாமல் கவனத்தில் கொண்டிருந்தார். திலகர் உள்ளிட்ட தீவிர அரசியல் தலைவர்கள் கணேச பூஜை, சிவாஜிபூஜை நடத்தியபோது, 'மகாஅக்பருக்கும் விழா எடுக்க வேண்டும்' என்று பாரதியார் மொழிந்தார். இலக்கியத்தையும், இலக்கியவாதிகளையும் சமுதாய மாற்றத்திற்குத் துணை புரியும் செயல்வீரர்களாகவும், செயல்தளங்களாவும், அவர் கண்டார். அதனால்தான், 'திருவள்ளுவருக்கும், கம்பருக்கும் விழாக்கள் எடுக்க வேண்டும்' என்று சொன்னார். ஆண்களுக்கெனப் பத்திரிகைகள் நடத்தும் போது, பெண்களுக்கு என்று பத்திரிகை நடத்தவேண்டும் என்று நடத்தியும் காட்டியவர் பாரதியார். சீர்திருத்தமானது, நாட்டிற்கு வரவேண்டுமெனில் வீட்டிலிருந்தே தொடங்கவேண்டும் என்று கருதிய பாரதியார் அதனைத் தமது சொந்த வீட்டில் இருந்தே செயற்படுத்தியிருக்கின்றார். அவ்வகையில் அவர் ஆற்றிய சொற்பொழிவாற்றியதோடு, பிறரை - குறிப்பாகப் பெண்களைச் சொற்பொழிவாற்ற வைத்தும் இருக்கின்றார். அதற்கான களமாக அவரது இல்லமும் திகழ்ந்திருக்கின்றது.

சென்னையிலும், புதுவையிலும் சுவாமி விவேகானந்தர், திலகர் உள்ளிட்ட பெருமக்கள் பிறந்தநாட்களைக் கொண்டாடியதோடு, பெண்கள் சார்ந்த விழாக்களைப் பெண்களைக் கொண்டே நடத்தியும் இருக்கின்றார். அவைகுறித்து, தனித்தலைப்பின்கீழ் இந்நூலுள் காணலாம்.

### பாரதியார் வீட்டில் நடத்திய விழாக்கள்

'கவலை துறந்திங்கு வாழ்வது வீடு' என்பது பாரதியாரின் கவித்தொடர். அனைத்துத் துயர்களிலிருந்தும் விடுதலை தருகின்ற வசிப்பிடமாக இல்லம் அமைய வேண்டும். அறத்தால் பொருளீட்டி இன்பம் நுகர்தற்குரிய வீடுதான் அது. ஆக, விடுதலை என்பது வீட்டிலிருந்து தொடங்கவேண்டும், என்பது பாரதியார் நோக்கம்.

வீடுகளோ பெண்களின் அடிமைக்கூண்டுகள். பெண்டாட்டிதனை யடிமைப்படுத்தவேண்டிப் பெண்குலத்தை முழுதும் அடிமைப்படுத்தி அடைத்த கொட்டில். பல வீடுகளில் நாய்களுக்கும், மாடுகளுக்கும் கிடைக்கின்ற ஸுதந்திரம் கூட, வீட்டுப் பெண்களுக்குக் கிடைக்கிறதில்லை. அந்த ஆத்திரத்தில்தான்,

"நல்லவிலை கொண்டு நாயைவிற்பார் அந்த
நாயிடம் யோசனை கேட்பதுண்டோ?
கொல்லத்துணிவின்றி நம்மையும் அந்நிலை
கூட்டிவைத்தார் பழிகூட்டிவைத்தார்!"[4]

என்றும்,

"மாட்டையடித்துவசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டுவந்தே
வீட்டினில் எம்மிடம் காட்ட வந்தார் அதை
வெட்டிவிட்டோம்!"[5]

என்றும் பெண்களோடு தம்மைச் சேர்த்துக்கொண்டு பாரதியார் விடுதலைக்கும்மி கொட்டுகின்றார்.

'விடுதலைக்கு மகளிரெல்லாம் வேட்கைகொண்டனம்' என்ற சியூசிமின் என்னும் சீன தேசத்து மங்கையின் வீரப்பாடலை மொழி பெயர்த்துச் சகுந்தலாப்பாப்பாவைப் பாடவைக்கின்றார். விடுதலைக்குப் பெண்கள் ஆற்ற வேண்டியது யாது? என்னும் பொருளில் உரை எழுதித் தங்கம்மாள் பாரதியிடம் படிக்கக் கொடுக்கின்றார்.

வீட்டில் இருப்போர்க்கும், இறந்தோர்க்கும் வழக்கமாய்ச் செய்யும் பிறந்தநாள், நினைவுநாள் கொண்டாட்டங்களையும் திதிகளையும் தவிர்த்த பாரதியார் நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட திலரின் 50ஆவது பிறந்த நாளையும், நாட்டு விடுதலையோடு, ஆன்மவிடுதலைக்கும் பாடுபட்ட சுவாமிவிவேகானந்தர் பிறந்தநாளையும், தமது இல்லத்தில் நண்பர்கள் குடும்பங்களைக் கூட்டிக் கொண்டாடி மகிழ்கின்றார் பாரதியார். முன்னது சென்னையிலும், பின்னது புதுவையிலும் கொண்டாடியமைக்கான குறிப்புகள் அறியக்கிடைக்கின்றன.

பெண்கல்வி - காலக்கட்டாயம்

பாரதியார் காசியில் இருந்தபோது, அவரது மாமா சாம்பசிவனார் இல்லத்தில் பல சமயவிழாக்கள் கொண்டாடப்பெறுவது வழக்கம். அப்போது, பாரதியார், "ஒரு சமயம் சரஸ்வதி பூஜை அன்று தமிழில் ஓர் உபந்யாஸம் செய்ய விரும்பினார். வசிக்கும் வீட்டின் கூடத்தில் உபந்யாஸத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. தலைமை வகிக்கக் காசியிலேயே பிரபல வித்துவானாகிய ஸ்ரீசீதாராமசாஸ்திரிகள் இசைந்தார். 'பெண் கல்வி' என்பது பேச்சுக்கு விஷயமாகக் கொள்ளப்பட்டது. சுப்பையா (பாரதியார்) தமிழில் பிரசங்கம் நிகழ்த்தினார். பிரசங்கம் காரசாரமாக இருந்தது. 'ஸ்திரீகளுக்குக் கல்வி அவசியமானது' என்று அவர் வற்புறுத்திப் பேசினார். தலைவர் அவர்

அபிப்ராயத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. கண்டித்தும் பேசினார். சுப்பையாவுக்குக் கோபம் மிகுந்துவிட்டது. 'பெண்கள் கல்வி இன்றித் தேசம் முன்னுக்கு வரமுடியாது' என்று மேலும் அடித்துப் பேசினார். பெண்களின் சமத்துவத்தைப்பற்றி அடிக்கடி வற்புறுத்துவது அவர் வழக்கம். பெண்கள் கல்வி, சமத்துவம் இந்த இருவிஷயங்களைத் தவிர அப்போது வேறு எதிலும் அவர் அதிக கவனம் செலுத்தவில்லை"[6] என்கின்றார் பாரதியின் காசிவாச நண்பர், பண்டிட் எஸ். நாராயண அய்யங்கார். இவ்வாறு, பெண்கல்விக்குத் தடையாக இருப்பவர்கள் எத்தனை பெரிய பண்டிதர்களானாலும், அவர்களை ஒப்புக் கொள்ளாமல், நிராகரித்துவிடுகின்றார், பாரதியார்.

பாரதியார் வீட்டில் திலகர் பிறந்தநாள்விழா

பாலகங்காதர திலகரின் 50ஆவது பிறந்தநாளையொட்டி, அவர்தம் பிறந்தநாளைச் சென்னையில் உள்ள தம் இல்லத்தில் தேசபக்திக்குத் தலை வணங்கும் முறையிலும், மொழிவேற்றுமைகளைக் கடந்து நின்றும் கொண்டாடி மகிழ்ந்தார், பாரதியார்.[7]

"சென்னை லிங்கச் செட்டித்தெரு மிஸ்டர் சி.சுப்பிரமணிய பாரதியார் வீட்டில் மேற்படி திருநாள் அன்றைய தினம் ஓர் பொதுக்கூட்டம் கூடிற்று. தேசபக்தியிலே உற்சாகந்தரக்கூடிய அரிய பாடல்கள் பாடப்பெற்றன. ஸமஸ்கிருத பாஷையிலே ஓர் பண்டிதர் உபந்நியசித்தார். பாரத கண்டத்தின் வீரசக்தியாகிய ஸ்ரீபவானி தேவியின் பூஜை நடத்தப் பெற்றது. இங்கிலீஷிலும், தமிழிலும் ஸ்ரீ திலகர் விஷயமாகவும், தேசபக்தியின் சிறப்பைப் பற்றியும் பிரசங்கங்கள் செய்யப்பட்டன. வந்தேமாதர கர்ச்சனை மிகவும் ஆனந்தமளிக்கத் தக்கதாக இருந்தது"[8] என்று திலகர் ஜன்மதினத்தைப் பாரதி கொண்டாடிய முறை பற்றி இந்தியா பத்திரிகையிலே செய்தி வந்துள்ளது. அதே இதழில் (14.7.1906) ஆறாம் பக்கத்தில் ஸ்ரீமத் பால கங்காதர திலகரின் 50ஆவது பிறந்தநாள் என்ற தலைப்பில் ஒரு கட்டுரையைப் பாரதியார் எழுதியிருக்கின்றார். அவ்விழாவில் நடைபெற்ற சொற்பொழிவில் பெரும்பாலும் பாரதியாரும் பங்கு வகித்திருக்கக்கூடும். அதனை 'மையமிட்டதாக இக்கட்டுரையும் எழுதப் பெற்றிருக்க வாய்ப்புண்டு.

அதற்கு இருநாட்களுக்கு முந்திய சுதேசமித்திரன் இதழில், (12.7.1906) 12ஆம் பக்கத்தில், இவ்விழாச் செய்தி பின்வருமாறு இடம்பெறுகின்றது.

"சென்னையில் திலகருடைய ஜன்மதின உற்சவம் நன்கு நடைபெற்றது. அனேக வயோதிகர்களும், சர்க்கார் பென்ஷனர்களும்,

பாடசாலை வாலிபர்களும் வந்திருந்தார்கள். ஸ்ரீவீர துர்க்கையின் பூஜை நடந்தால் தாம் வரமாட்டோம் என்பதாகச் சிலர் முதலில் ஆக்ஷேபித்தபோதிலும், பிறகு அவ்விதமான ஆராதனையின் உட்பொருளைத் தெரிந்து மிகவும் சந்தோஷத்துடன் வந்திருக்க உடன்பட்டார்கள். பைரன், ஷெல்லி என்ற ஆங்கிலக்கவிஞர்களின் தேசபக்திப் பாடல்கள் மிஸ்டர் ஹரிஹரய்யர் B.A என்பவரால் மிகவும் உருக்கத்துடன் படிக்கப்பட்டன. பங்கிம் சந்திரர் அருளிச்செய்திருக்கும் வந்தே மாதரம் என்ற பெங்காளி கானமும் பாடி, அதன்பிறகு பாதகண்டத்து வீர பராசக்தியின் ஆஹ்வானம் (Invocation to the Sprit of Indian Heroism) மிஸ்டர் C. சுப்பிரமணியபாரதியால் செய்யப்பெற்றது".[9]

இவ்விழாக் குறித்து, தமிழ் உலகம் என்னும் இதழ், "அப்போது, அவர் (பாரதியார்) லிங்கிச் செட்டித் தெருவில் குடியிருந்தார். வீட்டில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. தேசபக்தியிலே உற்சாகந்தரக்கூடிய அரிய பாடல்கள் பாடப்பெற்றன. ஸம்ஸ்க்ருத பாஷையிலே ஒரு பண்டிதர் உபந்நியாசித்தார். பாரத கண்டத்தின் வீர சக்தியாகிய ஸ்ரீபவானிதேவியின் பூஜை நடைபெற்றது. இங்கிலீஷிலும் தமிழிலும் திலகர் விஷயமாகவும், தேசபக்தியின் சிறப்பைப் பற்றியும் பிரசங்கங்கள் செய்யப்பட்டன. வந்தேமாதர கர்ஜனை மிகவும் ஆனந்தமளிப்பதாக இருந்தது"[10] என்று எழுதியிருக்கிறது.

பாரதியாரது புதுவை வீட்டின் பரிணாமங்கள்

அரசியல் அடைக்கலம் தேடிப் பாரதியார் புகுந்த இடம், புதுவை. பொதுமையும், புதுமையும் உடைய சிந்தனைகளையும் செயல்களையும் பாரதியாரிட மிருந்து புறப்பட வைத்த புண்ணிய பூமி.

'புதுவைநகர்தனிலே கீர்த்தி அடைக்கலஞ்சேர் ஈசுவரன் தர்மராஜா என்ற பெயர் வீதியிலே ஓர் சிறிய வீட்டில்' வசித்துவந்தார் பாரதியார். அந்தத் தெருவிலேயே பின்னர் வந்து சேர்ந்தவர் வ.வே.சு.ஐயர். இவ்வாறு கீர்த்தி உடையவர்கள் வந்து அடைக்கலம் சேர்ந்ததனால், 'கீர்த்தி அடைக்கலஞ் சேர் ஈசுவரன் தர்மராஜா வீதி' என்று கவிசூட்டினார்போலும், பாரதியார்.

"அப்போதெல்லாம் புதுவை ஈசுவரன் கோயில் வீதி, சுதேசிகளின் சகவாசத்திற்குப் பெயர்போனது. பாரதியார் வீடு, வ.வே.சு.ஐயர் வீடு, பொன்னுமுருகேசம்பிள்ளை வீடு, வாத்தியார் சுப்பிரமணிய ஐயர் வீடு, ஆறுமுகம் செட்டியார் வீடு, ராஜா நாராயணசாமி வீடு, நாகசாமி ஐயர் வீடு, அனைத்தும். மேற்சொன்ன வீட்டுக்காரர்களுடன் சேர்த்து

எண்ணப் பட்ட சிவக்கொழுந்து நாயகர், முத்தியாலுப்பேட்டை கிருஷ்ணசாமி செட்டியார், அரவிந்தகோஷ் வீட்டு ராமசாமி ஐயர் (வ.ரா) லோகநாத முதலியார், ஐயாப்பிள்ளை, குவளைக் கண்ணன், கோவிந்தராஜுலு நாயுடு, கொட்டடி (கரடிக்கூடம்) வாத்தியார் வேணுநாயக்கர் முதலியவர்கள் சதா இந்த வீதியில், பெரும்பாலும் பாரதியார் வீட்டில்தான் இருப்பார்கள். இவர்கள் எல்லாரும் பாரதியாரைச் சந்திக்காத நாள் பஞ்சாங்கத்தில் கிடையாது. கலவை சங்கர செட்டியார், அன்புடாக்டர், டாக்டர் நாராயண சாமி நாயுடு, டாக்டர் கோபால்சாமி நாயுடு ஆகிய பட்டம், பதவி, செல்வாக்குள்ளவர்கள்கூடி, பசியோடு பாரதியாரை நோக்கி வருவார்கள். பாரதியாரைக் கண்டு பேசிய பின்னரே அவர்கள் பசி தீரும்"[11] என்று பாரதிதாசன் எழுதுகின்றார்.

அந்தத் தெருவில், விளக்கெண்ணெய்ச்செட்டியார் என்று பாரதியாரால் செல்லமாக அழைக்கப்பெறும் சபாபதிச்செட்டியார் வீட்டில்தான் பாரதியார் வாடகைக்குக் குடியிருந்தார். அந்த வீடே பாரதியார் சொற்பொழிவாற்றும் நிரந்தர அரங்கமாயிருந்தது. அவ்வீடு பற்றியும், அவ்வீட்டுத்தலைவர் பற்றியும், பின்வருமாறு அறிமுகப்படுத்துகின்றார், வ.ரா. "விளக்கெண்ணெய்ச்செட்டியாரின் வீடு, சங்கப் பலகை; கானமந்திரம்; அபயவிடுதி; சுதந்திர உணர்ச்சிக் களஞ்சியம்; அன்னதான சத்திரம்; மோட்சசாதனவீடு; ஞானோபதேச அரங்கம்; இத்தனைக் காரியங்களும் அங்கே நடைபெற்றன என்று சொல்லுவது மிகையாகாது. இவைகள் நடைபெறும் காலங்களில், பாரதியார் எல்லாவற்றிற்கும் சாசுவதத் தலைவர்"[12] இந்த வீட்டில்தான் பாரதியார் விவேகானந்தர் பிறந்த நாள் விழாவை இனிது கொண்டாடியிருக்கின்றார்.

### பாரதியார் வீட்டில் விவேகானந்தரின் பிறந்தநாள்விழா

பாரதியார் தமதுகுருவின் குருவான சுவாமிவிவேகானந்தர்பால் தீவிர பக்தி கொண்டவர். அவரது பிறந்தநாளையும் பாரதியார் தொடர்ந்து கொண்டாடி வந்திருக்கின்றார். புதுச்சேரியிலும் அவ்விழாப் பணி தொடர்ந்திருக்கின்றது.

அவ்விழாவில், "(வ.வே.சு)ஐயர் காளிபூஜை செய்தார். அதில் பாரதியாரும் கலந்து கொண்டார். மாகாளி சக்தியால் வீறுபெற்றுத் தேச சேவை செய்ய இருவரும் கருதினர். பாரதியாரின் சக்திப் பாடல்கள் பெரும்பாலும் அந்த உபாசனைக்காகவே பாடப்பெற்றன. விவேகானந்தர் திருநாளன்று, விண்ணும் மண்ணும் தனியாளும் என்ற அற்புதப் பாடல் எழுந்தது"[13] என்று கவியோகி சுத்தானந்தபாரதியார் குறிப்பிடுகின்றார்.

தன்னளவோடும், தமது நண்பர்கள் வரையிலும் நிறுத்திக்கொள்ளாமல் தமது குழந்தைகளும் விவேகானந்தரின் வழியறிந்து வாழவேண்டும் என்று பாரதியார் விரும்பியிருக்கின்றார். "எனக்கு வயது ஏழு அல்லது எட்டு இருக்கும். எங்கள் வீட்டில் ஸ்வாமி விவேகானந்தரின் பிறந்தநாள் கொண்டாடுவது வழக்கம். முதன்முதலாக, அப்பா எனக்குப் பிரசங்கம் செய்யக் கற்றுக்கொடுக்கும்பொருட்டு, ஸ்வாமி விவேகானந்தருக்கு வணக்கமும், விவேகானந்தர் சரித்திரத்தின் சுருக்கமும் எழுதிக் கொடுத்துப் படிக்கும்படி செய்தார். ராமகிருஷ்ணரின் சரித்திரம், தேவி நிவேதிதாவின் சரிதை இவற்றைச் சிறிய கதைகள்போல எனக்குச் சொல்வார்"[14] என்று சகுந்தலாபாரதி நினைவுகூர்கிறார்.

தமது சொற்பொழிவுக்குக்கலைக்கு சுவாமி விவேகானந்தரை முன்னோடியாகக்கொண்ட பாரதியார் தம்மகளுக்கும் அவரை முன்னோடியாக வைக்கின்றார் என்பது மலிவான புரிதல். வரும் தலைமுறையினரில் ஆண்கள் விவேகானந்தரைப்போன்ற வீரமும், ஞானமும் நிரம்பியவர் களாகவும், பெண்கள் குருநிவேதிதாதேவிபோல் தீரமும் ஞானமும் தெளிவும் உடையவர்களாகவும் உருவாகவேண்டும் என்பதை ஏனைய குடும்பத்தார்க்குக் குழந்தைகள் மூலமாக நிகழ்த்திக் காட்டவே இவ்வாறு செய்திருக்கின்றார் என்பது சரியாக இருக்கும்.

முற்போக்கு முகாமான பாரதியார் இல்லம்

பொதுவாய், இல்லத்தவர்களின் பிறந்தநாளைக் கொண்டாடுவதும், இறந்தோர் நினைவாக, திதி, திவசம் கொடுப்பதும் பல குடும்பங்களில் வழக்கமாக இருக்கும். ஆனால், பாரதியார் பிராமணக்குடும்பத்தில் பிறந்திருந்தபோதும் இத்தகு சடங்குகளை மேற்கொண்டதில்லை. மாறாக, இதற்கு எதிரான பிரச்சாரங்களில் ஈடுபட்டிருக்கின்றார்.

ஆசாரத்தைக் கெடுத்துக்கொண்ட பிராமணராய்ப் பாரதியார் இருந்ததற்காக யதுகிரி அம்மாளிடம் சொல்லி, வருத்தப்பட்டுக் கொண்டிருந்த செல்லம்மாவிடம், "நீ தினம் ஔபாஸனம் செய்கிறாயா? அக்கினி ஹோத்திரம் செய்கிறாயா? எவ்வளவு அநாதைகளுக்குச் சோறு போடுகிறாய்? ஜபம், தவம் எல்லாம் கிரமமாக நடத்துகிறாயா? தேவதைகள் நேராக வந்து ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொள்கிறார்களா? ஆசாரம் பெயருக்கு? ஆசாரம் போய் நூறு வருஷம் ஆகிவிட்டது. வழக்கம் இருக்கிறது. இன்னும் இருபது வருஷத்தில் அதுவும் மாண்டுவிடும்" என்று கேள்விகள் கேட்கின்றார். மேலும் தொடர்ந்த விவாதத்தில், "நான் பிராமணனே இல்லை. பூணூல் இல்லை. சந்தியாவந்தனம் இல்லை. சிரார்த்தம் செய்வதில்லை. நான சூத்திரன். வீட்டு எஜமான் சூத்திரன்.

எஜமானி பிராமணத்தி! எங்காவது உண்டா? என்னைப்போல் நீ"[15] என்று தெளிவாகப் பதிலிறுத்து விடுகின்றார். இது அவர்தம் நடைமுறையின் வெளிப்பாடு. இவ்வாதம் பிறப்பதற்கும் பாரதியார் இல்லத்தில் ஒரு மாதர் சங்கம் உருவானதற்கும் காரணம் உண்டு. அதுபற்றிப் பாரதியார் மகள் சகுந்தலா எழுதுவதைக் காணலாம்.

பாரதியார் தொடங்கிய மாதர் சங்கம்

"பெண்கல்வி, பெண்கள் முன்னேற்றம், பெண்விடுதலை இவற்றில் தன் கருத்தை, என் தந்தை பல கட்டுரைகள், கவிதைகள் மூலம் வெளியிட்டுள்ளார். தேசபக்தி, தமிழ்வளர்ச்சி இவற்றையே தன் வாழ்க்கையின் இலட்சியமாகக் கருதி வேறெதிலும் மனத்தைச் செலுத்தாத என் தந்தைக்குத் தம்மகள் - காசியில் என் பெரிய தாயாரால் வளர்க்கப்பட்டிருந்த என் சகோதரி தங்கம்மாள் - புதுவைக்குத் தன் பன்னிரண்டாம்பிராயத்தில் திரும்ப வந்தவுடன் அவளுக்கு விவாகம் செய்விக்க பந்துக்கள் முயற்சி செய்யத் தொடங்கியதும், பால்ய விவாகத்தை வெறுத்துவந்த என் தந்தைக்கு, நம் நாட்டில் பெண்கள் நிலைமையும், அதை மாற்றியமைப்பதின் அவசியமும் தோன்றிற்று. எங்கள் வீட்டில் ஒரு சிறு மாதர் சங்கம் ஏற்படுத்தினோம். சுமார் முப்பது விடுதலையில் பேரவாக் கொண்டவர்கள். 'ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை' என்றெண்ணியிருந்த தங்கள் உறவினர் அனுமதியின்றி வருவதும் உண்டு. பெண்கள் விடுதலை பெற்ற மகிழ்ச்சிகள் என்ற பாடலை அவர்கள் பாடி மகிழும் காட்சி என்னால் என்றும் மறக்கவியலாது. அதுபோல, ஆண்மக்களும் பெண்கள் முன்னேற்றத்தில் ஊக்கம் செலுத்த வேண்டுமென அவர்களுக்கு உத்ஸாகமுண்டாக்க ஒரு பாடல் எழுதினார். "பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா" என்ற பாடல் அவர்களுக்காக எழுதப்பட்டது"[16]என்கின்றார் சகுந்தலா பாரதி.

பொதுவாய், அக்கம்பக்கத்துவீட்டுக்கதைகளையே பேசி வீண்வம்புகளை வளர்ப்பது பெண்களின் இயல்பாக இருந்த அக்காலத்தில் அவர்களது அறியாமையைப்போக்கி, அவர்களிடைய ஆரோக்கியமான விவாதங்களைக் கொண்டு செலுத்தியவர் பாரதியார். வெட்டிக்கதைகள் பலபேசிக் காலக் கொலைபுரியும் பெண்களுக்கு வீரக்கதைகள் பலவுரைத்து உலகநடப்புகளை உணர்த்துவதற்குத் தமது இல்லத்தையே விழாக்கூடமாகப் பாரதியார் வடிவமைத்திருக்கின்றார். பெண்கள் முன்னேற்றத்திற்குரிய கல்வி, ஒழுக்கம் முதலியவற்றை வலியுறுத்திய பாரதியார், அவர்கட்குக் கேடு செய்விக்கும் பால்யவிவாகம் முதலானவற்றிலிருந்து பெண்கள் விடுதலை பெறப் போராடுகின்றார். அதுகுறித்த விழிப்புணர்வை உண்டாக்குவதற்காகப் பல கூட்டங்களைத் தமது இல்லத்தில் கூட்டுகின்றார்.

அக்காலத்தில், "பாரதியின் வீடு மிகுந்த களையோடும், கலகலப்பாகவும் திகழ்ந்தது. வயதில் மூத்தவர்கள் மட்டும் பாரதி வீட்டில் காணப்பட்டனர் என்பதில்லை. சிறுமிகளும், சிறுவர்களும் அங்கே மொய்த்துக்கொள்ள ஆரம்பித்தார்கள். சில சமயங்களில் பெண்மணிகளின் கூட்டமும் பாரதியார் வீட்டில் காணப்படும். பாரதி இல்லத்தில் அவ்வப்போது சக்தி பூஜை நடைபெறும். 'பெண்விடுதலைக்குத் தமிழ்ப் பெண்கள் செய்யத் தக்கது யாது?' என்பது பற்றிய விவாதம் நடைபெறும். மஞ்சள் குங்குமப்பெண்கள் சம்பாஷணைகள் நடைபெறும். திருவிளக்குப் பூஜைகள் நடைபெறும். இம்மாதிரியான கூட்டங்களில் பாரதியின் குமாரி தங்கம்மாள், மண்டயம் சீனிவாசாச்சாரியாரின் புதல்வி கிரியம்மா(யதுகிரி), பாரதியின் இளைய குமாரி சகுந்தலா, வ.வெ.சு.ஐயரின் பத்தினி பாக்கிய லட்சுமி அம்மாள், மண்டயம் சீனிவாசாச்சாரியாரின் இன்னொரு புதல்வி ரங்கா ஆகியோர் கலந்துகொண்டு பேசுவார்கள். மங்களப்பாடல்களுடன் கூட்டங்களும் முடிவுபெறும். சிற்சில சமயங்களில் விடுதலைப்பாட்டுக்களும் பாடப் பெறும். இம்மாதிரியான பேச்சும் பாட்டுமாகப் பாரதியின் வீடு கோலாகலமாகக் காட்சி அளித்த ஆண்டு காளயுக்தி ஆண்டு - அதாவது, 1918 ஆம் ஆண்டு எனலாம்"[17]

இது பற்றிப் பாரதியாரின் வளர்ப்பு மகள் எனத்தக்க யதுகிரி அம்மாள் தமது 'பாரதிநினைவுகள்' நூலில் எழுதுகின்றார்.

"காளயுக்தி வருஷம் சித்திரை மாதம் ஒரு வெள்ளிக்கிழமைதினம் பாரதியார் தம் வீட்டில் ஒரு சின்னக்கூட்டம் ஏற்படுத்தினார். தெரிந்த சில பெண்களை வரும்படி ஆளிடம் சொல்லியனுப்பினார்.

முதலில் பாரதியார் 'வந்தே மாதரம்' பாடினார். பிறகு, 'பெண்கள் விடுதலைக்கும்மி'. பின்னர் எங்களிடம், "உங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லுங்கள்" என்றார். நான் 'முயற்சியின் பயன்' என்னும் சிறு உபந்நியாசம் செய்தேன். பாரதியார் இதைத் தமது வியாசத்துடன் சுதேசமித்திரனில் வெளியாக்கினார்.

அந்த நாட்களில் எங்கள் குடும்பங்களில் இங்கிலீஷ் பத்திரிகைகள் வருமே தவிரவும் தமிழ்ப்பத்திரிகைகள் வரவழைப்பதில்லை. ஜட்ஜ் வேலையில் இருந்த எங்கள் பந்துவான எம்.ஒ.பார்த்தசாரதி ஐயங்கார் வீட்டில்தான் 'சுதேசமித்திரன்' வரும். அவர்கள் வீட்டுப் பெண்கள் கட்டுரையைப் படித்துவிட்டு என் பாட்டியாரிடம் வந்து 'உலகம் முழுகிப் போய்விட்டது' என்று கூக்குரலிட்டார்களாம். திருவல்லிக் கேணியில் எங்கள் ஜனங்கள் எங்கே சேர்ந்தாலும் இதே பேச்சுத்தானாம்.

மறுவாரம் ஐயர் வீட்டில் திருவள்ளுவர் தினம் கொண்டாடப் பட்டது. ஏழைகளுக்கு அன்னம் போட்டார்கள். செல்லம்மா, பாக்கியலட்சுமி அம்மாள் இருவருமாகச் சமைத்து வேலையை நடத்தினார்கள். (வ.வே.சு.)ஐயர், திருவள்ளுவர் வாழ்க்கைக் கதையில் சிலசில பாகங்கள் சொன்னார். பாரதியார் வழக்கம்போல் சில பாடல்கள் பாடினார். நான் 'பெண்களின் முன்னேற்றம்' என்பது பற்றி உபந்நியாசம் செய்தேன். அதில் காந்தியடிகளின் சில வாக்கியங்களை யும் சத்தியாக்கிரக விஷயங்களையும் எடுத்துச் சொல்லிப் பெண்களின் முன்னேற்றத்திற்குப் பெண்களே தடை என்று சொல்லியிருந்தேன். இதனால் பெரிய பாட்டிமார்களுக்கு அளவில்லாத கோபம் வந்துவிட்டது.

இப்பொழுது பாரதியாரின் கட்டுரைத் தொகுதியில் இதுவும் வந்திருப்பதாக என் தகப்பனார் சொன்னார். இரண்டுமுறை என் உபந்நியாசங்கள் பத்திரிகையில் வெளியானதும் என் பாட்டியார், பெரிய அத்தை, 'இதுமாதிரி சீர்திருத்த உபந்நியாசம் செய்வதை நிறுத்திவிட வேணுமெ'ன்றும் 'அதனால் திருவல்லிக்கேணியில் தங்களால் தலைகாட்டமுடிவதில்லை' என்றும் கூறி, சீர்திருத்தப் பிரசங்கம் செய்ததைப் பெரிய குற்றமாகக் கருதி என் தகப்பனாரிடம் வாசித்து, முடிவில் அதை நிறுத்தியும் விட்டார்கள்.

மறுவாரம் பாரதியார் அழைத்தபோது, என் பாட்டியார், அத்தை எல்லோரும் வந்திருந்தார்கள். எனக்குப்பதில் அத்தையே உபந்நியாசம் செய்தார். அதில் 'பெண்களுக்கு இங்கிலீஷ் கூடாது' என்றும், 'வீட்டில் அடங்கி வேலை செய்து கொண்டிருப்பதே பெண்களுக்கு ஏற்றது' என்றும் சொன்னார். அதற்குப் பதிலாக பாரதியார் சில நீதி வாக்கியங்களைச் சொல்லி 'இதில் ஒரு தப்பிதமும் இல்லை' என்று சமாதானம் சொன்னார். ஆனால், அவர்கள் ஒப்பவில்லை. அத்துடன், அத்தை செய்த உபந்நியாசத்தைப் பத்திரிகையில் பிரசுரிக்கக்கூடாது என்றும் சொன்னார்கள்.

இருந்தபோதிலும், தமது கட்டுரையில் வேடிக்கையாகச் சிற்சில இடங்களில் அத்தையின் உபந்நியாசத்தை அவர் பெயர் குறிப்பிடாமல் கையாண்டிருக்கிறார் பாரதியார்"[18] என்கின்றார்.

இதில் பொதிந்துள்ள உண்மைகள் எளியதாகத் தோன்றினாலும், அக்காலத்தில் பாரதியார் எதிர்கொண்ட பெரும் போராட்டத்தை முன்னிறுத்துகின்றது. இனி அவர் சொன்னதுபோல் பாரதியார் பத்திரிகையில் பதிவு செய்துள்ள கட்டுரையைக் காணலாம்.

பாரதியார் பதிவில் யதுகிரி அம்மாளின் உரை

'பெண்கள் ஸம்பாஷணைக்கூட்டம்' என்ற தலைப்பில் 'காசி'

என்னும் புனைபெயரில் பாரதியார் எழுதிய கட்டுரை, அதனைப் பதிவுசெய்கின்றது. இதற்கு உள் தலைப்புகள் இடப்பெற்றுள்ளன. "காளயுக்தி சித்திரை 31ந் தேதி அதாவது 13 மே 1918 தேதியன்று புதுச்சேரியில் பாரதியார் வீட்டில் நடந்த திருவிளக்குப்பூஜையைப் பற்றி இக்கட்டுரை கூறுகிறது."[19] "புதுச்சேரியில் சில தினங்களுக்குமுன்பு நடந்த பெண்கள், 'மஞ்சள் குங்குமம் (ஸம்பாஷணை) கூட்ட'மொன்றில் நடந்த விஷயங்கள் பின்வருமாறு:- என்ற தொடக்கத்தோடு, 'ஆரம்பம்' என்ற உள்தலைப்பின்கீழ், "பார்வதி, லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலிய படங்களுக்குப் பூஜை முடிந்த பிறகு விடுதலைப பாட்டுகள் பாடப்பட்டன. பிறகு ஸ்ரீமான் ஸ்ரீநிவாசாச்சார்யார் புத்திரி ஸ்ரீமதி கிரியம்மா பின் வரும் உபந்யாஸம் செய்தார்" என்று 'காசி' தரும் யதுகிரியம்மாளின் உரை 'முயற்சியின் பயன்' என்ற தலைப்பில் இடம் பெறுகின்றது. இதனைத் தொடர்ந்து பாரதியாரின் குமாரி தங்கம்மாபாரதி, சியூசீன் என்ற சீனத்துப் பெண்ணின் கதையைச் சொல்கின்றார். இதுவும் பாரதியார் படைப்பாக, பாரதியார் கட்டுரைத் தொகுப்பில் இடம் பெறுகின்றது.[20]

முயற்சியின் பயன்

நமது தேசத்தில் தெய்வ பக்தி அதிகமென்பதை யாரும் மறுக்கமுடியாது. ஆனால் தெய்வத்தை நம்பிவிட்டு நாம் யாதொரு முயற்சியும் செய்யாமல் வெறுமே இருந்தால், தெய்வமும் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்கும். தெய்வத்தை நம்பி நாமும் முயலவேண்டும். எப்படியென்றால், ஒரு குழந்தை அழாமல் வெறுமே இருந்தால் நாம் அதன்மீது கண்ணைச் செலுத்தாமல் மற்ற வேலைகளில் கவனஞ் செலுத்துகிறோம். அழத் தொடங்கினால் ஆத்திரத்துடன் வேலையைவிட்டு அதை எந்த விதத்திலாயினும் ஸமாதானப்படுத்த முயலுகிறோம். அதுபோல நாம் ஒரு கார்யத்தில் ஊக்கம் வைத்து பிரயத்தினப்பட்டால் அந்த வேலைக்கு எப்படியாவது ஒரு முடிவைத் தெய்வம் காட்டும்.

இப்போது நாம் முயற்சி செய்யவேண்டிய விஷயம் பெண்விடுதலை. பல்லாயிரம் வருஷங்களாக, நாம் அடிமைப்பட்டு வருகிறோம். தெய்வம் தானாக நமக்கு விடுதலை கொடுத்ததா? இல்லை.

'உங்களுடைய வழி இதுதான்' என்று ஒரு சட்டம் ஏற்படுத்திவைத்தது.

இப்போது 'நாம் இப்படி இருக்கமாட்டோம்' என்றால், 'சரி. ஆனால் பாருங்கள். உங்களுக்காக இன்னொரு வழி உண்டாக்கி யிருக்கிறேன். அதன்படி நடவுங்கள்' என்று கூறி நம்மை ஊக்கப்படுத்துகிறது.

'நான் தூங்குகிறேன்' என்று தெய்வத்தினிடம் சொன்னால் தெய்வம் 'ஸுகமாகத் தூங்கு. உனக்கு மெத்தென்று படுக்கை போட்டுத் தருகிறேன்' என்று சொல்லி நம்மைத் தட்டித் தூங்கப்பண்ணுகிறது.

'மாட்டோம்! நாங்கள் எழுந்து உலக விஷயங்களைக் கவனிக்க வேண்டும். இதோ, இதோ எழுகிறோம்' என்றால், எழுந்திரு குழந்தாய், இதோ பார், உனக்கு இந்தப் பெரிய வழியை ஏற்படுத்தி இருக்கிறேன். அந்த வழியே போய் நீ நன்மை அடை என்கிறது.

ஆதலால் ஸகோதரிகளே, தெய்வத்தை நம்பி நாம் முன்னடையும் வழியை நாமே தேடவேண்டும்.முயற்சி திருவினையாக்கும் என்பது முன்னோர் உறுதி மொழி. நாம் எல்லோரும் சேர்ந்து முயற்சி செய்தல் அவசியம். தெய்வம் நன்மை செய்யும். நம்முள் ஏதேனும் வருத்தம் நேர்ந்தால், அதை நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்த இடத்தில் தாக்ஷிண்யமில்லாமற் சொல்லித் தீர்த்துக் கொள்ள வேண்டும். நாம் குழந்தைகள். நாம் அழுதால் லோகமாதா பராசக்தி உணவு கொடுப்பாள். நாம் அழுவதற்கு வழி முயற்சியினால் தெய்வத்தை இரங்குவித்தல். ஆதலால் முயற்சி செய்வோம். ஓம் வந்தே மாதரம்.

"அப்பால் ஸ்ரீமான் சி.சுப்பிரமணிய பாரதியின் குமாரியாகிய ஸ்ரீதங்கம்மா பின்வரும் பத்திரிகையைப் படித்தனர்" என்ற குறிப்போடு வருகிறது கதை.

சியூசீன் என்ற சீனத்து ஸ்திரீயின் கதை

"சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன்னே சீன தேசத்தில் செகியாங் மாகாணத்தில் ஷாங் ஸிங் என்ற பட்டணத்தில் ஒரு ராஜாங்க உத்தியோகஸ்தரின் மகளாக சியூசீன் என்ற நமது கதாநாயகி பிறந்தாள். இவளைக் குறித்துச் சென்ற வருஷம் ஆகஸ்டு மாசத்து ஏஷியா நெட்ரெவ்யூ (ஆசிய பரிசோதனை) என்ற பத்திரிகையில் லயோநெல்கிப்ஸ் என்ற ஆங்கிலேயர் எழுதியுள்ள கதையில் ஸாராம்சமான சில பகுதிகளை இந்தச் சபையின் முன்னே தெரிவிக்கிறேன்.

'ஆசியாவில் பெண்விடுதலைக்கொடியை நாட்டவேண்டுமென்று பாடுபட்டவர்களில் இவளும் ஒருத்தியாகையால் இவளுடைய கதை பெண் விடுதலையில் நாட்டம் செலுத்திவரும் உங்கள் அனைவர்க்கும் மிகவும் ரஸமாகத் தோன்றக்கூடும்.

'சியூசீன்' என்ற பெயரில் சீன் என்பதற்கு ஒளியுடைய ரத்நம் என்பது பொருள். சியூ என்ற உபநாமம் கார் பருவம் (மழை பெய்யுங் காலம்) என்ற பொருள் உடையது. பின்னிட்டு இவள் சிங் ஹஸியாங் என்ற பட்டப் பெயர் தரித்துக் கொண்டாள்; அதன் பொருள் ஆண் மக்களுடன் போர் செய்பவள் என்பது. இவளுக்கு சிநெந்-ஹெு -

யெஹ் என்றும் ஒரு பெயர் உண்டு. அதன் பொருள் யாதெனில், கண்ணாடி ஏரிக்கரைப் பெண் வக்கீல் என்பது. கண்ணாடி ஏரி அந்தப் பிரதேசத்தில் ஒரு ஏரிக்குப் பெயர்.

பதினெட்டாம் வயதில் இவள், லாங் என்ற பெயருள்ள ஒருவனை மணம் செய்து கொண்டு அவனுடன் சீனத்து ராஜதானியாகிய பெசிங் நகரத்தில் சென்று வாழ்ந்தாள். அங்கே இவளுக்கு ஒரு பெண் குழந்தையும் ஓராண் குழந்தையும் பிறந்தன. 900 ஆம் வருஷத்தில் பாக்ஸர் கலக நிமித்தமாக பெகிங் நகரத்தில் அன்னிய ராஜ்யப்படைகள் புகுந்து சீனத்துக்குச் செய்த பழிகளைக் கண்டு மனம் பொறுக்காமல், இவள், 'ஐயோ, மனுஷ்ய ஜன்மத்தில் பிறந்தும் நம்முடைய மனுஷ்ய சக்தியைக் காண்பிக்கும் பொருட்டாகக் கஷ்டங்களையும் விபத்துக்களையும் எதிர்த்து உடைக்கும் பாக்கியம் நமக்கில்லாமல் போய்விட்டதே! வீட்டுக் காரியங்களின் அற்பக் கவலைகளுக்கிரையாகி மடியவா நாம் பூமியில் பிறந்தோம்' என்று சொல்லிப் பெருமூச்செறிந்து வருத்தப்பட்டாள்.

சீன பாஷையில் தகுந்த பாண்டித்யத் வஹித்திருந்தது மட்டுமேயன்றி இவளிடம் கவிதாசக்தியும் சேர்ந்திருந்தது. சீன ஸம்ப்ரதாயங்களின்படி கணவனுடன் கூடி வாழும் வாழ்க்கை இவளுடைய இயற்கைக்குப் பொருந்தவில்லையாதலால், இவள் பாக்ஸர் கலகத்திற்குப் பின் இரண்டு மூன்று வருஷங்களுக்குள் தன் கணவனிடமிருந்து ஸமாதானமாகவே பிரிந்து வந்துவிட்டாள்.

இதனிடையே இவளுக்குப் பூர்வாஜிதமாகக் கிடைத்த பணம் முழுவதையும் ஒரு அயோக்கி வியாபாரியிடம் கொடுத்து அவன் மூலமாக வியாபாரச் சூதில் இழந்து போய்விட்டாள்.

பின்பு, ஜப்பானில் போய் ஐரோப்பிய நவீனக் கல்வி பயின்றால் இக்காலத்தில் அதிகப் பயன் பெருகி வாழலாம் என்ற எண்ண முடையவளாய்த் தன்னுடைய ஆபரணங்களை விற்றுப் பணம் சேகரித்துக் கொண்டு ஜப்பானுக்குப் புறப்பட ஆயத்தங்கள் செய்தாள். ஆனால், இவள் பெகிங் நகரத்திற்குப் புறப்படுமுன்னே அங்கு சீர்திருத்த கக்ஷியைச்சேர்ந்த ஒருவனை அதிகாரிகள் பிடித்து அடைத்து வைத்திருப்ப தாகவும், வக்கீல் நியமிக்கவும், வழக்கு நடத்தவும் பணமில்லாதபடியால் ஏனென்று கேட்பாரில்லாமல் அவன் சிறைக்களத்திற்கிடந்து வருவதாகவும் பணத்திற் பெரும்பகுதியை அவனுக்குக் கொடுத்தனுப்பி விட்டாள்.

மிஞ்சிய சிறு தொகையுடன் 1904ஆம் வருஷம் ஏப்ரல் மாஸத்தின் இறுதியில் ஜப்பானுக்குக் கப்பலேறினாள். ஜப்பான் ராஜதானியாகிய டோக்யோ நகரத்தில் தன்னுடைய சாமர்த்தியத்தால் விரைவில் கீர்த்தி

யடைந்துவிட்டாள். சீனத்து மாணாக்கரின் ஸபைகள் பலவற்றில் சேர்ந்து விளங்கினாள். மேலும் அப்போது சீனத்து அரசு செலுத்திய மஞ்சு ராஜ்ய வம்சத்தை ஒழித்துவிட வேண்டுமென்ற கருத்துடன் இவள் தானாகவே பல ராஜ்யப் புரட்சி ஸங்கங்கள் ஏற்படுத்தித் திறமையுடன் உழைத்து வந்தாள். சீனாவில் இப்போது நடைபெறும் குடியரசுக்கு வேர் நாட்டியவர்களில் இவளும் ஒருத்தி.

1905-ஆம் வருஷத்து வஸந்தகாலத்தில் இவள் தன் கல்வியின் பொருட்டுப் பின்னும் பணம் சேர்க்குமாறு சீனத்துக்கு வந்தாள். அப்போது சீனத்திலிருந்த பெரிய ராஜ்யப் புரட்சித் தலைவர்களுடன் இவள் ஸ்நேகம் ஏற்படுத்திக் கொண்டதுமன்றிக் குடியரசுக் கக்ஷியாரின் மூல ஸபையாகிய ‘குலாங்-பூ’(அற்புத உத்தாரண)ஸபையில் சேர்ந்தாள். பிறகு அவ்வருஷம் செப்டம்பர் மாஸத்தில் டோக்யோவுக்குத் திரும்பி அங்கு வாழ்ந்த ஸுனயத்-ஸேன் என்ற மஹா கீர்த்தி பெற்ற குடியரசுக் கக்ஷித் தலைவனுடன் பழக்கம் பெற்றாள்.

அப்பால் சீனத்திலுள்ள நான்ஜின் நகரத்தில் ஸ்ரீமதி ய்ஜுஹுஹ என்ற தனது தோழியும் தன்னைப்போல் கவிராணியுமான ஸ்திரீயுடன் சேர்ந்து ஒரு பெண் பள்ளிக்கூடத்து உபாத்திச்சியாக வேலை செய்தாள்.

அப்பால் நாடு முழுதிலும் கலாசாலைகள் ஸ்தாபனம் செய்தும், ரஹஸ்ய ராஜ்யப் புரட்சி ஸபையின் கிளைகள் ஏற்படுத்தியும், பத்திரிகைகள் நடத்தியும் தொழில் புரிந்தாள். இங்கிலீஷ் பாஷையிலும் இவள் தகுந்த தேர்ச்சி பெற்றிருந்ததாக லயோநெல் கிப்ஸ் சொல்லுகிறார்.

அப்பால் இவள் தன் ஜன்ம ஸ்தானமாகிய ஷாவ்ஸிங் நகரத்துக்கு மீண்டும் வந்து அங்கே ஒரு பாடசாலை நடத்தினாள். ஆனால், அது வெளிக்குப் பாடசாலையாகவும் உண்மையில் குடியரசுப் படைப்பயிற்சிக் கூடமாகவும் நடைபெற்றது. மாணாக்கரெல்லாம் படையாட்களாகப் பயிற்சி பெற்றனர்.’

இவளுடைய முடிவைக்குறித்து லயோநெல் கிப்ஸ் பின்வருமாறு எழுதுகிறார்.

‘ஒருநாள் பிற்பகல் இவளுடைய ஒற்றர் அஞ்சிவந்து மஞ்சுப் படைகள் ஷாவ்ஸிங் நகரத்தின்மீது தண்டெடுத்து வருவதாகக் கூறினார்கள். அவள் மறுபடி ஒற்றுப் பார்த்து வரும்படி சிலரை ஏவினாள். நகரத்தருகிலுள்ள நதியைத் தாண்டிக்கீழ்க்கரைக்கு மஞ்சுப்படை வந்துவிட்டதென இவ்வொற்றர் வந்து சொன்னார்கள். பிறகு மிக விரைவில் மஞ்சுப்படை நகரத்துக்குள்ளே புகுந்துவிட்டது.

மாணாக்கர்கள் அவஸரமாகக் கூட்டங்கூடி பரியாலோசனை நடத்தி இவளைத் தப்பியோடும்படி சொல்லினர். இவள் மறுமொழி கூறவில்லை. மஞ்சுப்படை கலாசாலையின் முன்னே வந்து நின்றது. எனினும் உடனே உள்ளே நுழைய அதற்குத் தைர்யம் ஏற்படவில்லை. மாணாக்கர்களில் பெரும்பாலோர் புழக்கடை வழியாக வெளியே குதித்தோடி விட்டனர். ஏழெட்டுப் பேர் மாத்திரம் ஆயுதங்கள் ஏந்திக்கொண்டு வாயிலில் நின்ற தளத்தின்மீது பாய்ந்தனர். எதிர்பார்க்காத இச்செய்கைகளைக் கண்ட மஞ்சுப்படை திகைத்து விட்டது. அப்போது நடந்தபோரில் மஞ்சுப்படையாளர் பலர் கொலையுண்டும் புண்பட்டும் வீழ்ந்தனர். மாணாக்கரிலும் இருவர் மாண்டனர். உள்ளே ஓரறையில் வீற்றிருந்த சியூசீனையும் அவளுடன் அறுவரையும் படை வந்து கைதியாக்கிற்று. மறுநாள் நியாயவாதியின் முன்னே சியூசீனைக் கொண்டு நிறுத்தி வாக்குமூலம் கேட்டபோது உடந்தையானவர்களைக் காட்டிக் கொடுக்கக்கூடாதென்ற கருத்தால் இவள் ஒரு சொல்லேனும் மொழியவில்லை.

சியூயூசி யூதெங்சவிஷா ஜென் என்ற கவிதை வாக்கியத்தை மாத்திரம் எழுதிக் காட்டினாள்.

இதன்பொருள்: "மாரி நாட் காற்றும் மாரி நாண்மழையும் மார் புண்ணாக வருத்துகின்றனவே" என்பது.

அப்பால் இவளுக்குக் கொலை என்பது தண்டனை விதிக்கப்பட்டது. ஜுலை 15ம் தேதியன்று ஸுர்யோதய வேளையில் இவள் ஷங் ஸிங் நகர மண்டபத்தருகே தூக்குண்டாள். அத்தருணத்தில் இளஞ்செந்நிற மேகமொன்று இவள் தலையின்மீதே வானத்தில் பறந்ததென்றும், குளிர்ந்த வாடை வீசிற்றென்றும் தூக்கிட்டோரும் பார்த்து நின்றோரும் துக்கத்தால் மெய் நடுங்கினரென்றும், ஆனால் சியூசீன் பரிபூரண சாந்தியுடன் தூக்குமரத்துக்குச் சென்றாளென்றும் லியோநெல் கிப்ஸ் சொல்லுகிறார்.

சியூசீன் என்ற சீனத்து ஸ்திரீ செய்த ப்ரஸங்கம்

சியூசீன் ஒரு பொதுக்கூட்டத்தில் செய்த உபந்யாஸமொன்றின் ஸாராம்சத்தை லயோநெல் கிப்ஸ் எழுதியிருக்கிறபடி இங்கு மொழி பெயர்த்துச் சொல்லுகிறேன். அதினின்றும் இவளுடைய உண்மையான குணத்தை அறிந்து கொள்ளுதல் சற்றே எளிதாகுமென்று நினைக்கிறேன். சியூசீன் சொல்லுகிறாள் -

"ஸஹோதரிகளே, பல்லாயிர வருஷங்களாக நாம் ஆண்மக்களின் கொடுமைக்குக் கீழ்ப்பட்டு வாழ்கிறோம். எந்தக் காலத்திலும் நமக்கு

ஓரணுவளவாயினும் ஸ்வதந்திரம் இருந்தது கிடையாது. மூன்றுவிதமான கீழ்ப்படிதலென்றும், நான்குவிதமான பெண்ணறங்களென்றும் சொல்லிப் பழைய சாஸ்திர விதிகள் நம்மை இறுகக் கட்டியதுமன்றி இந்தப் பந்தத்தை எதிர்த்து நாம் ஒரு வார்த்தைகூட உச்சரிக்கக்கூடாத வண்ணமாக நம்மை அடக்கிவிட்டன. ஸ்திரீகளாகிய நம்மைச் சிறு குழந்தைப் பிராய முதலாகவே பாதங்களைக் கட்டுதல் என்ற வழக்கத்தால் எண்ணுதற்கரிய துன்பங்களுக்காளாக்கி விட்டார்கள். இந்த முறையால் நமது பாதம் வற்றிச் சதையும், எலும்பும் குறுகிச் சிதைந்து போகின்றன. இதனால் நம்முடல் பலமிழந்து உழைப்பதற்குத் தகுதியற்றதாய் விடுகிறது. எல்லாக் காரியங்களிலும் நாம் ஆண் மக்களைச் சார்ந்து நிற்க நேரிட்டது. விவாகம் நடந்த பின்னர் நம்மைக் கணவர் அடிமைகளைப்போல நடத்துகிறார்கள். அவர்களுக்குத் துணிப்பெட்டி தைத்துக் கொடுக்கவும், சமையல் பண்ணவும், சோறுபோடவும், தேயிலைக் காய்ச்சிக் கொடுக்கவும், வாயில் தெளிக்கவும், குப்பை பெருக்கவும், அவர்களுக்கு ஸ்நானம் செய்து வைக்கவும், புணி செய்யவும் மாத்திரமே நம்முடைய சக்திகளெல்லாம் செலவாகின்றன. முக்கியமான கார்யம் எதிலும் நாம் சிறிதளவேனும் விருந்தாளி வந்தால் உடனே நாம் அந்தர்த்தானம் பண்ணி அறைக்குள்ளே போய்ப் பதுங்கிக் கொள்ள வேண்டும். எதைக்குறித்தும் நாம் ஆழ்ந்த விசாரணை செய்யக்கூடாது. ஏதேனும் வாதத்தில் நீண்ட மறுமொழி சொல்லப்போனால் ஸ்திரீகள் அற்ப மதியுடையவர்களென்றும் ஸ்திர புத்தி யில்லாதவர்களென்றும் சொல்லி நம்முடைய வாயை அடைத்து விடுகிறார்கள். இதற்கெல்லாம் காரணம் நம்முடைய தைர்யக் குறைவே யன்றி வேறில்லை. இந்தத் தைர்யக்குறைவுக்குரிய பல ஹேதுக்களில் நம்மைக் குழந்தைப்பிராயத்திலேயே பாதங்கட்டி விடுதல் ஒன்றாகும். 'மூன்றங்குலப் பொற்றாமரைகள்' என்றும், அவற்றின் 'மோஹனச் சிறு நடை' என்றும் வர்ணித்துப் பெண்குழந்தைகளின் அடிகளைக் கட்டிப் போடும் தீமையால் நாம் சக்தியிழந்து விட்டோம். இன்று எனது ரத்தம் கொதிப்புற்று நிற்கிறது. உங்களுடைய ரத்தத்தையும் கொதிக்கும்படி செய்ய விரும்புகிறேன். முதலாவது, இனிமேல் எல்லா ஸ்திரீகளும் சூர்ணம் தடவுவதையும் முகப்பூச்சுகள் பூசுவதையும் நிறுத்திவிட வேண்டும். மோஹப்படுத்தவேண்டுமென்று பூச்சுகள் பூசக்கூடாது. ஒவ்வொரு மனுஷ்ய ஜந்துவுக்கும் கடவுள் கொடுத்த முகமிருக்கிறது. பாதங்களைக் கட்டும் நீச வழக்கத்தை உடனே வேரோடு களைந்து எறிந்துவிடவேண்டும். ஐந்து கண்டங்களிலுமுள்ள உலகத்தில் சீனாவே அதிக நாகரீகமுடைய தேசமென்று நமக்குள்ளே பிதற்றிக் கொள்ளுகிறோம். பாதக்கட்டு மட்டுமேயன்றி, இன்னும்

பழைய கெட்ட வழக்கங்கள் எத்தனை உள்ளனவோ அத்தனையும் ஒழித்தெறிவோம். ஆண் மக்களுக்கு இனி அடிமைகளாக வாழ மாட்டோம். தைர்யத்துடன் எழுந்து நின்று தொழில் செய்து நம்முடைய ஸ்வதந்திரத்தை நிலைநிறுத்திக் கொள்ளுவோம்."

இக்கட்டுரை படிக்கப்பெற்றதன்பின்னால் பாரதியாரால் மொழி பெயர்க்கப்பெற்ற சியூசின் எழுதிய கவிதையைச் சகுந்தலாபாரதி பாடலாகப் பாடிக்காட்டுகின்றார். அப்பாடல், "அப்பால் மேற்படி கூட்டத்தில் ஸ்ரீ சகுந்தலா பின்வரும் பாட்டுப் பாடினாள். சீன பாஷையில் 'சியூசின்' என்ற ஸ்திரீ பாடிய பாட்டின் தமிழ் மொழி பெயர்ப்பு" என்ற குறிப்பின்கீழ் இடம்பெறுகின்றது.

**சீன பாஷையில் 'சியூசின்' என்ற ஸ்திரீ பாடிய பாட்டின் தமிழ் மொழிபெயர்ப்பு**

"விடுதலைக்கு மகளி ரெல்லோரும்
வேட்கை கொண்டனம்; வெல்லுமென்றே
திட மனத்தின் மதுக்கிண்ணமீது
சேர்ந்துநாம் பிரதிக்கினை செய்வோம்
உடையவள் சக்தியாண் பெண்ணிரண்டும்
ஒருநிகர் செய்துரிமை சமைத்தாள்,
இடையிலே பட்ட கீழ்நிலை கண்டீர்
இதற்கு நாமொருப் பட்டிருப்போமோ? (1)

திறமையா லிங்கு மேனிலை சேர்வோம்
தீய பண்டை யிகழ்ச்சிகள் தேய்ப்போம்
குறைவிலாது முழுநிகர் நம்மைக்
கொள்வ ராண்களெனி லவரோடும்
சிறுமை தீர நந்தாய்த் திருநாட்டைத்
திரும்ப வெல்வதிற் சேர்ந்திங் குழைப்போம்
அறவிழுந்தது பண்டை வழக்கம்
ஆணுக்குப் பெண் விலங்கெனு மஃதே (2)

விடியு நல்லொளி காணுதி நின்றே
மேவு நாகரீகம் புதிதொன்றே!
கொடியர் நம்மை யடிமைக ளென்றே,
கொண்டு தாமுதலென்றன ரென்றே!
அடியொடந்த வழக்கத்தைக் கொன்றே
அறிவுயாவும் பயிற்சியில் வென்றே

கடமை செய்வீர் நந்தேசத்து வீரக்
காரிகைக் கணத்தீர் துணிவுற்றே. (3)

அப்பால் சில பெண்கள் பேசினர். மங்களப் பாட்டுடன் மஞ்சள் குங்குமக் கூட்டம் முடிவுபெற்றது.[21]

## திருவிளக்கு

இதனையடுத்து இதேநாளில் பாரதியார் இல்லத்தில் திருவிளக்குப் பூஜை நிகழ்கின்றது. சம்பிரதாயத்திற்கு ஏழெட்டுப்பெண்கள் கூடி விளக்குப்பூஜை செய்து பாடல்கள் பாடுகின்றார்கள். பின்னர் பாரதியாரின் திட்டப்படி சொற்பொழிவு தொடங்குகின்றது. சொற்பொழிவாளர், வ.வே.சு.ஐயரின் மனைவி பாக்கியலட்சுமி யம்மாள். ஊக்கம் எனும் தலைப்பில் அவர் உரையாற்றியபின்னர், தங்கம்மாபாரதி 'பெண்விடுதலைக்குத் தமிழ்ப் பெண்கள் செய்யத்தக்கது யாது?' என்னும் தலைப்பில் உரையாற்றுகின்றார். மிகவும் உக்கிரம் மிகுந்த சொற்களோடு இவ்வுரை வெடிக்கின்றது. திருவிளக்கு என்னும் தலைப்பில், "நிகழும் காளயுக்தி வருஷம் சித்திரைமாதம் 31ம்தேதி திங்கட்கிழமையன்று மாலை புதுச்சேரியில் ஸ்ரீ சி. சுப்பிர மணிய பாரதி வீட்டில் திருவிளக்குப் பூஜை செய்யப்பட்டது. சுமார் ஏழெட்டு ஸ்திரீகள் கூடி விளக்குப்பூஜை முடித்துப் பாட்டுகள் பாடினர்.அப்பால் ஸ்ரீவ.வே. சுப்பிரமணிய ஐயரின் பத்தினியாகிய திருமதி பாக்கியலக்ஷ்மியம்மாள் பின்வரும் உபந்யாஸம் புரிந்தனர்" என்ற குறிப்போடு- ஊக்கம் எனும் தலைப்பில் அவ்வுரையைப் பாரதியார் தமது பத்திரிகைத் தமிழில் பதிவு செய்கின்றார்.

"பிறகு ஸ்ரீமான் மண்டயம் ஸ்ரீநிவாஸாசாரியார் குழந்தை ரங்கா பின்வரும் உபந்யாஸத்தைப் படித்தது" என்ற குறிப்புரையோடு ஸ்ரீரங்கப்பாப்பா அநாகரிக ஜாதியார் என்ற தலைப்பில் அவ்வுரையினைப் பாரதியார் தருகின்றார். அதுவும் பாரதியாரின் கைவண்ணம் என்று கருதத் தக்கதாக அமைகின்றது.

அதனைத் தொடர்ந்து, பெண்விடுதலைக்குத் தமிழ்ப்பெண்கள் செய்யத் தக்கது யாது? என்னும் தலைப்பில் தங்கம்மா பாரதி உரையாற்றி யிருக்கின்றார். இவ்வுரையில் பாரதியாரின் உக்கிரம் சொற்களாக வெடிக்கின்றன.[22]

### பாக்கிய லட்சுமியம்மாளின் உரை - ஊக்கம்

சகோதரிகளே,

பெண்விடுதலை முயற்சிக்கு இந்த ஊர் ஸ்திரீகள் தகுந்தபடி உதவி செய்யவில்லை யென்று நாம் மனவருத்தப்பட்டு நம்முடைய

நோக்கத்தைத் தளரவிடக் கூடாது. நாம் செய்யும் கார்யம் இந்த ஓரூர் ஸ்திரீகளுக்கு மாத்திரமே"ன்று. பூமண்டலத்து ஸ்திரீகளுக்காக நாம் பாடுபடுகிறோம்.

உலகமெங்கும் விடுதலையருவிநீர் காட்டாறு போலே ஓடி அலறிக்கொண்டு வரும் ஸமயத்தில் நீங்கள் நாவு வறண்டு ஏன் தவிக்கிறீர்கள்?

ஸகோதரிகளே, தயங்காதீர்கள். மலைக்காதீர்கள். திரும்பிப்பாராமல் நாம் செய்ய வேண்டிய எந்தக் கார்யத்தையும் நிறைவேற்றும் வரை - நம்முடைய லக்ஷ்யத்தை அடையும்வரை - முன்வைத்த காலைப் பின்வைக்காமல் நடந்துசெல்லுங்கள். பேடிகளாயிருந்தால் திரும்புங்கள்.

நாம் கொண்ட காரியமோ பெரிது. இதற்குப் பெரிய இடையூறுகள் நிச்சயமாக நேரிடும். ஆனால், நீங்கள் பயப்படக்கூடாது.

பயமே, பாபமாகும் என்று விவேகானந்தர் சொல்லியதை மறவாதீர்கள். நந்தனார் விடுதலைக்குப்பட்ட சிரமங்களை நினைத்துப் பாருங்கள்.

உங்களில் ஒவ்வொருவருடைய கொள்கைகளை இன்று வாய்விட்டு விஸ்தாரமாகச் சொல்லிவிடுங்கள். மனதிலுள்ள பயம், வெட்கம் என்ற பேய்களை தைர்ய வாளால் வெட்டி வீழ்த்திவிட்டு பாரத ஸகோதரிகள் பாரதமாதாவுக்குத் தெரிவிக்க வேண்டு மென்பதே என்னுடைய பிரார்த்தனை. ஓம் வந்தே மாதரம்.

### ஸ்ரீரங்கப் பாப்பா

பிறகு ஸ்ரீமான் மண்டயம் ஸ்ரீநிவாஸாசாரியார் குழந்தை ரங்கா பின்வரும் உபந்யாஸத்தைப் படித்தது-

### அநாகரீக ஜாதியார்

"இந்தியாவில் முன்பு ஆரியர் குடியேறுமுன்னே இருந்த பூர்வீக ஜனங்கள் கருநிறமாகவும் சப்பை மூக்காவும் இருந்தார்கள். நாகரீகமற்ற பேதை ஜனங்கள், அவர்களுடைய சந்ததியார் இப்போது சில குன்றுகளின் மீதும் சிலர் கனிகளிடையிலும் வஸிக்கின்றனர். இந்த வகுப்பைச் சேர்ந்த ஜூலாஸ் குலக் என்ற ஜாதி ஒன்று இப்போது ஒரிஸ்ஸா தேசத்தில் இருக்கிறது. துரைத்தனத்தார் அந்த ஜாதிக்கு இனாமாகத் துணி கொடுத்துக் கட்டிக்கொள்ளும்படி செய்து, துணி கட்டிக் கொள்வோருக்கு வெகுமதி கொடுத்துத் துணிகட்டும் நாகரீகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்படுத்திக் கொண்டு

வருகிறார்கள். இதுவரை அந்த ஜாதியார் இவைகளை உடைபோல் உடுப்பது வழக்கம். இந்த அநாகரீக ஜாதியிலுள்ள மனுஷ்யர்கூடப் பெண்களை மிருகங்கள் மாதிரியாகவே நடத்துகின்றனர். ஆதலால், நம்முடைய ஆண் மக்கள் நம்மைக் கீழாக நடத்துவது தங்களுடைய உயர்ந்த அறிவுக்கு லக்ஷணமென்று நினைத்தால் சரியில்லை. நம்மைக்காட்டிலும் ஆண் மக்கள் சரீர பலத்தில் அதிகம். அனால் நம்மை இஷ்டப்படி ஸஞ்சரிக்க வொட்டாமலும் பள்ளிக்கூடம் போய்ப் படிக்க வொட்டாமலும் தடுக்க முடிந்தது. இதனால் அவர்கள் நம்மைவிட மேலென்று நினைத்துக் கொள்ளுதல் தவறு."

## பெண்விடுதலைக்குத் தமிழ்ப் பெண்கள் செய்யத்தக்கது யாது?

(புதுச்சேரியில் ஸ்ரீசி.சுப்பிரமணிய பாரதியின் குமாரி ஸ்ரீதங்கம்மாவால் ஒரு பெண்கள் கூட்டத்தில் படிக்கப்பெற்றது)

"ஆறிலும்சாவு; நூறிலும் சாவு; ஆணுக்கு மட்டுமன்று, பெண்ணுக்கும் அப்படியே.

ஆதலால் உயிருள்ளவரை இன்பத்துடன் வாழ விரும்புதல் மனுஷ்ய ஜீவனுடைய கடமை. இன்பத்துக்கு முதல் அவசியம் விடுதலை. அடிமைக்கு இன்பம் கிடையாது. தென்ஆப்பிரிக்காவில் ஹிந்து தேசத்தார் படுங்கஷ்டங்களைக் குறித்து, 1896ம் வருஷத்தில் கல்கத்தாவில் கூடிய பன்னிரண்டாயிரம் ஜனசபைக் (காங்கிரஸ்) கூட்டத்தில் செய்யப்பட்ட தீர்மானமொன்றை ஆதரித்துப் பேசுகையில் வித்வான் ஸ்ரீ பரமேச்வரன் பிள்ளை பின்வருமாறு கூறினார்:-

"மிகவும் உழைப்பாளிகளாகிய ஹிந்து தேசத்தார் அந்த நாட்டில் பரம்பரை முறியடிகளாக வாழும்படி நேர்ந்திருக்கிறது. அங்கு நம்மவர் உத்திரவுச் சீட்டில்லாமல் யாத்திரை செய்யக்கூடாது. இரவு வேளையில் வெளியே சஞ்சரிக்கக் கூடாது. நகரங்களுக்கு நடுவே குடியிருக்கக்கூடாது. ஒதுக்கமாக நமக்கென்று கட்டப் பட்டிருக்கும் சேரிகளில் வசிக்கவேண்டும். ரயில் வண்டியில் மூன்றாவது வகுப்பிலே தான் ஏறலாம்; முதலிரண்டு வகுப்புகளில் ஏறக்கூடாது. நம்மை ட்ராம் வண்டியிலிருந்து துரத்துகிறார்கள். ஒற்றையடிப்பாதையினின்று கீழே தள்ளுகிறார்கள். ஹோட்டல்களில் நுழையக்கூடாதென்கிறார்கள். பொது ரஸ்தாக்களில் நடக்கக்கூடாதென்று தடுக்கிறார்கள். நம்மைக்கண்டால் காறி உமிழ்கிறார்கள். "ஹுஸ்" என்று சித்காரம் பண்ணுகிறார்கள். நம்மை வைகிறார்கள்; சபிக்கிறார்கள்; மனுஷ்ய ஜந்துக்களினால் சகிக்கக்கூடாத இன்னும் எத்தனையோ அவமானங்களுக்கு நம்மை உட்படுத்துகிறார்கள். ஆகையால் நம்மவர் இந்த நாட்டிலேயே இருந்து பஞ்சத்திலும் கொள்ளை நோயிலும்

அழிந்திட்டாலும் பெரிதில்லை. நமது ஸ்வதந்திரங்களை வெளி நாடுகளில் அன்னியர் காலின்கீழ் போட்டு மிதிக்காதபடி ராஜாங்கத்தாரால் நம்மைக் காப்பாற்ற முடியாவிட்டால், நம்மவர் வேற்று நாடுகளுக்குக் குடியேறிப்போகாமல் இங்கிருந்து மடிதலே நன்று" என்றார். என்ன கொடுமையான நிலை பார்த்தீர்களா?

ஆனால், சகோதரிகளே, தென்ஆப்பிரிக்காவில் மாத்திரமே இவ்விதமான கொடுமைகள் நடக்கின்றன என்று நினைத்து விடாதீர்கள்!

சகோதரிகளே, ஔவையார் பிறந்தது தமிழ்நாட்டில்; மதுரை மீனாக்ஷியும், அல்லி அரசாணியும் நேற்று மங்கம்மாளும் அரசு புரிந்த தமிழ்நாட்டிலே நம்முடைய நிலைமை தென்னாப்பிரிக்காவில் ஹிந்து தேசக்கூலிகளுடைய நிலைமையைக் காட்டிலும் கேடு கெட்டிருக்கிறதா? இல்லையா? உங்களுடைய அனுபவத்திலிருந்து நீங்களே யோசனை பண்ணிச் சொல்லுங்கள்.

நாமும் ஸ்வேச்சைப்படி வெளியே சஞ்சரிக்கக்கூடாது. நம்மைச் சேரிகளில் அடைக்காமல் சிறைகளில் அடைத்து வைக்க முயற்சி செய்கிறார்கள். ரயில் வண்டிகளில் நமக்கென்று தனிப்பகுதி ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்கள். நம்மைக் கண்டாலும் ஆண் மக்கள் நிஷ்காரணமாய் சீறி விழுகிறார்கள். காறி உமிழ்கிறார்கள்; வைகிறார்கள்; அடிக்கிறார்கள்; நாமும் நமதிஷ்டப்படி பிறருடன் பேசக்கூடாதென்று தடை செய்கிறார்கள். மிருகங்களை விற்பதுபோல், நம்மை விலைக்கு விற்கிறார்கள். நம்முடைய நூல்களிலும் ஸம்பாஷணைகளிலும் ஓயாமல் நம்மைத் தூற்றிக் கொண்டிருக்கிறார்கள். வழக்கத்தால் நாம் இத்தனை பாடுக்கும் ஒருவாறு ஜீவன் மிஞ்சியிருக்கிறோமெனினும், இந்த நிலை மிக இழிவான தென்பதிலும், கூடிய சீக்கிரத்தில் மாற்றித்தீரவேண்டிய தென்பதிலும் சந்தேகமில்லை. இதற்கு மருந்தென்ன?

தென்ஆப்பிரிக்காவில் ஹிந்து தேசத்துக் கூலியாட்களுக்கு ஸ்ரீமான் மோஹன தாஸ்கரம்சந்த்காந்தி எந்த வழி காட்டினாரோ, அதுவே நமக்கும் வழி. தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையரை ஹிந்துக்கள் ஆயுத பலத்தால் எதிர்க்கவில்லை. கைத்துப்பாக்கி, வெடிகுண்டு முதலியவற்றை உபயோகிக்கவிரும்பினர். சில இளைஞரைக் கூட அது செய்யலாகாதென்று மஹாத்மாகாந்தி தடுத்துவிட்டார். "அநியாயத்தை அநியாயத்தால் எதிர்த்த லென்பது அவசியமில்லை. அதர்மத்தை அதர்மத்தால்தான் கொல்ல வேண்டுமென்பது அவசியமன்று. நாம் அநியாயத்தை நியாயத்தால் எதிர்ப்போம். அதர்மத்தை தர்மத்தால் ஒழிப்போம்" என்று காந்தி சொன்னார்.

சகோதரிகளே, நாம் விடுதலை பெறுவதற்கும் இதுவே உபாயம். நமக்கு அநீதி செய்யும் ஆண் மக்களுடனே நாம் அன்புத்தளைகளால் கட்டுண்டிருக்கிறோம். நமக்கு அவர்கள் அண்ணன் தம்பிகளாகவும், மாமன் மைத்துனராகவும், தந்தை பாட்டனாராகவும், கணவர் காதலராகவும் வாய்த்திருக்கின்றனர். இவர்களே நமக்குப் பகைவர்களாகவும் மூண்டிருக்கையிலே, இவர்களை எதிர்த்துப் போர் செய்ய வேண்டு மென்பதை நினைக்கும்போது, என்னுடைய மனம், குருக்ஷேத்திரத்தில் போர் தொடங்கியபோது அர்ஜுனனுடைய மனது திகைத்ததுபோல, திகைக்கிறது. ஆண் மக்களை நாம் ஆயுதங்களால் எதிர்த்தல் நினைக்கத் தகாத காரியம். அதுபற்றியே, சாத்வீக எதிர்ப்பினால் இவர்களுக்கு நல்ல புத்தி வரும்படி செய்யவேண்டுமென்று நான் சொல்லுகிறேன்.

'அடிமைப்பட்டு வாழமாட்டோம்; ஸமத்வமாக நடத்தினாலன்றி உங்களுடன் சேர்ந்திருக்க விரும்போம்' என்று அவர்களிடம் வெளிப்படை யாகவும், தெளிவாகவும் சொல்லிவிட்டு, அதினின்றும் அவர்கள் கோபத்தால் நமக்கு விதிக்கக்கூடிய தண்டனைகளையெல்லாம் தெய்வத்தை நம்பிப் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுப்பதே உபாயம். இந்த சாத்வீக எதிர்ப்பு முறையை நாம் அனுசரிக்கத் தொடங்க வேண்டுமாயின், அதற்கு அந்தக் காலமே சரியான காலம். இந்த வருஷமே சரியான வருஷம். இந்த மாஸமே நல்ல மாஸம். இன்றே நல்ல நாள். இந்த முகூர்த்தமே தகுந்த முகூர்த்தம்.

சகோதரிகளே, இப்போது பூமண்டலமெங்கும் விடுதலைப் பெருங்காற்று வீசுகிறது. கொடுங்கோலரசர்களுக்குள்ளே கொடியவனாய் ஹிரண்யனைப் போல் ஐரோப்பாவின் கிழக்கே பெரும் பகுதியையும் ஆசியாவின் வடக்கே பெரும்பகுதியையும் ஆண்ட ஸார் சக்கரவர்த்தி இப்போது ஸைபீரியாவில் சிறைப்பட்டுக் கிடக்கிறான். "பாரதநாட்டைக் காப்பதிலே எனக்குத் துணை புரிய வாருங்கள்" என்று ஆங்கிலேயன் ஹிந்துக்களைக் கூப்பிடுகிறான். விடுதலைக் காற்று விர் விர் என்று வேகமாக வீசுகிறது.

ஒரு ஸ்திரீயானவள் இந்த ஸாத்வீக எதிர்ப்புமுறையை அனுசரிக்க விரும்பினால் தனது கணவனிடம் சொல்லத் தக்கது யாதெனில்:-

"நான் எல்லாவகையிலும் உனக்குச் சமமாக வாழ்வதில் உனக்குச் சம்மத முண்டானால் உன்னுடன் வாழ்வேன். இல்லாவிட்டால் இன்று இராத்திரி சமையல் செய்ய மாட்டேன். எனக்கு வேண்டியதைப் பண்ணித் தின்று கொண்டிருப்பேன். உனக்குச் சோறு போட மாட்டேன். நீ அடித்து வெளியே தள்ளினால் ரஸ்தாவில் கிடந்து சாவேன். இந்த வீடு என்னுடையது. இதை விட்டு

வெளியேறவும் மாட்டேன்" என்று கண்டிப்பாகச் சொல்லிவிடவும் வேண்டும். இங்ஙனம் கூறும் தீர்மான வார்த்தையை, இந்திரிய இன்பங்களை விரும்பியேனும், நகை, துணி முதலிய வீண் டம்பங்களை இச்சித்தேனும், நிலையற்ற உயிர்வாழ்வைப் பெரிதாகப் பாராட்டியேனும் மாற்றக்கூடாது. 'சிறிது சிறிதாக, படிப்படியாக ஞானத்தை ஏற்படுத்திக்கொள்வோம்' என்னும் கோழை நிதானக்கட்சியாரின் மூடத்தனத்தை நாம் கைக்கொள்ளக்கூடாது. நமக்கு ஞாயம் வேண்டும். அதுவும் இந்த க்ஷணத்தில் வேண்டும்.

இங்ஙனம், 'பரிபூரண ஸமத்வமில்லாத இடத்திலே ஆண் மக்களுடன் நாம் வாழ மாட்டோம்' என்று சொல்வதனால், நமக்கு நம்முடைய புருஷர்களாலும், புருஷ சமூகத்தாராலும், ஏற்படக்கூடிய கொடுமைகள் எத்தனையோ யாயினும், எத்தன்மையுடையன வாயினும், அவற்றால் நமக்கு மரணமே நேரிடினும், நாம் தர்மத்துக்காக மடிகிறவர்களும், மடியத் தான் செய்கிறார்கள். ஸாமான்ய ஜனங்களும் மடியத்தான் செய்கிறார்கள். ஆதலால், ஸகோதரிகளே, பெண்விடுதலைக்காக இந்த க்ஷணத்திலேயே தர்ம யுத்தம் தொடங்குங்கள். நாம் வெற்றிபெறுவோம். நமக்கு மஹாசக்தி துணை செய்வாள். வந்தே மாதரம்"[23] என்ற முழக்கமாக அமைகின்றது.

இவைதவிர, வீட்டிற்குள் தேவைப்படும் இடங்களில் பாரதியார் தந்த விளக்க வுரைகள் தனித்தன்மைமிக்க சொற்பொழிவுக் கூறுகளைக் கொண்டிருக்கின்றன. அவற்றுள் ஒன்று தங்கம்மாபாரதி குறிப்பிடும் நிகழ்வு.

தங்கம்மாபாரதியின் தோழி ஒருத்தி எப்போதும் சிரித்தமுகத்துடன் வளையவரும் துறுதுறு பெண். கவர்ந்திழுக்கும் புன்னகையுடன் காட்சிதரும் அவளைச் சுற்றி இளைஞர்பட்டாளம் ஒன்று காதல்வலை வீசிச் சுற்றிச் சுற்றி வந்திருக்கின்றது. அவர்களைக் கண்டிப்பதற்கோ, அறிவுரைகூறித் திருத்துதற்கோ துப்பில்லாத அவர்கள் பெற்றோர் தமது பெண்ணின் தன்மையைக் குறைகூறுகின்றனர். ஆனால், பாரதியாரோ அவ் விளைஞர்களை அழைத்துத் திட்டாமல், அப்பெண்ணையும் குறை கூறாமல், நல்லுரை பகர்கின்றார். காதல் என்னும் பொருண்மையில் அமையும் அவ்வுரையையும், அதற்கான பின்னணியையும் தங்கம்மாள் பாரதியின் தமிழில் காணலாம்.

காதலின் மகிமை

"என் தோழிகளில் ஒருத்திக்குப் புன்னகை புரிதல் சுபாவம். ஆனால், அவள் வீட்டார் அவளை அதற்காக எப்போதும் கோபிப்பார்கள். "எப்போதும் என்ன சிரிப்பு? இது கெட்ட வழக்கம்" என்பார்கள். அவள் எவ்வளவு முயன்றும் அவளால் முகத்தை உம்மென்று

நகைப்பின்றி வைத்துக்கொள்ளச் சாத்தியப் படவில்லை. இது அவர் வீட்டார் எண்ணியதைப்போலவே, சங்கடத்திற்குள்ளாக்கியது. வாலிபர்கள் ஒவ்வொருவரும், அவள் தங்களைத்தான் பார்த்து நகைக்கிறாள் என்று எண்ண ஆரம்பித்தனர். இதைத் தந்தையாரின் கூர்மையான கண்கள் கவனித்தன. பின்பு எல்லோரும், ஒன்றாக இருந்த சமயம் பின்வருமாறு பிரசங்கம் புரிந்து, வாலிபர்களுக்கு நற்புத்தி புகட்டினார்.

"அன்பான இளைஞர்களே! காதல் என்பது ஏதோ சாதாரண விஷயம் என்று நினைக்க வேண்டாம். அது தெய்விகமானது. எல்லோரும், காதல் புரிவதும் காதல் புரிந்த கன்னியரை மணம் புரிந்துகொள்வதும் சாத்திய மில்லை. ஏனெனில் நம் நாட்டில் இத்தனைவித சாதிகளும், இத்தனை கட்டுப்பாடுகளும், எத்தனையோ தினிசு வழக்கங்களும், சம்பிரதாயங்களும், நிறைந்திருக்கும்போது, "காதல் மணம்தான் வேண்டும்" என்றால் நடக்காது. மணம் செய்தபின் ஒவ்வொரு இளைஞனும் தனக்கு வாய்த்த மனைவியின் பால் பரிபூர்ணமான பிரேமை செலுத்தி வந்தானானால், தானாகவே மனைவிக்கு அவனிடம் அன்பு ஏற்பட்டு, தாம்பத்ய வாழ்க்கை இனிது நடைபெறும். அதைவிட்டு எந்தக் கன்னிகையானாலும், கண்ணுக்குப் பார்க்க நன்றாயிருந்தால், அல்லது அவள் ஸரளமான ஸ்வபாவத்தினால் புன்னகையோடிருந்தால் அவள் நம்மிடம் காதல் கொண்டு, அதனால்தான் நகை முகத்தோடிருக்கிறாள் என்று தப்பிதமான உணர்ச்சியோடு அவளிடம் நடந்துகொள்கிறார்கள். அது சரியல்ல. ஒவ்வொருவனும் ஸ்திரீகளுக்கு மரியாதை செலுத்த வேண்டும். ஆங்கிலேயர் ஸ்திரீகளுக்குத்தான் முதல் மரியாதை அளிக்கிறார்கள். வேண்டாத விஷயங்களுக்கெல்லாம் ஆங்கிலேயரைப் பின்பற்றி, அவர்கள் வழக்கங்களைக் கைக்கொள்ளும் நமது தேசத்தவர்கள் இதைச்சிறிதும் கவனியாமல் கேவலம் பெண்களை மிருகங்களாகவே மதித்து, அவர்களைக் கௌரவக் குறைவாக நடத்துகிறார்கள். இதுவரை செய்த பிழைகளுக்காக வருந்திக் கொண்டிருப்பதில் பயனில்லை. இனிமேல் ஒவ்வோர் இளைஞனும் ஸ்திரீகளுக்கு மனப்பூர்வமான மரியாதையளித்துக் கூடுமானவரை தங்கள் வீட்டுப் பெண்களுக்குச் சுயமரியாதையாக இருப்பதற்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும். இதனால் நாடு நலம் பெறும்.

"வலிமை சேர்ப்பது தாய் முலைப்பாலடா!
மானம் சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்
கலியழிப்பது பெண்கள் அறமடா!
கைகள் கோத்துக் களித்து நின்றாடுவோம்!

பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா!
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா!
தண்மையின்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் சதி என்ற நாமமும்!"

என்று பாடியதும் அங்கு நின்ற யாவரும் அவ்விதமானவே செய்வோம் என்று தந்தையை வணங்கினர்."[24] என்று தங்கம்மாள் பாரதி எழுதுகின்றார். இதே நிகழ்வை நினைவுகூர்ந்து அவர்தம் தங்கை, சகுந்தலாபாரதி, பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"காதல் என்றால் என்ன? என்று ஒரு வாலிபர் ஒரு சமயம் என் தந்தையைக் கேட்க, அவருக்கு விரிவாக எடுத்துச் சொல்லிய காதலின் தன்மையை என் தந்தை பாரதி அறுபத்தாறு என்ற பாடல்களில் காதலின் புகழ் என்ற தலைப்பில் விளக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறார்"[25] என்பது அக்குறிப்பு.

பெண்கள் பருவம் எய்துமுன்பே (ருதுவாகும்முன்பே) திருமணம் செய்து கொடுக்கும் முறைகளைக் கடுமையாகச் சாடுகின்றார் பாரதியார். அதனைப் பொம்மைக் கல்யாணம் என்று பகடி செய்கின்றார். தங்கம்மாள் பாரதிக்கு அவ்வாறு திருமணம் செய்யவேண்டும் என்பதைக்கோபாவேசத்தோடு தடுத்து மொழிகின்றார். இதேபோல், ஸ்ரீநிவாசாச்சாரியாரின் மகளான யதுகிரி அம்மாளுக்குத் திருமணப் பேச்சு எடுக்கும் போதும் பாரதியார் தலையிட்டுச் சில கருத்துரைகள் சொல்கின்றார். பெண்ணானால் அவள் நாணத்தோடு இருக்கவேண்டும். அடுத்த ஆண்களிடம் பேசக்கூடாது என்பன போன்ற போலிக்கட்டுப்பாடுகளைத் தகர்க்க வேண்டும் என்கிற வகையில் முழங்கும் பாரதியார் மரபுகளையும் நுட்பமாகச் சுட்டிக்காட்டி அவை பேணச் சொல்கின்றார். அவ்வுரையினை நேருறக் கேட்ட யதுகிரி அம்மாள் நடையிலேயே அதனைக் காணலாம்.

சில புத்திமதிகள்

பாரதி ஒரு பெரிய பிரசங்கமே செய்துவிட்டார். அவர் சொன்னார்: "யதுகிரி, நான் சில புத்திமதிகள் சொல்லுகிறேன். மறக்காதே! பெண்களுக்கு முக்கியமானது கற்பு; அதை உயிரைக்காட்டிலும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவது முதல்கடமை; அதற்காகக் கூண்டுக்கிளி போல் அடைபட்டுக் கிடக்கவேண்டாம். உலகத்தில் கணவன் ஒருவன் தவிர, பாக்கிப் புருஷர்களெல்லாம் அண்ணன்தம்பிமார்கள். எல்லோருக்கும் பதுங்கி அஞ்ச வேண்டியதில்லை! முக்கியமாகக் கூச்சம் வெட்கம் இரண்டும்

அநாவசியமான சரக்குகள். நீ பேஷாக எல்லாருடனும் பேசலாம்; கணவனிடத்தில் முதலில் வெட்கம்; பழகப் பழக அதுவும் வேண்டிய தில்லை. அச்சம், நாணம், பயிர்ப்பு என்று புத்தகப் பாடத்தை உருப்போட்டு நம்நாட்டுப் பெண்கள், புருஷர்கள் எல்லோரும் அடிமை வாழ்வில் முழுகி இருக்கிறார்கள்; நீங்கள் தைரியமாக இருந்தால் தான் உங்கள் வயிற்றில் பிறக்கிற குழந்தைகள் தைரியமாக இருக்கும்; கோழைத்தனம் இந்தியாவின் மேன்மையை நாசம் செய்துவிட்டது. அதோடு காலமும் உதவி செய்தது.

நீ புக்ககத்திற்குப் போனாலும் தைரியமாக இரு. பயப்படாதே. ஒட்டுக் கேட்காதே. பிறர் கடிதங்களை உடைத்துப் படிக்காதே. மனதில் உள்ளதை நேரில் சொல்லிவிடு. மனத்தில் வைத்து உருகுவதைவிட வாயினால் சொல்லிவிடுவது நல்லது. உன்னால் முடிந்த அளவு அவர்கள் சொற்படி நட. உன்னால் முடியாவிட்டால் விஷயத்தைச் சொல்லிவிடு. மறைக்காதே! அதில் உண்மை உண்மை உண்டு. உன்னை விலை கொடுத்து அவர்கள் வாங்கவில்லை. அவர்கள் வீட்டை நன்றாக விளங்கவைத்து விருத்தி செய்யப் போகிறாய். அந்த வீட்டில் உனக்குப் பூரண உரிமை உண்டு. பணம் காசு விஷயங்களில் தலையிடாதே! அதைப்பெரியவர்களிடம் விட்டுவிடு. வேலை செய்யப் பின்வாங்காதே! சக்திமீறிச் செய்யாதே! செய்வதை உன் மனம் ஒப்பச் செய். படிப்பை விடாதே; உன் தாய் தகப்பனார் எவ்வளவோ, கஷ்டப்பட்டு முக்கியமான அபிவிருத்தி செய். முடியாவிட்டால் இருப்பதை மறக்காதே

நான் (வ.வே.சு.)ஐயரைப்போல் துறவு போதிக்கமாட்டேன். உலகத்தில் பிறந்து எல்லாச் சுகங்களையும் அனுபவித்து உலகத்திற்கு உபகாரியாக வாழவேணும். இரத்த வெள்ளம் பெருக்கி அதனால் சுகமடையலாம் என்பது என் எண்ணத்திற்கு நேர்விரோதம்.

நீ இரண்டு வீட்டிற்கும் விளக்கைப்போல், பிரகாசிக்க வேண்டும். இரண்டு குடும்ப வாழ்க்கை கலப்பது முதலில் கஷ்டமாக இருக்கும். பழகிய பின் வழக்கமாய்விடும். கேவலம் அடிமைத்தனத்திற்கு ஒத்துக்கொள்ளாதே. உனக்கு உரிமை உண்டு. புத்தி உண்டு. ஸ்வதந்திரம் உண்டு. தலைநிமிர்ந்து நட. உன் இருபுறமும் உள்ள இயற்கையைக் கண்குளிரப் பார். நேர்ப் பார்வையில் பார். கடைக்கண் பார்வையில் பார்க்கத்தகுந்தவன் கணவன் ஒருவனே. தந்தை, சகோதரர்கள், பிள்ளைகள் முதலியோரை நேராக நிமிர்ந்து பார். இவர்களைக் கடைக்கண்ணால் பார்க்காதே. நிமிர்ந்து உட்கார். பேசுவதை ஸ்பஷ்டமாகப் பேசு. தைரியமாகப் பேசு. இதில் கற்பு கெடுவதில்லை. மேலுக்கு வேஷம் அவசியமில்லை.

பாரதியார் இப்படி இன்னும் அநேகம் புத்திமதிகள் கூறினார். நான் அவர் வார்த்தைகளை வேதவாக்காக நினைத்து நடந்தேன். சில வேளைகளில் எனக்குக் கஷ்டமானாலும் தைரியங்கொடுத்துக் காத்தது அவர் மொழியே. சில நாட்கள் இரவில் தூக்கம் வராமல் இந்த வார்த்தைகள் என்னுடன் முடிந்துவிடுமோ என்று எண்ணமிட்டிருந்தேன். என் மனம் திருப்தி அடைவதற்காகவும், சகோதரிகளுக்குப் பயன்படுவதற்காகவும் அவர் இறந்துபோனாலும் அவர் மொழிகள் உலகத்தில் ஒலித்துக் கொண்டிருப்பதற்காகவும் இதை எழுதினேன்"[26] என்று அனுபவபூர்வமாகக் குறிப்பிடுகின்றார்.

அதேபோல், தன்வீடுபோல் புதுவையில் உள்ள ஓர் அன்பர் வீட்டில் ஏற்பாடாகியிருந்த ப்ரொராக்ரெஸிவ் யூனியன் கிரிக்கட் கிளப் (Progressive Union Cricket Club) என்ற சங்கத்தின் ஆண்டுவிழாக் கூட்டத்திலும் பாரதியார் சென்று சிறப்புச் சொற்பொழிவாற்றியிருக்கின்றார். அதனை ஏற்பாடு செய்ததோடு, அதற்காகப் பிரெஞ்சு அரசினரிடம் அபாரதம் செலுத்தியும் இருக்கின்றார் ரா.கனகலிங்கம்.

"குலவேற்றுமையற்ற சமுதாயத்தைப் படைக்க வாழ்ந்து அவர் புதுவையில் நடத்திய கூட்டத்தில் கலந்துகொண்டமையால் மாஜி புதுவை பிரெஞ்சு அரசினரால் அபராதம் விதிக்கப்பெற்ற பேறுடையேன்"[27] என்று குறிப்பிடும் அவர் அந்த அனுபவத்தைத் தொடக்கம் முதல் விளைவு வரை ஒரு கதைபோல விரிக்கின்றார். அதனைப் பின்வரக்காண்போம்.

குருவும் சீடரும்

"1912ம் ஆண்டில் ப்ரொராக்ரெஸிவ் யூனியன் கிரிக்கட் கிளப் (Progressive Union Cricket Club) என்ற சங்கத்தின் ஆண்டுவிழா நடைபெறுவதற்கு ஒரு வாரத்திற்குமுன், அவ்விழாவில் நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகளைக் குறித்து ஆலோசிக்க ஒரு கூட்டம் கூடியது. உறுப்பினர் பலரும் பலவேறு ஆலோசனைகளை வெளியிட்டார்கள். கடைசியாகப் பாரதியாரைக் கொண்டு விழாவில் ஒரு சொற்பொழிவு நடத்துவது நலம் என்று ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

இவ்விஷயமாகப் பாரதியாரைக் கண்டுபேசவேண்டுமென்று ஒரு தினத்தை உறுப்பினர் குறிப்பிட்டனர். அதற்கு இணங்க மேற்படி கிளப்பின் நிர்வாகத் தலைவரான அடைக்கலநாதன் அர்லோக், ஜேம்ஸ் ஸாமுவேல், அந்துவேன் அர்லோக் ஆகிய மூவரும் நானும் பாரதியார் வீட்டை நோக்கிச் சென்றோம். எங்களில் ஜேம்ஸ் ஸாமுவேல் பின்னாளில் பாரதியார் பாடும்போது பிடில் வாசிக்கலானார். அவ்வளவு

பழக்கம் நாளடைவில் ஏற்பட்டது. அந்துவேன் அர்லோக் பாரதியாரின் பிரெஞ்சு வாத்தியாராகி, பிரெஞ்சு சுதந்திரகீதத்தில் பாரதியாருக்குப் பெரு விருப்பம் ஏற்படக் காரணமானார்.

வீட்டின் உட்புறம் தாழிட்டிருந்தது. மெள்ளக் கதவைத் தட்டினேன். உடனே, "யார்?" என்று ஓர் உரத்த சப்தம் உள்ளிருந்து கம்பீரமாகக் கேட்டது.

எங்களுக்கு ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. சற்றுநேரம் தயங்கி நின்றோம். மறுபடி நான் தட்டினேன். "யார் அங்கே?" என்று மறுபடியும் ஒரு சப்தத்துடன் கதவு படீரென்று திறந்தது. நெற்றியில் குங்குமப்பொட்டும், முறுக்கிய மீசையுமாகப் பாரதியார் வெளிப்பட்டார். நாங்கள் கைகூப்பி வணங்கியதும், அவர் பதில் நமஸ்காரம் செய்து, "எங்கே வந்தீர்கள்?" என்று கேட்டார்.

நாங்கள் கொஞ்சம் சாவகாசமாய்ப் பேசிவந்த காரியத்தைத் தெரிவிக்க விரும்பினோம். எனவே, நான் "ஒரு காரணத்தை முன்னிட்டுத் தங்கள் உதவியை நாடி இங்கு வந்திருக்கிறோம்" என்றேன். அவரும் "அப்படியானால், உள்ளே வாருங்கள்" என்றார். நாங்கள் தொடர்ந்து சென்றதும், ஒரு சிறு அறையைக் காட்டி, "இங்கே உட்கார்ந்திருங்கள். இதோ வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, உள்ளே போனார். அந்தச் சிறு அறையின் நிலைமையைத்தான் பாரதியார் தமது குயில் பாட்டின் இறுதியில் உள்ளது உள்ளபடியே படம்பிடித்துக் காட்டுகிறார்.

'சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி, எழுதுகோல்
பத்திரிகைக் கூட்டம், பழம்பாய், வரிசையெல்லாம்
ஒத்திருக்க நாம் வீட்டின் உள்ளோம்' என உணர்ந்தேன்.

எங்கே பார்த்தாலும், துண்டுக் காகிதங்களும், அன்று வந்த ஹிந்து, சுதேச மித்திரன், பத்திரிகைகளும் குழப்பமான கூட்டமாய்க் கிடந்தன. ஒரு மூலையில், குயில்பாட்டில் வர்ணிக்கப்படாத கறுப்புச் சட்டையும், பெஞ்சியின்மேல் ஒரு வீணையும் இருந்தன.

நாங்கள் தரையில் உட்கார்ந்தபடியே மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தோம். சற்றுநேரத்தில் வாய் நிறைய வெற்றிலை போட்டுக் கொண்டு பாரதியார் எங்கள் முன் உட்கார்ந்தார். உட்கார்ந்து தலையைக் கம்பீரமாக நிமிர்த்தி "எங்கே வந்தீர்கள்?" என்று முன் கேட்ட வினாவையே, அந்தக் கம்பீரமான தோரணையில் அல்ல - இப்போது வினயமாக வினவினார். "நாங்கள், எங்கள் கிளப்'பின் ஆண்டுவிழாக் கொண்டாட்டம் ஒரு வாரத்தில் கொண்டாடப் போகிறோம். அன்று தாங்கள் கருணைகூர்ந்து ஒரு சொற்பொழிவு

நிகழ்த்த இணங்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டோம்.

"நல்லது. எதைப்பற்றி உபந்யாஸம் செய்ய வேண்டும்?" என்று அன்பு தோய்ந்த குரலில் கேட்டார். நான் பளிச்சென்று, "சாதி வேற்றுமையைக் குறித்துத் தாங்கள் பேசுவதை நாங்கள் கேட்கவிரும்புகிறோம்" என்றேன். பாரதியார் இளநகை அரும்பிய வண்ணம், எங்களை நோக்கி, "நல்லது!நல்லது! நான் என் எண்ணம் போலவே இருக்கிறது உங்கள் விருப்பமும்" என்றார். மிக்க மகிழ்ச்சியுடன் எங்கள் கிளப்பில் வந்து பேச ஒப்புக் கொண்டார். பாரதியாரையும், ஈசுவரன் கோவில் வீதியில் அவர் வசித்து வந்த வீட்டையும் எண்ணி, இந்தச் சிறு வீட்டுக்குள்ளே எவ்வளவு பெரிய ஆத்மா குடியிருக்கிறது என்று நாங்கள் அதிசயித்தோம். பெருமகிழ்ச்சியுடன் விடை பெற்றுக் கொண்டு திரும்பினோம்.

மறுநாள் ஆண்டுவிழா. அழைப்புப் பத்திரிகை அச்சிட்டு அன்பர்களுக்கு மட்டும் வினியோகித்தோம். அப்பத்திரிகையில், மாலை ஐந்து மணிக்குப் பாரதியார் 'சாதி வித்தியாசம்' என்னும் பொருள் குறித்துச் சொற்பொழிவாற்றுவார் என்று தெளிவாகக் குறிப்பிட்டிருந்தோம். ஏதோ அரசியல் - பிரசங்கம் செய்வார் பாரதியார் என்று யாரும் நினைக்கக்கூடாது என்று முன்ஜாக்கிரதையாகவே நடந்துகொண்டோம்.

ஊரெங்கும் செய்தி பரவிவிட்டதால், புதுவை ஷார்த்தார் வீதியில் 15ஆவது எண்ணுள்ள வீட்டில், அதாவது, ஆண்டுவிழாப் பிரசங்கம் நடை பெறும் என்று குறித்திருந்த இடத்தில் ஐந்து மணிக்கு முன்பே பெருங் கூட்டம் கூடிவிட்டது. அந்த ஷார்த்தர் வீதி இப்போது பிரான்சுவா மார்ட்டின் வீதி என்று பெயர் மாறியிருக்கிறது. அந்தக்கூட்டம் நடந்தவீடு இன்று அரவிந்தர் ஆசிரமத்திற்குச் சொந்தமாயிருக்கிறது.

அக்கூட்டத்தில், பலவேறு வகுப்பினரும், காணப்பட்டனர். நான் வாசலில் நின்று கொண்டு, ஜாக்கிரதையாக அழைப்புப் பத்திரம் வைத்திருந்த ஆளைப் பார்த்துப் பார்த்து உள்ளே அனுமதித்துக் கொண்டிருந்தேன். சி.ஐ.டி. பயத்தினால் அப்படிச் செய்யலானேன்.

இப்படி வடிகட்டி அனுப்பிக் கொண்டிருந்தும் உள்ளே கூட்டம் பெருகி விட்டது. சுதேசிவீரர் பேசப்போகிறார், கேட்கலாம் என்ற ஆசைதான் அதற்குக் காரணம். நான் ஒவ்வொருவராக வந்தவர்களைப் பார்த்து உள்ளே அனுப்பிக் கொண்டிருக்கையில், ஒருவர் என் எதிரே ரஸ்தா நடுவில் நின்று கொண்டிருந்தார். அவர்தம் கையில் வைத்திருந்த குடையை ஊன்றியவண்ணம் நின்று கொண்டிருந்தார். பிறகு மெள்ள என் அருகில் வந்து, "ஸார்" என்றார்.

நல்ல சிவப்புநிறம். சுமார் ஆறடி உயரம். கிராப்புத் தலை. நெற்றியில் நாமம். மேலே கறுப்புச் செக்குக்கோட்டு, இடுப்பில் கரைபோட்ட வேட்டி, அந்த ஆசாமியை நோக்கி நான், "தங்களுக்கு என்ன வேணும், ஸார்?" என்று கேட்டேன். அதற்கு அவர் "ஒன்றுமில்லை ஸார், நான் பாரதியாருடன் திருநெல்வேலியில் சேர்ந்து வாசித்த பள்ளித்தோழன்" என்று பதில் சொன்னார். "பாரதியார் உபந்யாஸம் செய்யப் போவதாகக் கேள்விப் பட்டுத்தான் ஓடோடியும் வந்தேன்" என்றும் தெரிவித்தார். 'தம்மிடம் அழைப்புப் பத்திரிகை இல்லை'யென்று சொல்லிவிட்டு, 'பாரதியாரின் பழைய நண்பர் என்ற முறையில் தயவுசெய்து தம்மை அனுமதிக்கவேண்டும்' என்று வினயமாகக் கேட்டுக்கொண்டார். நான் சம்மதித்து, அவரை உள்ளே அழைத்துப் போய், ஒரு நாற்காலியில் உட்காரவைத்தேன்.

இதற்குள் மணி ஐந்தும் ஆகி அதற்குமேலும் ஆகிவிட்டது. பாரதியார் இன்னும் வந்து சேரவில்லை. சபையோ, பாரதியார் பிரசங்கத்தைக் கேட்க வேண்டுமென்று பேராவலுடன் காத்திருந்தது. விழா நடக்கும் அந்த இடத்திற்குப் பாரதியார் வீடு அதிக தூரம் இல்லை. ஆகவே போய் ஓடிப் போய் அழைத்து வரலாம் என்று அவர் வீட்டை நாடி விரைந்தேன்.

பாரதியார் சில நண்பர்களுடன் எதிரே வந்து கொண்டிருந்தார். அந்த நண்பர்களில் அறிஞர் வ.வே.சு. ஐயரும் ஒருவர். நான் ஒரே ஓட்டமாக ஓடிப் போனேன். என்னைக் கண்டதும் பாரதியார், "எங்கே ஓடி வருகிறாய்?" என்று கேட்டார். நான் மூச்சுத் திணற ஓடிச் சென்ற நான், சிறிது அமைதியுற்ற பின், "தங்கள் வரவை எதிர் நோக்கி ஜனங்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். மேலும், தங்களுடன் திருநெல்வேலியில் வாசித்து வந்த பழைய நண்பர் ஒருவரும் வந்து காத்திருக்கிறார்" என்றேன்.

அதற்குப் பாரதியார், "என் பள்ளிக்கூட நண்பனா? அப்படியா சொன்னான்? அவன் எப்படி இருக்கிறான், அடையாளம் சொல்லு" என்று கேட்டார். நான் ஆசாமியை வருணிக்கத் தொடங்கியதும், பாரதியார் முகம் உத்ஸாகத்தை இழந்தது. சுமார் ஆறடி என்று அந்த உயர்திருவாளரை வருணித்து முடித்ததும், "நீ மோசம் போய்விட்டாய்" என்றார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. கறுப்புச் செக்குக் கோட்டு, ஆள் நல்ல சிவப்பு என்றதும் பாரதியார் "பழைய கறுப்பன்தான்.என் நண்பன் அல்ல, இர்கசியப் போலீஸ் ஸப்- இன்ஸ்பெக்டராய் இருக்கவேணும்" என்று சொல்லிவிட்டு, "அவன் இருந்தால் இருக்கட்டும். நம்முடைய காரியத்ஸ த நாம் பார்க்கலாம் வா" என்று அவசரமாக நடந்தார். நாங்கள் விழா நடைபெறும் வீட்டுக்குள் நுழைந்தோம்.

பாரதியாரைக் கண்ட ஜனங்கள் 'வந்தேமாதர' கோஷம் செய்து கைதட்டி வரவேற்றார்கள். அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் காலஞ்சென்ற திரு.பு.சி. நாராயணசாமி உபாத்தியாயர். ஹரிஜனவகுப்பைச் சேர்ந்தவர். பாரதியார் ஜாதி பேதத்தின் தோற்றம், வளர்ச்சி, ஜாதிவித்தியாசத்தின் விளைவான கேடுகள், முதலியவற்றை யெல்லாம் சாங்கோபாங்கமாக எளிய நடையில் எல்லோர் மனத்திலும் ஆழ்ந்து பதியும்படி பேசிமுடித்தார்.

இந்த உபந்யாஸத்தைச் சுருக்கெழுத்துக்காரர் யாராவது உள்ளபடி எழுதி வைத்திருந்தால், அது இந்நாளில் இன்றைய தமிழருக்குப் பாரதியார் இலக்கியத்தின் ஒரு பகுதியாக உதவியிருக்கும்"[28] என்று விளக்குகின்றார்.

### விழா ஏற்படுத்திய விளைவு

பாரதியாரின் தனித்தன்மை துலங்கும் இவ்விழா முடிந்தபிறகு, பாரதியாருக்கு நன்றி தெரிவிக்கக் கிளம்பினார் கனகலிங்கம். அப்போது நடந்த நிகழ்வையும், அவ்விழா ஏற்பாடு செய்தமைக்காக, அக்காலத்துப் பிரெஞ்சு அரசினருக்கு அபராதம் செலுத்திய சூழலையும் எளிய நடையில் எழுதுகின்றார் அவர்.

"எங்கள் கிளப்பின் ஆண்டுவிழா வைபவம் இனிது நிறைவேறிய ஒரு வாரத்திற்குப் பின், ஒருநாள், பாரதியாரைப்பார்த்து வருவோம் என்று என் வீட்டிலிருந்து புறப்பட்டேன். காலை சுமார் 9 மணி இருக்கும். போலீஸ் சேவகன் ஒருவன் எனக்கு ஒரு ஸம்மன்ஸ் (Summons) இருப்பதாகச் சொல்லி என்னிடம் கொடுத்தான். இப்படி இன்னும் மூன்று பேருக்கு உண்டு என்றும் சொன்னான்.

கிளப்பின் தலைவரான அடைக்கலநாதன் அரலோக் என்பவருக்கும், ஜேம்ஸ் ஸாமுவேலுக்கும், திருவேங்கடம் வெர்னியே என்பவருக்கும் ஸம்மன்ஸ் உண்டு என்று அறிந்தேன். திருவேங்கடம் வெர்னியே இந்தோ-சைனாவுக்குப் போய்விட்டதால், எனக்கு ஸம்மன்ஸ் கொடுத்துவிட்டு, மேற்கூறிய இருவரையும் தேடிப்போவதாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டான் சேவகன்.

எனக்கு வந்த ஸம்மன்ஸைப் பார்த்தேன். அதில், 1912ம் ஷூ (மாதம், தேதி, கிழமை இப்போது ஞாபகம் இல்லை) 'சர்க்கார் அனுமதியில்லாமல் புதுவை ஷார்த்தர் வீதியில் 15ஆவது எண்ணுள்ள இல்லத்தில் சி.சுப்பிரமணிய பாரதியாரைக் கொண்டு ஒரு பெரும் பொதுக்கூட்டம் கூட்டியது சட்ட விரோதமாய் இருப்பதால், நான் புதுவைக் கப்பிஸேன் வீதியிலுள்ள போலீஸ் கோர்ட்டில் காலை எட்டு மணிக்கு ஆஜராக வேண்டு'மென்று கண்டிருந்தது.

இது குறித்துப் பாரதியாரைக் கலந்து கொள்ளலாம் என்று நேரே சென்றேன். பாரதியார் தம் கறுப்புக்கோட்டும் தலையில் கட்டியிருந்த பெங்களூர்ப்பட்டுக் குட்டையையும் எடுத்து ஒரு மூலையில் வீசியெறிந்து விட்டு, "என்ன செய்தி?" என்று கேட்டார். நான் என் கையிலிருந்த ஸம்மன்ஸை நீட்டினேன்.

பாரதியார் ஒரு தடவைக்கு இரு தடவையாக அதை வாசித்துப் பார்த்தார். "இதுபோல் இன்னும் யார்யாருக்கு வந்திருக்கிறது?" என்று கேட்டார். கிளப்புத் தலைவருக்கும், ஜேம்ஸ் ஸாமுவேலுக்கும், கூட்டம் நடத்த இடம் தந்த திருவேங்கடம் வெர்னியே என்பவருக்கும் வந்திருப்பதாகத் தெரிவித்தேன்.

பிறகு, பாரதியார் என்னை நோக்கி, "வழக்கு நடக்கும்போது, சுப்பிரமணிய பாரதியார் எதைக்குறித்துச் சொற்பொழிவு செய்தார்? என்று கேட்டால், இந்தக் குறிப்பை மாஜிஸ்திரேட் முன்பு சமர்பித்துவிடலாம்" என்று சொல்லி, ஒரு துண்டுக் காகிதத்தில் தாம் உபந்யாஸித்த முக்கிய அம்சங்களை எழுதிக்கொடுத்தார்.

ஸம்மன்ஸில் குறிப்பிட்டிருந்த எட்டுமணிக்கு முன்பே நானும், கிளப்புத் தலைவரும், ஜேம்ஸ் ஸாமுவேலும் போலீஸ் கோர்ட்டில் ஆஜராய் இருந்தோம். சுமார் எட்டரை மணிக்கு, கொமிஸேர் அப்பாஸாமி எங்கள் வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொண்டார். பாரதியார் என்ன பேசினார் என்ற கேள்வியே கிடையாது. "21 நபர்களுக்கு மேற்பட்ட கூட்டத்தைக் கூட்டினீர்களா? அப்படிக் கூட்டுவதாக இருந்தால் சர்க்கார் முன்கூட்டியே உத்தரவு பெற வேண்டும் என்று உங்களுக்குத் தெரியாதா?" என்ற கேள்விகளே கொமிஸேர் வாயிலிருந்து புறப்பட்டன. அதற்கு நாங்கள், "கூட்டம் கூட்டியது உண்மைதான். ஆனால் அதற்குச் சர்க்கார் உத்தரவு பெறவேண்டும் என்பது தெரியாது" என்று பதில் சொன்னோம்.

"அப்படிச் சட்டம் இருப்பது தெரியாதா?" என்று அதட்டினார் கொமிஸேர். "உண்மையாகவே, இளைஞர்களாகிய எங்களுக்கு அப்படி ஒரு சட்டம் இருப்பது அந்தநாளில் தெரியாது. தெரிந்திருந்தால் நாங்கள் முன்கூட்டி உத்தரவு பெற்றிருப்போம். அனுபவமில்லாத சிறுவர்கள் செய்த தவறு இது. முதல் தடவை தான். ஆகவே, கோர்ட்டார் தயவு செய்து மன்னிக்கவேண்டும்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டோம்.

இத்தாழ்மையான வேண்டுகோளைக் கோர்ட்டார் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. "நீங்கள் கூட்டம் கூட்டுவதற்காக அழைப்புப் பத்திரங்கள் வெளியிட்டது உண்மைதானே?" என்று

கர்ஜித்தார். கடைசியாக, அவர், தெரியாமல் செய்த பிழையை ஒப்புக்கொண்டதற் காகத் தலைக்கு ஐந்து பிராங்கு (வெள்ளிக்காசு, சுமார் ஒன்பதரை அணா மதிப்புள்ள பிரெஞ்சுக்காசு) அபராதம் விதித்தார். ஆஜராகாத திருவேங்கடம் வெர்னியே என்பவருக்குக் கூட்டத்திற்கு இடம் கொடுத்த குற்றத்திற்காக, இருபது பிராங்கு அபராதம் விதிக்கப்பட்டது.

நாங்கள் கோர்ட்டை விட்டு வெளியே வரும்போது, எங்கள் கிளப்பின் ஆண்டு விழா அன்று பாரதியாரின் பழைய நண்பனாக நடித்த பிரிட்டிஷ் சி.ஐ.டி. ஸப்-இன்ஸ்பெக்டரைக் கோர்ட்டு வாசற்படிக்கு அருகிலேயே கண்டோம். எங்களைக் கண்டதும் அந்த ஆசாமி வேறொரு பக்கமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு, யாரையோ எதிர்நோக்கி நிற்பவன்போல் வேறொரு நாடகம் நடித்துக் காட்டினான். நாங்கள் அவனையும் அந்த நாடகத்தையும் கவனியாதவர்கள்போல், பாரதியார் வீட்டைநோக்கி நேரே போய்விட்டோம்.

எங்களை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த பாரதியார், எங்களைக் கண்ணுற்றதும், "கேஸ், என்ன ஆச்சு?" என்று கேட்டார். "அபராதம் கிடைத்தது" என்று தெரிவித்ததும், அவர், "பரிசு கிடைத்தது சரிதான். மாஜிஸ்திரேட் இந்த வெகுமதியை அளிப்பதற்கு உங்களுக்கு என்ன தகுதியை உங்களிடம் கண்டாரோ?" என்று வேடிக்கையாகக் கேட்டார். "திருவேங்கடம் வெர்னியே சர்க்கார் உத்தியோகஸ்தராக இருந்தும், அபாரமான வெகுமதி பெற்றிருக்கிறாரே" என்றும் பாரதியார் சிரித்துக் கொண்டே கேட்டார். நாங்களும் நகைத்துக் கொண்டே, "சட்டம் தெரிந்த சர்க்கார் உத்தியோகஸ்தராக இருந்தும், திருவேங்கடம் வெர்னியே கூட்டம் நடத்த இடம் தந்தாரே, அந்தத் தீரத்திற்காகத்தான் இந்தப் பெரும் பரிசு" என்றோம்.

பிறகு, பாரதியார், நகைப்பையும், வேடிக்கைப் பேச்சையும் விட்டுக் கவலையுடன், "ஓகோ, சிறுவர்களாகிய நீங்கள் அபராதத் தொகையைக் கட்டவேணுமே, எப்படிக் கட்டப்போகிறீர்களோ?" என்று கேட்டார். அந்த முகவாட்டத்தையும் இரக்கம் தோய்ந்த குரலையும் நான் நினைப்பூட்டிக் கொள்வதுண்டு.

"சுவாமி இதற்காகத் தாங்கள் கவலைப்படவேண்டாம். எப்படியாவது அபராதம் செலுத்திவிடுவோம்" என்று இளைஞர்களுக்குரிய உத்ஸாகத்துடன் நாங்கள் பதில் சொன்னோம். பிறகு நான் அவர் கைப்பட எழுதித்தந்திருந்த உபந்யாஸக்குறிப்பை அவரிடம் திருப்பிக் கொடுத்து விட்டு, விடைபெற்றுக் கொண்டேன்.

அந்தக் குறிப்பின் கதி என்ன ஆயிற்றென்று தெரியாது. பாரதியார் அப்படியே வீசி எறிந்திருக்கலாம். 'அந்தக் குறிப்புக் காகிதத்தையாவது கையிருப்பாக வைத்துக் கொண்டோமில்லையே' என்று இப்போது என் புத்தியில் படுகிறது. அந்தக் குறிப்பு, உண்மைப்பரிசாகவும் நினைவுக் குறிப்பாகவும் இருந்திருக்குமே. சட்டம்போட்டுக் கண்ணாடியிட்டு வைத்துப் பார்த்துக்கொள்ளவேண்டிய தஸ்தாவேஜல்லவா அது.

பாரதியாரின் சாதிவித்தியாசப் பிரசங்கத்தையும், அபராதம் கொடுத்த பின் விளைவையும் இன்று நினைத்துப்பார்க்கும்போது, ஏதோ, ஒரு துளியாவது பாரதியாரின் துயரத்தில் கலந்துகொள்ளும் பாக்கியம் கிடைத்ததே என்றுதான் தோன்றுகிறது.

இளங்கன்று பயமறியாது என்ற தோரணையில்தான் நாங்கள் நடந்து கொண்டோம். ஆனால், அந்த நிகழ்ச்சி பாரதியாருக்கு என்மீது பின்னால் ஏற்பட்ட பேரபிமானத்திற்கு ஒரு வித்தாகிவிட்டது. அந்த நிகழ்ச்சியின் பயனாய்க் கவிஞர் எனக்குக் குருநாதராக என் உள்ளத்தில் இடம் பெறலானார். நானும் ஒரு பிரிய சிஷ்யனாக அவர் உள்ளத்தில் பதவிபெறும் பாக்கியம் பெற்றேன்.

நாங்கள் வேண்டிக்கொண்டவுடனே பிரசங்கிக்கச் சம்மதித்துவிட்ட அந்தப் பெருந்தன்மையும், சி.ஐ.டி.ஸப்-இன்ஸ்பெக்டர் நண்பர் என்று நாடகம் ஆடி உள்ளே நுழைந்துவிட்டார். ஏதாவது கெடுதி செய்யப் போகிறார் என்று தெரிந்தும் அலட்சியமாக உபந்யாஸத்தில் ஈடுபட்ட தீரமும், எங்களுக்கு அபராதம் விதிக்கப் பட்டதே என்ற கவலையைத் தமது பணக் கவலைகளுக்கும் மேலாகக்கொண்டு இரங்கிய சீலமும், நான் உள்ளக்கோயிலிலே எழுதி வைத்திருக்கும் பாரதி-சித்திரத்திற்கு ஓர் அபூர்வ அழகும் ஒளியும் தந்திருக்கின்றன"[29] என்று நெகிழ்வுடன் பதிவு செய்கின்றார்.

கனகலிங்கத்தைச் சீடராகப் பாரதியார் ஆட்கொண்டதற்கும், பாரதியாரைக் கனகலிங்கம் குருவாக வரித்துக்கொண்டதற்கும், பாரதியாரது சொற்பொழிவுதான் துணைநின்றிருக்கின்றது என்பது இங்குக் கருதத்தக்கது.

கனவு நனவானது, அவர் காலத்திலேயே...

அக்காலத்தில் ஆண்கள் மட்டுமே பொதுக்கூட்டங்கள் நடத்துவது, பங்கேற்பது என்றிருந்த நிலைகளை மாற்றித் தமது இல்லத்தில் பெண்களைக் கொண்டு பெண்களுக்காகவே கூட்டங்கள் நடத்த வேண்டும் நடத்திக காட்டமுடியும் என்பதைப் செய்து காட்டிய பாரதியாருக்குக் கடையவாழ்வில் அவ்வாறான சூழல் வாய்க்க

வில்லை. பின்னர் மீண்டும் சென்னைக்கு வந்தபிறகு, ஒரு புத்தெழுச்சி தோன்றியது. எழுதுகிற, பேசுகிற பெண்மக்கள் மெல்லக்கிளர்ந்தெழத் தொடங்கியிருந்தனர்.

அக்காலத்தில் சென்னையில் தொடங்கப்பெற்ற பாரத ஸ்திதி மகாமண்டல் என்னும் பெண்ணிய அமைப்பின் கூட்டங்களில் பங்கேற்க வேண்டி, பாரதியாரின் துணைவியார்க்கும் அழைப்பு அனுப்பப்பெற்றது. அதில், மனைவியையும், மகளையும் அழைத்துச் சென்று கலந்துகொள்ளச் செய்த பாரதியார், அந்நிகழ்ச்சி முடிந்ததும் சென்று திரும்பக் கூட்டி வந்திருக்கிறார்.

"சென்னையில் பாரத ஸ்தி மகாமண்டல் என்று ஓர் சபை ஏற்படுத்தினார்கள். அதில் சேருமாறு என் தாயாருக்கு அழைப்பு அனுப்பினார்கள். கோவிந்தப்ப நாயக்கன் தெருவிலுள்ள சௌந்தர்ய மஹால் கட்டிடத்தில், பாரத ஸ்திரீ மகாமண்டலின் கூட்டம் ஒருமுறை நடைபெற்றது. கவி ரவீந்திரநாத் டாகூரின் உறவினரான ஸ்ரீமதி சரளாதேவி சௌத்ராணி சென்னைக்கு விஜயம் செய்திருந்தார். அவர் மேற்படி கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். கூட்டம் ஆரம்பிக்க சிறிது நேரத்திற்கு முன்பே என் தந்தை என்னையும் என் தாயாரையும் அழைத்துக்கொண்டு வந்து சௌந்தர்ய மஹாலில் விட்டுவிட்டு, தான் எர்ரபாலு செட்டித் தெருவிலிருந்த சுதேச மித்திரன் காரியாலயத்திற்குப் போய்விட்டார். ஸ்ரீமதி சரளாதேவி தாம் இயற்றியிருந்த ஹிந்துப் பாடல் ஒன்றைப்பாட விரும்பினார். தனியாக ஒருவர் பாடுவதைவிட நாலைந்து பேர்கள் சேர்ந்து பாடினால் மிக்க உத்ஸாகமாக இருக்குமென்று எண்ணி, என்னையும் சபைக்கு வந்திருந்தவர்களில் வேறுசில பெண்களையும் கூப்பிட்டு, எங்களுக்கு அந்தப் பாடலைப் பாடும் முறையைக் கற்றுக் கொடுத்தார். நாலைந்து கையெழுத்துப் பிரதிகளும் தயார் செய்து ஒவ்வொருவருக்கும் அளித்தார்... பண்டிதை விசாலாட்சி அம்மாளும் அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள். என் தந்தையார் சென்னைக்கு வந்திருக்கும் விவரம் அவருக்கு அதுவரை தெரியாதாம். என் தந்தை, எங்களைத் திரும்ப அழைத்துப்போக வந்தவுடன் அவரைக்கண்டு, தமது புஸ்தகங்கள் சிலவற்றைப் படித்து அபிப்பிராயம் கூறுமாறு கேட்டுக்கொண்டார்"[30] என்று சகுந்தலாபாரதி குறிப்பிடுகின்றார்.

இக்குறிப்பில் சுட்டப்பெறும், சுப்பலட்சுமி அம்மாள், சென்னையில் சாரதா ஐக்கிய சங்கம் என்ற பெயரில் பெண்கள் அமைப்பை ஏற்படுத்திப் பல பொதுக்கூட்டங்களை நடத்தியவர். பெண்கல்வி, பெண் முன்னேற்றம் முதலானவற்றிற்காகப் பாடுபட்டவர். நீதிபதி சதாசிவ ஐயரின் துணைவியார் மங்களாம்பாள் அம்மையார் என்பவர் இச்சங்கத்தின் தலைமைப்பொறுப்பு வகித்தவர்.

அவர் பாரதியார் புதுவையில் இருந்த காலத்தில், பிஜூத்தீவில் அடிமைக்கூலிகளாகிப் பெண்கள் படும் பாடுகளைப் போக்க வேண்டும் என்று இச்சங்கக் கூட்டத்தில் பேசி யிருக்கின்றார். அப்பேச்சுக்கிடையில், பாரதியாரின் 'கரும்புத் தோட்டத்திலே' என்கின்ற பாடலைப் பாடி விளக்கியிருக்கின்றார்.

இவ்வாறு மற்றவர்களும் குறிப்பாகப் பெண்களும் பேச்சாளர்களாக வர வேண்டும் என்கின்ற பாரதியாரின் கனவு அவர்காலத்திலேயே நனவாகி யிருப்பது சிறப்பிற்குரியது.

***தம்மின் தம்மக்கள்...***

இந்த இடத்தில் இன்னொன்றையும் நினைவுகூர்வது பொருத்தம். பெண் மக்கள் புதுமைப்பெண்களாக வளரவேண்டும் என்பதை ஊருக்குத்தான் உபதேசம் என்பதாக இல்லாமல், தம் பெண்களையே அவ்வாறு வளர்த்தெடுக்கப் பாரதியார் முடிவு செய்திருந்தார். பழமையும் மூடத் தனமும் நிறைந்திருந்த அக்காலத்தில், வறட்டுச் சம்பிரதாயங்களும், அதீத ஆச்சாரமும் மலிந்திருந்த பிராமணச்சூழலில் தம் குடும்பத்தாரையே மாற்றி யமைக்கப் பாரதியார் பட்ட பாடு பெரும்பாடு.

அப்போது நடந்த ஒரு நிகழ்வு, பாரதியாரின் எண்ண வோட்டத்தைப் பதிவு செய்வதாக அமைகின்றது. அந்நிகழ்வினை நினைவுகூர்ந்து, சகுந்தலா பாரதி எழுதுகிறார். "எனக்கு ஐந்து வயதாக இருக்கும்போது ஒரு சமயம் கடுஞ்சுரநோய் கண்டது. காய்ச்சலின் வேகத்தால் நாக்குழறிவிட்டது. என் தந்தையின் உண்மை சிநேகிதருள் ஒருவரும், என் வளர்ப்புத் தந்தையாக நான் கருதியவருமான ஸ்ரீ பொன்னு முருகேசம்பிள்ளை என்னைப் பார்க்க வந்தார். "என் தந்தை, பாப்பா, யார் வந்திருக்கிறார்கள், பார்!" என்றார். முருகேச பிள்ளை என்று சொல்ல எண்ணிய எனக்கு, சுரவேகத்தால் நாக்குழறிப் போயிற்று. "முருகேழ பிள்ளை" என்று சொன்னேனாம். என் தந்தை சுவரில் மோதிக்கொண்டார். புலம்பினார். "பாப்பா, கடற்கரை மேடையிலிருந்து சிங்கம் கர்ஜிப்பது போலப் பிரசங்கம் செய்யப் போகிறாய் என்று எண்ணியிருந்தேனே! என்ன குற்றம் செய்ததினால் குழந்தைக்கு இக்கதி நேர்ந்தது? தாய் தந்தையரின் செய்கைகள் மக்களைப் பாதிக்கின்றன. சரீர வாதனையைத் தான் அனுபவிப்பதை விடத் தன்னில் இனியார் தம்மக்கள் அனுபவிப்பதைப் பார்ப்பது பதின்மடங்கு கொடியது. நான் என்ன குற்றம் செய்தேன்? என்னிடமுள்ள கெட்ட பழக்கம் நான் புகையிலை போட்டுக் கொள்வது ஒன்றுதான். அதையும் இன்றுடன் விட்டு விட்டேன்" என்று சபதம் கூறினார்."[31]

இவ்வாறு, ஆத்மசுத்தியோடு சக்தியைப் பிரார்த்திக்கும் பாரதியார் ஓரிடத்தில் எல்லை கடந்த நிலையில்,"பராசக்தி, இந்த உலகத்தின் ஆத்மா நீ. உனக்கு அறிவில்லையா? உனக்குக் காது கேட்காதா? நாள்தோறும் உன் மீது பாட்டுப் பாடுகிறேன். நான் கேட்கிறேன். நான் கேட்கும் வரங்களையெல்லாம் கொடுத்து விடக்கூடாதா? என்று கேட்கிறார்.

அவர் வேண்டுதலுக்கு இணங்கிப் பராசக்தி அருள்பாலித்தாள் போலும். அதனையும் நன்றியோடு நினைவுகூர்ந்த பாரதியார், "குழந்தைக்கு ஜ்வரம் வந்தது. நினது திருவருளால் குணமாய்விட்டது. இரண்டுமாதகாலம் இரவும் பகலுமாக நானும் செல்லம்மாளும் புழுத்துடிப்பதுபோலத் துடித்தோம். ஊன் நேரே செல்லவில்லை. இருவருக்கும் எப்போதும் சஞ்சலம். பயம், பயம், பயம்! சக்தீ, உன்னை வாழ்த்துகிறேன்"[32] என்று எழுதுகிறார் பாரதியார்.

"தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கெல்லாம் இனிது"

என்ற திருக்குறளில் இடம்பெறும் மக்கள் எனும் சொல், பெண் பாலையும் உள்ளடக்கிய பொதுச்சொல். ஆனால் இங்கு அதனையும் கடந்து பெண்மக்களுக்கே உரியதெனவும் ஆக்கிக் காட்ட முடியும் என்பதனை ஒரு நல்ல தந்தையாகவும் இருந்து பாரதியார் செய்து காட்டியிருக்கின்றார் எனலாம்.

பாரதிதாசன் பார்வையில் பாரதியார் உள்ளமும், பயன்மிகு செயற்பாடும்

"சாதி ஒழித்திடல் ஒன்று - நல்ல
தமிழ் வளர்த்தல் மற்றொன்று
பாதியை நாடு மறந்தால்- மற்றப்
பாதிதுலங்குவதில்லை
சாதி களைந்திட்ட ஏரி -நல்ல
தண்டமிழ் நீரினை ஏற்கும்
சாதிப் பிணிப்பற்ற தோளே - நல்ல
தண்டமிழ் வாளினைத் தூக்கும்
என்றுரைப்பார் என்னிடத்தில் - அந்த
இன்ப உரைகள் என் காதில்
இன்றும் மறைந்திடவில்லை"[33]

என்று பாரதியார் உள்ளத்தைப் பாரதிதாசன் தம் பாடலின்வழி உணர்த்துகின்றார்.

"மேலவர் கீழவர் இல்லை- இதை
மேலுக்குச் சொல்லிடவில்லை
நாலு தெருக்களின் கூட்டில் - மக்கள்

நாலாயிரத்தவர் காணத்
தோலினில் தாழ்ந்தவர் என்று - சொல்லும்
தோழர் சமைத்ததை உண்பார்
மேலும் அப் பாரதி சொல்வார் "சாதி
வேரைப் பொசுக்குங்கள்" என்றே."[34]

இவ்வாறு சொல்லியதோடு அமையாமல் தன் செயலிலும் செய்துகாட்டி, அதற்குப் பரிசென வறுமையை ஏற்ற பெற்றியை, பாரதிதாசனின் கவியுள்ளம் பின்வருமாறு கண்டு பாடுகின்றது.

"சாதிகளே இல்லையடி பாப்பா" என்றார்.
"தாழ்ச்சி உயர்ச் சிகள்சொல்லல் பாவம்" என்றார்.

சோதிக்கின் "சூத்திரற்கோர் நீதி தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேறோர் நீதி"
ஓதியதைப் பாரதியார் வெறுத்தார். நாட்டில்
ஒடுக்கப்பட் டார்நிலைக்கு வருந்தி நின்றார்.
பாதிக்கும்படி "பழமை பழமை என்பீர்
பழமைஇருந் திட்டநிலை அறியீர்" என்றார்.
தேசத்தார் நல்லுணர்வு பெறும்பொருட்டுச்
சேரியிலே நாள்முழுதும் தங்கியுண்டார்.
காசுதந்து கடைத்தெருவில் துலுக்கர் விற்கும்
சிற்றுணவு வாங்கிஅதைக் கனிவாய் உண்டார்.
பேசிவந்த வசை பொறுத்தார். நாட்டிற் பல்லோர்
பிறப்பினிலே தாழ்வுயர்வு பேசுகின்ற
மோசத்தை நடக்கையினால், எழுத்தால், பேச்சால்
முரசறைந்தார் இங்கிவற்றால் வறுமை ஏற்றார்.[35]

இவ்வாறு, பாரதியார் வாழ்வில் நடந்த நிகழ்வுகள் ஒவ்வொன்றிலும் அவரது அனுபவமுத்திரை பெற்ற வாசகங்கள் ஏராளமாய் அறியக் கிடைக்கின்றன. யதுகிரி அம்மாள், செல்லம்மாள் பாரதி, தங்கம்மாள் பாரதி, சகுந்தலாபாரதி, பாரதிதாசன், வ.ரா. உள்ளிட்டோரின் படைப்புகள் அனைத்தையும் தொகுத்துப்பார்த்துச் சேகரித்தால் அவை விரிவுறக் கிடைக்கும்.

சுதேசமித்திரன் தொழிலாளர்கள் செய்த அன்னதானம்

"சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம் - வெறும்
சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்?"[36] என்று பட்டினியின் கொடுமையில் கவிதையாய் வெடிக்கும் பாரதியார்,

"வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும்- இங்கு
வாழும் மனிதருக்கெல்லாம்!"[37]

என்று முரசுகொட்டி முழக்கியதைச் சுதேசமித்திரன் அலுவலகத் தொழிலாளர்கள் நடைமுறைப்படுத்தியபோது, பாரதியார் அதில் பங்கேற்றதோடு முருகக்கடவுள்மீதான பாடல்களைப் பாடியிருக்கின்றார்.

அது, மித்திரன் ஆபீஸ் தொழிலாளர்களின் அன்னதானம் என்ற தலைப்பில், சுதேசமித்திரன், 24 ஜனவரி 1921 இதழில் பின்வரும் செய்தியாகியிருக்கின்றது.

"நேற்று (23.1.21) முற்பகல் சென்னை சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள குருவப்ப செட்டித் தெருவில் சுதேசமித்திரன் அச்சுக்கூடத் தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்து சுமார் 500 பரதேசிகளுக்கு அறுசுவை பதார்த்தங்களுடன் சம்பிரமமாய் விருந்து நடத்தி வைத்தனர். மித்திரன் உதவி ஆசிரியர்களில் மற்றொருவரான மிஸ்டர் சுப்பிரமணிய பாரதியார் சமயோசிதமாய் ஸ்ரீமுருகக் கடவுள்மீது சில அபூர்வமான தோத்திரங்கள் கவனஞ்செய்து பாடினார்."[38]

பாரதியார் பாடியது எந்தப்பாடல்?

இச்செய்தியில் அன்னதானம் செய்யப்பெற்ற நோக்கம், விபரம் எதுவும் இடம் பெறவில்லை. ஆனால் முருகக்கடவுளை வாழ்த்திப் பாரதியார் பாடினார் என்ற செய்தியையும் நடந்த தேதியையும் கொண்டு பார்க்கின்ற போது, அது தைப்பூசத்தை ஒட்டி, முருக பக்தர்களால் செய்யப்பெற்றதாக இருக்கக்கூடும். ஏனெனில் விருந்துண்டவர்கள் பரதேசிகள். அதாவது காவியுடை அணிந்த சாதுக்கள்; சாமியார்கள். மேலும் நடத்தியவர்கள், தொழிலாளிகள். அதிலும் உடன் உழைப்பவர்கள். ஒன்று திரள வேண்டியவர்கள் ஒன்றுகூடி ஒன்றுமற்றவர்களின் பசிப்பிணிபோக்க முயலும் போது, பாரதியாரால் எப்படிச் சும்மா இருக்க முடியும்? அதனால் அவர்கள் நலன்பேண, 'வருவாய் முருகா மயில்மீதினிலே' என்ற பாடலைப் பாடியிருப்பார் எனக் கொள்ளலாம்.

ஆனால், அபூர்வமான தோத்திரங்கள் என்று குறிப்பிடப் பெற்றிருப்பதால் பாடப்பெற்றது ஒருபாடல் அன்று. ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்கள் என்பது தெளிவு. அப்பாடல்கள் அபூர்வமான தோத்திரங்கள் என்றால், அவை எவை என்ற கேள்வி எழுகின்றது.

பாரதியார் பாடிய முருகப்பாடல்கள் பலவாகும்.

1. 'முருகா முருகா முருகா'
2. 'சொல்லவல்லாயோ கிளியே' எனத்தொடங்கும் கிளிவிடுதூது
3. 'வீரத்திருவிழிப்பார்வையும்' எனத்தொடங்கும் பாட்டு

4. 'பச்சைத்திருமயில் வீரன்' எனத்தொடங்கும் காவடிச் சிந்துப்பாடல் (இது முழுமையும் கிடைக்காத பாடல். அன்றியும் அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து மெட்டில் எட்டயபுர அரண்மனைப் புலவர்களுக்கு முன்னால் பாடிக் காட்டியபாடல். எனவே, இது இப்போது உதவாது.)

5. 'வில்லினை ஒத்த புருவமும்' எனத்தொடங்கும் வேலன் பாட்டு. (அ.ரா.கிருஷ்ணன் என்பார் தந்த கையெழுத்துப் பிரதியின்வழி பெற்று ரா.அ.பத்மநாபன் வெளியிட்ட பாரதி திருப்புகழ் பாடல்கள் இரண்டு. அருணகிரிநாதர் மரபில் பாரதியார் பாடிய திருப்புகழ் பாணியில் உருவான, 'மறமே வளர்த்த கொடியார்' எனத்தொடங்கும் பாடல் மற்றும் 'தோதக மெத்தனை' எனத் தொடங்கும் பாடல் ஆகியனவாகும்).

இவற்றுள் பாரதியார் பாடிய அபூர்வமான தோத்திரங்கள் எனக் குறிப்பிடப் பெறுவன எவை என்ற தேடலில் ஈடுபட்டபோது கிடைக்கும் சில செய்திகள் இன்னும் ஆய்விற்குக் களம் அமைப்பவை. பொருத்தம் கருதி, அவற்றை இங்கே குறிப்பிடுவது நலம்பயக்கும்.

மேல் தந்துள்ள பட்டியலில் இடம்பெற்றுள்ள பாடல்களுள் ஒன்றான 'வில்லினை ஒத்த புருவமும்' எனத்தொடங்கும் பாடல்கள் மூன்று. பாடல்களுக்குத் தேவையேற்படின் ஒருசில சொற்பொருள், குறிப்புப் பொருள் தருவது பாரதியார் இயல்பு. பாஞ்சாலி சபதத்தின் குறிப்பிட்ட பகுதிக்குப் பொருள் விளக்கமும்,குறிப்புரைகளும் தந்துள்ளார். மற்றபடி உரை விளக்கம் பெரும்பாலும் தந்ததில்லை. ஆனால், மேற்சுட்டிய பாடல்களுக்கு மட்டும் பாரதியார் பொருளுரை தந்திருக்கின்றார்.

## 'அருணகிரியின் கவிதை' கட்டுரையா? சொற்பொழிவா?

பொதுவாக, புராணங்களைக் குறியீட்டு நோக்கில் மட்டுமே ஏற்றுக் கொள்கின்ற பாரதியார் இப்பாடலில் கந்தபுராணச் செய்திகளை உள்ளடக்கிப் பாடுகின்றார். வேதங்களின் பின்னணியில் அக்குறியீட்டுப் பொருளும் புராணச் செய்திகளும் மக்கள் அறிந்து கொள்ளவேண்டும் என்கின்ற ஆர்வம் பாரதியாருக்கு இருந்திருக்கக் கூடும். அத்தோடு இதனைப் புன்னாகவராளி ராகத்தில் பாடலாம் என்ற குறிப்பும் தந்துள்ளார். '1920 இல் சுதேசமித்திரன் காரியாலயத்தாரால் வெளியிடப்பட்ட, கதாமாலிகா என்ற நூலில் இப்பாடல்களும், அதன் வியாக்கியானங்களும் பிரசுரமாகி யிருக்கின்றன. மேலும் அக்கதாமாலிகா நூலில் பெரும்பகுதி பாரதியாரால் எழுதப் பெற்றவை. ஒருசில அவருடைய மனைவி செல்லம்மாளின் பெயரில் வெளிவந்த பயணக்கட்டுரைகள்' என்று குறிப்பிடும் ரா.அ.பத்மநாபன், அதே நூலில் இருந்து 'அருணகிரியின் கவிதை' என்னும் கட்டுரையினையும்

எடுத்துத்தருகின்றார். 'இந்நூலில் உள்ளவை யெல்லாம் சுதேசமித்திரனில் வெளிவந்தவை' என்று தெரிவிக்கப் பட்டுள்ளது. பிற கட்டுரை கதை பாடல்களில் பாரதி பெயர் இருக்க, இந்தக் கட்டுரையில் பெயர் ஏதுமில்லை. பெயர் விடுபட்டுப்போயிருக்கலாம்'[38] என்கின்றார். மேலும், இக்கட்டுரை தொடர்பாக அவர் அளிக்கும் குறிப்புரையாவது:

"1906 ஆம் ஆண்டில் சென்னையில் இந்தியா வாரப் பத்திரிகையைப் புகழுடன் பதிப்பித்துக்கொண்டிருந்த 24 வயது பாரதி, சென்னை நகரின் முதன்மையான கல்விக் கூடமாகிய பிரஸிடென்ஸி காலேஜின் தமிழ்ச்சங்கக் கூட்டங்களுக்குத் தவறாமல் போய் வந்தார். அச்சங்கத்தில் அவர் ஒருமுறை பட்டினத்தார் பாற்றிப் பேசியுள்ளதாகவும், ஒரு முறை உ.வே. சாமிநாய்யர் மீது பாடல் பாடியதாகவும் செய்திகள் உள்ளன. பட்டினத்துப் பிள்ளையின் சரித்திரத்தைப் பற்றிப் பேசியுள்ள பாரதியார், அருணகிரிநாதரின் கவிதை நயத்தைப் பற்றியும் பேசியிருக்கலாம். எப்படியும் அருணகிரி பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அருணகிரியின் கருத்துக்கள் அவரை எவ்வளவு தூரம் ஆட்கொண்டன என்பது இங்குள்ள கட்டுரையில் மட்டுமன்றி பாரதியாரின் எழுத்தில் பிறவிடங்களிலும் காணலாம்."[40]

மேலும், பாரதியார் அருணகிரிநாதரின் 'மலடி வயிற்று மகன்போலே', மற்றும் 'கலியை அலைத்துத்தொலைத்து' எனத்தொடங்கும் திருப்புகழ்ப் பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். ஆக, இவற்றை யெல்லாம் கருத்தில் கொண்டு பார்த்தால், இக்கட்டுரை, பாரதியாரின் இலக்கியச் சொற்பொழிவுப் பிரிவில் இடம்பெற வாய்ப்புண்டு. இது குறித்த உறுதியான தகவல்கள் கிடைப்பின் கொள்ளலாம் என்கின்ற நிலையில் அவ்வுரையானது பின்னிணைப்பில் தரப்பெற்றுள்ளது. (காண்க. பின்னிணைப்பு-6)

எதனுள்ளும் கவித்துவத்தையும், ஆன்மிகந் தழுவிய அரசியல் பார்வையையும், சமுதாய மாற்றத்திற்குத் தேவையான கருத்துக்களையும் தேடும் பாரதியார் பார்வை அருணகிரிநாதருக்குள் கண்டதும், விண்டதும் என்னவென்பதை அறிய இக்கட்டுரை தொடர்பான தகவல்கள் வழி வகுக்கும்.

பாரதியார் பங்கேற்ற பிராமண சபைக்கூட்டம்

பாரதியார் மறைவதற்கு நான்கு மாதங்களுக்கு முன்பு திருவல்லிக் கேணியில் ஒரு பிராமண சபைக்கூட்டத்தில் கலந்து கொண்டிருக்கின்றார். எப்போதும் பிராமணச் சாதியைக் கடுமையாக விமர்சிக்கும் பாரதியார் இக்கூட்டத்தில் கலந்து கொண்டு பேசியது என்ன, அதன் நோக்கம் யாது என்பது முதலான கேள்விகளுக்குள் நுழையுமுன் அச்செய்தியினை முழுமையாகத் தெரிந்துகொள்ளலாம்.

## ஒரு பிராமண ஸபை திருவல்லிக்கேணியில் கூட்டம்

நேற்று மாலை 5.30 மணிக்கு திருவல்லிக்கேணி கங்கை கொண்டான் மண்டபத்தில் பிராமணரின் தற்கால நிலைமையைக் கவனித்து, இனியவர்கள் ஸ்வதர்மத்தை நன்கு அனுஷ்டிக்கவும், இதர ஜாதியாருடன் பிணக்கின்றி தங்கள் யோக க்ஷேமங்களைப் பாதுகாக்கவும், தேச கைங்கர்யத்தைச் செய்யவும் என்ன முயற்சிகள் செய்யவேண்டு மென்று ஆலோசிப்பதற்காக பிராமணரின் ஸபையொன்று கூடிற்று. ஆரம்பத்தில் வெகுசிலரே வந்திருந்தனராயினும், பின்னிட்டு ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி கர்ஜிக்கவாரம்பித்தவுடனே 200 பேருக்குமேல் கூடிவிட்டார்கள். சில பிராமணரல்லாதாரும் கூட்டத்தில் நின்றுகொண்டிருக்கக் காணப்பட்டனர்.

### ஸ்ரீமான் எம்.கே. ஆச்சாரியார்

கூட்டத்தில் அக்கிராஸனம் வகித்து முகவுரையாகப் பேசியதாவது: பிராமண சமூகத்துக்குத் தற்சமயம் பலவித கஷ்டங்கள் ஏற்பட்டிருக் கின்றன. பழைய காலத்தைப் போல் இப்போது பிராமணருக்கு சௌகரியங்கள் இல்லை. ராஜாங்கத்தின் ஆதரவு பண்டைக் காலத்திலிருந்தது போல் தற்சமயம் கிடையாது. பழைய நிலைமை இப்போது அடியோடு மாறிவிட்டது. இனி நாம் பிரயத்தனங்கள் செய்யாமல் முடியாது. நமது வேதங்கள் அனைத்தும் புத்தியில்லாத எழுத்தென்று சில பிராமணரல்லாதார் நினைத்து ஸங்கடப் படுகிறார்கள். பிராமணருக்கே தங்கள் தர்மத்தில் சிரத்தை குறைந்து விட்டது. வயிற்றுக்கில்லாமற் போனாலும் நாம் தர்மத்தைக் கைவிடலாகாது. ஜீவனோபாயத்தில் நமக்குள்ள சிரத்தை நமது தர்மத்தைக் காப்பாற்றுவதில் கிடையாது. வர்ணாச்ரம தர்மம் கூடாதென்று நமக்குள்ளே சிலர் சொல்ல வாரம்பித்து விட்டனர். பிராமண தர்மத்தை அடியோடு விட்டுவிடுவதாவென்று நான் கேட்கிறேன். பொது விசாரம் அதாவது நமது சமுதாய நன்மையைக் கவனித்தால் நன்மை யுண்டாகாதா? நம்மில் இரண்டொருவர் கூடிப் பேசுவதினால் பயனென்ன வென்று கேட்பதில் அர்த்தமே யில்லை. நம்பிக்கையுள்ளவர்கள் தொகையில் கொஞ்சமாயிருப்பினும், மனச்சாட்சிப்படி மட்டும் அவர்கள் நடப்பார்களாகில், மற்றவர்களும் அன்னாரைப் பின்பற்றுவார்கள். மன உறுதியுடன் நியாயமார்க்கத்தில் நடக்கும்பட்சத்தில் நமக்கு நிச்சயம் கௌரவமுண்டாகும். நமது இயக்கத்தினால் பிராமணத் துவேஷம் அதிகரிக்காதாவென்றால், அதற்கும் நாம் தயாராயிருக்கவேண்டும். அஞ்சக் கூடாது. அநியாயக்காரர்கள் என்றைக்.தும் சண்டைக்குத்தான் வருவார்கள். சொத்து அல்லது ஸுகத்தில் நாம் பங்கு கேட்கிறவரையில் சண்டை-

ஒழியப்போகிறதில்லை. பிராமண தர்மம் உத்திருஷ்டமானதென்று நான்கு பேராவது காட்டினால், நம்மிடத்திலுள்ள துவேஷம் கட்டாயம் ஒழியும். பலாபேட்சை உதவாது. தைரியமாய் நமது கடமையைச் செய்தால் ஈசுவர ஸங்கல்பம் நமக்கனுகூலமாகவே யிருக்கும். நமக்குள் ஒற்றுமையேற்பட்டு, ஒரு பலமான சமுதாய சக்தியை உண்டுபண்ணப் பார்ப்பது ஒவ்வொருவருடைய கடமையாகும்.

## தீர்மானங்கள்

பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. பலவகைக் காரணங்களாலும் சந்தர்ப்பங்களாலும் பிராமண சமூகத்தார் பொதுவாய் தர்ம வழியிலிருந்து பிறழ்ந்து விட்டதைக் குறித்து இப்பிராமணர் ஸபை வருத்தப்படுவதோடு, ஜாதியின் க்ஷீண திசையைத் தடுக்கப் பின்கண்ட யோசனைகளும் சொல்கின்றது. (அ) சமஸ்க்ருதத்திலும், மத விஷயத்திலும், தர்ம சாஸ்திரங்களிலும், பிராமணச் சிறுவர்களுக்குக் கல்வி போதிக்கச் செய்து, தங்கள் தர்மத்தைச் சரிவர நிறைவேற்றிவைக்க அனுகூலமாயுள்ள தொழில்களில் மட்டும் இறங்கும்படி பிராமணச் சிறுவர்களுக்குப் புத்தி சொல்ல வேண்டும்.

2. பிராமணர்மீது யார் பகைமை காட்டியபோதிலும், அன்பும் பொறுமையும் காட்டி, பிராமணர்கள் எல்லாவகுப்பினருக்கும் ஆத்ம ஞானத்தைத் தீவிரமாய் உபதேசிக்க வேண்டும்.

3. தேசத்தின் தற்போதைய நிலைமையை உத்தேசித்து, பிறப்பினால் பஞ்சமர்களாயிருப்போரை சமூகத்தில் முன்னேற்றவும், பசுவதை மதுபானம் முதலியவற்றை' நிறுத்த வேண்டுமென்று அவர்களை நிர்ப்பந்திக்கவும் இக்கூட்டம், பிராமணருக்கு அழுத்தமாய் சிபாரிசு செய்கின்றது.

முதலாவது தீர்மானத்தை அக்கிராசனரே பிரேரேபித்தார். ஸ்ரீமான் டி.கே.ராமசந்திரராவ் ஆமோதித்தார். 2வது தீர்மானித்தை ஸ்ரீமான் டி.எ.நரஸிம்மாசாரியார் கொண்டுவந்தார். ஸ்ரீமான் ஹரி ராவ் ஆமோதித்தார். 3வது தீர்மானித்தின்பேரில்தான் பலத்த விவாதம் நடந்தது. 'சிபார்சு செய்கின்றது' என்பதற்கு பதிலாக 'கட்டளை யிடுகின்றது' என்று தீர்மானத்தைத் திருத்த வேண்டுமென்று ஒருவர் திருத்தப்பிரேரணை கொண்டுவந்து கடைசியாய் அதை நெருக்கவில்லை. ஸ்ரீமான் ஹரிராவ் 'சமூக முன்னேற்றம்' என்பதற்குப் பதிலாக, 'அந்தஸ்து' என்று திருத்தும்படி யோசனை சொல்ல அது சும்மா பதிவு செய்யப்பட்டது. மூன்று தீர்மானங்களும் ஒருமனதாய்

நிறைவேற்றப்பட்டன. ஸ்ரீமான் ஸுப்பிரமணிய பாரதி பொதுவாக பிராமணரல்லாதார் இயக்கத்தின் அஸ்திவாரக் கொள்கையையும், போலிவாதங்களையும் நிர்த்தூளியாக்கிய பின் சபை கலைந்தது."

## சில கேள்விகள்

அரிதாய்க் கிடைத்த இந்தச் செய்தியினைத் தேடித்தந்து பாரதியன்பர்களின் பாராட்டைப் பெற்ற ஆ.ரா.வேங்கடாசலபதி இதனை முன்னிறுத்தி, புதிய ஆய்வுகளுக்கு வழி வகுக்கின்றார். அதனையும் இங்கு சுட்டல் இன்றியமையாதது,

1909இலேயே சென்னையில் தொடங்கப்பட்ட ஒரு பிராமணரல்லாதார் சபையைப்பற்றி எழுதுகையில், 'இந்தச் சங்கம் ஏற்படுத்தினவர்களின் நோக்கம் நல்லதாயிருக்கலாம். ஆனால், இதிலிருந்து விளைவது தீமைகளேயாகும்' என்றும், 'ஸர்வ குலங்களும் தத்தம் குணங்களால் மற்றவர்களுக்கு மனப்புண் விளைக்காமல் ஸமரஸ நிலை யடைந்து, பாரத மஹாஜாதி என ஒன்றேற்பட வேண்டுமென்பதாக நாமெல்லோரும் பாடுபட்டுவரும் இக்காலத்தில் இவ்வாறு பிரிவெண்ணங்க ளுண்டாகக் கூடிய சபைகளேற்படுத்துவது நமக்குத் தீமை செய்வோராகவே கருத வேண்டும்' என்றும் விமரிசனம் செய்திருக்கிறார்.

பார்ப்பனரல்லாதார் அறிக்கை வெளிவந்து, 1916இல் நீதிக்கட்சியும் தோன்றிவிட்ட நிலையில், 'ஜாதிக் குழப்பம்', 'ஜாதிபேத விநோதங்கள்' என்ற கட்டுரைகளில் திராவிட இயக்கம் பற்றி மேலும் கடுமையான விமரிசனங்களைப் பாரதி முன்வைத்தார்.

இந்த, பிராமணரல்லார் கிளர்ச்சி' கால கதியில் தானே மங்கி அழிந்து விடுமென்று நிச்சயிப்பதற்கும் போதிய காரணங்களிருக்கின்றன. முதலாவது, இதில் உண்மையில்லை. உண்மையாகவே, இந்தியாவில் ஜாதி பேதங்கள் இல்லாமல் செய்துவிடவேண்டுமென்ற ஐக்கியபுத்தியுடையோரில் மிகச் சிலரே இக்கிளர்ச்சியில் சேர்ந்திருக்கிறார்கள். பெரும்பாலும், சர்க்கார் அதிகாரங்களையும் ஜில்லா போர்டு தாலுகா போர்டு முனிசிபாலிட்டி சட்டசபை முதலியவற்றில் கௌரவ ஸ்தாபனங்களையும் தாமே அடைய வேண்டுமென்ற ஆவலுடையவர்களே இக்கிளர்ச்சியின் தலைவராக வேலை செய்து வருகிறார்கள் என்றும், பிராமணரல்லாதார் என்ற வகுப்பே கிடையாது. அதுவே பொய். இந்தக்கிளர்ச்சியின் மூலமே பொய்யாக இருப்பது கொண்டு இதனை உண்மை யில்லாத கிளர்ச்சி என்கிறேன்... பொய்யும் புலையுமாக. திராவிடர்களென்றும் ஆரியரென்றுமுள்ள பழைய சொற்களுக்குப் புதிய அபாண்டமான அர்த்தங்கள் கற்பித்துக்கொண்டு வீண் சண்டைகள் வளர்ப்பதனால்

ஹிந்து சமூகத்துக்கே கெடுதி விளையக் கூடும் என்றும் பாரதி வலுவாக எழுதியிருக்கிறார். இதன் தொடர்ச்சி யாகவே திருவல்லிக்கேணி பிராமண சபைக்கூட்டத்தின் பேச்சு இருந்திருக்க வாய்ப்புண்டு.

“பரம வைதீகரும், தாழ்த்தப்பட்டவர் கோயில் நுழைவைக் கடுமையாக எதிர்த்தவரும், வர்ணாசிர தர்மத்தின் பாதுகாவலராகச் செயல்பட்டவரு மாகிய எம்.கே. ஆச்சார்யாவுடன் பாரதி மேடையைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார் என்பது குறிப்பிடத் தகுந்த செய்தி”[12] என்று ஆ.இரா. வேங்கடாசலபதி குறிப்பிடுகின்றார். அவரது கருத்துக்களையும் முன்வைத்து இங்கு சில வினாக்களை எழுப்பி விடை தேடும்போது பல புதிய வழிகள் தோன்றக்கூடும்.

‘எம்.கே. ஆச்சார்யாவுடன் பாரதி மேடையைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார்’ என்றால், அது யாருடை மேடை? இச்சபையினைக் கூட்டியவர்கள், நடத்தியவர்கள் யாவர்? அவர்களுள் பாரதியாரும் ஒருவரா? அவருக்கு இச்சபையில் என்ன பொறுப்பு?

இச்சபையின் அக்கிராசனம் (தலைமை) வகித்தவர் பேசியவற்றைக் குறிப்பிடும் இப்பகுதியில் பாரதியாரின் பேச்சு தரப்பெறவில்லை. ஆகக் கடைசியில், “ஸ்ரீமான் ஸுப்பிரமணிய பாரதி பொதுவாக பிராமண ரல்லாதார் இயக்கத்தின் அஸ்திவாரக் கொள்கையையும், போலி வாதங்களையும் நிர்த்தூளியாக்கிய பின் சபை கலைந்தது” என்று சொல்லப் பெறுகின்றது. அவ்வுரையில் பாரதியார் பேசியதுதான் என்ன?

“ஆரம்பத்தில் வெகுசிலரே வந்திருந்தனராயினும், பின்னிட்டு ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி கர்ஜிக்கவாரம்பித்தவுடனே 200 பேருக்குமேல் கூடி விட்டார்கள். சில பிராமணரல்லாதாரும் கூட்டத்தில் நின்று கொண்டிருக்கக் காணப்பட்டனர்” என்றால் அவர்கள் யாவர்? பாரதியாருடன் வந்தவர்களா? பொதுமக்களா? அவ்வளவு கூட்டத்தைச் சேர்த்த பாரதியாரின் வாக்கியம் ஒன்றுகூடப் பதிவுசெய்யப்பெறாமல் அக்கிராசனம் வகித்த ஆசாரியாரின் பேச்சே முழுக்கப் பதிவு செய்யப் பெற்றுள்ளது. அக்கூட்டத்தில், பாரதியார், ஆசாரியார் தவிர வேறுயாரும் பேசவில்லையா?

கூட்டத்தின் நிறைவேற்றப்பெற்ற தீர்மானங்களில், ‘முதலாவது தீர்மானத்தை, அக்கிராசனரே, (அதாவது, ஸ்ரீமான் எம்.கே. ஆச்சாரியார்) பிரேரேபித்தார். ஸ்ரீமான் டி.கே.ராமசந்திராராவ் ஆமோதித்தார். 2வது தீர்மானித்தை ஸ்ரீமான் டி.எ.நரஸிம்மாசாரியார் கொண்டுவந்தார். ஸ்ரீமான் ஹரிராவ் ஆமோதித்தார்’ எனில் மூன்றாவது தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் யார்? ‘பலத்த விவாதம் நடந்த 3வது தீர்மானத்தில், ‘சிபார்சு செய்கின்றது’ என்பதற்கு பதிலாக ‘கட்டளையிடுகின்றது’ என்று திருத்த வேண்டுமென்று திருத்தப்

பிரேரணை கொண்டுவந்த ஒருவர்' யார்? 'கடைசியாய் அதை நெருக்க வில்லை. ஸ்ரீமான் ஹரிராவ் 'சமூக முன்னேற்றம்' என்பதற்குப் பதிலாக, 'அந்தஸ்து' என்று திருத்தும்படி யோசனை சொல்ல அது சும்மா பதிவு செய்யப்பட்டது'. இதில் சும்மா என்னும் சொல் உணர்த்தும் பொருள் யாது?

இச்செய்தியை முன்வைக்கும், ஆ.இரா.வேங்கடாசலபதியின் குறிப்புரைப்படி ஆச்சார்யார் அவருக்குரிய குணங்களோடு இருக்கும்போது, பாரதியார் மட்டும் தமது பண்புகளை எப்படி இழந்திருக்கமுடியும்?

'சாதி ஒழித்திடல் ஒன்று' என்று பாரதியின் பணியைப் பற்றிப் பாரதி தாசன் கூறும் தொடர், 'ஒரு சாதியைஒழித்திடல்' என்பதாகக் கொள்ளுதல் தகாது.

பாரதியார் கண்டுதந்த ஞானம், மநுதர்ம சாஸ்திரத்தின் வழிவந்த ஞானம் அன்று. அது ஒன்றே ஒன்றுதான்.

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு - நம்மில்
ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வு"[43] என்ற ஞானம்தான்.

"நன்றிது தேர்ந்திடல் வேண்டும் இந்த
ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும்?"[44] என்று பாரதியார் கேட்கின்றார்.

இதனை, பிராமணர்கள் ஆகிய நாம் என்று பிரித்தா சொன்னார்? பிராமணர் அல்லாதார் ஆகிய நாம் என்று பிரித்தா சொன்னார்? ஒரு வேளை அப்படிக்கொள்வதுகூடப் பிழையில்லைதான். 'எப்படியாவது ஒன்றுபடுங்கள். யாரையும் பிளவுபடுத்தாதீர்கள்' என்று சொல்வது தானே பாரதியாரின் நோக்கம்.

"கூட்டி மானுடச்சாதியை ஒன்றெனக்
கொண்டு வையம் முழுதும் பயனுறப்
பாட்டிலே அறம்"[45] காட்ட வந்த பாரதியார் இப்படிப் பிரிவினை வளர்ப்பதில் எப்படி முன்னிற்பார்?

"சூத்திரருக்கொருநீதி - தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொருநீதி
சாத்திரம் சொல்லிடுமாயின் அது
சாத்திரமன்று சதியென்று கண்டோம்"[46]

என்று தெளிவுபடுத்துகின்ற பாரதியார் இந்தச் சங்கத்தில் என்ன பணி செய்திருப்பார்? எவ்வாறு உரை நிகழ்த்தியிருப்பார்?

கடைசிக்காலத்தில் அவர் அரங்கேறி,

"முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொதுவுடைமை"[47] என்றுபாடிய பாரதியார் 4 மாதங்களுக்கு முன் மட்டும் எப்படி மாறியிருப்பார்?

"நந்தனைப்போல் ஒரு பார்ப்பான் இந்த
நாட்டினில் இல்லை"[48]

என்று பாடிய பாரதியார், குவளைக்கண்ணனைப் பாடும்போது,

"பார்ப்பாரக் குலத்தினிலே பிறந்தான். கண்ணன்
பறையரையும் மறவரையும் நிகராக் கொண்டான்"[49]

என்றும் பாடுகின்றார்.

"பார்ப்பாரை ஐயரென்ற காலமும் போச்சே - வெள்ளைப்
பரங்கியரைத் துரையென்ற காலமும் போச்சே"[50]

என்று பாடிய பாரதியார், வெளிநாட்டினரின் அடக்குமுறையும், உள் நாட்டினரின் அடக்குமுறையும் 'போச்சு' என்று சொல்லும் காலம் வரும் என்று சொல்லும்போது, போகவேண்டியவை இரண்டும் என்பது தானே பொருள். பிராமணர் - பிராமணரல்லாதார் என்ற வகுப்பு வாதம் பற்றிப் பாரதியார் எழுதியதை முன்வைக்கின்ற ஆ.இரா.வேங்கடாசலபதி, பிராமணர்களைச் சாடிப் பாரதியார் முன்வைத்த கருத்தாக்கங்களை ஏன் கண்டு கொள்ளவே யில்லை?

### சில கருதுகோள்கள்

பாரதியார், 'பிராமணரல்லாதார் சபையைப் பின்பற்றி, செட்டி யல்லாதார், முதலி யல்லாதார், பிள்ளையல்லாதார், நாயுடுவல்லாதார், என்ற சபைகள் ஏற்பட்டுக் கொண்டே போனால் எத்தனை விநோதமா யிருக்கும்' என்று சொன்னது இன்று உண்மையாகிவருகின்றது. 'அல்லாதார்' என்ற கருத்தை உள்ளடக்கி, அந்தந்தச் சாதிக்கும் ஒவ்வொரு சங்கங்கள் தோன்றிச் சாதித்து வருவதை, இன்று காண முடிகின்றது. அதேசமயம் அத்தகு அமைப்புக்குள் இருக்கும் ஒருவகையான உடன்பாட்டு (Positive) வளர்தன்மையையும் பாரதியார் மறுக்கவில்லை. அதனால்தான், "ஒவ்வொரு குலத்தாரும் சிற்சில நலங்களை உத்தேசித்தும், பொதுநலத்தை மறக்காமலும், தனித்தனி சபைகளேற்படுத்திக் கொள்வது பிழையாக மாட்டாது" என்று குறிப்பிடுகின்றார். அதற்குப்பின்னர்தான், "அதுவன்றி, ஒரு வகுப்பை மட்டும் பிரித்து அவரல்லாத மற்ற வகுப்பினர் சபை என்று ஸ்தாபனம் செய்வதன் பொருள் நமக்கு விளங்கவில்லை"[51] என்ற வினாவைத் தர்க்கரீதியாக எழுப்புகின்றார். இந்தத் தர்க்கத்தின் அடிப்படையில்தான் பாரதியார் அந்த அரங்கிலும் முழங்கியிருப்பார்.

"அக்கூட்டத்தின் ஆரம்பத்தில் வெகுசிலரே வந்திருந்தனராயினும், பின்னிட்டு ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி கர்ஜிக்க வாரம்பித்தவுடனே 200 பேருக்குமேல் கூடி விட்டார்கள். சில பிராமணரல்லாதாரும் கூட்டத்தில் நின்றுகொண்டிருக்கக் காணப் பட்டனர்" என்றால் அங்கு கர்ஜனை புரிந்த பாரதியார் எனும் சிங்கத்திடமிருந்து, தீண்டாமையை, சாதிவேறுபாட்டை முன்னிறுத்தும் பிராமணர் களுக்கு ஆதரவான செய்திகள் எப்படிக் கிடைத்திருக்கும்? எதனையும் ஆழமாய், ஆராய்ந்து அதன்பின் உரிய தீர்வுகளோடு தம் சிந்தனைகளைமுன்வைக்கும் பாரதியார், இப்படி ஒரு சபை தோன்றுவதற்குக் காரணமாகப் பிராமணர்கள் நடந்து கொண்டதை விரித்துச் சொல்லி இடித்துரைத்திருப்பார். அந்தப் பே(ா)ரொலி பிராமணர் அல்லாதாரையும் உள்வரச் செய்திருக்கக்கூடும். மிகுந்த கவனத்துடன் பாரதியார் உரையின் ஒரு பகுதி, - பெரும் பகுதி என்றே சொல்லாம் - இச்செய்தியில் இடம் பெறவில்லை.

மேலும், இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் ஒன்றான, "தேசத்தின் தற்போதைய நிலைமையை உத்தேசித்து, பிறப்பினால் பஞ்சமர்களாயிருப்போரை சமூகத்தில் முன்னேற்றவும், பசுவதை மதுபானம் முதலியவற்றை நிறுத்த வேண்டுமென்று அவர்களை நிர்ப்பந்திக்கவும் இக்கூட்டம் பிராமணருக்கு அழுத்தமாய் சிபாரிசு செய்கின்றது" என்ற மூன்றாவது தீர்மானம் யாரால் முன் வைக்கப்பட்டது என்று சுட்டப்படாத போதே அதன்பின்புலத்தில் (உறுதியாக) இரு(ந்திரு)க்கும் பாரதியாருக்கு இந்தச்செய்தி எவ்வளவு முக்கியத்துவம் அளித்திருக்கின்றது என்பது புலனாகிவிடுகின்றது.

அத்தோடு, 'சிபார்சு செய்கின்றது' என்பதற்கு பதிலாக 'கட்டளை யிடுகின்றது' என்று அந்தத் தீர்மானத்தைத் திருத்த வேண்டுமென்று ஒருவர் திருத்தப்பிரேரணை கொண்டுவந்து கடைசியாய் அதை நெருக்கவில்லை' என்றால் அந்த ஒருவர் ஏன் பாரதியாராக இருக்கக் கூடாது? பாரதியாராக இல்லாவிட்டால், மற்றவர்கள் பெயர்களை யெல்லாம் சுட்டுகின்ற இந்தச் செய்தி, அந்த ஒருவர் பெயரை மட்டும் ஏன் சுட்டவில்லை?

அதுமட்டுமன்று. 'ஸ்ரீமான் ஹரிராவ் 'சமூக முன்னேற்றம்' என்பதற்குப் பதிலாக, 'அந்தஸ்து' என்று திருத்தும்படி யோசனை சொல்ல அது சும்மா பதிவு செய்யப்பட்டது' என்றால் இந்தத் தீர்மானத்தில் சபையாருக்குச் சம்மதமில்லை; அதாவது, பாரதியாரைத் தவிர மீதி உள்ள சபையாருக்குச் சம்மதமில்லை என்று கருத இடம் இருக்கின்றது.

அதற்கான வாதத்தில் பாரதியார் தீவிரமாக ஈடுபட்டிருக்கக்கூடும். அவற்றை விடுத்துத் தங்களுக்குச் சாதகமான பகுதிகளை மட்டும் இச்செய்தியாளர் தந்திருக்கின்றார்.

இத்தனைக்கும் சுதேசமித்திரன் இதழில் பணிபுரிகின்ற பாரதியாருக்கே இந்த நிலை என்றால், ஏனையவர் என்ன ஆவர்?

1921மே மாதம் 2,3, ஆகிய நாட்களில் திருவண்ணாமலைப் பகுதிகளில் உரையாற்றச் சென்ற பாரதியார், 4.5.1921 அன்று சென்னை திரும்பி வந்து, அன்று மாலை திருவல்லிக்கேணியில் நடைபெற்ற பிராமண சபைக் கூட்டத்தில் பங்கேற்றிருக்கின்றார். இவ்வாறு தொடர்ந்து பாரதியார் பங்கேற்றுவரும் செய்திகளை அந்தந்தப் பகுதி நிருபர்களே எழுதி யிருக்கின்றனர் என்பது தெரிகிறது. ஆகவே, பாரதியாரின் பிராமண சபை உரை, அத்தகு நிருபர் ஒருவரின் நோக்கிலேயே பதிவு செய்யப்பட்டுள்ளது. அந்நிருபர், இச்செய்தியில் பாரதியாரை முழுமைப்படுத்தவோ, முதன்மைப் படுத்தவோ செய்யாமல், ஆச்சாரியாரையே முதன்மைப்படுத்தி யிருக்கின்றார். இதனால் இக்கூட்டத்தை ஏற்பாடு செய்தவர், அமைப்பாளர் என்பதான நிலைகளில் அவரே முதன்மை வகிக்கின்றார். காந்தியடிகளைப் பாரதியார் சந்திக்கப்போவதுபோல், பாரதியார் இக்கூட்டத்தில் பங்கேற்கப் போனது யதேச்சையானதாக இருக்கலாம். இது குறித்து இன்னும் தேடப் புகின் பாரதியார் அச்சபையில் ஆற்றிய பொழிவு கிடைக்கும் எனில் இக்கருத்துக்கள் மேலும் வலுப்படும் என்பதன்றி மாறுபட வாய்ப்பில்லை என்பது உறுதி. காரணம், பாரதியாரின் இயல்பு அது.

நிறைவாக

நிறைவாக ஒன்றைச் சொல்லலாம். பாரதிதாசன் மதிப்பிடுவதைப் போல், அவர்,

'இந்நாட்டினைக் கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு
நீடுதுயில் நீக்கப் பாடிவந்தநிலா
திறம் பாட வந்த மறவன்
புதிய அறம் பாட வந்த அறிஞன்
நாட்டிற் படரும் சாதிப்படைக்கு மருந்து
மண்டும் மதங்கள் அண்டாநெருப்பு
அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கு'[52]

என்பதில் ஐயமில்லை. காரணம், இறுதிவரையிலும் தன்னிலை பிறழாத் தகுதியாளராக, கால தேசவர்த்தமானங்களுக்கிடையில் எத்தனை சோதனைகள், வேதனைகள் வந்தபோதிலும் சளைக்காமல் பின்வாங்காமல், சரியாமல், ஒழுக்கநெறிநின்று பிறவிப்பெருங்கடல் நீந்தி நிலைத் திருக்கின்றார்.

அவருடன் இணைந்து தேசத்தொண்டாற்றிய பலரும் பலவித

முகங்கள் உடையவர்கள். அவர்களோடு பழகி, பணி தொடர்ந்தாலும், அவர்களோடு, பொருந்துமிடத்தில் பொருந்தி, நிறைபோற்றி, குறை சுட்டி நிமிர்ந்த குன்று அவர். குறிப்பாக, சாதி, சமயப் பகைமைகள் காணுங்கால் வெகுதீர்க்கமாக எதிர்கொண்டு அழிக்க முனைந்தவர். பிறவிவிதித்த சாதியினை இறுதிவரையிலும் மீறி வாழ்ந்தவர். உடனுறைந்தோரெல்லாம் சாதியின் பெயர்களால், பிள்ளை, ஐயர், ஐயங்கார், செட்டியார், முதலியார் முதலான பின்னொட்டுக்களில் நிலைத்தபோது பாரதியார் மட்டும் பாரதியாகவே நிலைத்திருக்கின்றார். மரியாதைகருதி அவரவர் முன்னொட்டுப் போட்டார்களேயன்றி, மகாகவி என்பதும்கூடப் பாரதி என்பதை ஒட்டித்தான் உயிர் பெறுகின்றது.

39 ஆண்டுகளுக்குள் முடிந்துபோன அவர் வரலாற்றை முழுக்கப் பார்க்கின்றபோது, காலமுழுக்க, எதனைக் கடந்து வாழ வேண்டுமென்று அவர் கருதிப் பணிபுரிந்தாரோ, எப்போதும், சாதிய, சமய முத்திரைகள் இன்றி நித்தியதீரராய் வாழவேண்டுமென்று தீரமாய் வாழ்ந்து நிறைவு செய்தாரோ, அந்த நிலையிலேயே அவர்தம் இறுதிச்சடங்கு நடத்த இயலாமல், பிராமணர்களுக்கென்று குறிக்கப்பட்டிருந்த பகுதியில் அவர் உடல் தகனம் செய்யப்பட்டது. 'புதிய இந்தியாவின் விடிவெள்ளியான ராஜாராம் மோகன்ராய் மறைந்தபொழுது அவர் உடலின்மீது பூணூல் இருந்ததை ஒரு குறையாகச் சுட்டிக்காட்டிய பாரதியாருக்கு இவ்வாறு நேர்ந்தது உவப்பானது இல்லை. வாழ்வுமுழுக்க எதனை எதிர்த்துச் சமர் புரிந்தாரோ அதற்கு எதிராகவே இதுவும் அமைந்துவிட்டது. விதி. ஆயினும் அவர் அது கடந்து நின்றவர்; நிலைத்தவர் என்பதை மீளவும் நினைப்பூட்டிக் கொள்ள, அவர்தம் நிறை வாழ்வு என்றுமுள தென்தமிழாய் நிலைத்திருக்கின்றது எனலாம்.

இதற்குப்பின்னும் இவரது சாதி, சமயச் சான்றுகளைக் கொண்டு, பாரதியாரை அத்தகு சிமிழில் அடக்கமுனைவோர்க்குத் தரும் பதில் இதுதான். இதனை ஒருமுறைக்குப் பலமுறை படித்து அவர்கள் புரிந்து தெளியப் பணிவான வேண்டுதல்.

"விபூதி, நாமங்களைப் போட்டுக்கொண்டு, பஜனை மடங்களில் பாடியும் ஆடியும் அவமாகக் காலம் போக்கிக் கொண்டிருந்த என்னை இன்றுள்ள நிலைக்குக் கொண்டு வந்தவர் பாரதியார்தான். பாரதியாருக்குப் பூணூல் போட்டு, நாமமிட்டு, அவரைப் பற்றி இல்லாத பொல்லாத கதைகளையெல்லாம் அளப்பவர்கள் அவரை நன்கு அறியாதவர்களேயாவர். பாரதியாரைப்பற்றி இன்று வந்திருக்கும் விஷயங்கள் பெரும்பாலானவை கட்டுக்கதைகளேயாகும். அன்பர் வ.ரா.போன்று பாரதியாருடன் பழகிய இரண்டொருவர்தான்

உண்மையான சில விஷயங்களைக் கூறி யிருக்கின்றனர். பாரதியாரைக் குறித்து உண்மையாக வரவேண்டிய செய்திகள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. பாரதியார் அன்றுள்ள நிலையில், தேசவிடுதலையை முதன்மையாகக் கருதினார். இன்று அவர் இருப்பாரானால், என்னைப் போலவே, முழுக்க முழுக்கச் சமூகச் சீர்திருத்தங் குறித்த கவிதைகளையே இயற்றியிருப்பார்"[53] என்று சொன்ன பாரதிதாசனின் கருத்தை இங்குக் கருதிப்பார்த்தால் பாரதியாரின் உளமும், உணர்வும், செயல்திறனும் நன்கு புலப்படும்.

இன்றைக்குப் பாரதியார் கணித்த பாதையில் இந்தியா முன்னேற முடியாமைக்கான காரணங்களையும் அவர்தம் இறுதிநாட்களில் சுட்டி எச்சரிக்கை செய்திருக்கின்றார். அதனைமீறி, அதன்வழித்தடம் மாறி இயங்கியதன் பலனை இன்றைக்கு அனுபவித்துக்கொண்டிருக்கிறோம். அவரது எண்ணவோட்டத்தை, நிறை சிந்தனையைப் புரிந்துகொண்டு இயங்கியவர்களாக அவர்காலத்தவர்கள் இல்லை.

"இந்திய சுதந்திரம் மனிதகுல விடுதலையுடன் இணைக்கப் பட்டிருக்க வேண்டுமென்ற பாரதியின் ஆவலுக்கு மாறாக, வரலாறு சென்றமைக்குச் சுதந்திரப்போராட்டத்தின் அகக்காரணிகளும் காரணமாயிருந்தன. ஒருபுறம், தேசவிடுதலைக்காகப் போராடியவர்கள் அடிப்படையான சமூக மாற்றத்தை வெறுத்தனர். மறுபுறம் ஆசாரத் திருத்தம் பற்றிப் பேசியவர்கள் தேசவிடுதலைக்கு விரோதமாக நடந்து கொண்டனர். பாரதியின் சிந்தனை வளர்ச்சிப்போக்குடன் அமைவான விஞ்ஞான சோசலிசத்தை ஏற்றுக் கொண்டவர்கள் மட்டுமே விடுதலையை சோசலிச அமைப்புக்கானதாகவும் பார்த்தார்கள். அந்தக் கண்ணோட்டத்துக்கு சாதகமாக இந்தியத் தத்துவ மரபைப் பாய்ச்சலடையச் செய்த பாரதி,

முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொதுவுடைமை
ஒப்பில்லாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை

என்று பிரகடனம் செய்து அதை அடையும் நோக்குடன்

மனிதருணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனியுண்டோ?
மனிதர் நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை இனியுண்டோ?
இனியொரு விதி செய்வோம்- அதை
எந்த நாளும் காப்போம்

தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்

என்று சபதமும் மொழிகிறார். இது மனிதகுல விடுதலைக்கான போர்ப்பிரகடனம்"[54] என்கின்றார், ந.இரவீந்திரன்.

பாரதியாரது அரசியல், ஆன்மிக, இலக்கிய, சீர்திருத்தச் சிந்தனைகளின், ஒட்டுமொத்தத் தத்துவத்தின்பிழிவாக அமைந்த பாடல், இது. பாரதியார் இறுதிக்காலத்தில் மேடையேறி முழங்கிய பாடல். இந்தியாவாகிப் பாரதியார் உலகிற்கு வழிகாட்டும் பாங்கு இப்பாடலில் பொலிகின்றது. மீண்டும் ஒருமுறை இதனைப் பாரதியாராக எண்ணிப் பாடிப்பார்த்தால், இப்பாடலின் பொருளுணர்ந்து ஓதிப் பார்த்தால் உண்மை புலப்படும். அதுதான் மரணமிலாப் பெருவாழ்வு. அழிவற்ற நிரந்தரம். அதனைநோக்கி மனிதர்களை உய்விப்பன பாரதியாரின் பொழிவுகள் எனலாம்.

சான்றெண்விளக்கம்


1. பாரதியார் கவிதைகள், தமிழச்சாதி, பா.எண்-119-122, ப.168.
2. சீனி.விசுவநாதன்(தொ.ஆ), காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொ-1, பக்.21-23.
3. பெ.சு.மணி, பாரதியார் பார்வையில் இராமகிருஷ்ண இயக்கம், ப.199.
4. பாரதியார் கவிதைகள், பெண்கள் விடுதலைக்கும்மி, பா.எண்-5, ப.352.
5. மேலது, பா.எண்-3, ப.352.
6. ரா.அ.பத்மநாபன், (தொ.ஆ),பாரதியைப் பற்றி நண்பர்கள், பக்.26-27.
7. சீனி.விசுவநாதன், கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொ-1, ப.285.
8. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.189-190.
9. மேலது.
10. ரா.அ, பத்மநாபன், (தொ.ஆ) பாரதி புதையல் பெருந்திரட்டு, ப.490.
11. மன்னர்மன்னன், பாட்டுப்பறவைகள், பக்.256-257.
12. வ.ரா., மகாகவி பாரதியார், ப.54.
13. பெ.சு.மணி, பாரதியார் பார்வையில் இராமகிருஷ்ண இயக்கம், ப.80.
14. சகுந்தலா பாரதி, என் தந்தை, ப.4.
15. யதுகிரிஅம்மாள், பாரதிநினைவுகள், பக்.82-83.
16. சகுந்தலா பாரதி, என் தந்தை, ப.15.
17. சீனி.விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, பக்.483-484.
18. யதுகிரிஅம்மாள், பாரதிநினைவுகள், பக்.87-89.
19. பெ.தூரன், பாரதிதமிழ், ப.291.
20. பாரதியார் கட்டுரைகள்,பக்.129-130.
21. மேலது,ட க்.130-136.
22. மேலது, ப.136.
23. மேலது, பக்.136-137.

24. தங்கம்மாள் பாரதி, பாரதியும் கவிதையும், பக். 61-63.
25. சகுந்தலா பாரதி, என் தந்தை, ப44.
26. யதுகிரி அம்மாள், பாரதி நினைவுகள், பக்.45-46.
27. சீனி.விசுவநாதன், தமிழகம் தந்த மகாகவி,(புதுவை ரா.கனகலிங்கம்), ப.243.
28. ரா.கனகலிங்கம், எனது குருநாதர், பக்.31-37.
29. மேலது, பக்.38-43.
30. சகுந்தலாபாரதி, என் தந்தை,பக்.85-86.
31. மேலது, ப.4.
32. மேலது, பக்.46-47.
33. பாரதிதாசன் கவிதைகள், பாரதி உள்ளம், ப.213.
34. மேலது.
35. மேலது, மகாகவி, பக்.215-216.
36. பாரதியார்கவிதைகள், மறவன்பாட்டு, பா.எண்-8,ப.557.
37. பாரதியார் கவிதைகள், முரசு, பா.எண்-30, ப.566.
38. ஆ.இரா.வேங்கடாசலபதி, விஜயாக்கட்டுரைகள், ப.424.
39. ரா.அ.பத்மநாபன், (தொ.ஆ) பாரதியின் புதையல் பெருந்திரட்டு, பக்.47-48.
40. மேலது,ப.281.
41. ஆ.இரா.வேங்கடாசலபதி, விஜயாக்கட்டுரைகள், (சுதேசமித்திரன், 5.5 1921),ப.428-430.
42. மேலது, ப.36-37.
43. பாரதியார் கவிதைகள், வந்தேமாதரம், பா.எண்- 4,ப.79.
44. மேலது.
45. மேலது,பராசக்தி, பா.எண்- 3, ப.269.
46. மேலது, உயிர்பெற்ற தமிழர்பாட்டு, பா.எண்- 13, ப.170.
47. மேலது, பாரதசமுதாயம், ப.146.
48. மேலது,உயிர்பெற்ற தமிழர்பாட்டு, பா.எண்-4, ப.169.
49. மேலது, பாரதி அறுபத்தாறு, பா- 42, ப.61.
50. மேலது, சுதந்திரப்பள்ளு,பா.எண்- 1, ப.143.
51. பெ.தூரன், பாரதிதமிழ், ப.
52. பாரதிதாசன் கவிதைகள், புதுநெறிகாட்டிய புலவன், ப.206.
53. நாராண.துரைக் கண்ணன், பாரதிதாசன் திருவுள்ளம், மன்னர்மன்னன், முல்லை முத்தையா (தொ.ஆ), பாரதிதாசன் நறுமலர்க்கொத்து, பக்.133-134.
54. ந.இரவீந்திரன், இந்துவத்துவக் காலச்சூழலின் மறுவாசிப்பில் பாரதியின்மெய்ஞ்ஞானம், பக்.202-203.

## ஒரு சொல் கேளீர்

எத்தனையோ பணிகள் இருக்க, அவற்றுக்கு மத்தியில் இந்த நூலை எடுத்துப் படித்துக் கொண்டிருக்கும் தங்களின் பாரதியன்புக்கு எனது வணக்கமும், நன்றியும். அதிகமில்லை, ஒரு வார்த்தை. பாரதியார் மரபில் சொல்வதானால், ஒரு சொல், கேட்பீர்களா? சம்மதம் என்பதைத் தங்கள் மௌனம் சொல்கிறது.

நல்லது. இதோ தொடங்கிவிட்டேன்.

ஃ ஃ ஃ



ஒருகணத்தை யுகமாக்கி, யுகத்தைக் கணமாக்கிக் கண்ணுக்குத் தெரியாத காலம் செய்யும் லீலை இவ்வுலகு.

*1882* டிசம்பர் *11* தொடங்கி, *1921* செப்டம்பர் *11* வரை ஒரு *39* ஆண்டுகளை நடுவில் வைத்து அது நடத்திய கூத்தில், ஒரு மின்னல்போல் தோன்றிச் சருகுபோல் உதிர்ந்த எட்டயபுரத்துச் சுப்பையாவுக்குள் இருந்து மகாமேருவாய், அணையாச் சூரியனாய்ப் பேருருக் கொண்டெழுந்த பாரதியாரின் திருவடிக்கீழ் ஒரு சிறு புல்லாய்க் காலம் கிடப்பது சாதாரணச் செய்தியன்று.

தோன்றிய கணம்தான் மெய். மறைந்த தேதி ஒரு பெயருக்குத்தான். பொய்யுடல் நீத்து, மெய்யுடல்தாங்கி, வேண்டும் பொழுதில் வேண்டும் வண்ணம் தோன்றும் தன்மையுடன் துலங்கும் மகாகவிக்கு மரணமேது?

அவரது மெல்லிய உதைக்குத் தப்பி ஓடிய காலம் *125* ஆண்டுகளை நிறைவு செய்து பாரதியாரை நினைத்துப் பார்க்கின்ற போது தோற்றுப்போய் இளைக்கும் நாயாய்

அது மூச்சு வாங்குவது நன்றாய்த் தெரிகிறது. இன்னும் எத்துணை தூரம் ஓடினாலும் வெல்லமுடியுமா என்கின்ற அவநம்பிக்கை அதன் கண்களில்...

சொல்ல முடிகிற இந்த உண்மையைக் காட்டமுடியாக் கைபிசையலில் இந்தப் பின்னுரையை என் கைபிடித்து எழுதிக் கொண்டிருக்கின்றது காலம் என்றால் நம்பவா போகிறீர்கள்?

ஃ ஃ ஃ

புதுவை, சித்தாந்தசாமி கோயில் முற்றத்தின் மரநிழலில், ஒரு யோகியைப்போலத் தாளும், எழுதுகோலும் கைக்கொண்டு வீற்றிருக்கும் பாரதியார் எழுப்பும் மன அதிர்வுகளை உள்வாங்கித் தியானித்துக் கொண்டிருந்தேன்.

அவர் மகாகவி. சிறுகதையாளர். கட்டுரையாளர். மொழி பெயர்ப்பாளர். பயண இலக்கியப்படைப்பாளி. அரசியல்வாதி, ஆன்மிகவாதி, சீர்திருத்தவாதி, இலக்கியவாதி, தந்தை, குரு, தலைவர் என விரியும் அவரது பரிமாணங்களில், அன்று அவர் எனக்கு ஒரு சொற்பொழிவாளராய்த் தரிசனம் தரத் தொடங்கினார்.

அன்றாடப் பணிகளுக்கிடையில் எப்போதும் ஒரு தியானம்போலப் பாரதியாரின் சொற்பொழிவுத்தோற்றம், எனக்குள்; அவர் முழங்கிக் கொண்டேயிருக்கின்ற காட்சி.

ஒரு வேள்வியாய்க்கருதி, பாரதியன்பர் சீனி.விசுவநாதன் தொகுத்துத் தந்திருக்கும் 'காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதிபடைப்புகள்' - ஏழு தொகுதிகள்.ரா.அ.பத்மநாபனின் 'பாரதிபுதையல் பெருந்திரட்டு' முதலான நூல்கள், பெ.சு.மணியின் பாரதியார் பற்றிப் பேசும் புத்தகங்கள்...

இவற்றுக்கு நடுவில் இருந்து, ஜீவா, அடிகளார், ஆர்.கே.கண்ணன், தொ.மு.சி. ரகுநாதன், ஜெயகாந்தன், சிற்பி, நவபாரதி, சந்திரகாந்தன், ஆ.இரா.வேங்கடாசலபதி எனப் பாரதியன்பர்கள் பலர்சூழ இருக்கக் கேட்டுக் கொண்டேயிருந்தேன். கூடவே, தொலைபேசி வழியாக, இரா.மீனாட்சி அக்காவும்.

செல்லம்மாள் பாரதி, தங்கம்மாள் பாரதி, சகுந்தலாபாரதி, ஸ்ரீஅரவிந்தர், வ.வே.சு.ஐயர், மண்டையம் ஸ்ரீநிவாசாச்சாரியார், குவளைக்கண்ணன், வ.உ.சி, பாரதிதாசன், வ.ரா, ரா.கனகலிங்கம், சு.து.சு.யோகியார் முதலான பாரதிகுடும்பத்தார், தோழர்கள், சீடர்கள் எனவொரு பட்டாளம் என்வீடு நிரம்பினர். மெல்ல மெல்ல என்வீடு பாரதியார் இல்லம் ஆயிற்று. நள்ளிரவு முடிந்து அதிகாலையில்,

தோப்பின் மிச்சங்களாய் எங்கோ சிலவென எஞ்சிய மரங்களில் இருந்து குயில் கூவுவதைத் தொடர்ந்து காகங்களும் கரையத் தொடங்கும் வேளையில், சற்றே உறங்கப்போவேன். தலையணைக்குப் பதில், சீனி.விசுவநாதனின் தொகுப்புநூல்கள் இருக்கும். கூடவே, பாரதியார் அருங்காட்சியக நூலகத்தில் பெற்ற பழைய நூல்களின் நகல் பிரதிகளும்..

இப்படியாகச் செப்டம்பர் பதினொன்றில் தொடங்கிய, இப்பணி மகாகவி பாரதியாரின் 125ஆம் ஆண்டுநிறைவை நெருங்கும் டிசம்பர் ஒன்பதில், நமது காலத்தில் வாழும் பாரதியான தோழர் ஜெயகாந்தன், தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், கவிஞர் சிற்பி, கவிஞர் இரா. மீனாட்சி முதலியோர் குழுமிய சபையில், உதயநகராம் ஆரோவில் என்னும் உலகநகரில் இருந்து வெளிவந்து உங்கள் கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கின்றது. அவசரத்திலும், அழகுற வெளியிட்டுதவிய கபிலன் பதிப்பக உரிமையாளர் சொ.அருணன் உள்ளிட்ட அனைவர்க்கும் நன்றியோடு மலர்கிற இந்நூலின் மூலம் நாம் நண்பர்கள் ஆகிறோம்.

இப்படியாக நமது இலக்கிய உறவு பலப்படும் நேரத்தில் நாம் இருந்து கேட்கிறோம்.

ஃ ஃ ஃ

இதோ பாரதியார் முழங்கிக் கொண்டிருக்கின்றார். வங்கக் கடலலை பின்வாங்கி மீண்டும் வந்து தோற்றுத் திரும்பிக் கொண்டிருப்பதை வேடிக்கை பார்க்க முடிகிறது. திரளான மக்கள் கூட்டம். சூரிய சந்திரச் சுட்டும் விழிச்சுடர்கள் காட்டிய ஒளியில் நாட்டியமாடும் மகாகவியின் சொற்கள் பெருவீரன் ஒருவனின் வாளாய்ச் சுழன்று சுழன்று மேல் எழுகின்றது. அதை மின்னல் என்று ஒரு ஹைகூக்கவிஞன் எழுதிக் கொண்டிருக்கும்போது, இடியிடிக்கின்றது; சடசடக்கின்றது; திசைகளைப் பெயர்த்து எறியும் மூர்க்கத்தோடு, காற்று ஊதுகிறது; கடல் கொந்தளிக்கின்றது; மரங்கள் பேயாட்டம் போடுகின்றன; இரவும் பகலும் கண்ணாமூச்சியாடிக் கொண்டிருக்கின்றன. ஒடியொளியும் காலனைத் தேடிச் சற்றே தனது காலால் உதைத்து அன்னையை முன்னிறுத்தி நடக்கிறது கவிக்கூத்து.

“காலத்தொடுநிர் மூலம் படுமூவுலகும் - அங்கே
கடவுள் மோனத் தொளியே தனியாயிலகும் -சிவன்
கோலங்கண்டுன் கனல் செய் சினமும் விலகும்-கையைக்
கொஞ்சித் தொடுவாய் ஆனந்தக்கூத்திடுவாய்
அன்னை அன்னை ஆடுங்கூத்தை
நாடச்செய்தாள் என்னை”

எல்லாம் ஒரு கணத்தோற்றம். முன்னால் விரித்த பாரதியார் கவிதை நூலைச் சற்றே பக்கம்புரட்டிப் பார்க்கிற காற்றுக்கு மூச்சு வாங்குகின்றது. அத்தனை கனம் போலும், அந்தத்தாளின் பக்கம்...

மந்திரம்போலத் திரும்பத் திரும்ப ஒலித்துக்கொண்டிருக்கின்றது மகாகவி வாசகம்.

"மனிதனுக்கு மரணமில்லை
மனிதனுக்கு மரணமில்லை
மனிதனுக்கு மரணமில்லை!"

எப்படி, எப்போது, எந்த மனிதனுக்கு, சாத்தியமாகுமா எனப்பலக் கேள்விகள் முளைத்து மூளையைத் துளைத்துக்கொண்டிருக்கும்போது வள்ளலார் முதலான உருவங்கள் வந்து மறைய ஒரு கேலிச்சிரிப்பு, வெடித்துப் பூத்து ஒரு மெல்லிய தென்றலாய் உலவிவந்து சிறு குழந்தையைப்போல அமர்ந்துவிடுகின்றது. மகாகவி குரல் கம்பீரமாய் ஒலிக்கின்றது.

"தெய்விகக் கருணையின் பெருமையை என்னால் அளவிட்டுரைக்க முடியாது. அதைப்பற்றி விவாதம் செய்யாதே; செய்துபார். அதன் இயற்கை தெரியும்.

உனக்குத் தீயன செய்து வருவோனுக்கு நீ நல்லன செய்து வா.

நீ உடனே மகானாகி விடுகின்றாய்; உடனே தெய்வமாகி விடுகின்றாய்.

என்னால் வருணிக்கமுடியாததும் எனது வணக்கத்திற்குரியதுமான பொருளாய் விடுகின்றாய்" (கருணை, பாரதியாரின் முதற் சொற்பொழிவு)

நினைவுச்சுழல் வந்து முற்றுகையிடும்போது, ஊர்வலங்கள் நடக்கின்றன. முழக்கங்கள் கேட்கின்றன. கரவொலிக்கு நடுவில் 'வந்தேமாதர'ப் பேரொலி.

சென்னை, புதுவைக் கடற்கரை முழுக்கப் பால்ஒழுகவிட்டுப் பரந்த பெருவானில் முழுவெள்ளை நிலாப்பார்த்துக் குதூகலிக்கும் பேரலைகள் கேட்க ஒலிக்கும் பாடல், கடையப்பகுதியின் கல்யாணி கோயிலுக்குப் பின்னுள்ள மலைமுகடுகளில் எதிரொலிக்கின்றது. அத்திடாகநீரில் காசிக் கங்கையின் ஞான அதிர்வலைகள். எட்டயபுரத் தெருப்புழுதி அடங்கிக் கிடக்கும் ஒரு யோகியின் மனம்போல...

ஈரோட்டு வாசகசாலையின் புத்தகங்கள் விடாமல் முணுமுணுத்துக் கொண்டிருக்கின்றன, மந்திரத்தை மனனம் செய்யும் ஒரு பள்ளிப் பிள்ளையைப்போல.

"மனிதனுக்கு மரணமில்லை
மனிதனுக்கு மரணமில்லை
மனிதனுக்கு மரணமில்லை!"

கேட்பதற்கு நேரமில்லை. கவனிக்கக் காலம் இல்லை. ஆயிரம் வேலை. அவசரம், காலம் ஊதும் காற்றுக்கு முன்னே தூசாய்ப்பறக்கும் வாழ்க்கை.

ஓடு. பற. நீந்து. கடைசியில் தொடங்கிய இடத்துக்கே திரும்பி வருவாய். அப்போது தெரியும், எப்போதும் திரும்பிவரவேண்டியது இந்தியாவுக்குத் தான், என்பது. இந்தியாதான், எல்லோரும் அமரநிலை எய்தும் நன் முறையினை உலகிற்கு அளிக்கும்.

உறுதி. ஆம், உலகிற்கு அளிக்கும். இன்னும் உறுதி, நிரந்தர உறுதி, ஆம், ஆம்,இந்தியா உலகிற்கு அளிக்கும்.

'அதனைப் பெற என்ன செய்யவேண்டும்?'

'அன்பு செய்ய வேண்டும்! உங்களுக்குத் தொழில் இங்கே அன்பு செய்தல் கண்டீர்!

அன்பிற்சிறந்த தவமில்லை -அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு!'
எனவே,
செய்க தவம் - நெஞ்சே, செய்க தவம்;
தவம் செய்தால்,
எய்த விரும்பியதை எய்தலாம்!

ஃ ஃ ஃ

"என்னது, இதுவே ஒரு சொற்பொழிவு ஆகிவிட்டது என்கிறீர்களா? மன்னித்துக்கொள்ளுங்கள், அந்த ஒரு சொல்லுக்குத் தான் இத்தனையும் சொல்ல நேர்ந்துவிட்டது, ஆமாம், அந்த ஒரு சொல்,

அன்பு. அதுதான், அவ்வளவுதான்.

அன்புடன்

புதுச்சேரி சேதுபதி
டிசம்பர் - 2007

பின்னிணைப்புகள்

## பின்னிணைப்பு-1

"Gentlemen, you have daily seen and heard of people being sent to jail and released therefrom but you never troubled yourself about them. But why have you all assembled here to-day. You have not come here for honoring a Maharaja or another with grand-titles. But it is to celebrate the release of Bepin Chandra Pal to-day. We have been drawn together here not on account of Pal's character. But we have met here because on account of the faith we have in Swaraj (or on account of the love we have in our country) we are toiling for the welfare of our country. Pal had such views and experienced the troubles that arose from them. All of us too should suffer, according to our might for our principles of Swaraj and love of our country. We are prepared to obey the laws framed by foreigners but not always. We will not submit to those laws, the moment those foreigners frame laws which are hostile to our 'natural rights'. In conformity with the above declaration, though the Commissioner of Police prohibited the playing of music to-day, since such an order was opposed to our principles, we ignored that order and conducted the procession with music playing. So we should all join and work for (or fight) for our principles of Swadeshi and Swaraj."

## பின்னிணைப்பு -2

"Chidambaram Pillai and his followers were working for their country in Tinnevelli. How then did the riots take place? It was purely due to the Government interfrence in a mercantile manner, because Government were half rulers and half traders or rather he thought, he should say 3/4 traders and only 1/4 rulers. (laughter)

The riots in Tinnevelly were God's doing and it was for the ultimate good of the country. Four men had been killed in the riots and it was their duty to succour their wives and their aged parents, if any. He would essentially therefore exhort those present to freely contribute towards the relief fund they vere going to rise."

**பின்னிணைப்பு-3**

"All the actions of the Chennai Jana Sangam are public and I very much regret the action of the present Government which calls itself to be very civilized to take to the mean, base and treacherous mode of espionaging honest men by a set of Police scamps who disguise themselves as bandy-drivers and Jatkawallahs. Is not this Government a barbarous one, shadowing honest men from place to place in this fashion? Our aim is to annihilate the present British Government by such actions and deeds which are by no means studious, offensive and which cannot be brought under any of the sections of the Penal laws. That set of Police detectives who call themselves to belong to the Intelligence Department but without the least intelligence take false notes. I ask every press representative and the able detectives to take a full text of my speech and publish and report. When I had an interview with Mr. Chidambaram Pillai he asked me to tell you that he was one of the leading men who started the Chennai Jana Sangam and wished that its object must be carried out and that he did not care whether he was released or put in jail."

*பின்னிணைப்பு - 4*

"I have the honour to forward two speeches delivered in Madras on 9th March and 10th May 1908 by one Subramania Barati and which the Advocate General has declared to be obnoxious to Seens. 124 A& 153 A of the Indian Penal Code.

As the order of Government authorising the institution of proceedings against the speaker is a condition precedent to any charge under Seens.124A&153A of the Indian Penal Code. I have the honour to request that the Government may be pleased to issue an order under secns. 196 of the Code of Criminal Procedure for the prosecution of Subramania Barati."

*பின்னிணைப்பு - 5*

...."Without social reform our political reform is a dream, a myth, for social slaves can never really understand political liberty. And until and unless our social conferences prove a success our National Congress is nothing but glare and dust". - Letter to The Hindu. Dec.1904.

## பின்னிணைப்பு - 5

### அருணகிரியின் கவிதை

ஞானியும் பக்தரும், வரகவியுமாகிய அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

இவருடைய 'திருப்புகழ்' என்ற நூல், சந்தக்கணக்குப் புகழ் பெற்றது. வடமொழிச்சொற்களை மிகுதியாக உடையது. மண், பெண், பொன் என்ற உலக இன்பங்களைப் பழிப்பதில் ஓய்வில்லாதது இது. 'பெரியதிருப்புகழ்', 'பஞ்சரத்னத் திருப்புகழ்', என்ற ஐந்து பாட்டுக்களும் தனியாக எழுதப்பட்டன. அவை வேறு நூல்.

இவரைப்பற்றிய பல கதைகளில் என்னென்ன பகுதி உண்மை என்பதை விசாரித்து நிச்சயிக்க இது சந்தர்ப்பமில்லை. 'பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல் ஆருந்துறத்தலரிது' என்று தாயுமானவரால் வணங்கப்பட்ட மஹானாகிய பட்டினத்துப்பிள்ளைக்கு ஒரு தாசிவயிற்றில் இவர் பிறந்தவரென்ற விநோதமான கதையொன்று தமிழ்நாட்டில் வழங்கிவருகிறது.

### அதிசயத்தமிழ்

இவருடைய கவிதையின் கனிவைப் பார்க்கவேண்டுமானால், 'பஞ்சரத்னத் திருப்புகழ்', 'கந்தரலங்காரம்', 'வேல் வகுப்பு' மூன்றையும் படித்தால் போதும். சந்தக் கணக்கை வைத்துக்கொண்டு தெளிவாகவும், இயற்கையாகவும் சொல்லுதல் மிகவும் அருமை. காலிலும் கையிலும் தளைகளைப் பூட்டிக்கொண்டு கூத்தாட முடியாதென்று பழமொழி சொல்லுவார்கள். இந்த மஹானுடைய கவிதையோவென்றால், மிகவும் கடினமான தளைகளைப் பூட்டிக்கொண்டு தெய்வீகக் கூத்தாடுகிறது. பஞ்சரத்னத் திருப்புகழின் முதற்பாட்டில் இவர் தமக்கு அதிசயமான தமிழ் பாடுந் திறமை வேண்டுமென்று முருகனிடம் கேட்கிற பொழுதே தெய்வ அருள் தோன்றி இவருடைய கவிதை அதிசயமாய் விடுகிறது.

மலடி வயிற்றிலே குழந்தை பிறந்தால் அவளுக்கு எப்படி ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுண்டாகுமோ, அவ்விதமான மனக்கிளர்ச்சி தமது பாட்டைப் படிக்கும்போது தோன்றவேண்டுமென்கிறார்.

"மலடி வயிற்று மகன்போலே - ஒரு
புதைய லெடுத்த தனம் போலே- ஒளிர்
வயிரமடித்த களம்போலே- இள
........................................ மானார்
வலிய அணைத்த சுகம்போலே -கதி
ரொளி விடு ரத்ந படம்போலே -பரி
மளமிகு புட்ப வனம் போலே - சுர
ரதிபோலே"

கங்காநதி வானத்திலிருந்து பொழிவதுபோலே தமது கவிதையும் ஞானலோகத்தி லிருந்து நாவின் வழியே பொழிய வேண்டுமென்று கேட்கிறார். புதையலெடுத்த செல்வத்தைக் கண்டு ஏழை மகிழ்ச்சியடைவது போலே தமது

கவிதை படிக்கும்போது மகிழ்ச்சியுண்டாக வேண்டுகிறார். வயிரக்களம் போலே கவிதை முழுதும் ஒளிவீச வேண்டுமாம். இளம் பெண் வலியத் தழுவினாற்போன்ற இன்பம் தனது சொற்களிலே தோன்ற வேண்டுமாம். புஷ்பவனம் போலே கவிதையாம்! கவிதை.

மேலும், தேவர்கள் திருப்பாற்கடலை அமுதத்தின்பொருட்டாகக் கடைந்தார்கள். அப்போது எதிர்பார்க்காமல், லக்ஷ்மிதேவி தோன்றினாள். அப்போது அவர்கள் எப்படி வியப்படைந்திருப்பார்களோ அப்படிப்பட்ட வியப்பு தம்முடைய பாட்டிலே பிறக்க வேண்டுமென்றுகேட்கிறார். தமது பாட்டில் பொருள் தெளிந்து மேலாகத் தெரிய வேண்டுமாம். படிப்போர் சிரமப்பட்டு மூச்சுமுட்டிப் பொருள் கண்டுபிடித்து அந்தப் பொருள் அதிஸாமான்யமாய் வியப்பின்றியிருக்கும் கவிதையைச் சிலர் கவிதையென்று மதிக்கிறார்கள். அது தமக்கு வேண்டியதில்லை யென்றும், கரையருகில் அடுத்த நீர் போலே எளிதில் மொண்டு செல்லத் தக்கதாகத் தமது பாட்டின் பொருள் ததும்பித் தெளிந்து கிடக்க வேண்டுமென்றும் இவர் விரும்புகிறார்.

"அலைகடல் பெற்றிடு பெண்போலே- வரு
புலவர் தமக்கிரு கண்போலே- கரை
யருகி லடுத்த ஜலம்போலே - நின
தழகாமோர்
அமுது புஜித்த ரஸம்போலே-திரை
கடல் மடைவிட்ட ஜலம்போலே - தினம்
அதிசய முத்தமிழ் அன்பால் ஒகநின்
அருள்தாராய்"

அழகுவேண்டுவோர் தெய்வத்தை வேண்டுகிறார்கள். தெய்வமே அழகின் எல்லை. தெய்வத்தின் அழகை அனுபவித்த ரஸம் தமது கவிதையிலே காணவேண்டு மென்கிறார். மேற்காட்டிய வரிகளிலே அந்த ரஸம் இருக்கத்தான் செய்கிறது.

பின்வரும் பாட்டைக்கேளுங்கள்:-

"கலியை யலைத்துத் தொலைத்து விட்டொரு
பிணியை யடித்துத் துரத்தி விட்டெழு
கவலை நெருப்பைத் தணித்துவிட்டற
நெறியாலே
கடின கசப்புக்கினிப்பு விட்டென
துயிரில் அழுந்தைத் துடைத்து விட்டோர்
கருணை மழைக்குட் குளிக்க விட்டினி
யலையாதே
அலையுமனதைப் பிடித்து வைத்ததில்
உறையும் இருட்டுக் கருக்கலுக்கு நின்
அழகுவிளக்கைப் பதித்து வைத்த
கவியாதே
அறிவையுருட்டித் திரட்டி வைத்துநின்
அமுதகுணத்தைத் துதிக்க வைத்தனை
அடிமை படைக்கக் கருத்து முற்றிலும்
நினையாயோ"

கலியுகத்தை ஒழித்து, நோயைத் துரத்தி, கவலைத் தீயைத் தணித்துக் கசப்பை இனிப்பாக்கி உயிரை அமுக்கறுத்த கருணை மழையிலே குளிக்கவிட்டு அலைகின்ற மனதை நிறுத்தி அதிலுள்ள இருட்டைத் தொலைக்கும்'பொருட்டு முருகனுடைய அழகாகிய விளக்கை அதில் நாட்டி அந்த விளக்கு நீடித்தெரியும்படி அறிவைத் திரட்டி முருகனுடைய அமிர்த குணங்களைப் புகழும்படித் தம்மை வரகவியாக்கச் சொல்லுகிறார். அந்த நிலைமை இவர் பெற்றுவிட்டனரென்று அந்தப் பாட்டிலேயே தெரிகிறது. அதை ஸங்கீதம் சேர்த்துப் பாடிப் பாருங்கள்.

பின்வரும் வரிகளிலே அக்நி சக்தியாகிய வள்ளியம்மையைப் புகழ்கின்றார்.

"குலவரை விட்டுத் திசைக்களிற்றினை
உடலைமிதித்துக் கிழித்ததிற் சொரி
குருதிகுடித்து"

வள்ளியம்மையின் திருமார்பு புகுந்ததென்கிறார். வீரம், ரௌத்ரம் என்ற ரஸங்கள் இவருடைய கவிதையில் செறிந்து கிடக்கின்றன. அவை பின்னொரு வியாஸத்தில் விளக்கப்படும். இவருடைய கவிதையின் முக்கியப் பொருள் தெய்வ பக்தியாகையால் தெய்வத்தைப் பற்றி இவருடைய கொள்கை எப்படிப்பட்டதென்பதை விளக்கும் பொருட்டாகச் சில திருஷ்டாந்தங்களைக் காட்டுகிறேன்.

பரமாத்மா எப்படியுள்ளது?

"ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ரானந்தத்தேன்"
(பூதரம்-மலை, அளி-கருணை)

"வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானென்ற சரீரியன்று (அ)சரீரியன்றே"

ஆனால் என்னது?

"சொல்லுகைக் கில்லையென் றெல்லாம்
இழந்து சும்மா இருக்கும் எல்லை"

இப்படிப்பட்ட பரம்பொருள் மனுஷ்யஜீவனைக் காப்பாற்றும்பொருட்டு. இஷ்ட தேவதாரூபமாகத் தோன்றுகிறது. இவருக்கு அந்த இஷ்ட தேவதை தேவசேனா பதியாகி அசுரரை அழிக்கப் பரமசிவனுடைய நெற்றிக் கண்ணில் தோன்றிய அக்நி குமாரனாக வெளிப்பட்டது. தெய்வத்தின் அருள் பெறும் வழி சரணாகதி. அருள் பெற்றால் மரணத்தை வெல்லலாம்.

அதனாலே அருணகிரிநாதர் சொல்லுகிறார்-

"மரணப் ரமாதம் நமக்கில்லை" (ப்ரமாதம்-தவறு)

பின்வரும் பாட்டு யமனை நோக்கிச் சொல்லப்படுகிறது:-

"தண்டாயுதமும் திரிசூலமும் விழத் தாக்கியுனைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய என் அவிரோத ஞானச் சுடர் வடியாள்
கண்டாயடா அந்தகா வந்துபார் சற்றென் கைக்கெட்டவே!"

விதியை வெல்லும் முறை சொல்லுகிறார் :-

"வேல்பட்டழிந்தன வேலையும் சூரனும் வெற்பும் அவன்கு
கால்பட்டழிந்த திங்கென் தலைமேலயன் கையெழுத்தே!"

பயன் சொல்லுகிறார் :-

அஞ்ஞானமாகிய சிறை

"விடுதலைப் பட்டது விட்டது பாசவினை விலங்கே"

('பாரதியாரின் இறுதிச் சுற்றில், சுதேசமித்திரன் இதழியல் பணியின்போது வெளியான நூல் கதாமாலிகை. அதில் இக்கட்டுரை இடம்பெற்றுள்ளது' என்கிறார், ரா.அ.பத்மநாபன்.

'மனிதனுக்கு மரணமில்லை' என்ற கருத்தாக்கத்திற்கும்,

"காலா உனைச்சிறு புல்லென மதிக்கிறேன்

என் காலருகே வாடா சற்றே உனை மிதிக்கிறேன்"

என்ற பாடலுக்கும் பாரதியாருக்கு முன்னோடியாகத் திகழ்ந்திருக்கிறார், அருணகிரிநாதர். இவர்தம் 'கலியை அழித்துத் தொலைத்து', 'மலடிவயிற்று மகன் போலே' ஆகிய பாடல்களை ஆங்கிலத்தில் பாரதியார் மொழிபெயர்த்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.)

## கருவிநூற்பட்டியல்

1. அறிவுநம்பி. அ., முனைவர், சந்திரசேகரன்.இரா., (தொ.ஆ) பாரதியார் கருத்தியல் நெறி, கோவை, மு.ப. 2001.

2. ஆனந்தன்.கு.ச., தமிழ்வழிபாடு தமிழர்பிறப்புரிமை, தங்கம் பதிப்பகம், சென்னை. மு.ப.2000

3. இரவீந்திரன்.ந., இந்துத்துவக்காலச்சூழலின் மறுவாசிப்பில் பாரதியின் மெய்ஞ்ஞானம், சவுத்விஷன், சென்னை, மு.ப., 2003.

4. கண்ணன்.ஆர்.கே., புதுநெறி காட்டிய பாரதி, என்.சி.பி.எச், சென்னை, ப-3., 1985.

5. கருணாகரன்.கி, டாக்டர், ஜெயா.வ.,(தொ.ஆ), பாரதிதமிழ், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மு.ப,1987.

6. கனகலிங்கம்.ரா., என் குருநாதர், சக்தி காரியாலயம், சென்னை,மு.ப.1947.

7. குஞ்சிதபாதம்.வி.எஸ்.ஸ்ரீ., ஸ்வாமி (தேவி)வஸந்தானந்தா (தொ.ஆ) புதுவையில் பாரதியார் நான் கண்டதும் கேட்டதும், லோகக்ஷேமா டிரஸ்ட், சென்னை, மு.ப.1982.

8. குன்றக்குடி அடிகளார் தவத்திரு, திருக்குறள்உரை, அருள்நெறிப்பதிப்பகம், குன்றக்குடி, மு.ப, 2005.

9. கேசவன்.கோ., முனைவர், பாரதியும் அரசியலும் அலைகள் வெளியீட்டகம் சென்னை,மு.ப, 1991.

10. கேசவன்.கோ., சோஷலிஸக்கருத்துக்களும் பாரதியாரும், ரசனா புக்ஹவுஸ், சென்னை, மு.ப,1987.

11. கோதண்டராமன்.ப, பாரதியுகம்,தாரா அச்சகம், நாகப்பட்டினம், மு.ப, 1961.

12. கோதண்டராமன்.ப, புதுவையில் பாரதி,பழனியப்பா பிரதர்ஸ், சென்னை. மு.ப.,1980.

13. சகுந்தலாபாரதி, என் தந்தை,பாரதிதமிழ்ச்சங்கம், கல்கத்தா, மு.ப.,1974.

14. சச்சிதானந்தன்.வை, பாரதியாரின் வாழ்க்கையும் நூல்களும், எமரால்ட் வெளியீடு, சென்னை, ப-2, 1980.

15. சண்முகம்.இராம, மோகன்.இரா., (தொ.ஆ), பாரதிஇயல், மணிவாசகர்பதிப்பகம், சென்னை, மு.ப,1988.

16. சம்பந்தம், புதுவையில் பாரதி, வானதி பதிப்பகம்,சென்னை.மு.ப., 1982.

17. சந்திரகாந்தன்,(தொ.ஆ), பாரதியார் கவிதைகள், என்.சி.பி.எச், சென்னை. மு.ப.1990.

18. சிற்பிபாலசுப்பிரமணியம், படைப்பும் பார்வையும், கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப.2001.

19. சிற்பிபாலசுப்பிரமணியம்,
மகாகவி, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை. மு.ப.2003.
20. சிற்பிபாலசுப்பிரமணியம்,
பாரதிகைதிஎண் 253, அகரம், தஞ்சாவூர், மு.ப.2000.
21. சுப்பிரமணியம்.க.நா.,
பாரதியின் காட்சி, புதுவைப்பல்கலைக்கழகம், புதுச்சேரி, மு.ப.1989.
22. சுப்பிரமணியன்.ச.வே.சு, முனைவர்,
தொல்காப்பியம் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், மு.ப,1993.
23. செல்லம்மாள்பாரதி,
பாரதி சரித்திரம், நொய்யல்பதிப்பகம், கோவை, ம.ப.,2000.
24. சேதுபதி,
பாரதியாரின் விநாயகர் வழிபாடு, ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, மு.ப., 2001.
25. சேதுபதி, (தொ.ஆ),
மாணவர்களுக்குப் பாரதியார் கவிதைகள், மேலது, ப-2, 2006.
26. ஞானி, (தொ.ஆ)
அறிவியல் அதிகாரம் ஆன்மிகம் காவ்யா வெளியீடு,பெங்களூர். மு.ப, 1999.
27. தங்கம்மாள் பாரதி,
பாரதியும் கவிதையும், புதுமைப்பதிப்பகம், காரைக்குடி, மு.ப.,1947.
28. தூரன்.பெ.,
பாரதிதமிழ், வானதிபதிப்பகம், சென்னை, மு.ப,1986.
29. நவபாரதி,
இன்றைய தத்துவஞானப்போராட்டத்தில் பாரதியின் பாத்திரம், என்.சி.பி.எச், சென்னை, மு.ப.1986.
30. நாகலிங்கம்.அ,முனைவர், (ப.ஆ)
திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள்,பூம்புகார் பதிப்பகம், மு.ப, 2003.
31. பத்மநாபன்.ரா.அ.,(தொ.ஆ)
பாரதியைப்பற்றி நண்பர்கள், வானதி பதிப்பகம்,சென்னை, மு.ப. 1982.
32. பத்மநாபன்.ரா.அ.,(தொ.ஆ)
பாரதிபுதையல் பெருந்திரட்டு, வானதிபதிப்பகம், சென்னை, மு.ப.,1982.
33. பத்மநாபன்.ரா.அ.,(தொ.ஆ)
பாரதிகடிதங்கள்,காலச்சுவடு பதிப்பகம், தி.ப. 2005.
34. பாரதியார்(நாவலர்).
பாரதியார் சரித்திரம், மதுரைபுத்தகநிலையம், மதுரை, மு.ப., 1955.
35. பாரதியார் பாரதியார் கவிதைகள், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை.
36. பாரதியார் கதைகள், பூம்புகார் பதிப்பகம், சென்னை.ப-4, 1989.
37 பாரதியார் கட்டுரைகள், பூம்புகார் பதிப்பகம், சென்னை.ப-4, 1989.
38 பாரதியார், தராசு, ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை,மு.ப,1999.
39 பாரதியார், ஞானரதம் கட்டுரைகள், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை,மு.ப,1999.
40 பாரதியார், வேதரிஷிகளின் கவிதை, ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, மு.ப,1999.

41 பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை.மு.ப.,2005.

42 பி.ஸ்ரீ.,
பாரதி நான் கண்டதும் கேட்டதும் ஸ்டார்பிரசுரம் சென்னை., ப-6, 1981.

43 பிரேமாநந்தகுமார்,
சுப்பிரமணிய பாரதி, என்.பி.டி, ம.பி.1987.

44 மணி.பெ.சு.,
பாரதியாரும் தமிழ்ப்புலவர்களும், பூங்கொடிபதிப்பகம், சென்னை, மு.ப.,1981.

45 மணி.பெ.சு.,
பாரதியார் பார்வையில் இராமகிருஷ்ணர் இயக்கம் மேலது, மு.ப.2002.

46 மணி.பெ.சு.,
பாரதி இலக்கியத்தில் வேதஇலக்கியத்தின் தாக்கம், பூங்கொடி பதிப்பகம், சென்னை, ப-2, 2003.

47 மணி.பெ.சு,
வீரமுரசு சுப்பிரமணிய சிவா,என்.சி.பி.எச், சென்னை, மு.ப,1984.

48 மணி.பெ.சு,
பாரதியார் எழுத்துகள் சில புதிய கண்டுபிடிப்புகள், பூங்கொடி பதிப்பகம், சென்னை, மு.ப.,1989.

49 மன்னர்மன்னன்,
கறுப்புக்குயிலின் நெருப்புக்குரல் முத்துப்பதிப்பகம் விழுப்புரம்மு.ப,1985.

50 மன்னர்மன்னன்,
பாட்டுப்பறவைகள், குயில்வெளியீடு, புதுச்சேரி, மு.ப.2000.

51 மன்னர்மன்னன்,
முல்லை முத்தையா (தொ.ஆ), பாரதிதாசன் நறுமலர்க்கொத்து, என்.சி.பி.எச், சென்னை, ப-2, 1988.

52 மணிமேகலை, தமிழ்நிலையம், சென்னை, ப-2, 1998.

53 மாதவன்.சிவ.முனைவர்,
கதைக்கலைஞர் பாரதியார், குமாரிப்பதிப்பகம்,புதுச்சேரி, மு.ப, 2004.

54 மீனாட்சி.இரா, சேதுபதி.சொ. அருணன்.சொ.,(தொ.ஆ), மகாகவிபாரதியார் கவிதைகளில் புதுச்சேரி, கபிலன் பதிப்பகம், புதுச்சேரி, மு.ப.2006.

55 முத்துக்கிருஷ்ணன்.தி,
மகாகவிபாரதியாரின் வாழ்க்கைச் சித்திரம், என்.சி.பி.எச், மு.ப, 1986.

56 யதுகிரிஅம்மாள்,
பாரதிநினைவுகள், சந்தியா பதிப்பகம், சென்னை.,மு.ப,2002.

57 ரகுநாதன்,
பாரதி காலமும் கருத்தும், என்.சி.பி.எச், சென்னை, ப-2, 1986.

58 ராஜு.தி.ச.,
பாரதிஒருவாழ்நெறி, பூம்புகார்பதிப்பகம்,சென்னை, மு.ப,1983.

59 வ.ரா.,
மகாகவி பாரதியார், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, ப-11, 1990.

60 விசுவநாதன். சீனி.,
காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்,
தொ-1, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 1998.

61. விசுவநாதன். சீனி.,
தொ-2, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2001.

62. விசுவநாதன். சீனி.,
தொ-3, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2002.

63. விசுவநாதன். சீனி.,
தொ-4, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2003.

64. விசுவநாதன். சீனி.,
தொ-5, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2004.

65. விசுவநாதன். சீனி.,
தொ-6, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2005.

66. விசுவநாதன். சீனி.,
தொ-7, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப. 2006.

67. விசுவநாதன். சீனி., (தொ. ஆ)
தமிழகம் தந்த மகாகவி, ஸ்ரீபுவனேஸ்வரி பதிப்பகம், சென்னை-
மு.ப.1980

68. விசுவநாதன். சீனி.,
மகாகவி பாரதி வரலாறு, சீனி.விசுவநாதன், சென்னை-35, மு.ப., 1996.

69. விசுவநாதன். சீனி.,
மகாகவி பாரதி சில புதிய உண்மைகள்,
ஸ்ரீபுவனேஸ்வரி பதிப்பகம், சென்னை, மு.ப,

70. வேங்கடாசலபதி. ஆ.இரா., (தொ. ஆ),
வ.உ.சி.யும் பாரதியும், மக்கள்வெளியீடு, சென்னை, மு.ப,1994.

71. வேங்கடாசலபதி. ஆ.இரா.,
'விஜயா' கட்டுரைகள், காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்,
மு.ப.2004.

72. ஜீவா(தொ. ஆ),
ஈரோட்டில் பாரதி, ஞானபாரதி வெளியீடு, ஈரோடு, மு.ப.,1982.

73. ஜெயகாந்தன்,
பாரதிபாடம், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, ப-4, 2000.

74. ஜெயகாந்தன்,
ஓர் இலக்கியவாதியின் கலையுலக அனுபவங்கள்,
ஐந்திணைப்பதிப்பகம், சென்னை, ப-2, 1984.

மலர்கள்

1. தொடரும் ஒளித்திரள், தொடரும் குழுவினர், சிங்கம்புணரி, மு.ப,2002.

2. மகாகவி பாரதியார் நூற்றாண்டுவிழா மலர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், மு.ப,1982.

3. பாரதி சிலைத்திறப்புவிழா மலர், அவிநாசி, மு.ப.,1978.

# எமது வெளியீடுகள்











**கபிலன் பதிப்பகம்**

12, 7ஆவது குறுக்குத்தெரு

பாரதிநகர்

**புதுச்சேரி–8**



---










இதோ, பாரதியார் முழங்கிக் கொண்டிருக்கின்றார். வங்கக் கடலலை பின்வாங்கி மீண்டும் வந்து தோற்றுத் திரும்பிக் கொண்டிருப்பதை வேடிக்கை பார்க்க முடிகிறது. திரளான மக்கள் கூட்டம். சூரிய சந்திரச் சுட்டும் விழிச் சுடர்கள் காட்டிய ஒளியில் நாட்டியமாடும் மகாகவியின் சொற்கள் பெருவீரன் ஒருவனின் வாளாய்ச் சுழன்று சுழன்று மேல் எழுகின்றது.

அதை மின்னல் என்று ஒரு ஹைகூக் கவிஞன் எழுதிக் கொண்டிருக்கும்போது, இடியிடிக்கின்றது; சடசடக்கின்றது; திசைகளைப் பெயர்த்து எறியும் மூர்க்கத்தோடு, காற்று ஊதுகிறது; கடல் கொந்தளிக்கின்றது; மரங்கள் பேயாட்டம் போடுகின்றன; இரவும் பகலும் கண்ணாமூச்சியாடிக்கொண்டிருக்கின்றன. ஓடியொளியும் காலனைத் தேடிச் சற்றே தனது காலால் உதைத்து அன்னையை முன்னிறுத்தி நடக்கிறது கவிக்கூத்து.




# கபிலன் பதிப்பகம்

12, 7ஆவது குறுக்குத் தெரு
பாரதிநகர்
புதுச்சேரி - 605 008
e.mail: kapilapub@yahoo.co.in